உ

சிவமயம்.

ஸ்ரீராமேச்சுரமென்னும்

# சேதுஸ்தலபுராண

வசனகாவியம்.

அன்பளிப்பு



இஃது,

இராமேச்சுரம்

ஆறுமுகஉபாத்தியாயரவர்களுடைய

ஏட்டுப்பிரதியின்படி

புண்ணியகால விபரம், மஹாசங்கல்பம், சமுத்திரஸ்நானம், மாகஸ்நானம், க்ஷேத்திரபிண்டம், தசதானம், அமாவாசிதற்பணம இப்போது தீர்த்த மாடவேண்டிய விபரங்களுஞ்சேர்த்து

தக்கவித்துவான்களால்

பிழையறப்பரிசோதித்து

12567

மதுரை, புதுமண்டபம், புஸ்தகஷாப்

நாகலிங்கம்பிள்ளை

அவர்களால்.

பிரும்மோத்சவம்.

வேம்புலிமுதலியாரவர்கள் குமாரர்

நமசிவாயமுதலியாரவர்களது

சென்னை-மூலா,

ரஞ்சனவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



1914.

விலை

நெ. 88, அதானம் பாப்பையர்வீதி, மூலா சென்னை.





உ

கடவுள் துணை.

ஸ்ரீராமேச்சுர தீர்த்தங்களில்

# ஸ்நானஞ் செய்யவேண்டிய விபரம்.



### க-வது. விநாயகர் தெரிசனம்.

தேவிபட்டணத்துக்கு வடக்கு உப்பூரில் விநாயகர்தெரிசனஞ்செய்யவேண்டியது. தேவிபட்டணத்துக்கு பத்துமயில் வடக்கிலிருக்கின்றது.

### உ-வது. நவபாஷாண தீர்த்தம்.

தேவிபட்டணம் நவபாஷாண சமுத்திரத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டியது. இராமநாத புரத்திற்கு ஒன்பதாவதுமயில் வடக்கிலிருக்கின்றது.

### ங-வது. சக்கர தீர்த்தம்.

தேவிபட்டணத்தில் தருமபுஷ்கரிணியென்ற சக்கர தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டியது. இந்தத் தீர்த்தத்தில் ஜனித்துக்கொண்ட மகிடாசூரனை அசரீரிவாக்கால் தேவிதெரிந்து அவனைச் சங்கரித்ததினால் இதற்குத் தேவிபட்டணமென்று பெயருண்டாயிற்று.

௪-வது சக்கர தீர்த்தம்.

மேற்படி தீர்த்தத்தில் பாதி திருப்புல்லாணியிலிருக்கின்றது சமுத்திரத்தில் சேதுஅணையுந் தெரிகின்றது. இதிலுஞ் சக்கர தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து ஆதிகேசவப்பெருமானை தெரிசனஞ் செய்யவேண்டியது. இத்தீர்த்தத்தில் தருமதேவதைக்கும், காளமகாரிஷிக்கும், உத்தமனுக்கும், விதுமனுக்குஞ், சக்கரத்திற்கும் முத்தியைக்கொடுத்திருக்கின்றது. இராமநாதபுரத்திற்கு தெற்கே எட்டாவதுமயிலில் இருக்கின்றது.

௫-வது. வேதாள தீர்த்தம்.

வெற்றிலை மண்டபத்திற்கு உ-மயிலுக்குத் தெற்கேயிருக்கின்றது இத்தீர்த்தத்தில் சுதரிசனனென்ற கந்தர்வன் வேதாளரூபம் நீங்கி முத்தியடைந்தது.

௬-வது, பாபவிநாச தீர்த்தம்.

வெற்றிலைமண்டபச் சத்திரத்திற்கு அருகில் தெற்கேயிருக்கின்றது. சமதியென்கின்ற பிராமண பிரமசாரியுந்திடமதியென்கின்ற ரூத்திரனும் முத்தியடைந்தது.

௭-வது, கபிதீர்த்தம்.

பாம்பனில் இது சமுத்திரஸ்நானஞ் செய்யவேண்டியது.

௮-வது. வயிரவ தீர்த்தம்

பாம்பனில் தெப்பக்குளஸ்நானஞ் செய்யவேண்டியது.

௯-வது. சீதாகுண்ட தீர்த்தம்.

தங்கச்சிமடத்துக்கு வடக்கு அரைமயிலி லிருக்கின்றது, தேவேந்திரன் பிரமஹத்தி தீர்த்தது, சீதாதேவி அக்கினியில் குளித்தவிடம் ஸ்நானஞ் செய்யவேண்டியது.

௧௦-வது. வில்லூன்றி தீர்த்தம்.

ஸ்ரீராமர் சீதைக்கு தாகந் தீர்ப்பதற்காகச் சமுத்திரத்தில் வில்லை யூன்றினவிடஞ் சமுத்திரமத்தியில் நல்லதண்ணீர்க்[redacted]குமிழியுண்டாயிருக்கின்றது, சீதாகுண்ட தீர்த்தத்துக்குக்[redacted]கிழக்கிலிருக்கின்றது.

கக-வது. மங்கல தீர்த்தம்.

தங்கச்சிமடத்துக்குக் கீழ்ப்புறம் ரஸ்தாவுக்குத் தென்புறமிருக்கின்றது, மனோஜவ பாண்டியனும் அவன் பத்தினி சுமித்திரையும் மகன்சந்திரகாந்தனும் இராச்சியபாரம்பெற்று முடிவில் மோட்சமடைந்தது.

கஉ-வது. இரணவிமோசன தீர்த்தம்.

ஏகாந்த இராமசாமி கோவிலுக்கு வடபுறமிருக்கின்றது.

கங-வது. அமுதவாவி தீர்த்தம்.

ஏகாந்த ராமசுவாமி கோவிலுக்குள் ஈசானிய திக்கிலிருக்கின்றது, ஏகாந்த ராமசுவாமி கோயிலானது ஸ்ரீராமர் இலக்ஷ்மணர் விபீஷணர் அனுமார் சுக்ரீவன் முதலானவர்களுடன் இலங்கைக்குச்செல்லும் விஷயமாக ஏகாந்தமாயிருந்து பேசுகையில் சமுத்திரகோஷ்டமானது பேசவொட்டாமல் இரைந்ததினால் ஸ்ரீராமர்கையை அமர்த்த சமுத்திரமானது சப்தமில்லாமல் இன்று மிருக்கின்றது.

கச-வது. இலக்ஷ்மண தீர்த்தம்,

ஸ்ரீராமேஸ்வரத்தில் பாம்பன்ரஸ்தாவுக்குத் தென்புறமிருக்கின்றது பலபத்திரர் சூதபுராணிகரைக்கொன்ற பிர்மஹத்தி தோஷமும் இராட்சதனைக்கொன்ற தோஷமும் நிவர்த்தியாயினது,

கரு-வது ஸ்ரீராம தீர்த்தம்,

இலக்ஷ்மண தீர்த்தத்துக்குக் கிழக்கிலிருக்கின்றது சுதிக்கனென்ற பிராமணன் தீர்த்தமாடி மானிடதேகத்துடன் தேவலோகமடைந்ததுந் தருமராஜாவானவர் அசுவத்தாமா இறந்துவிட்டதாய் பொய்சொன்னதினாலுண்டான குருஹத்திதோஷமும்போய் ராஜபட்டாபிஷேகம் பெற்றுக்கொண்டது

கசா-வது, தனுக்கோடி தீர்த்தம்

இரத்னாகரமும் மகோததியும் ஒன்றாகக்கூடிய இடம் மகா சமுத்திரன்னானம் அசுவத்தாமா நித்திரையில் இளம்பஞ்சபாண்

டவர்களைக்கொன்ற பாவமுந் தருமகுத்தபாண்டியனுக்குப்பயித்தியமுஞ் சானகாட்டனென்னு முனிவனுக்கும் குபேரன் மந்திரியாகிய பத்திரனென்பவனுக்கும் பராவசு அருவாவசு வென்பவன் தகப்பனைக்கொன்ற பிரமஹத்தி தோஷங்களும் அநேக கோடி பாவங்களும் நிவர்த்தியாகின்றது, வருகிறவழியில் கோதண்டராமசுவாமிகோயில் தெரிசனைசெய்யவேண்டியது,

௧௭-வது சடாமகுட தீர்த்தம்.

கோதண்டராமசுவாமி கோயிலுக்கு மேற்கே மணல்மேட்டுக்குத் தெற்கே யிருக்கின்றது, நல்ல தண்ணீர் தெப்பக்குளம், ஸ்ரீராமரும் இலட்சுமணரும் ராக்ஷஸர்களுடைய இரத்தங்கள் தங்கள் ஜடாமகுடங்களிலிருந்ததை கழுவுதற்காகத் தெய்வீகமா யுண்டாக்கப்பட்டது. சுகப்பிர்மரிஷியும் பிருகுமுனிவரும் துர்வாசரும் தத்தாத்திரேயரும் மோக்ஷமடைந்தது.

௧௮-வது சுக்ரீப தீர்த்தம்.

கெந்தமாதனபருவதத்துக்குப்போகும்வழியிலிருக்கின்றது

௧௯-வது பாண்டவ தீர்த்தமாகிய தரும தீர்த்தம்,

கெந்தமாதன பருவதத்தி லிருக்கின்றது,

௨௦-வது வீம தீர்த்தம்.

கெந்தமாதன பருவதத்தி லிருக்கின்றது.

௨௧-வது அருச்சுன தீர்த்தம்.

கெந்தமாதன பருவதத்தி லிருக்கின்றது.

௨௨-வது நகுல தீர்த்தம்.

மேற்படி பருவதத்தி லிருக்கின்றது.

௨௩-வது சகாதேவ தீர்த்தம்.

மேற்படி பருவதத்தி லிருக்கின்றது.

௨௪-வது துரோபதி தீர்த்தம்.

ஸ்ரீபத்திரகாளி கோவிலுக்குப் பக்கத்திலிருக்கின்றது.

௨௫-வது பிரம தீர்த்தம்.

ஸ்ரீபத்திரகாளி கோவிலுக்குக் கீழ்ப்புறமிருக்கின்றது.

உகூ-வது பரசுராம தீர்த்தம்.

மேற்படி பிர்மதீர்த்தத்துக்கு மேற்புற மிருக்கின்றது

உஎ-வது அநுமகுண்ட தீர்த்தம்.

ஸ்ரீராமநாதசுவாமி கோவிலுக்கு வடபுறமிருக்கின்றது

உஅ-வது அகஸ்திய தீர்த்தம்.

ஸ்ரீராமநாதசுவாமி கோவிலுக்கு ஈசானதிக்கிலிருக்கின்றது

உகூ-வது அக்கினி தீர்த்தம்.

ஸ்ரீராமநாதசுவாமி கோவிலுக்குயெதிரேசமுத்திரஸ்நானம்

ரூ0-வது நாக தீர்த்தம்.

ஸ்ரீராமநாதசவாமி கோவிலுக்கு ஈசானத்தில் தேவஸ்தான மடத்துக்குள்ளிருக்கின்றது.

ரூக-வது சேதுமாதவ தீர்த்தம்.

ராமநாதசுவாமி கோவிலுக்குள் மூன்றும் பிராகாரத்திலிருக்கின்றது, தெப்பகுளம்.

ரூஉ-வது நளன் தீர்த்தம்,

சேதுமாதவர் கோவிலுக்குள்ளிருக்கின்றது

ரூரூ-வது நீலன் தீர்த்தம்.

சேதுமாதவர் கோவிலுககுள்ளிருக்கின்றது

ரூச-வது கபி தீர்த்தம்,

மேற்படி கோவிலுக்குள்ளிருக்கின்றது

ரூரு-வது கவாட்சி தீர்த்தம்,

சேதுமாதவர் கோவிலுக்குள்ளிருக்கின்றது

ரூஎ-வது அங்கத் தீர்த்தம்.

கெந்தமாதன பருவதத்திலிருக்கின்றது

ரூஅ-வது சாம்பவ தீர்த்தம்.

மேற்படி கெந்தமாதன பருவதத்திலிருக்கின்றது

௩௯-வது பிர்மஹத்தி விமோசன தீர்த்தம்.

கோவிலுக்குள் உட்பிராகாரத்திலிருக்கின்றது

௪௦-வது சூரியபுஷ்கரிணி தீர்த்தம்

மேற்படி கோவிலுக்குள் உட்பிராகாரத்திலிருக்கின்றது

௪௧-வது சந்திரபுஷ்கரிணி தீர்த்தம்,

மேற்படி கோவிலுக்குள் உட்பிராகாரத்திலிருக்கின்றது

௪௨-வது முத்தீர்த்தமாகிய கங்கா, யமுனா, கயாதீர்த்தம்,

கோயிலுக்குள்ளிருக்கின்றது

௪௩-வது சங்க தீர்த்தம்,

மேற்படி உட்பிராகாரத்திலிருக்கின்றது

௪௪-வது சக்கர தீர்த்தமாகிய முனி தீர்த்தம்,

மேற்படி உட்பிராகாரத்திலிருக்கின்றது

௪௫-வது காயத்திரி சாவித்ரி தீர்த்தம்.

அனுமார் கோவிலுக்கு மேற்புறம் சத்திகொல்லையி லிருக்கின்றது,

௪௬-வது மகாலக்ஷ்மி தீர்த்தம்,

அனுமார் கோவிலுக்குத் தென்புறம் தெப்பக்குளம்.

௪௭-வது சிவ தீர்த்தம்

கோவிலுக்குள் நந்திகேஸ்வரருக்கு தென்புறமிருக்கின்றது

௪௮-வது சாத்தியாமிர்த தீர்த்தம்

அம்மன் கோவிலுக்குள்ளிருக்கின்றது

௪௯-வது சர்வ தீர்த்தம்,

ராமநாதர் சந்நிதிக்கு முன்னிருக்கின்றது

௫௰-வது கோடி தீர்த்தம்,

கோவிலுக்குள் முதல்பிராகாரத்தில் ஸ்ரீகாசிவிஸ்வநாதர் கோவிலுக்கு வடபுறமிருக்கின்றது கடைஸ்நானம் செய்யவேண்டியது,

தீர்த்தங்களின் அட்டவணை

முற்றிற்று.

உ

கடவுள் துணை

ஸ்ரீராமேச்சுரமென்னுஞ்

# சேதுஸ்தலபுராண வசனகாவியம்.

## விநாயகர் தோத்திரம்.

திங்களங்குழவியென்னத் திகழொருமருப்பிற்சோதி
தங்குகிம்புரியபங்கத் தடாமணிமகுடந்தாங்கித்
துங்கநல்வரங்களல்குந் தூயசீராமசேதுப்
புங்கவர்வணங்கும்யானை முகத்தனைப்போற்றல்செய்வாம்.

## இராமநாத சுவாமி.

பூமலியிதழிசூடும் புதுநிலாமகுடமேனி
காமலிசுருதிபோற்றும் நம்பிரானிராமநாதன்
ஏமலிசிலையிராமர்க் கிராவணன்பிரமகத்தித்
தீமையடுக்கந்தீர்த்த சேவடிசென்னிவைப்பாம்.

பூந்தவிசினிருந்தபிரான் முதலோர்காணப்
புண்டரிகமகள்கொழுநன்புகழிலங்கை
வேந்தனுயிர்ப்பழிகழுவுமுகத்தால்பார்க்கும்
விடையவனையுடையவனும்வேதவாய்மை
பாந்தரங்கள்வெளிசெய்வானனைவரோடு
மனந்துகந்தமாதனத்திலருச்சித்தேத்து
மேந்துபுனற்சடிலமுடியிராமநாத
னிணையடிச்செந்தாமரைகளிறைஞ்சிவாழ்வாம்.

## ஸ்ரீபர்வதவர்த்தனியம்மன்.

தண்ணெனவும்வெச்செனவுந்தந்துசாயாத்
தகைபயின்றவிட்டேக்கித்தலைவற்கென்று
முன்னைமுதந்தனையுதவிமயமேரு
வுயர்சிகரமந்தரத்தைபொருவிச்சேர்க்குங்
கண்ணுதலைவிளர்ப்புறலாற்கயிலைவெள்ளிக்
கௌணியர்க்குத்தமிழ்சுரக்குங்காஷியாமேல

வண்ணமுலைமலயமலைமாதுங்கன்னி
மலைவளர்காதலியலர்த்தாண்மனத்துள்வைப்பாம்.

## நடேசர்.

பூமாதுபொலிவெய்தமுகுந்தன்காக்கும்
புவிமாதுவளம்பெருகப்புலமைசான்ற
நாமதுகலந்தழைப்பவிருள்கால்சிக்கு
நகைநிலவுதவழ்மவுலிநன்னீர்க்கங்கை
மாமாதுபுனறளிப்பமறைகள்வாழ்த்த
வளர்தில்லைபம்பலத்துள்வாமகீங்காத்
தேமாதுவிழிகுளிர்ப்பவமரர்போற்றத்
திருநடஞ்செய்துபாத்தாள்சென்னிசேர்ப்போம்.

## கணபதி.

வேவனிமுடிப்பகீரதிகீர்புழைக்கைவாங்கி
விடுத்தபன்வெண்டலையுநட்டிமிளிர்வெண்கோட்டாற்
கோணிளைபமதிக்கதழவிபுழுதுமேருக்
கொடுமுடியிற்கிளைத்தவெண்டோள்குழைபத்தாக்கித்
தாணெடியவிடைமுனிந்துகயிலைமுக்கட்
டாதைபொடும்விளைபாடித்தன்பாலன்பர்
மாணிலவுமனத்தறிமின்றுலாவுக்தெய்வ
வாரணத்தைசினைந்திறைஞ்சிவழுத்தல்செய்வாம்.

## சிவசுப்பிரமணியக்கடவுள்.

குலவுமலைமகள்கலசமுலைப்பால்வாசக்
குமுதமவள்கொமுசர்மறைமொழிக்குஞ்செவ்வி
நிலவுமுகமலர்நமழச்செய்துமுன்னை
னெடுந்துளக்கைபிடித்தேதறிசெற்றிப்பட்ட
தலைவிபிவரொருமூவருவப்பமாலை
டும்பர்கணங்களிதுங்கவுலகமூடும்
கலபமாகதமரிதுங்கமுற்கால்வென்றிக்
கந்தனைவந்தனைசெய்துகருத்துள்வைப்பாம்.

## கலைமகள்.

கவளமதகரியுரிவைப்போர்வைமூடும்
கண்ணுதலோன்புகழ்விரிக்குங்கலைகள்பாவும்

பவளவிதழ்ப்பசுங்குதலைமொழியிற்காட்டும்
பைந்தொடியையந்தணன்றேய்பருவமல்குற்
றுவளுமணிமருங்குலிளநிலவெண்மூரற்
சுந்தரியைவெண்கமலத்தோட்டுவட்டத்
தவளமதிநடுமவர்வாலெகினம்போலுந்
தையலைமையலையகற்றித்தாளிற்றாழ்வாம்.

## நந்திதேவர்.

போதலுறைமலர்முனிழாதமரர்கோமான்
புரிநிலைமைகுலைடாதுமருதுபோழ்ந்த
பாதலுறைகடல்சுருங்காதரிணஞ்சூரல்
படைமழுவண்சுரிகைகரம்பரித்துப்பாந்தட்
காதலுறைசிதறுபுனற்கங்கைசூடுங்
கண்ணுதலெம்பரன்மதியுங்கதியுநல்கு
காதலுறைதிருக்கயிலைகாவல்பூண்ட
நந்திபைநம்புத்தியின்கணயந்துவாழ்வாம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

சங்கமணிக்குழைதயங்கத்தழைந்தகாதுந்
தனிவிடையுமுதலபலதணப்பில்காட்சி
பொங்குமடையாளங்கள்புகன்றும்பாற்றிப்
பொருவிறந்தபரஞ்சுடரைப்புத்திக்கெட்டா
வங்கணனைவழுதியுடல்வெப்பு ங்க
வணிதிகழ்வெண்டிருநீண்டுளள்ளிச்சாத்துஞ்
செங்கைவிரல்கொடுகுறித்துத்தெரிக்குந்தோன்றல்
சிற்றடியின்பெருந்தகைமைசிந்தைசெய்வாம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

தேவரையுமுனிவரையுந்துளவமார்பிற்
திருவரையுங்குரவரையுஞ்செல்வமிக்கோர்
யாவரையுமேவல்கொளுநெற்றிநாட்
திறைவரைமுன்னிகந்திருந்தவெண்ணந்தோன்றச்
சேவரையுநெடுங்கொடியின்தகைமையெல்லாத்
திசைவரையுஞ்செலத்தமிழின்செய்யுள்பாடு
நாவரையர்புகழ்மொழிகள்வரைந்துகூறி
நவர்தவர்செய்திருத்தொண்டுவியந்துவாழ்வாம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

தாதுகொண்டமலர்ச்சுரியற்பரவையென்பா
டனத்துணைமேன்மயற்குளிரின்றளர்வுதீர
வேதுகொண்டுவிழையுநெறிவிரும்பிமாலும்
விரிஞ்சனுமுன்றேடாதவெளியையாரும்
பாதுகொண்டுமறிவரிதாயெங்குமான
விரும்பொருளைநெருக்குமிருளிரவின்மீளத்
தூதுகொண்டார்தமையெமையாட்கொள்வீரென்று
சொல்லியவர்பதம்புல்லித்தொழுதல்செய்வாம்.

## மாணிக்கவாசக சுவாமிகள்.

செழியர்குலபதிகொடுத்தமாடுகொண்டு
சென்றுதிருப்பெருந்துறையிற்சொரிந்தசம்புப்
பழிவிரவுபரித்திரள்கொண்டணைந்துமாறன்
பணித்தவிடர்க்கிரங்கியருள்பாடிப்போற்றி
வழிபமுதகிரணநிலாமகுடப்பேத
மதுரையவர்பரம்பரைவந்திந்நாகச்
சழிபெருகுபுனற்றாங்கவைகைவாய்மண்
சுமப்பித்தார்பதந்தலைமேற்சுமத்தல்செய்வாம்.

## சண்டேசுரநாயனார்.

மனுநிகளுக்கெட்டாதபரமானந்த
வாழ்வினையங்கோரிலிங்கமணலார்கூப்பித்
தனுநிதயர்தனினின்றுந்தாபித்தன்பா
றனைமுத்தவன்பாலாட்டவந்துதடுக்கத்தாதை
பேனுதவன்றனுருபதமுமழுவாற்றுண்டித்
திகழ்ந்தவனைப்பரபதத்துளிருத்தினானும்
பினுமிபருளடைந்தவிறற்சண்டேசன்றாள்
பிரசமலரிறைத்திறைஞ்சிப்பேசுவாமே

## மெய்கண்டதேவநாயனார்.

அல்லாதபரசமயவலகைத்தேர்வின்
டகலவகல்புனற்பெண்ணையயல்சூழ்வெண்ணெய்ப்
பொல்லாதவிபமுகத்துப்புத்தேடன்பாற்
புனிதசிவாகமப்பொருண்மைபொருந்தவாய்ந்து

நில்லாததிலையிதுமற்றென்றுமொன்றாய்
நிற்குநிலையிதுவெனமெய்ந்நெறிதேர்ந்தியாரும்
வெல்லாதசிவஞானபோதஞ்சொன்ன
மெய்கண்டான்சரணமுடிமீதுகொள்வாம்.

## திருத்தொண்டர்.

முன்னுடையவரியசிவமுத்திபெற்றோர்
முதலகிலதுவிரும்பிமுயலாநின்றோர்
பின்னடையவருமவர்கண்முதலாயுள்ள
பிள்ளைபிளவெள்ளைமதிபிறங்குவேணி
மின்னடையுமணிமௌலிவேதகீதன்
வெண்ணீறுங்கண்டிகையுமெய்விடாமற்
றன்னடைநன்னெறிதம்மையடைந்துளார்க்குந்
திருத்தொண்டர்பெருந்தொண்டுதலைமேற்கொள்வாம்.

## சிவபக்தர்கள் அடையும் புண்ணியபலன்.

கண்ணுதலாலயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபாகனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நாவே நாவு
பரன்சரிதையே கேட்கப்படுஞ்செவியே செவிகள்
அண்ணல்பொலங் கழனினைக்கு நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக்கீழடிமைபுகு மடிமையே யடிமை

தேவதேவன்றனைக்கண்பாற்சிறப்புமிகுந்தநறுமலர்ப்பூங்
காவைமகிழ்ச்சமைத்தளிக்குங்கருணையுடையோரியாவரவர்
பூவின்முடங்கைதகனகமிகப்பொருந்தியுலகினர்தியத்திற்
பாவினிலங்குமுருத்திரர்தம்பதம்பெற்றிருப்பர்பிணியகன்றே.

நூறுவேதியர்க்கிபலகோய்தென
வீறிபோங்கிளங்குதன்மெய்ம்மையே
பேறயர்த்தருளெம்பெருமான்புகழ்
கூறும்பத்தருக்கன்னங்கொடுத்தலே.

கடவுள் துணை.

சூதபுராணிகர் சௌனகாதிரிஷிகளுக்கு

புராணம் சொல்லியது.

# நைமிசாரணிய வனச்சிறப்பு.

நைமிசாரண்ணிய மென்கின்ற வனத்திலே பிர்மதேவனுடைய பிறப்புகள் கோடியுகங்கள் கண்டவர்களாய் தேவாமிர்தத்தைப் புசித்தவர்களாய்க் காமக்குரோதலோப மோகமதமார்ச்சரியங் களெவ்வளவு மில்லாதவர்களாய் பிர்மசாரி, வானம்பிரஸ்தன்சன்னியாசியான பெரியோர்கள் சடைமுடிகளுடனுஞ்சிரமுண்டிதங்களாகவும், மரவுரி கிருஷ்ணஜனம் புலித்தோலாசனந் தெர்ப்பாசங்களை யுடையவர்களாய் பிர்மா, விஷ்ணு, ருத்திரன், மயேசுவரன் சதாசிவன் பராசத்தி முதலான தேவதைகளை உபாசனை செய்த பெரியோர்கள் சதாகாலம் நாலுவேத மாறுசாஸ்திரம் இருபத்தெட்டு ஆகமங்கள் பதினெண் புராணங்களை ஒருவர்கொருவர் வினவிக்கொண்டு அதே கவனமாய்ப் பேசிக்கொண்டிருப்பார்கள் அப்படியவர்கள் பேசிக்கொண்டிருக்கிற வேதசாஸ்திர புராணங்களை கேட்டுக்கொண்டு அந்த வனத்தில் சஞ்சாரம் பண்ணிக்கொண்டிருக்கிற கிளிகள் நாணவந்தான் முதலான பட்சிகள் தங்கள் தங்கள் சுயபாஷைகளை சுத்தமாய் மறந்துவிட்டு வேதசாஸ்திரங்களைப் பேசிக்கொண்டு அந்தப் பாஷைகளினாலே தங்களுடைய குஞ்சுகளுக்கும் வருத்தி விக்கும் அப்படிக் கொத்த பெரியோர்களும் பட்சிசாதிகளும் பேசப்பட்ட சாஸ்திரங்களையும் வேதங்களையும் அதனுடைய இங்கிதங்களையும் அந்தவனத்திலே சஞ்சாரம்பண்ணிக்கொண்டிருக்கின்ற காடி, புலி, சிங்கமுதலான மிருகசாதிகள்கேட்டு ஒன்றுக்கொன்று பகைகள் இல்லாமல் ஒருகூட்டமாகவும், கூட்டுறவாய்கிரியும், பாம்பும், நாயும், பூனையும், சிங்கமும், யானையும், புலியும் பசுவும், ஒருதுறையிலே தண்ணீர் குடித்து வளர்ந்து கொண்டிருக்கும் வனமெல்லாம் பாரிஜாதம், மந்தாரம், புன்னை, வில்வம் சந்தனம், ஆச்சா, தேக்கு, தேவதாரம் திருவாத்தி, மகிழம், மா,

பலா முதலான விருக்ஷங்களும் மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம், சுகந்தம், துளசி, பாதிரி முதலான புஷ்ப ஜாதிகள் நெருங்கிய பூங்காவும் அடிக்கடி தடாகங்களும் மலைகளுங் குகைகளும் நெருங்கியிருக்குஞ் சந்திரசூரியர் செம்மையாய்ப் பிரகாசிக்கக்கூடாத நெருங்கின சோலைகளாயத் தெய்வீகமாய் ரமணீகரமாய்ப் பார்க்கப் பதினாயிரங்கண் வேண்டியதாய் ஜகஜ்ஜாதிஸிறமாய்ச் சச்சிதானந்த சொரூபமாய்த் திவ்யவாசனைகளோடு கூடியதாய் எந்தலோகங்களும் எந்தவனங்களும் நிகரில்லாததாய் சகலமான ரிஷிகள் தபோதனர்கள் எங்கே யிருந்தாலும் வந்து கூடுகின்ற இடமாய் எப்போதும்பெரியோர்கள் அவரவர்கள் சிஷர்களுடன் பத்தினிகளுடன் கூடி நெருங்கியிருந்து மூலாதாரஞ் சுவாதிஷ்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்கினையென்று சொல்லப்பட்ட சடாதாரங்களையுஞ் சோதனை பண்ணி இடைகலை பிங்கலை சுழிமுனை மூன்றையும் ஒன்றாய்க்கூட்டி பிர்மரந்திர பரியந்தம் மேலெழுப்பி துவாதசாந்தத்திலேயிருக்கிற அகண்டாகார சின்மயானந்த சொரூபமாய் சாக்ஷாத்காரத்தைக்கண்டு களிப்புற்று ஆனந்தரசங்களை யுண்டுதெகட்டியாதொன்றுந் தெரியாமற் சொக்கிப்போயிருக்கிற யோகீஸ்வரர்களும் அக்கினிஹோத்திர மெக்கியங்கள் யாகாதிகள் ஒன்றுமொன்று குறைவுபடாமல் நிறைவேற்றிக்கொண்டிருக்கிற வானப்பிரஸ்தர்களும் ரிஷீஸ்வரர்களும் தலைகீழாய் பஞ்சாக்கினிமத்தியிலேயும் ஒற்றைக்காலுடனே ஊசிமுனையிலேயும் நிலத்திலே ஒருகையை யூன்றிக்கொண்டும் இரண்டுகையை யூன்றிக்கொண்டும் ஒற்றைவிரலை யூன்றிக்கொண்டுந் தவஞ்செய்யப்பட்ட தவசிகளுங் கணக்குவழக்கு அளவுசங்கையில்லாமல் பெரியோர்களாய் நெருங்கிக்கொண்டிருக்கும்படிக்கொத்த தபோபலங்களாலே பிரமப் பிரளயந்தன்னி காலாந்திரங்களையுங் கடந்திருக்கிற பெரியோர்கள் நெருங்கின நைமிசாரண்ணியவனத்தைப் போகவதிப்பட்டணத்துக்கு அதிகாரியான யமன் ஒரு தூதனையாவது அனுப்பிவைக்க நினைக்கமாட்டான். கண்டிருக்கவு மாட்டான்.

எல்லாரிஷிகளும் கற்பகோடி காலங் கண்டவர்களாயிருப்பார்கள் அப்படிக்கொத்த நைமிய சாரண்ணியத்திலே சௌனகாதி முனிவர்கள் முதலான பெரியோர்கள் மோக்ஷத்திலே விருப்பமுள்ளவர்களாயிருபத்தாறாயிரம் பேர்கள் ஒரு

கூட்டுறவா யிருப்பார்கள். அவர்களுடைய மாணுக்கர் சிஷர்கள் அளவிறந்த கோடிபேர் இருப்பார்கள். அப்படிக்கொத்தவர்கள் ஈஸ்வரனுடைய பாதாரவிந்தங்களை மானத பூசைகளினாலே அர்ச்சனைபண்ணி வணங்கிக் குற்றமில்லாத புண்ணிய கதைகளை யொருவர்க்கொருவர் பேசிக்கொண்டிருக்கிற வேளையிலே வேதவியாசருடைய மாணுக்கராகிய சூதமாமுனிவர் அந்தவனத்தைநோக்கி எழுந்தருளிவந்தார். அப்படிக்கொத்த சூதமாமுனிவர் வருகிறதை சௌனகாதி முதலான இருபத்தாறுயிரம் பேர்களான பெரியோர்களுங்கண்டு திடீரென்று எழுந்திருந்து எதிர்கொண்டழைத்து தெர்ப்பாசனத்திலெழுந்தருளப் பண்ணி அர்க்யபாத்தியங்களளித்து சோடசவுபசார பூசனைகளும்பண்ணி வணங்கி நமஸ்காரம்செய்து அனேகதோத்திரங்கள் செய்து சகலமான தீர்த்தங்களையும் சகலமான தவங்களையுஞ் சகலமான க்ஷேத்திரங்களையும் அடைந்தவர்களாய்ச் சந்தோஷங்களையடைந்து ஆனந்தக் கூத்தாடி மகிழ்ந்துசுவாமிசூத மகாரிஷியே வேதவியாசருடைய அனுக்கிரகத்தினாலே சகலமானகதை புராணங்களைக் கேட்டறிந்து சகலமுந் தெரிந்திருக்கிற மகாமுனியான சுவாமியை இன்றைத்தினம் நாங்கள்கண்டு வணங்க என்ன புசாபலம் புண்ணியவிசேடஞ் செய்திருந்தோமோ தெரியாது. நாங்கள்செய்த தவபாபலமே சுவாமியைக் கொண்டு வந்துவிட்டது. அடியேங்களுக்கு மனம் குளிரும்படியாய்பிர்மா விஷ்ணு, ருத்திரன், மகேசுவரர் சதாசிவமான ஈசுவரபாதங்களை யடையும்படியான மோக்ஷங்கிடைக்கும்படியாகவுந் தீர்த்தமகிமை மூர்த்திமகிமை,ஸ்தலமகிமை இந்தமூன்றும் ஒன்றுய்ப்பொருந்தினதாயுஞ் சகல லோகங்களுக் கன்னியமா யிருப்பதாயும் அரிதானதாகவும் மேலான புண்ணியலோகங்களைகொடுக்க வல்லமை யுண்டானதாயுஞ் சகல புண்ணியநதிகளுக்கும் சகலதேவதைகளுக்கும் மேலானதாயும்இந்தப் பஞ்சாசத்கோடி பூமண்டலத்திலே எந்தத் தீர்த்தம் எந்தஸ்தலம் மேலானதோ அதையெங்களுக்குத்தெரியும்படி சொல்லவேண்டுமென்று சௌனகாதி முனிகள் முதலான பெரியோர்கள் கேட்க சூதமாமுனியுங்கேட்டுமகாசந்தோஷத்தை யடைந்து பெரியோர்களே நீங்கள்கேட்டகேள்வி நன்றுய்க் கேட்டிருக்கிறீர்கள். அப்படிக்கொத்தபுண்ணியதீர்த்தமாகிய ஸ்தலங்களுமிருக்கின்றன. அதை முன்னமே சொன்னேன்.

அப்படிச்சொன்ன புண்ணியகதைகளிலே வெளிவிடக் கூடாதென்று மறைந்திருந்ததை இப்போது நீங்கள் அபேட்சை யாய்க் கேட்டபடியினாலே சொல்லுகிறோம் நீங்களெல்லோரும் ஒன்றாய் ஒருமனதாயிருந்து இதுவரையிலே கேட்டிருக்கிற புண்ணிய கதைகளைப்போலே யிதையும் பெண்ணிவிடாமல் பய பக்தி விசுவாசத்துடன் அந்தக்கரண சுத்தியாய் வேறே நினைவின்றி கேட்டிருப்பீர்களானால் வேறேபுண்ணியம், வேறேதபசு, வேறே யாகம், வேறே மந்திரம், வேறே ஜெபங்களும் யாதொன்றும் வேண்டியதில்லை. இது அப்படிக்கொத்த புண்ணியகதையாக்கும், இதனுடைய மகிமையை இரண்டாயிரம் நாவைப் படைத்த ஆதிசேஷனாலுஞ் சொல்ல முடியாது. நாமுங்கள் பேரிலிருக்கிற வாஞ்சையினாலே சொல்லுகிறோம் கேளுங்களென்று சூதமகாமுனி நைமிசாரண்யத்திலே சௌனகாதி முனீஸ்வரர்களுக்கு சேதுமகத்துவத்தையு மதின் சார்பிறே யுண்டாயிருக்கிற தீர்த்த மகிமைகளையுங் கெந்தமாதன பர்வத மகத்துவத்தையும் ஸ்ரீராமநாதசுவாமியுடைய கிருபாநந்தங்களையுஞ் சவிஸ்தாரமாகச் சொல்லுகிறோமென்று சொல்லத் தொடங்கினார்.

நைமிசாரணியச் சரித்திரம்

முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# சேதுபலச்சரித்திரம்.



## சேதுஸ்நானம் பண்ணினபேர்கள் அடையும் பலனைச் சொல்லுகின்றது.

### சேதுபலச்சருக்கம் ருஅ-ம் செய்யுள்.

இனைய சேதுநீ ராடினுந் தீண்டினு மிதுதனை யெஞ்ஞான்று
நினைவு செய்கினுங் காண்கினுங் கேட்பினு நீங்கிடுந் துயரெல்லா
மனையு மத்தனு மாயிரு மாபவ னருள்செயு மச்சேதுத்
தனைநிகர்ப்பதொன் றிலையறந் தவநெறி தழைக்குமந் தணர்காளோ.

மகாமேருவுக்குத் தக்ஷிணபாரிசத்தில் பரதகண்டத்தில் கன்னியாகுமரித்தீவில் கெந்தமாதனகிரி மலைச்சாரலில லவண சமுத்திரக் கரையில் அயோத்தியாபுரிபட்டணத்துராசாவாகிய சக்ரவர்த்தி தசரத மகாராசாவுடைய குமாரனாகிய ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியால் உண்டாக்கப்பட்ட சேதுவாகிய ராமேஸ்வரத்தில் மகிமை பொருந்திய தீர்த்தங்களனேகமுண்டு. அதிலும் மேன்மையானதாய் மோனவானந்த முத்திகளையுங் கொடுக்கப்பட்டதாய் மகத்துவமுடைய சேதுவென்று சொல்லப்பட்ட தீர்த்தம் ஒன்று அந்தத் தீர்த்தத்தை ஜென்ன மெடுத்தவன் கண்ணாலே கண்டால் ஒரு கற்பகோடிகாலங் கைலாசத்திலே அவனுடைய தாயார் தகப்பன் புத்திரமித்திர களத்திராதிகளுடன் கோடி தலமுறை வரையில் சொந்தமானபேர்களுடன் ஆனந்த போகங்களை அடைந்திருந்து மோக்ஷத்தையு மடைவான் ஆகாசத்திலேயிருக்கிற நக்ஷத்திரங்களை ஒன்றாகவெண்ணினாலு மிந்த க்ஷேத்திரத்தைக் கண்ணாலே கண்டபேர்களுடைய பலன்களை ஆதிசேடனாலேயுஞ் சொல்லமுடியாது அனேகமான யாகாதி கிர்த்தியங்கள் யெக்கியங்கள் வேள்விகள் யாத்திரைகள் பண்ணிய பலன்களை உடனே கொடுக்கும், யாராவது ஒருவன் பிறனாகிய ஒருவனை சேதுவுக்குப்போய் ஸ்நானம் பண்ணிவாருமென்று சொன்னாலும் அவன் வாயினாலே, சொன்னவுட

னே அதுவரையில் செய்த அந்தப் பாவங்களெல்லா மவனைவி ட்டு நீங்கிக் கிருதார்த்தனுவான் இப்படிக்கொத்த ஒருவனந்தச் சேதுவிலே ஸ்நானம் பண்ணினுல் அவனுடைய குலம் ஏழுகோ டி தலைமுறையிற்செய்த பாவங்களெல்லாம் நங்கி சாயுச்சியபத த்தை படையும்படியா யிருப்பான். அப்படிக்கு ஸ்நானம் பண் ணினவனந்தச் சேதுக்கரையிலேயிருக்கிற கந்தமாதன பருவதத் தையும் அதில் வாசம்பண்ணுகிற ஸ்ரீராமநாதனையும் அந்தச் சேதுதனுக்கோடியையும் எவன் மனத்திலெண்ணி நினைக்கின் றுனே அப்போதே அவன் செய்த பாவமெல்லாம் அதமாய்த் துலைந்து விடுகிறது பின்னுமவனுடைய தாயாதி வழியில் கோடி லக்ஷந் தலைமுறையில் சொந்த தமரோடே மூன்றுகல்பகாலஞ் சிவபதமடைவார்கள். பஞ்சமாபாதகங்கள் செய்தவர்களா யி ருந்தாலும் இந்தச் சேதுவில் விசேஷ தினங்களில் தீர்த்தமாடி னுல் மூன்று பிர்மபட்டம் வரையிலும் வைகுண்டலோகத்தை அடைந்திருந்து சகல சாம்பிராச்சியத்தை யனுபவிப்பார்கள்; ஒருநாளும் எப்படிக்கொத்த பாவியும் யமலோகத்திலே யிருக்க மாட்டான்

தன் சதையைப்பிடுங்கித்தரமாட்டான், நாயினுடையமாமி சங்களைப்புசியான்' மூத்திரங்களையும் நாயின் மூத்திரங்களையும் குடியான், இருப்புஅம்பி ஆட்டுக்கல் செக்குகளிலே அரையுண் டுஉழைந்துவிழான், புழுவைச் சாப்பிடான். நெருங்கின இரு ப்புமுள்ளுகளிலே கேசாதிபரியந்தஞ் சுருக்குச் சுருக்கென்று குத்தாமலிருப்பான், மலஜலவாதிகளை யெடுத்துப் பூசிக்கொள் ளான், கன்மலை அக்கினிமலையிலே அவஸ்தைப்படான், அக்கினி குழியிலே குதியான், ரெத்தக்குளத்திலே விழுந்து நீஞ்சான். அக்கினியிலே பாய்ந்து கரையேறான், தலைகீழாய்வானவழியிலே தூக்கிடடான், காமநீர்களைக் குடியான், மலங்களைகட்டியாகச் சாப்பிடான்மேலேயும் பூசிக்கொள்ளான்,வாளாயுதங் கத்தி கரு க்குவாளாலே துண்டுதுண்டாய் யமகிங்கராலேகட்டுண்டு அறு படான், வாதநீர் பித்தநீர், சிலேத்துமநீர்களைப்புசியான், கோழை மூளைகளை விழுங்கான்,மலைப்பாம்புகளாலேகடிபடான்,காட்டா னையின் கால்களாலே மிதிபடான், அதினுடையகொம்புகளாலே குத்துண்டு வாதைப்படான் காய்ந்துக்கொண்டிருக்கின்ற என் ணெய்க்கொப்பறையிலே போடப்படான். என்ணெய்களை வாங் கிக்குடியான் மலங்களைவாரிவாரிப்போட்டுகுத்துண்டுகிடக்கான்

கண்ணிலுங் காதிலுங் மூக்கிலும் இருப்புச் சிலாகைவைத்து சுறுக்கென்று குத்துவாங்கான், பத்துக்குறடுகளைக் காயப்போட்டு ஒவ்வொரு எலும்புகளாய்ப் பிடுங்கப்படான், மரத்திலேறி மலமூத்திரக் கிணற்றில் விழான், சூலாயுதம் வேலாயுதம் பதினெட்டு ஆயுதங்களாலே வெட்டிப்பிளந்து சதைச்சதையாய்ப் பேர்க்கப்படான், இருப்புப் பாசங்களாலே கட்டுண்டு உருளான், புகைக்குகையிலே யிருந்து வெம்பிமடியான், அக்கினியிலே காய்ந்த இருப்புப்பலகையிலே படுக்கான். ஆண்குறி பெண்குறியிலே தூண்டிகளைப்போட்டுத் தூக்கி அக்கினிக்கு நடுவே கட்டி தூக்கான், இருப்பூசிகளினாலே எந்த விடங்களிலும் குத்துண்டு வாதைப்படான், சபத்தைக் காய்ச்சி வாயிலும் அபானத்திலும் விட மயங்கிவிட மாட்டான், இப்படிக்கொத்த தீமைகளைச் செய்யப்பட்ட ரௌரவாதி நரகங்களாகிய இருபத்தெட்டுக்கோடி நரகத்திலும் அழுந்தான், இந்தச்சேதுவிலே ஸ்நானம் பண்ணின புண்ணியதேகத்தை யுடையவர்களிந்த தனுக்கோடியைநோக்கி தீர்த்தமாடப்போகிறேனென்று ஒரு அடிபோய்வந்துவிட்டாலும் அவர்களு மிப்படிக்கொத்தயமதெண்டனைக்குள்ளாகாமல் சொர்க்காதிபோகங்களை அநுபவிப்பார்கள் ஸ்ரீராமமூர்த்தியாலே கட்டியிருக்கிற சேதுவின் மேலே காற்றுவிழுந்து பறக்கிற மணல்கள் தூசிகளின் தொகையெவ்வளவோ அவ்வளவு பாவங்கள் அவ்வளவு ஸ்ரீஹத்தி பிரமஹத்திகள் செய்திருக்கின்ற பாவிகளா யிருந்தாலும் உடனே அவர்களைவிட்டு விலகிப் போம். யாவர் சேதுவிலே தீர்த்த மாடுகிறார்களோ அவர்களுடைய சிரசிலே இருக்கிற கண், காது, மூக்கு, வாய், இவைகளின்வழியே சேது தீர்த்தம் நுழைந்து வந்தால் அப்படிக்கொத்த கண் காது மூக்கு வாய், சிரசுகள் தெய்வ லோக போகங்களை கற்பகாலங்களிலும் அநுபவித்துக் கொண்டிருக்கும், தங்களுடைய புத்திரபவுத்திராதிகளுடன் தெய்வ லோகத்திலே இரண்டாயிர மூவாயிரவருஷம் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் சேதுவில் விழுகிறகாற்று யார்மேலே படுகின்றதோ அவர்கள் சுராபானம் பண்ணியிருந்து அதினாலே நடந்த பாபங்களும் காற்றோடே காற்றாயோடிப்போம் பின்னும் உடனே அந்தச்சேதுவில் ஒருமுகூர்த்தம் வாசம் பண்ணுக்கொண்டிருந்து தீர்த்தமாடினால் நானாவிதமான பாபங்களும் விலகிப்

போம் வழிமார்க்கத்திலே அடித்துப் பறித்தவன் பெரியோர்கள் பிராமணாள் சிவபூசைகளுக்குத் துரோகம்பண்ணினவன், ராஜர்களுக்குப் பொய்சொன்னவன் சாப்பிடுகிறதே வேலையாக விருந்து சத்கர்மஜபங்களை விட்டுவிட்டவன், வேதசாஸ்திரங்களைவிற்றவன், பசுக்களை குதிரைகளை பத்தினியை பிள்ளைகளை விற்றவன். தெய்வப்பிராமணாளுக்கு ஒருபதார்த்தந்தருகிறேனென்று அவருக்கு வாக்குதத்தம் பண்ணி அப்பாலில்லையென்று சொன்னவன், அவர்களுக்குக் கொடுத்ததை வாங்கி அபகரித்து திரஸ்காரஞ்செய்தவன், சிவபூசை சாதுக்கள் பெரியோர்கள் பூசையிலேகோபித்தவன், விகாதஞ்செய்தவன், பெரியோர்பிராமணாளை கொன்றவன், பசுமுதலான ஜீவன்களை இரைதண்ணீர் குடியாமல்விரட்டினவன், பசித்து வந்தவர்களுக்கு உண்டானதை பகுந்து சாப்பிடென்று சொல்லாதவன். எல்லாருஞ் சேதுவில்தீர்த்தமாடினபோதே புண்ணியபுருஷர்களென்று வேதசாஸ்திரங்களாலேசொல்லப்படுகிறது பின்னும் அக்கினி கோத்திரங்களாலே சொல்லப்படுகிறது. பின்னும் அக்கினிகோத்திர வான்விகளுக்கு விகாதம்பண்ணினவன் தேவர்சொத்துக்கள் ஸ்திரீசொத்துக்கள் வெறிப்பிடித்தவன் சொத்துக்கள் அநாதிகளுடைய சொத்துக்கள் தாசிகளுடைய சொத்துக்கள் இவைகளை விற்றுண்டவன் சிவனுக்கு விஷ்ணுவுக்கும் அற்புதமான நற்கமல பதார்த்தஞ் சந்தனம், கஸ்தூரி, பால், பழம், சாம், நெய், சர்க்கரை, தாம்பூலம், பொன், வெள்ளி தங்கம் முதலானவைகள் பாத்திரம் பட்டுப்பட்டாவளிகள் இதுகளை அபகரித்துக்கொண்டவன் பெண்சாதிகூடப்பிறந்தவள் சினேகிதனுடைய பெண்சாதி மகன்பெண்சாதி மதுபானஞ்செய்தவன் துஷ்கிரிசைசாதிதான்பிறனுடையஸ்திரி குருபத்தினி தமயன்பெண்சாதி தம்பிபெண் சாதியைப் பெற்றமாமியார் பிராமணஸ்திரீகளிவர்களை சேர்ந்து தோய்ந்தவன் பாவங்களெல்லாஞ் சேதுவில் ஸ்நானம்பண்ணினவுடனே பஞ்சுபஞ்சுகளாகிவிடுபட்டு ஓடிப்போய்விடும் பின்னும் நாகலோகம் தெய்வலோகம் அக்கினிலோகம் பூலோகமுதலான இராச்சியபாரங்களும் போகபோக்கியங்களும் வேண்டியபேர்கள் பொன் பூமி ஆடையாபரணம பூஷணாதிகள தனகனவஸ்து வாகனங்களும் நிதிநிக்ஷேபங்களும் அஷ்ட ஐஸ்வரியங்களும் வேண்டிய பொருளுந் தவம் தானம் ஹோமம் நிஷ்டைபூசை முதலானவைகளும் சரியை கிரியையோக ஞானமுதலானவைகளும வேண்டிய பேர்கள் சேதுவில் ஸ்நானம் பண்ணினவுடனே புண்ணியதேகத்தை படைவார்கள்.

பின்னும் ராமசேதுவில் ஸ்நானம்பண்ணுவதற்கு விருப்ப முடையவர்கள் பொன், பூமி, அரிசி, காய்கரி பதார்த்தங்கள், கோதானம், கன்னிகாதானம், வஸ்திரதானஞ்செய்து புராணசிரவணம் செய்து வேள்விமுடித்து சேதுஸ்நானஞ் செய்தால்அவர்களுடைய புண்ணியம் யாராலுஞ்சொல்லமுடியாது. அவர்கள் புண்ணியசாலிகள். அதிலும் மனதில்யாதொரு தீங்குகள் நினையாமல் சேதுவில் ஸ்நானம் பண்ணின புண்ணியபுருஷர்களுடைய பலன்களை நாம் ஒருவிதத்திலுஞ் சொல்லத்தக்கதில்லை யென்று பூலோகவழக்கங்களையும் ராச்சியபாரஞ் பட்டாபிஷேகங்களையும்வேண்டியபோகங்களும் தெய்வலோக வாழ்க்கைகளையும் அரம்பாஸ்திரீகளினுடையபோபோக்கியங்களையும் வேண்டியவர்கள் வைகுண்டம் கைலாசம் முதலான விடங்களில் ; சாலோகசாமீப சாரூபசாயுச்சிய பதங்களை ; வேண்டியபேர்களுஞ் ; சேதுவில் ஸ்நானம் பண்ணினால் அவர்கள் செய்தீங்கான பாவங்களையும்போக்கும் அவர்கள் மனத்திற்குமேலான இன்பங்களையுங் கொடுக்கும். சகலமான விரதங்களிலுஞ் சகலமான நோன்புகளிலுஞ் சகலமான தீர்த்தங்களிலும் சகலமான ஸ்தலதெரிசனங்களிலுஞ் சகலமான யோகங்களிலும் நூறுகோடிபங்கு அதிகம் இந்தச்சேதுவிலே ஸ்நானம் பண்ணின்பேர்கள் ; சித்தமாயடைவார்கள் செல்வங்கள் வாளுட்கள் வித்தைகள் வேதங்கள் மந்திரங்கள் அஷ்டமாசித்திகள் அணிமாசித்திகள் கைகூடி வரவேண்டியபேர்கள் சேதுஸ்நானத்தை முக்கியமாய் நிறைவேற்றிக்கொண்டு வருவார்கள் அவரவர்கள் கபடமுழுதினுலும மனமில்லாதவர்களாய் முழுதினுலும் மேன்மையும அவரவர் நினைத்தபடி சுகத்தை யடைந்து மறுமையிலுமப்படியே யிருப்பார்கள் பூரணச் சந்திரனைப் போலே தேகமும் குபேரனைப்போலே பாக்கியமும் தர்மங்களும் காமதேனு கற்பகவிருட்சங்களுஞ் சுரபிசிந்தாமணிபதும் பீடங்களும் உண்டாகும் பெரியோர்களிடத்தில் பொருள்வாங்கிப் போனுலும் அவர்கள்கொடுத்தாலும் அவர்களுக்குக் கிடைக்கின்றபலன் பேர்பாதியாகக் கிடைக்கும்.

அப்பச் சேதுஸ்நானத்துக்கு வரவேண்டியபேர்கள் கையில்பொருளில்லாமற் போனுல் நல்லபிராமணுள் பெரியோர்களிடத்தில்கேட்டு அவர்கள் கொடாமற் போனுல்வைசியர் கையில்

வாங்கிப்போகவேண்டும் அவர்கள கொடாமற்போனால் க்ஷத்தி ரியரிடத் ற் கேட்டு வாங்கிகொண்டு போகவேண்டும். பசும் பொன் பதார்த்தம் பட்டுவஸ்திரம் நவதானியம் அரிசி காய்கறி பதார்த்த முதலானவைகள் தங்கள் தங்களால் இயன்றமட்டுங் கொடுத்துத் துளசிதளம் வாங்கிக்கொண்டு சேதுவிலே தீர்த்த மாடச்சொல்லி ஒருவனை அனுப்பிக்க புண்ணிய புருஷாளுக்கு வேதசாஸ்திர புராணங்களிற் சொல்லுகின்றபடிக்கு அஸ்வமே தயாகம் பண்ணின பலன்களுந் துலாபாரம் பசும்பொன் கொடு த்த பலன்களுங் கொடுத்தவர்களுக்கும் வாங்கிக்கொண்டு போ னவர்களுக்குங் கிடைக்கின்றது. அல்லாமல் அவரவர் செய்த பாவங்களும் வேரோடு எடுபட்டுப்போம். சேதுவிலே தீர்த்த மாடவேண்டுமென்கிற ஆசையுடையவன் தீர்த்தமாடப் போகு முன்னே மரணமாகிப்போய்விட்டால் அவனுக்குத் தீர்த்தமாடி ன பலனை யடைந்து மேலான புண்ணியலோகங்களை அடைவா ன் மறுபடியுஞ் சனனமாகி சேதுக்கரையிலே எப்போதும் வா சம்பண்ணிக் கொண்டிருந்து பிரதிதினமும் ஸ்நானம்பண்ணி மனமகிழ்ந்து கொண்டிருப்பான்

யாராவதொருவன் சேதுவிலே ஸ்நானம்பண்ணிவாச் சொ ல்லிப் போய்வந்தவுடனே கொடுக்கிறேனென்றுசொன்ன பொ ருளைக் கொடாமற்போனால் அவனைப் பிர்மஹத்தி பண்ணின பஞ்சமாபாதகனென்று அறிவுடைய பெரியோர்கள் சொல்லு வார்கள். மேலுமிந்தச் சேதுவிலே மாதுர்நிந்தனை பிதுர்நிந்தனை குருநிந்தனைகள் பண்ணின பாவிகளும் அவர்களைக் கொன்ற பா விகளுங் கதியென்று நம்பிவந்தவர்களைக்கைவிட்ட பாவிகளுந் தெய்வப் பிராமணாள் பசுக்களை அடித்தவர்களும் உதாசினம் பேசின பாவிகளுஞ் சாமகாலங்களிலே அன்னம் பருந்து கொடு த்து சாப்பிடச் செய்தவர்களை உதாசினம் பேசின பாவிகளுங் கோடைகாலங்களிலே மரஞ் செடி பூண்டுகளுக்குத் தண்ணீர் விடாத பாவிகளுங் குளங்கள் வெட்டினதைத் தூர்த்தபாவிக ளுஞ் சாலையை வெட்டியுந் தண்ணீர்ப்பந்தலைக் கெடுத்துஞ் சத் திரங்களை அழித்துங் கோயில் குளங்களை இடித்தும் பகவத் து ரோகங்களை குருத்துரோகஞ் செய்கின்ற பாவிகளும் தேவாலய களில் ஸ்திரீ புருஷாள் கூடியிருந்த பாவிகளும் தேவாலயங்க ளில் ஸ்திரீ புருஷாள் கூடியிருந்த பாவிகளும் தன்பர்த்தாவுக்கு

முன்னுண்டுறங்கியும், நிருவாணமாயிருந்து குளித்தும்,வாயிலே தாம்பூலம்போட்டு புருஷனுக்குப் பணிவிடை செய்தும், எதிரிவிருந்து பேசினவர்களும், புருஷன் சொல்லைத் தட்டி நடந்தவர்களும், பரமபுருஷாளைக் காப்பாற்றித் தன் புருஷனை நிராகரித்து நடக்கின்ற பாவிகளான ஸ்திரீகளுந் தாயார் தகப்பனுரை சம்ரக்ஷணை செய்யாமல் பெண்டீர்களை சம்ரக்ஷணைசெய்தும் பெரியவர்களை உதாசீனம் பேசியும் அடித்தும் தீபமில்லாமற் சாப்பிட்டும் சாஸ்திர நிந்தனை புராணநிந்தனைசெய்தபாவிகளும் பசுமாடுகளை சம்ரக்ஷணை செய்யாமல் பால்கறந்து குடித்த பாவிகளும், புண்ணியகதைகளைக் கேளாத செவியையுடைய மூடர்களுந் தேவவிருக்ஷங்களை வெட்டியும், ஆலயங்களை இடித்தும், கண்மாய் குளங்களைத் தண்ணீரில்லாமல் வெட்டியும், கஞ்சா அபின்களை சாப்பிட்டும், மாமியார் வீட்டில் குடியிருந்து சாப்பிட்டும், அந்தச் சொத்துக்களை அபகரித்துப் புசிக்கப்பட்ட பாவிகளும், இவர்களெல்லோரும் இந்தச் சேதுவைக் கண்டாலுந் தீர்த்தமாடினுந் திவலைமேலே தெளித்தாலும் புண்ணிய புருஷராகி விடுவார்கள். தங்கள் நல்ல வயதிலே சோரநாயகனுடனேகூடி அனுபவித்து சிசுக்களைச் சொந்த நாயகனறியாமல் வதைசெய்கின்ற ஸ்திரீகளைப் பஞ்சமா பாதகியென்று பெரியோர் சொல்லுவார்கள். அப்படிக்கொத்த பாதகரை தேவாதிகளும் தங்களைக்கொன்ற பாவிகளென்றும் அஞ்சுவார்கள் மூன்றுலோகமுமப்படியே சொல்லும் அவர்களுஞ் சேதுஸ்நானத்திற்குப் போகவேண்டுமென்று ஒருவன் கையிலொருவன்பொருள் வாங்கிக்கொண்டு போகாமலிருந்து விட்டா லிவனை பஞ்சமா பாதகத்திலும், பாதகனென்றும், நீசனிலும், நீசனென்றும், வேதசுருதிகளினாலே சொல்லப்பட்டிருக்கின்றது. அவர்களும் எந்த வகையினாலாவது என்ன பிரயாசைப் பட்டாவது சேதுவில் ஸ்நானம் பண்ணவேண்டும் இல்லாவிட்டால் சேதுவுக்குப் போகச்சொல்லவேண்டும், அங்ஙனம் சக்தியில்லாத பேர்கள் வேண்டிய பதார்த்தங்களைத் தந்து நல்ல யோக்கியமான பிராமணனைப் போகச் சொல்லவேண்டும் அப்படிப்போகச் சொல்வதற்குத் தன்னிடத்தில் பொருளில்லாமற் போனால் யாரிடத்திலும் வாங்கிக் கொடுத்தாயினும் போகச்சொல்ல வேண்டும். மேலும் யாகங்கள், யெக்கியங்கள், முதலானவைகளுக்கு மாத்திரம்

யாரிடத்திலாவது பொருள்வாங்கி நடப்பிக்கலாமென்று வேத வாக்கியம் சொல்லப்பட்டிருந்தாலுஞ் சேதுவுக்குப் போகின்ற வர்கள் நீசரிடத்திலாவது பொருளைவாங்கிக்கொண்டு போனால் அவர்கள் புண்ணியபுருஷராவார்கள்.

இந்தச் சேது கிரேதாயுகத்தில் ஞானசொரூபமாகவிருந்து சகலர்களுக்கும் மோக்ஷசாம்பிராச்சியத்தைக் கொடுத்துந் திரே தாயுகத்தில் தேவசொரூபமாகவிருந்து மேலான புண்ணியலோ கங்களைக் கொடுத்துந் துவாபரயுகத்தில் ஈஸ்வரசொரூபமா யிரு ந்து சக்கிரவர்த்தி முதலாகிய பேர்களுக்குச் சாம்பிராச்சிலபட் டாபிஷேகங்களைக் கொடுத்துங் கலியுகத்தில் சேது சொரூமாக விருந்து அவரவர் நினைத்த காரியங்களைக் கொடுத்துக் கொண்டு மிருக்கின்றது அதின் மகிமைகளை நம்மாற்சொல்லி முடியாது. தெரிந்தமாத்திரஞ் சுருக்கமாய் உங்களுக்குச்சொன்னோமென்று சூதமகாரிஷிசொல்ல நைமிசாரண்ணியத்து ரிஷிகள் கேட்டு ஆ னந்தசந்தோஷ ஆச்சரியங்களை யடைந்து இப்படிக்கொத்த சே துவை ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியாகிய சர்வசீவதயா பரமூர்த்தியா கிய சுவாமிகள் என்னகாரணத்தினால் உண்டாக்கினாரென்று ரிஷிகள் கேட்க சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினரென்ற வாறு.

## சேதுபலச்சரித்திரம்.

முற்றிற்று

---

கடவுள் துணை.

# சேதுபந்தன விபரச் சரித்திரம்.

கோசல தேசமாளப்பட்ட தசரத மகாராஜா அறுபதினாயிரம் வருஷம் துரைத்தனம் பண்ணி அறுபதினாயிரம் ஸ்திரீகளைக்கலியாணம் பண்ணிக்கொண்டு அயோத்தியாபுரியிலே யிருக்கின்றபோது தனக்குப் பிள்ளையில்லையென்று கலைக்கோட்டுமகாரிஷியை அழைத்து புத்திரகாமேஷ்டியாகஞ்செய்து பிண்டங்கள் அமர்த்திக் கொடுக்க கோசலாதேவி, சுமித்திராதேவி, கைகேசி தேவி யிவர்கள் வயிற்றில் ஸ்ரீவைகுண்டவாசகராய் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும் ஆதிசேஷனுஞ் சங்குசக்கரங்களும் ஸ்ரீராமமூர்த்தியாகவும், லக்ஷ்மணராகவும், பரதசத்துருக்களாகவும் அவதரித்துவளர்ந்து பரிபாலனமாகி வித்தைகள் அப்பியாசம்பண்ணிசவுள உபநயன முதலானதும் நடத்திவைத்து ஆனையேற்றங்குதிரையேற்றம் வில்வித்தைமுதலான தநுசாஸ்திரங்களும்படித்து சமர்த்தராக விருக்கும்போது விஸ்வாமித்திரர் யாகம்வளர்க்கவேண்டியதாய் வந்து தசரத மகாராசாவிடத்தில் வந்து ஸ்ரீராம லக்ஷ்மணுளைக் கேட்டு ராமலக்ஷ்மண ளிரண்டுபேரையும் வசிஷ்டர் வாக்கியந் தப்பாமல் தசரதருங் கூட்டி அனுப்பிவிக்க அவர்களை கூட்டிக்கொண்டு வந்து யாகத்தை அழித்துயபோடாமல் அஸ்திரங்களினாலே சரக்கூடங் கட்டி வில்லாளிகளாயிருந்த இரண்டுபேரையுங் காத்துக்கொண்டிருக்கும்படி செய்து யாகம் வளர்க்கின்றபோது தாடகை முதலானபேர்கள்வந்து அனேகம் இம்சைகள் செய்ததினால் அவளையுஞ் சங்காரஞ் செய்து விஸவாமித்திரர் யாகத்தை நிறைவேற்றிப் பூரணாகுதிசெய்து இந்திராதி தேவர்கள் ரிஷிகள் மூலமாய் அனேக வரப்பிரசாதங்களும் அஸ்திர சஸ்திராபரணங்களும் பெற்றுக்கொண்டு விஸ்வாமித்திரர் பின்னாலே வருகின்றபோது கருங்கல்லாய் கௌதமரிஷி சாபத்தினாலே கிடந்த அகலிகையும் ஸ்ரீராமசுவாமியினுடைய பாதம் பட்டவுடனே பெண்சொரூபமடைந்தெழுந்து வணங்கினாள், அவளையுங் கௌதமரிஷி யிடத்துக்கு அனுப்பி வைத்து விட்டு சரபங்கரிஷி ஆச்சரமத்துக்கு வந்து அவரையும் நமஸ்கரித்துக் கொண்டு மிதுலாபுரிக்கு வந்து ஜனக

மகாராஜனிடத்தில் விஸ்வாமித்திரர் பரிக்ஷைசெய்ய சீதையுடனே வரப்பிரசாதமாய்ப் பிறந்திருக்கின்ற வில்லையுமுறித்து தசரத மகாராஜா முதலாகிய சகலரையும் வரவழைத்து சீதாலக்ஷ்மி முதலான பேர்களை ஸ்ரீராமசந்திரர் முதலான நாலுபேர்களுக்குங் கலியாணம் பண்ணிக்கொண்டு மிதிலாபுரிப்பட்டணம் விட்டு அயோத்திக்கு வருகின்றபோது பரசுராமரிஷியினுடைய பலமுங்கை வில்லும் வாங்கிக்கொண்டு அயோத்தியாபுரிபட்டணம் வந்து சேர்ந்தார்கள் அப்படியிருக்கின்றபோது தசரதமகாராஜாவானவர் வசிஷ்டருடனே யோசனை பண்ணி ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய யெத்தனிக்கின்றபோது கைகேசி வார்த்தையைக் கேட்டுக்கொண்டு பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதாய் ஸ்ரீராமனை வனத்திலே போகச் சொன்னதினால் ஸ்ரீராமரும் லக்ஷ்மணருஞ் சீதாதேவியும் அயோத்தியாபுரிபட்டணம் விட்டு சித்திரகூட பருவதம்வந்து கங்காநதி தாண்டவேண்டியதற்கு குகனென்னும் வேடனையும்சினேகிதங்கொண்டு ஓடமேறிச் சித்திரகூடம் வந்து சேர்ந்தனர்கள். தசரத மகாராசாவும் புத்திரசோபத்தினாலே மரணத்தை யடைந்தார். பரதனுஞ் சத்துருக்கனுந் தசரதரை யெடுத்து அடக்கஞ்செய்து விட்டுச் சித்திரகூடம் வரைக்கும் வந்து சேர்ந்து ஸ்ரீராமசுவாமியால் தசரதமகாராஜாவுக்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்து ஸ்ரீராமருடைய கட்டளைப்படி அயோத்திவந்து சேர்ந்து சத்துருக்கமகாராஜாவை அயோத்திமாநகரத்தை ஆளும்படி செய்து வந்தார். பரதனும் நந்திக்கிராமத்தில் ராமசுவாமியினுடைய சேவடியாகிய பாதுகையைப் பூசித்துவந்தார். ஸ்ரீராம லக்ஷ்மணருஞ் சீதாதேவியுஞ் சித்திரகூட பருவதம் விட்டுப் புறப்பட்டு வனத்தை நோக்கி வந்தார்கள் காகாசுரனென்னுமோ ரரக்கன் வந்து சீதையை யெடுத்துக்கொண்டு போனதினால் அவனைச் செயித்துத் சீதையை விடுவித்துக்கொண்டு அகஸ்தியர் முதலான மகாரிஷிகளுடைய ஆச்சிரமங்களெல்லாம் வந்து அவர்களையெல்லாங் கண்டு தெரிசித்து அனேக வரப்பிரசாதங்களும் அனேக ஆயுதங்களும் பெற்றுக்கொண்டு வனமெல்லாஞ் சஞ்சாரம் பண்ணிக்கொண்டு பஞ்சவடி தீர்த்தக்கரையில் பன்னசாலையைக் கட்டிக்கொண்டு சீதாதேவியும் லக்ஷ்மணரும் ஏவற்பணிவிடைகள் கேட்க ஸ்ரீராமசுவாமியும் இந்தவிதமாக யி

ருக்கின்றபோது சூர்ப்பநகைவந்து ஸ்ரீராமலக்ஷ்மணருடனே சம்வாதம் பண்ணி மூக்கும், முலையு மறுப்புண்டு கரதூஷண திரிசிராளிடத்தில்போய்ச் சொல்ல அவர்களும் ஆயுதபாணிகளாக வந்தெதிர்த்து ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் கையினாலேமடிந்துபோனார்கள். அப்பால் சூர்ப்பநகை புறப்பட்டு இலங்கையிலேபோய்த் தன்னுடைய தமயன் இராவணனிடத்தில் அனேகந் துர்ப்புத்திகளையுஞ் சீதையினுடைய அழகுகளையுஞ் சொல்ல அவனுங் கேட்டுத் தன்னுடைய மாமனாகிய மாரீசனை மான்சொரூபமாக முன்னிட்டுக்கொண்டு பஞ்சவடி தீர்த்தக்கரையிலே மானாக சீதாதேவிமுன்னே விளையாடிக்கொண்டு நிற்கச் சீதை அம்மானைப் பிடித்துத்தரும்படி கேட்க ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியும், வில்லும், அம்பும், எடுத்துக்கொண்டு மானைத்துரத்திப் பிடிக்கக்கூடாமல் ஓரம்பினாலே எய்தவுடன், மான்விழுகின்றபோது ஓ லக்ஷ்மணாவென்று அலறி அபயமிட, ஸ்ரீராமர் குரலைப்போல் மாயையினாலே மாரீசன்செய்ய அப்படி விழுந்த சத்தத்தை லக்ஷ்மணர் கேட்டு ராக்ஷஸமாயையினாலே தமயனுக்கு மோசம் வந்ததென்று ஆயுதபாணியுடனே சீதை சொற்படிக்கு வனத்தைநோக்கிப் போய்விட்டார். அப்போதுராவணசந்நியாசியாகவும்வந்து சீதையிருக்கின்ற பன்னகசாலைவாசலிலேபிட்சை கேட்கச் சீதையம்மனும் பிட்சைகொண்டுவந்தாள், உடனே பூமியோடே பேர்த்தெடுத்து தேரின்மீது வைத்துக்கொண்டு மாயமாய் இலங்கையை நோக்கிப் போகும்போது சடாயுவும் வந்து எதிர்த்தார். அவரை உபாய தந்திரங்களினாலே ராவணன் கொன்றுபோட்டுப் போகும்போது சீதையுந் தான் பூண்டிருந்த ஆபரணங்களைக் கழற்றிக் கிஷ்கிந்தா மலைக்கருகிலிருக்கும் மதங்ககிரி மலையில் போட்டுவிட்டு மகா விசனத்துடனே அபயமிட்டு அழுதாள். உடனே ராவணனும் அதி சீக்கிரமாக இலங்கையிலே கொண்டுபோய் அசோகவனத்திலே ராக்ஷஸ ஸ்திரீகளைக் காவலாகவைத்துத் தன்னைச் சேரும்படிக்கு போதனை செய்யச் சொல்லி இலங்கைக்குப் போனான், சீதையும், அந்த வனத்தில் மகா விசனத்துடனே ஸ்ரீராமஸ்மரணை பண்ணிக்கொண்டிருந்தாள். அப்பால் வனத்திலே மான்பிறகே போயிருந்தசுவாமியும் அவரைத் தேடிப்போன லக்ஷ்மணரும், பன்னகசாலையிலே வந்து பார்த்து சீதையம்மனைக் காணமல் அந்த வனமெல்லாந் தேடிக்கொண்டு வரும்பொழுது சடாயுவானவர் குற்றுயிருடனே

கிடந்ததைக்கண்டு ஸ்ரீராமசுவாமியும் லக்ஷ்மணரும்மகாவிசனத்தையடைந்து அவராலே சீதையம்மையாரை ராவணன் இலங்கைக்குக் கொண்டுபோயிருப்பதை யறிந்துகொண்டு, உடனே ஜடாயுவும் மரணமானுர் சடாவையுமெடுத்து அடக்கஞ் செய்துவிட்டு வனத்திலே புறப்பட்டு வரும்போது கபந்தாசுரனையுஞ் சங்கரித்து சபரியம்மனை வைகுண்டத்துக்கு அனுப்பி வைத்துத் கிஷ்கிந்தாமலைக்கு அருகில்வருகின்றபோது பாம்பையாற்றங்கரையில், ஒருமரத்தடியில், அனுமார் நின்றூர் அவரிவர்களைக்கண்டுநெருங்கி வந்து இவர்களுடைய முகவாட்டங்களைப் பார்த்து நீங்கள்யார் எங்கிருந்துவந்தீர்கள். எங்கேபோகின்றீர்களென்று கேட்க அப்போது ஸ்ரீராமசுவாமியும் லக்ஷ்மணரும் நடந்தகாரியமெல்லாம் ஆதியோடந்தமாகச் சொல்லி அனுமானுடைய காதிலேகிடந்த சுவசகுண்டலத்தை யுங்கண்டு ஆச்சரிய மடைந்தார்கள்.

அப்போது அனுமாருஞ் சுவாமிகளுக்கு உண்மையாகிச் சுக்கிரீவன் முதலானபேர்களையும் வானரச்சேனைகளையும் நட்புக்கொண்டு வாலியையுங்கொன்று துந்துமியெனும்பையும் மாமரத்தையுந் தவிடுபொடியாகச்செய்து சுக்ரீவனுக்குத் தாரையைசேர்ப்புவித்து கிஷ்கிந்தாபுரிக்குப் பட்டாபிஷேகஞ்செய்து வானராதிகளை காற்காலங்கிரமித்தவுடன் வரும்படிக்கும் அனுமார்முதலான படைத்தலைவரையுங் கூட்டிக்கொண்டுபோய் சீதையம்மனைத் தேடிவரும்படி திருவாழிமோதிரமுங்கொடுத்துஅனுப்பி வைத்தார். அனுமாரும் வானராதிகளுடனே புறப்பட்டுவனங்கள், மலைகளெல்லாந் தேடிச் சீதையம்மனைக்காணுமல் மயேந்திரகிரி பருவதம்வந்து சேர்ந்து சம்பாதியை நட்புக்கொண்டுஅவர்கள் சொற்படி அனுமார் விஸ்வரூபங்கொண்டு மைநாகபருவதத்திலேறி குதித்து இலங்கைமாகாளியையுங்கொன்று அரக்கர்களையும் அட்சயகுமாரனையுஞ் சம்புமாலியையும் பஞ்சசேனுபதிகளையுங் கொன்று சீதாதேவியம்மனைக் கண்டுதிருவாழிமோதிரங்கொடுத்து இப்பால் இந்திரசித்துவினுல் பிடிபட்டு இராவணனைச்சந்தித்து அவனுல், வாலில் தீயைக்கொளுத்தப்பட்டு அக்கினியினுல், வாலைப்பிடித்துக் கொண்டு பெரியுந் தீயை இலங்கைப்பட்டண மெழுமாற்றுக்காதவரு கொளுத்திச் சீதாதேவியம்மன் கொடுத்த சூடாமணியுங் கொண்டு மயேந்திரகிரி பருவ

வதம் வந்துசேர்ந்து வானராதிகளுடன் ஸ்ரீராமசுவாமியை கிஷ்கிந்தைவந்துகண்டு சூடாமணியுங் கையில்கொடுத்தார்.

ஸ்ரீராமசுவாமியும் அனுமார்பேரில் மகாசந்தோஷத்தை யடைந்து வானராதிகளுஞ் சுக்ரீவன் முதலாகிய படைத்தலைவர்களுடன் புறப்பட்டு கிஷ்கிந்தாமலையைவிட்டு வாலிகுண்டம் திருபதிமலை மார்க்கமாய மயேந்திர கிரிவந்து சேர்ந்து, அதன்சாரலிலுள்ள சக்கர தீர்த்தத் துக்கருகிய், தென்சமுத்திரக் கரையிலெழுந்தருளியிருந்தார். அப்படி யிருக்கின்றகாலத்தில் இலங்கைநகரத்தில், அனுமார் தீயைக்கொளுத்திப்போட்டு வந்தபிறகு இராவணனுடைய தம்பியாகிய விபீஷணன் தமயனுக்கு அனேகமாகிய புத்திகளை ஸ்ரீராமசுவாமியினிடத்தில் சீதாதேவியைக் கூட்டிக்கொண்டுபோய் விடும்படி சொல்லியும் இராவணன்கேளாததினால் மகாஞானியான விபீஷணன் பின்வருங்காரணங்களை அறிந்துகொண்டு இராவணனை வெறுத்துவிட்டு நாலுமந்திரிமார்களுடனே இலங்கையை விட்டுப் புறப்பட்டெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி பாதத்தில் சரணாகதியடைந்து அடைக்கலம் புகுந்தான். ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியும் லக்ஷ்மணப்பெருமாளுஞ் சுக்ரீவன் அனுமார் ஜாம்புவர் முதலான பேர்களுடன் யோசனைசெய்துகொண்டு க்ஷத்திரிய தர்மத்தின்படி விபீஷணனை அடைக்கலங்கொண்டு உடனே இலங்காபுரியின் அரசாக்ஷிக்கு பட்டாபிஷேகஞ்சூடிக் கிரீடமுந்தரித்துவிபீஷணன் முதலானபேர்களால் இலங்கையின் வாத்தமானங்களை யெல்லாம்ஸ்ரீராமசுவாமிகேட்டு யோசனைசெய்துக்கொண்டு மானிடஜென்மமாய்ப் பூமியிற்பிறந்துவிட்டு க்ஷத்திரிய தர்மத்தின் படிநடக்கவேண்டுமேயன்றிதெய்வநிர்ணயங்களைச்செலுத்தக் கூடாதென்று இந்தச்சமுத்திரத்தைக்கடந்து இலங்கைக்குயெப்படிபோகலாம் நாம் ஒருவழியாய்ப்போய்ச் சேர்ந்தாலும்வானரப்படைகள் யெழுபத்திரண்டு வெள்ளமும் போய்ச்சேரவேண்டும் இதற்கு யோசனையென்னென்று நானாவிதங்களாய் யோசித்துக்கொண்டும் மகாதுயரத்தையடைந்து நமக்குத்தகப்பன் மரணமாய்ப் போய்த் தாய்மார்கள் அமங்கிலிய மடைந்தும் இராச்சியங்களை விட்டுப்பிரிந்துஞ் சீதையைப்பறிகொடுத்து மிருக்கப்பட்ட விசனத்திலும் மகாதுக்கமாக நேரிட்டது இந்தச் சமுத்திரத்தைக் கடந்து இலங்கைக்குப்போய் இராவணனைக்கொன்று சீதையை

மீட்டுக் கொணருவதனால் அகஸ்தியமகாமுனி சொல்லிய வாக்குந் தப்பிப்போமா அவர் வாக்குப்படியே கெந்தமாதனத்தில் இராவணனைக்கொன்ற தோஷந்தீர சிவபூசைபண்ணுமற் போமாவென்று வெகுவிதங்களாய் யோசனைபண்ணுகின்றபோது விபீஷணனுஞ் சொல்லுவான்.

இலங்கைக்குப்போக வேண்டுமானால் வானராதிகளால் சமுத்திரத்திற்கு அணைக்கட்டி அப்பாலதில் நடந்துபோகவேண்டுமென்றுசொல்ல சுவாமியும் அந்த வார்த்தையை ஒப்புக் கொண்டு சமுத்திரம் ஆழம் நீளமறிந்து அணைகட்ட வருணனை நோக்கி ஏழுநாள் தர்ப்பாசனத்தில் வருணமந்திரத்தைத் தியானித்துக் கொண்டிருந்தார். அஃதறிந்து வருணனும் வாராதது கண்டு க்ஷணத்தில் சுவாமிக்கு கோபம்வந்து பாணத்தைப் பிரயோகஞ்செய்தார் வருணனும் பயந்து சரணாகதியடைந்து தோத்திரமுஞ் செய்தான் சுவாமியுந் தயவுவந்து இந்த சமுத்திரத்தினாழமும் இலங்கைக்குபோக நீளமென்னவென்று கேட்டு அணைகட்டவேண்டியதையுஞ் சொல்ல வருணனுங்கேட்டு சுவாமி இவ்விடமிருந்து இலங்கைக்கு நூறுயோசனை தூரமிருக்கின்றது. ஆழங்காணக்கூடாது அணைபோடவேண்டுமானால் போட்ட கல் மிதக்கும்படி வரப்பிரசாதங்களினால் பிறந்திருக்கின்றான். வானரப்படைத்தலைவரில் நளனென்று ஒருவன் சுவாமியுடன் வந்திருக்கின்றான் அவன் பூர்வஜன்மத்தில் மயனாகிய சிற்பனுக்கும். அவனுக்கு சுவாமின் உத்தரவு கொடுத்து வானரப்படைகளால் ஒத்தாசை செய்தால் அவனும் கட்டுவானென்று சொல்ல சுவாமியும் அவனை அழைத்துப் பரிசித்து நீரிலே போட்டகல் மிதக்கும்படி உன் பிதாவினுடைய வரப்பிரசாதம் பெற்றவனாகலின் அனுமார் முதலாகிய வானரப்படை வீரர்களான வானரவீரர்கள் கொண்டுவந்து கொடுக்கின்ற பர்வதங்களை வாங்கி உன்கையினால் இலங்கைக்குப் போகும்படி வருணனுண்டாய முதுகின்பேரில் அணைக்கட்டென்று ஸ்ரீராமசுவாமி வரப்பிரசாதங் கொடுத்தருளி யாதொரு விக்கினங்களும் வாராமல் நிறைவேறும்படிக்கு விக்கினேஸ்வரனைப் பூசித்து அநுக்கிரகம் பெற்று அப்பால் நவக்கிரகங்களையும் விதிப்படி நவபாஷாணஸ்தாபிதஞ்செய்து பிராணப்பிரதிஷ்டைசெய்து அப்பால் சனிப்பிரீதி

யாய் எண்ணெய்யை வைத்து சிவப்பிரதிஷ்டை செய்து திலதீஸ்வரரை பூசித்து இவர்களுடைய அனுக்கிரகங்களை யெல்லாம் பெற்றுக்கொண்டு நளனுக்கு சேதுபந்தனத்துக்குத் தேங்காய் தொட்டுக் கொடுத்து அனுமார் முதலான பெரியோர்களான படைத்தலைவரையும் வானரப்படைகளையும் நாலுதிக்குகளிலேயும்போய் பருவதங்களைக் கொண்டுவந்து கொடுக்கும்படி கட்டளையிட ஸ்ரீராமருடைய வாக்கியப்படி வானராதிகளெல்லாம் பருவதங்களை சங்கையில்லாமல் கொண்டு வந்து மேன்மேலுங் கொடுக்க ஸ்ரீராமசுவாமியும் லக்ஷ்மணரும் ஜயம்ஜயமென்று வாக்குக்கொடுக்க நளனானவன் வாங்கிக்கட்டின திருவணையானது நவபாஷாணமுதல் தர்ப்பசயனம் மத்தியாக புல்லாரண்யங் கடைசியாய் ஈசான்யதிக்கு அக்கினி திக்களவாய்ப் பத்து யோசனை விஸ்தீரணம் அகலமும் அதிலிருந்து அக்கினிதிசை பிரவேசமாய் தெற்குமுகமாய் இலங்கையை நோக்கிப் பவளமால் மலைவரைக்கும் நூறுயோசனை நீளமுஞ்செய்து சேதுபந்தன முடிவாயிருக்கும். அப்படி ஸ்ரீராமசுவாமியாலே அநேக நதிகள், சுனைகள், ரிஷிகள், சஞ்சாரஞ் செய்துக்கொண்டிருந்த பருவதங்களை ஸ்ரீராமர் வாக்கியத்தின்படி வானராதிகளால் கொண்டுவந்து கொடுக்க நளன் வாங்கி அடைக்கின்றபோது சமுத்திரத்தை எப்போதுங் கண்பார்க்க வந்த ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி நடக்கும்போது பட்ட பாதாரவிந்தங்களிலுள்ள சங்கு சக்ர ரேகைகள் சேதுவில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அத்தகைய பருவதங்கள் சங்கு சக்கரங்களில் அலைமோதிச் சத்தத்துடன் ஆடம்பரஞ்செய்து கெர்ச்சிதங்களைப் பண்ணி தென் சமுத்திரமானது மகா ஆனந்த சந்தோஷங்களை யடைந்து கொண்டிருக்கும்படி அலைமோதுகின்ற சமுத்திரஜலத்துக்கு சேது தீர்த்தமென்று பெயர் அநேக யுகங்களாய்ப் பிரகாசித்துக்கொண்டுள்ளது. இப்படிக்கொத்த சேதுவில் ஸ்நானம் பண்ணின பேர்களையுஞ் சேதுவைக் கண்ணால் கண்டபேர்களையுஞ் சேதுவினுடைய காற்றுப்பட்டபேர்களையும் புண்ணிய புருஷாள், புண்ணியசாலிகள் கிருதார்த்தர்கள் மகா எக்கியசாலிகளென்று வேதங்களாலே முறையிட்டு கொண்டிருக்கின்றது மேலும் இந்தச் சேதுவில் அநேகங் கோடானுகோடி தீர்த்தங்கள் மகா பாதகங்

களைத் தீர்க்கும்படி வரப்பிரசாதங்கள் பெற்றது. அதிலும் முக்கியமாம் சக்கரதீர்த்தம், வேதாளதீர்த்தம், பாபவிநாசதீர்த்தம், சீதாகுண்டம், அமுததீர்த்தம், பிர்மகுண்டம், அநுமகுண்டம், அகஸ்தியதீர்த்தம், இராமதீர்த்தம், லக்ஷ்மணதீர்த்தம், ஜடாமகுடதீர்த்தம், லட்சமிதீர்த்தம், அக்கினிதீர்த்தம், சிவதீர்த்தம், சங்குதீர்த்தம், கயாதீர்த்தம், கெங்காதீர்த்தம், சாவித்திரி தீர்த்தம், காயத்திரிதீர்த்தம், கோடிதீர்த்தம், தநுக்கோடிதீர்த்தம் ஆகிய இந்த இருபத்துநான்கு தீர்த்தங்களே முக்கியமானவைகள் விசேஷமென்று சூதபுராணிகர் சொல்ல நைமிசாரண்ணியத்து ரிஷிகள் கேட்டு ஆனந்தசந்தோஷ ஆச்சரியங்களையடைந்து இப்படிக் கட்டின சேதுவிலே இந்த இருபத்துநான்கு தீர்த்தங்களும், ஆதிமுதன்மையாய் விளங்குகின்ற சக்கரதீர்த்தமும் வந்த காரணமென்னவென்று ரிஷிகள் கேட்க சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினாரென்றவாறு.

சேதுபத்தனச் சரித்திரம்

முற்றிற்று.

---



கடவுள் துணை.

## தர்மபுஷ்கரிணியென்ற

# சக்கர தீர்த்தச் சரித்திரம்.



கேளுங்கள் முனிவர்களே! முன்னொருகாலத்தில் காளவ மகாரிஷி தென்சமுத்திரத்திற் புல்லாரணியத்தில் பாலோடையென்னும் நதிக்கருகில் விஷ்ணுவை நோக்கித் தவஞ்செய்யவேண்டி ஊணுறக்கமின்றிப் பொறிபுலனடக்கி, மவுனத்தோடுஞ் சாந்தமடைந்து வாயு பக்ஷணம் பண்ணிக்கொண்டு, ஆகாயத்தினின்றிலங்கும் ஏழுமேகங்களில் ஆவர்த்தமென்னு மேகத்தால் பெய்கின்ற மழையோடு மழையாயும், காற்றோடு காற்றாயும், தீயோடு தீயாயும், விஷ்ணுமூர்த்தியினது அஷ்டாக்ஷரத்தை இடைவிடாமல் தியானித்துக்கொண்டு தேவக்கணக்கில் ஆயிரம்வருடம் வரையில் தவஞ்செய்துகொண்டிருக்கையில், அம்முனிவரர்மீது ஸ்ரீயப்பதி கருணைகூர்ந்து, சங்குசக்கர கதாபாணியாய், கருடவாகனமீது, லட்சுமிசமேதராய் முப்பத்து முக்கோடிதேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், கின்னர கிம்புருட கருடகாந்தர்வாதிகள் யாவரும் புடைசூழ வெழுந்தருளி, புல்லாரண்யக்ஷேத்திரத்தில் பஞ்சாக்கினி மத்தியில் தவஞ்செய்து கொண்டிருக்கும் காளவ முனிவனுக்கு ப்ரசன்னமாக, அப்போதுமுனிவன் கண்மலர்ந்து கடவுளைநோக்கித் துண்ணென வெழுந்து, பக்திவிநயத்தோடும் அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்கமாய்ப் பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரத்திற்கூப்பி, ஆனந்தக் கூத்தாடி புளகாங்கிதங் கொண்டு இருகண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் தாரைதாரையாய்ப்பெருக, அப்பெருமானை ஸஹஸ்ர நாமங்களாலுந் துதித்துநிற்க, ஜனார்த்தனன். மனமகிழ்ந்து, காளயமுனிவனைப்பார்த்து, முனிவரனே உன் தவத்திற்கு யாம்மெச்சியதால் உமக்கென்ன வரம்வேண்டுமென்றுகேட்க, காளவர் சுவாமி அடியேனும் தேவரீரைப்போல்ரூபம் பெற்று பரமபதத்திலெப்போதும் உம்மைவிட்ட கலாதிருக்கவும் உமது சரணாரவிந்தத்தை நித்யர் முத்தர்களாகிய பரமபாகவதர்களுடனே வணங்கிக்கொண்டிருக்கவும் திருவாக்கருளவேண்டுமென்று கேட்டனன், அப்போது பரமபதநாதன் காளவமுநியே! நீஇதுவரையில் யாவருங் கேளாவரத்தைக் கேட்டமையா

ல் நாம் அப்படிமேய கொடுப்பதற்குத்தடையென்ன ஆயினும் இக்கர்மபூமியிலேயின்னஞ்சனனமநுபவிக்க வேண்டியிருப்பதினால், அவை தொலையும்படி இப்போது நீர் தவஞ்செய்துகொண்டிருக்குமிடத்திற்குச் சிலதூரம் உத்தரபாரிசத்தின்கண் தருமபுஷ்கரிணியென்றொரு தடாகமிருக்கின்றது, அந்தத்தடாகத்தினிடம் இதற்குமுன் ஓர்காலத்தில் தருமதேவதையானது, தான்அன்பால் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருக்கையில், அப்பெருமான் மான்மழு சதுர்ப்புஜ காளகண்டதிரிநேத்ர சூலபாணியாய் சந்திரசடாதர மூர்த்தியாய், பார்வதிசமேதராய் சிவகணங்கள்சூழ வெள்விடைமீதெழுந்தருளித் தருமதேவதைமுன் பிரதத்தியக்ஷமாகி உனக்கென்னவரம் வேண்டுமென்றுகேட்க, அத்தேவதையும் வணங்கித் துதித்து சுவாமி அடியேன் சர்வகாலமும் தேவரீரது திருப்பணிசெய்து தேவரீரைச்சுமந்துகொண்டிருக்க ஆவல்கொண்டமையான், அவ்வாறே அருள் செய்யவேண்டுமென்று விண்ணப்பிக்க, அதற்குப் பரமசிவன் சந்தோஷித்து அங்கோர் தடாகத்தை தெய்விகமாயுண்டுபண்ணி அதில் தருமதேவதையை முழுகும்படி ஆஞ்ஞாபிக்க, அதைக்கேட்ட தருமதேவதையும் அங்ஙனமே முழுகையில், முன்னிருந்தவுருமாறி, நந்தியுருவமாய் நான்கு கால்களும் இரண்டு கொம்பும ஏருவாலுமாய்த்தோன்றி சுவாமியின முன்னிற்க, அதனைக்கண்ட ஸ்ரீகண்டமூர்த்தியாகிய பரமசிவன், பார்வதியாருடனே அதன்மீது ஆரோகணித்து யாவருக்குங் காட்சிதந்து, இததடாகத்திலே தீர்த்தமாடி, நம்மைத் தாங்கினமையின் இததடாகத்திற்கு இதுமுதல் தருமபுஷ்கரிணி யென்று திருநாமம் வழங்குதலோடும, இதில் தீர்த்தமாடியவர்கள் நினைத்தபடி எல்லாச் சுகங்களையும் பெறுவார்களென்று திருவாய்மலர்ந்தருளி, பின் தேவர்களுடனுஞ் சிவகணங்களுடனுந் திருக்கைலைக் கெழுந்தருளினார்.

ஆதலால அத்தடாகத்திற்கு அன்றுமுதல் தருமபுஷ்கரிணியென்றும், தெய்வத்தன்மை யுடையதென்றும், மகத்துவமிருப்பதால், நீரும் அதில் முழுகிச் சதாகாலமும் அக்கரையிலே தவஞ்செய்துகொண்டிருந்தால், நம்முடைய வுருவம்பெற்று வைகுண்டத்துக்கு வருவீர் அங்ஙனம நீர் தவஞ்செய்கையில், பிறரால் இடையில் தவத்துக்கு ஊறுநேரிடின அப்படி நேரிடச் செய்தவரை நமமுடைய சக்கரம் உடனே வந்து அக்கொடிய

ளைச் சங்கரித்து விடுமென்று திருவாய்மலர்ந்தருளி மாயபிரான் ஸ்ரீவைகுண்டத்துக் கெழுந்தருளினார். பின்னர் காளவமுனிவனும் அவ்வாறு சென்றுஉதயாதி அந்திநேரம்பத்தியானமும் அத்தருமபுஷ்கரிணியில் முக்காலமுந் தீர்த்தமாடி அதின்கரையில் தனது தேவபூசையாகிய சாளக்கிராமங்களை வைத்துப் பிரதிஷ்டைசெய்து பூசித்து சங்கிரமம் சஷ்டி அஷ்டமி சதுர்த்தசி பூரணை அமாவாசை முதலாகிய தினங்களிலே தர்ப்பணமுதலிய கிரியைகளை நடத்தித் தவஞ்செயதுகொண்டிருக்கையில், அம்முனிவனை ஓரரக்கனனவன் வந்து மாயையினால் தாவியெடுத்தான். உடனே காளவமுனிவன் பரமபதநாதனைத் துதிக்கையில் அப்போது விஷ்ணுமூர்த்தியின் சுதர்சின சக்கரமானது கோடிசூரியப்ரகாசம்போல் கரகரவெனச் சுழன்றுவந்து அவ்வரக்கனைச் சங்கரித்துக் காளவமுனிவனை விடுவித்தது. அப்போது அம்முனிவன் மிகமகிழ்ந்து ஸ்ரீசக்கரத்தைப்பணிந்து, நீ என்றும் அடியேனை யிடைவிடாமற் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அப்போது சக்கரமானது, யான் எந்தையாகிய ஸ்ரீவைகுண்டவாசனது கட்டளைப்படி வந்து அரக்கனைச் சங்கரித்தேன் இனிமேல் உமது வேண்டுதலின்படி நான் வந்திருக்கவேண்டுமாயின் எம்பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு உன் விருப்பத்தின்படி வந்திருக்கின்றேன். இப்போது நானிவ்வரக்கனைக்கொன்ற பாவந்தீர எனக்கொரு வகைசொல்லுமெனக் கேட்க, அதற்கு அம்முனிவன் ஆனந்தித்து இத்தடாகத்திலே மூழ்கென்றுசொல்ல, அதுபோலச் சக்கரம் உடனே மூழ்கித் தெய்வீகமாய்த் தன் கருமத்தையொழித்து, முன்போலப் பிரகாசம் பொருந்தி நானித்தடாகத்தில் முழுகியபடியால், இன்றுமுதல் இதற்குச் சக்கரதீர்த்தமென்று பெயர்விளங்கக் கடவதென்று திருவாய்மலர்ந்தருளி இனி இத்தீர்த்தத்தில் யார் மூழ்கினும் அவர்களைப்பற்றிய பேய் பசாசம்அலகை வேதாளங்களெல்லாம் விலகிப் போகக்கடவதென்றும் வாக்குத்தந்து, முனிவருக்கு ஆசீர்வாதஞ்செய்து அவரிடத்தில் விடைபெற்றுச் சக்கரம் ஸ்ரீவைகுண்டம் போயமர்ந்தது.

அவ்வாறுண்டாகிய சக்கரதீர்த்தமானது ஆதியிற் சேதுபந்தனஞ்செய்த திருவணையில் தோன்றித் தருமபுஷ்கரிணியெனப் பெயர் விளங்கிக்கொண்டிருக்கின்றதன்றிஇத்தீர்த்தத்தின் பெருமைகள் யாவராலுஞ் சொல்லிமுடியாது அன்றியும்அநேககோடி

ஜன்மங்களிற்செய்த பாவங்களை யெல்லாம் அச்சேதுவிலுண்டா யிருக்குஞ் சக்கரதீர்த்தத்தை மனத்தால் நினைத்தாலும் விமோசனமாகும் மேலும் உலகில் பேர்பெற்ற கங்கை யமுனை துங்கபத்திரை கிருஷ்ணை, நருமதை, கோதாவரி, காவேரி முதலியவும் இதற்கிணையல்லவென்று சூதமுனிவர் சொல்ல, அதைச் சிரவணித்த நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவரர்கள் பிரமானந்த பரிதராய் வியப்புற்று சூதமுனிவரைநோக்கிச் சுவாமி! இத்தகைய சக்கரதீர்த்தக்கரையில் தவஞ்செய்திருந்த காளவமுனிவரைத் தூக்கிய அரக்கன் யாவன் அதற்குப் பெருமான் தனது திகிரியை விடுத்து அவ்வரக்கனைக் கண்டித்தகாரணம் யாது இவைகள் அடியேங்கட்குப் புலப்படுத்தவேண்டுமெனப் பணிய. அவர்களுக்குச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினாராயினர்.

தர்மபுஷ்கரிணியென்ற சக்கரதீர்த்தச் சரித்திரம்

முற்றிற்று.

---

## துத்தமச் சரித்திரம்

---

நைமிசாரணியவாசிகளே! இவ்வுலகின்கண் நாற்றிசையினுள்ளே தக்ஷிணதிசையில் திருவாலவாயென்னும் திருநாமமுடைய மதுராபுரித்தலத்தில் திருவுருக்கொண் டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுரேசனாகிய சோமசுந்தரக்கடவுளைப் பூசித்துச் சதாகாலமும் எக்கியங்களும் யாகாதிகிர்த்தியங்களும் வழுவின்றிநிறைவேற்றிக்கொண்டு வருகின்ற வசிஷ்டமுனிவர் முதலிய இருபத்துநாலாயிரமுனிவர்களும் தீவினைக்கெட்டாதவர்களாய், நற்கிரியைகளை யநுட்டித்து வருகையில், விசுவாவசுவென்னும் ஒரு காந்தர்வராஜகுமாரனாகிய துத்தமனென்பவன் தன் செருக்கால் பலபல காந்தர்வமாதர்களைக் கூடியுலாவி, தான் பிடியானையின் கூட்டத்துள் மும்மதங்கொண்ட களிற்றியானையைப் போலும், மான் கூட்டத்துள் கலைபோலும் பசுக்கூட்டத்துள் இடபம்போலுங் கர்ச்சித்துக்கொண்டு பூலோகத்திற்கு வந்து வேப்பமரங்களாலும் கடப்பமரங்களாலுஞ் சூழ்ந்து நெருங்கி

யிருண்டசோலைபோல் விளங்கும் அம்மதுரைத்தலத்தில், பரப்போடு விளங்கிக்கொண்டிருக்கும் பொற்றாமரைத்தடாகத்திலே நிர்வாணமாய்த் தானுந் தன்மாதர்களுடனிறங்கி ஜலக்ரீடைசெய்துகொண்டிருக்கையில், அத்தலத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கும் வசிஷ்டர் முதலிய மகரிஷிகள் இருபத்துநாலாயிரம் பேரும் ஸ்நானஞ்செய்து நித்தியகருமங்களை முடிக்க அத்தலத்திலிருக்கும் பொற்றாமரைத் தடாகத்தை நாடிவருங்காலையில், அவர் வரவுகண்ட காந்தர்வமாதர் யாவரும் அதிக நாணத்தோடுந்தடாகத்தினின்றுங் கரையேறி, அவரவர்கள் சேலைகளையெடுத்து உடுத்திக்கொண்டனர், பின் துத்தமனென்னுங் காந்தருவனோ இறுமாப்புற்று சிறிதேனு மச்சமில்லாமலும் நாணமில்லாமலும் அசட்டைசெய்து நிற்கக்கண்ட மகரிஷிகளியாவருங் கோபங்கொண்டு கண்களில் தீயெழ நோக்கி, அடா காந்தர்வனே! யெங்கள் வரவுகண்டும் நிர்வாணமாய் நின்றெங்களை யலட்சியஞ்செய்தமையால் அரக்கனாகக் கடவையென்று சபித்தனர்.

தபோதனர்களாற் கொடுக்கப்பெற்ற சாபத்தைத் துத்தமன்கோடைகாலத்திடி முழக்கங்கேட்ட கட்செவிபோலும், அரிமாவென்னுஞ் சிங்கத்தின் கர்ஜனைக்கேட்ட யானைபோலுங்கேட்டுநடுநடுங்கி உள்ளம்பதைத்து யாதொன்றுந் தோன்றாமற் சித்திரப்பாவையென அசைவின்றி நின்றனன், இப்படி நிற்கிற மணாளனைக்கண்ட காந்தருவமாதர் யாவருமிரக்கமுற்று அந்தோ அரசே என்செய்வோம். உம்மைவிட் டெவ்வாறுய்வோம், நீர் அம்மகாமுநிவர்களை அணைந்து அவர்கள் பாதபத்மங்களிற் சரணாகதியென்றடைந்தால், உமது குற்றத்தை மன்னித்தாட்கொள்ளுவரன்றோ, மேலும் "சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற்பொறுப்பதுகடனே" என்னும் நீதிவாக்கிய மிருக்கின்றமையால் எவ்விதமும் பொறுப்பார்கள் போய்ப் பணியுமென்றுரைத்தனர். அதைக்கேட்ட துத்தமன் முநிவரர் சாபத்தினால் திப்பிரமைகொண்டு யாதுந்தோன்றாது நிற்க அம்மாதர்கள் மனம் வெதும்பித் துக்கசாகரத்திலாழ்ந்து, நாயகனைவிட்டுப்பிரியமாட்டாதவர்களாயாவரு மொருமித்துக்கூடி, வசிஷ்டர் முதலிய முநிவர்களை நெருங்கிக் கண்ணீர்விடுத்துச் சண்டமாருதத்தாற் சாய்ந்த தாபராதிகளைப்போல் இருடிகளது பாதபத்மங்களிற்சாய்ந்து, தேவரீர் பெருமை தெரியாமையினாற்செய்த துத்தமனது அபசாரத்தை மன்னித்து, விமோசனஞ்செய்யவே

ண்டுமென்று அநேகமாய்த் துதித்துப் பாதங்களிற் பணிய, வசிஷ்டர்முதலிய யாவருங்கூறுவார்கள்

பெண்களே, இக்கொடியவனாகிய துத்தமன் எங்களால்நேரிட்ட சாபத்தை யநுபவித்தாலொழியத் தீராது, ஆயினும் உங்களைவேண்டிச் சொல்லுகின்றேம் இவன் இந்த அரக்கவுருவத்துடனே பதினறுவருடம் வரையில் நரமாமிசமுதலிய ஜீவ இமிசையாற்பசிதணித்துலாவி, பின்னர் முடிவிற் சிறப்புப்பெற்றசேதுவி லிருக்கப்பட்ட சக்கரதீர்த்தக்கரையில் தவஞ்செய்துகொண்டிருக்குங் காளவமுனிவனைப்பட்சணஞ் செய்யவேண்டி அவரைக்குறுகியெடுப்பான், அந்தக்காலத்தில் அம்முனிவர் நடுக்கமுற்று ஸ்ரீமந்நாராயணனைச் சிந்திப்பார். அச்சிந்தனைகேட்டஜகதீசன் தன் சக்கரத்தைப் பிரயோகிப்பார். அச்சக்கரம் அதிவேகத்தோடுங் கூடிவந்து இவன் சிரத்தைக்கண்டித்தஉடனே சாபவிமோசனமாகும், பின்பு காந்தர்வ வுருவங்கொண்டு உங்களைச் சேர்ந்து சுகித்திருப்பானென்றுசொல்லி, வசிஷ்டர் முதலியயாவருந் தங்களாசிரமத்திற் கெழுந்தருளினர், உடனே துத்தமனாகிய காந்தர்வனும் மூன்றாம்பிறைபோன்ற வக்ரதந்தங்களும், அந்தகாரம்போன்ற தேகமும் செம்மேகம்போன்ற கேசங்களும், வளைந்த புருவமும், தீவர்த்தியைப்போன்ற கண்களும், மலைபோன்ற மூக்கும் அலைபோன்ற நாக்குமுடையவனாய்த் தன்னைநேசித்திருந்த மாதரைப்பசியினாற் பக்ஷிக்கவேண்டித் துரத்தினான், உடனே காந்தர்வமாதர் யாவருங்கண்டு நடுக்குற்று, மெய்சோர்ந்து, எவ்வண்ணம் மீள்வோமென்று அதிவேகமாயோடிக் காந்தர்வலோகம் புகுந்தார்கள் அப்பால் காந்தருவனாகிய அரக்கன் காடுமலைவனம் வனாந்தரங்களிலும் கானாறுமுதலிய பலஇடங்களிலும் பதிகளிலும் சுடுகாடுகளிலும் சூறாவளி யென்னுங் காற்றைப்போற் பசிப்பிணியாற் சுழன்று, மான் மரை, காட்டானை சிங்கம், கரடி, புலி, முட்பன்றி முதலியவற்றை யருந்தியும், பறவையினங்களைப் புசித்தும், ஜலத்தில் வாழ்கின்ற மச்சங்களை ஜலத்தோடே வாரிவாரி யருந்தியும், தனக்குச் சிக்கிய முனிவர்களைப் பிடித்துக்கொன்று தின்றும் உதிரங்களைக்குடித்தும் மலமூத்திரங்களைப் புசித்தும், ஊர்வனவாகிய ஜெந்துக்களில் மலைப்பாம்பு முதலிய சர்ப்பங்களையும், உடும்பு, மலையுடும்பு, பல்லி அரணை முதலியவைகளையும் கையினாற்பிடித்துக் கடலைபோற் கொறித்தும், தன்பசிநோயடங்காமல், ஓர்நாள் சக்கர தீர்த்தக்

கரையைநாடி அதன்கரைமேல் தருப்பாசனம் பரப்பி, அதன் மேல், கமலாசனமாகிய பதுமாசனஞ்செய் தூட்கார்ந்து, மனதைச்சுத்தசத்துவத்திற் பொருத்தி ஸ்ரீமந்நாராயணனது அஷ்டாக்ஷரத்தைச் செபித்துக்கொண்டிருக்குங் காளவமுநிவனைக்கண்டு, திடீரெனப்பாய்ந்துபற்றித்தூக்கினன் அப்போது வசிட்டரால் நியமித்த சாபத்தின் அளவானது குறுகிச்சமீபித்தமையால் இவனதுகர்மவிமோசனமாம்பொருட்டுக் காளவமுநிவரும் மிகநடுங்கி. கருணைக்கடலாகியதிருமாலைச் சிந்திக்க, அப்போது ஆபத்பந்துவாகிய ஜகதீசன் தன்திகிரியைப்பிரயோகஞ்செய்த மாத்திரத்தில் அச்சக்கரம் கோடிசூரியப்பிரகாசமாய் ஜொலித்துக்கொண்டு அதிவேகத்தோடும் வந்து அரக்கன்தலையைக் கண்டித்துத்தள்ள, அத்தீர்த்தத்திலமுந்தியவுடனே, அரக்கனுகிய துத்தமனுங்காந்தர்வ சொரூபங்கொண்டு, அருகேயிருக்குங் காளவமுனிவனது பாதகமலங்களை வணங்கித்துதித்து, சுவாமீ தேவரீராலே அடியேனுக்குச் சாபவிமோசனங் கிடைத்ததென்று பணிந்துநிற்க, அதுகண்டமுநிவர் சித்தங்களித்து, துத்தமனுகிய காந்தருவனைப்பார்த்துக் கூறுவார், அப்பா காந்தருவனே, உன் சாபவிமோசனம் எனக்குமிகவும் சந்தோஷமாகவிருப்பதால், நீ இந்தச் சக்கரதீர்த்தத்தில் மூழ்கென்றுசொல்ல, அதுபோல் அவனுமூழ்கியவுடனே, தெய்வலோகத்தி லிருந்து விமானம்வர, அதன்மீதேறிக் காளவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, காந்தர்வலோகம் போய்ச்சேர்ந்து, முன்னே தன்னைவிட்டுப்பிரிந்திருந்த காந்தர்வமாதருடனே கூடிச்சுகித்திருந்தான்.

இத்தன்மைவாய்ந்த சக்கரதீர்த்தம் இந்தத் தேவிபட்டணத்தில்மாத்திர மிருக்கின்றதென்று யோசிக்கவேண்டாம் இதுபோலவே தர்ப்பசயனத்திலும் ஒரு கடைப்பக்க மிருப்பன்றியும் இதனது விசாலங்கிழக்குமேற்கு ஒருயோசனையுள்ளதாயும் விளங்கியிருக்கையில், பிரமசிருஷ்டியிலுண்டான மலைகளுக்கெல்லாஞ்சிறகுகளிருக்கும்போது, அவைகள் லோகாலோகங்களெல்லாம் பரந்துதிரிந்தும் ஊர்நாடுதேசங்களையும், கோயில் குளங்களையும் இருடிகள் வசிக்குமடன்னசாலை முதலியமடங்களையும் இராக்காலங்களிலும் பகற்காலங்களிலும் ஆகாயமார்க்கமாய்ப் பறந்துவந்து, திடீரெனக்கீழேதாழ்ந்து, யாவற்றையும் நாசப்படுத்திக்கொண்டு திரிந்ததுமல்லாமல் யாவருக்குந் துன்பத்தைக்

மல்லாமல் யாவருக்குந் துன்பத்தைக் கொடுக்க உலகிலுள்ள தபோதனராகிய இருடிகள் முதலிய யாவருந் தேவர்கட்கிறை வனாகிய இந்திரனிடத்தில் முறையிட, அம்முறைகேட்ட தேவ ராஜனுங் கோபங்கொண்டு, வச்சிராயுத பாணியாய் பூலோகத் திலே பிரவேசித்துப் பார்த்து உண்மை யெனக்கொண்டு ஆகாய வீதியிலெழும்பி வரும் பருவதங்களை யெல்லாம் வளைத்துச்சின் னாபின்னப் படுத்தியும், சிறகுகளை வெட்டி யெறிந்தும், பலவித மாகத் துன்பப்படுத்து கையில், அவற்றி லோர்மலை தன் இர ண்டு செப்சட்டைகளு மிழிந்தமையால், ஆகாயத்தி னின்றும் பூமியில் பிரகாசித்துக் கொண்டிருக்குஞ் சச்கர தீர்த்தத்தில் வீழ்ந்து அழுந்திப் போனபடியால் அம்மலையால் திட்டாகிய இடந்தவிர இரண்டு கடைப்பக்கமுங் கொஞ்சமிருந்த தீர்த்தந் தானிப்போது நவ பாஷாணத்திலும் தர்ப்பசயனத்திலும் விள ங்கிக் கொண்டிருக்கின்றது இது வன்றியும் இச்சக்கர தீர்த்தத் தில் அஷ்ட வசுக்களி லொருவனாகிய விதூம னென்பவனுக்கும் அலம்புசை யென்னு மோரரம்பை மாதுக்கும் நராகச்சனிக்கு ம்படிக்குப் பிரமதேவனால் நேரிட்ட சாபமும் விமோசனமாயிரு க்கின்றதென்று சூத முனிவன் சொல்ல நைமி சாரண்யவாசிக ளாகிய முனிவர்கள் கேட்டு ஆனந்தித்த தோடும் பிரமதேவனால் அஷ்ட வசக்களி லொருவனாகிய விதூமனுக்கும் அலம் புசை யென்னுந் தெய்வலோகத்துக் கணிகை மாதுக்கும் எவ்வகையா ய்ச் சாபம் நேரிட்டதோ, அதையும், அவ்விருவரும் பூலோகத் தில் எப்படி உற்ப வித்தாரோ அதையும், தேவரீர் திருவாய்மல ர்ந்தருள வேண்டுமென்று கேட்கச் சூதமுனிவர் சொல்லத்தொ டங்கு வாராயினர்.

## துத்துமச் சரித்திரம்

முற்றிற்று.

---

கடவுள் துணை.

# விக்கிரமச் சரித்திரம்.



நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே ஸ்ரீவைகுண்ட வாசனாகவும், சர்வாந் தரியாமியாகவும், சகலபுவன கர்த்தாவாகவும், அனாதிவஸ்து வாகவும், ஆதி மூலப்பொருளாகவும், அஷ்டாக்ஷரனாகவும், அடியார்க் கெளியவனாய் திருவருள் சுரந்தாட்கொள்ளுங் கிருபாசிந்து வாகவுமுள்ள ஸ்ரீமந்நாராயண னருளாலிலங்கும் அண்டப் பரப்பின் கண் ஓங்கும் அசராசரங்களைப்படைக்கும் பொருட்டு ஓர் புதல்வனை வேண்டித் தன் உந்தியாகிய பதுமத்தினின்றுஞ் சனிப்பித்து, பிரமலோகத்துக் கதிபதியாக்கப் பட்டுக் கலைமகள் சமேதனாய் விளங்குஞ் சதுர் முகப்பிரமனென்னுஞ் சிருஷ்டிகர்த்தன் அமராவதிக் கிறைவனாகிய தேவேந்திரனும், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளுங், கின்னரர் கிம்புருடர் கருடர் காந்தருவர், தும்புரு நாரதர், சித்தர் வித்யாதரர், பன்னகருரக சாரணர்களும், நவகோடி சித்தருஞ், சப்தரிஷிகளும் அஷ்டவசுக்கள் அஷ்திக்குப்பாலகர் முதலிய தேவ தேவருஞ் சூழ்ந்தகாலையில், கணக்கூட்டங்க ளணி யணியாய் நின்று, ஆலவட்டந் தாலவட்டம் முத்துக் குடை பீலிக் குடைகளை கவிக்க, சாமரைகாளாஞ்சி கின்னரி தம்புரு சுரமண்டலி வீணை முக வீணைகளும், காகளபூரி பேரி தவுண்டை துத்தாரி புள்ளாங்குழல் நாகசுரமுதலிய வாத்தியங்களும் முழங்கவும் அரம்பை யூர்வசி, மேனகை, திலோத்தமை முதலிய அப்சரஸ்திரீகள் பரத நாட்டிய சங்கீதம்பாடவும், இருக்கு, யசுர் சாமம், அதர்வண மென்னும் நான்குவேதங்களும் ஒலி செய்ய, தேவரிஷிகள் முதல் யாவரு மாசிகூறிநிற்க மகாகுண்டல கேயூரமணி மகுடங்கள் பிரகாசிக்கப் பல்லாயிரங்கோடி அண்டபுவன சராசரங்களிலும் எறும்புகடையானை முதலாகிய எண்பத்து நான்கு நூறாயிரம் ஜீவாத் மாக்களின் சிரத்திலே அவரவர்களுடைய நல்வினை தீவினைகளும் எழுதப்பட்ட எழுத்தாணியானது வலக்கரத்திற் பிரகாசிக்கவும் தான் ஆரோகணிக்கும் அன்னப் பட்சியானது கவுரிமான் கற்

றையைப் போன்ற தோகையும், ஒப்புவமையில்லா வனப்போக்கிய சிரமும் பவளம் போன்ற கால்களும், மெல்லியவடிகளும், பிரகாசிக்கத் தக்கதாகவும், சத்தியலோகத்திலே பிரமதேவன் கொலுமண்டபத்திலெழுந்தருளி யிருக்கும்போது, அரம்பாஸ்திரீகளில் அலம்புசையென்பவள் பரதசாஸ்திர விதிப்படி சுத்தமத்தளம் புள்ளாங்குழலோடுங் காலகதி பிறழாமல் நடனஞ்செய்கையில், அந்நடன சிங்காரத்தை விநோத விசித்திரமாகப் பிரமதேவன் முதலிய யாவரும் கண்ணிமையாலும் வாய்பேசாமலும் கரசரணாதிக ளசையாமலும் பிரமைகொண்டவர் போற் பார்த்துக் கொண்டிருக்கையில், அலம்புசையின் தேகலாவண்ய விசித்ரவஸ்திரத்தை வாயுபகவான் விளையாட்டு நிமித்தம் அவிழ்ந்து கீழே விழும்படி செய்தமையால், அம்மாது நிர்வாணமாய் அதிநாணத்தோடும் நிற்க, பிரமன் முதலிய, தேவர்களியாவரும் வெட்கித் தலைகுனிந்திருக்க, அவள் நடிக்கையி லவள்மீது அதிமோகத்தைக்கொண்டும், தான் கொண்ட மோகக்குறிப்பை யவளறியக்காட்டியுந் தானும் மோகங்கொள்ளவும், இப்படி யிருவருமொருவர்க் கொருவர் கொண்ட மையலையறிந்த மன்மதன், இருவர்மீது மலர்ப்பகழியெய்ய, அதனைச் சகிக்க மாட்டாதவனாய் மூர்ச்சித்திருந்த அஷ்டவசுக்களி லொருவனாகிய விதூமனென்பவனையும் அலம்புகையினது கோலக்களிப்பையுங் கண்ட பிரமன் உடனே விதூமனையும் அலம்புசையையு மழைத்து, நீங்கள் தேவசபையிலே, நாணமென்பதை மோகத்தினாலே மறந்து, இத்தேவ சபையிலிருக்கு மெங்களையுஞ் சைகைகுறியால் லொருவர்க் கொருவர் கண்சைகைகள் செய்திருந்தமையால், இக்கணமே நீங்களிருவரும் பூலோகத்திலே ஸ்திரீ புருஷராகப் பிறந்து பாணிக்கிரகணம் பண்ணிக்கொள்ளக் கடவீரென்று சபித்தனன் அவ்வுரைகேட்ட விதூமனும் அலம்புசையும் திடுக்கிட்டு மெய்சோர்ந்து, யாதுந் தோன்றாமல் பிரமனைவணங்கிப் பலவகையாய்த் தோத்திரஞ்செய்து, சுவாமி! அடியேங்கள் செய்தபிழையைப் பொறுத்துக் காக்க வேண்டுமென்று அனேகம் வேண்டுதல்செய்தும் அஷ்டாங்கமாய்ப்பூமியிற்படிந்தும்வருந்தினின்றனர், அவர்மீது பிரமன் கருணைகூர்ந்து சொல்லுவார்.

காமாந்தகாரத்தாற் கலக்கமுற்றவர்களே? நாமிட்ட சாபத்தைவிலக்கக் கூடாதாயினும் நீங்களிருவரும் நம்மை வணங்கித்

துன்புறுகின்றமையால் உங்கள்மேற் கருணைகூர்ந்து புகலுவதி யாதெனின், நம்மாற் கொடுத்தசாபப்படி பூலோகத்திலே போய்ப்பிறந்து மணஞ்செய்து கொண்டு சிலநாள் இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்து, உங்களிருவருக்கும் பிறக்கும் பிள்ளைக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்து, பின்னர் துறவடைந்து யாத்திரை வாசிகளாய்த் தேசசஞ்சாரஞ் செய்துவருகின்றபோது, தட்சிணபாகமாகிய தென்றிசையிலே தசரதகுமாரனாகிய ஸ்ரீரகு குலோத்துங்கனாற் செய்விக்கப்பட்ட சேதுவிலே விளங்குஞ் சக்கரதீர்த்தத்திலே நீங்களிருவருந் தீர்த்தமாடுவீர், அப்படித் தீர்த்தமாடிய பின்புடனே பாம்பின் சட்டையகன்று பளிங்காவதுபோலக் கர்மத்தாலுற்ற வுங்கள் மானிட தேகம் நீங்கிப் பழையபடியே தேவவுருவத்தோடும் பொன்னுலகம் புகுந்து வாழ்வீர்களென்று சிருஷ்டிகர்த்தாவாகிய திசை முகன் திருவாய் மலர்ந்தருளினர், மேலும் இவ்வாறு பிரமன் பன்னியதோருரைகொண்ட விதூமனோடு அலம்புகையுந் தரைகண்டார் பிறவியதைச்சார்ந்து, என்பதற்கிணங்க பிரமனைப்பணிந்து தன்னிருப்பிடஞ்சேர்ந்து, யாம்பூலோகத்தில் யாருக்குப் புத்திரனாகப்பிறப்போமென்று கருதித் தன்தம்பிமாராகிய மாலியவான்புட்பதந்தன், பலோற்கடனென்னு மூன்றுபேரையு மழைத்து பிரமதேவனாற் றனக்குக்கிவிடத்த சாபத்தை யறிவித்து அதன்காரணத்தையுஞ் சொல்ல, அதுகேட்ட தம்பிமார்கள் திடுக்கிட்டு மனங்கலங்கித் துக்கசாகரத்தி லமிழ்ந்தித் தமயனைநோக்கிக்கூறுவார்கள், தேவரீர் பூலோகத்திலே மாநிடயோனியிலே யுற்பவித்துப் பிராந்தியையடைந் தெங்களையும் மறந்து தனித்திருக்க, நாங்கள் மூவரும் உம்மைவிட்டு எவ்வாறு பிரிந்து துன்பத்தையடைந் திருப்போம், இஃதன்றியும் நாங்கள் நாணமின்றித் தெய்வசபைக் கெவ்வாறு செல்லுவோ மாதலால் நாங்களுங்கூடவே பூலோகத்திற்பிறந்து தேவரீருக்கு ஊழியஞ்செய்துகொண்டிருக்கும்படி கட்டளையிட வேண்டுமென்று மூவரும் வணங்கிச்சொல்ல, அதுகேட்ட விதூமன், தம்பிமார்களே நான் தான் வினைப்பகுதியால் நரகத்துக்குச் சமானமாகிய மானிடயோனியிலுதித்து வினைப்போகங்களைத் தொலைக்கப்போகின்றேன். நீங்களேன் விருதாவாய்மானிடயோனியிலுதித்துத்துன்பத்தை யநுபவிக்க நினைக்கிறீர்கள்,வேண்டாமென்று அனேகவிதமாய்க்கூறி

ங்யுகேளாமைகண்டு,உங்கள் மனத்தின்படியே யெனக்குத்துணையாய் பூலோகத்திலே பிறப்பீர்களென்று கட்டளையிட, நால்வரும் அலம்புசையும் பூமியிற் பிறக்க வெண்ணினர்.

இவர்களிப்படி சிந்தித்துக் கொண்டிருக்குங்காலையில் பூலோகத்திலே வேதங்களாளோதுஞ் சோமசூரியாக்கினி என்னுமுக்குலத்துள் சந்திரகுலசிகாமணியாய் தேவேந்திர குமாரனுகவும் பாண்டுவின் புகல்வனுகவுஞ் ஜனித்த அர்ச்சுன மகாராஜனுக்கு சுபத்திரையினிடமாகப் பிறந்த அபிமன்னு மகாராஜனது புதல்வன் பரிட்சித்து பரிட்சித்துவின்புதல்வன் ஜெனமேஜயன் புத்திரனுகவும் கௌசாம்பிதேசத் திறைவனுகவுமோங்குஞ் சதானீக னென்பவன், இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டு மநுநீதியுடனே குடிகளிடத்தில் ஆறிலொரு கடமை வாங்கித்தன்னுயிர்போலமன்னுயிரையும் பாதுகாத்துத் தரணியாண்டுவரும் நாளில் தனக்குப் புத்திரப்பேற தில்லாமையால் மிகவுந் துன்பமடைந்து யாதுந்தோன்றுமை விருப்பமேதோடுந் தனது மந்திரியாகிய சுரந்தானுக்குஞ் சேனுபதியாகிய விப்பிரதீபனுக்கும் அரண்மனைப்புரோகிதனுகிய ஞானவல்லவனென்பவனுக்கும் புத்திரபாக்கியமில்லாமல் வியாகுலப்படுவதுகண்டு, நால்வருங்கூடி யொன்று யோசித்து தனது செங்கோற்குளடங்கிய தேசத்தைசார்ந்த வனத்திற் பன்னசாலையமைத்து அதன்கணிருந்து தவமிழைத்துக் கொண்டிருக்குஞ் சண்டில மகாரிஷியை யழைத்துவந்து, புத்திர காமேஷ்டியாகஞ் செய்யக் கருதி, அப்படியே யாகநிறைவேற்றிப் பூரணுகுதிசெய்து, அவரவரது மனைவிமார்களுக்குப் பிண்டங்கொடுக்க யத்தனித்த போது, பிரமஞானமுடைய அம்முனிவரர் தெய்வலோகத்திற் பிரமனுடைய சாபத்தால் புவியிற் பிறக்கவேண்டிச் சிந்தித்துக் கொண்டிருக்கின்ற விதூமன் முதலிய நான்குபேரையும் நான்கு பிண்டத்திலே தியானித்துக் கொடுத்தார், அதுபோலவர்களுடைய மாதரும் அன்றுமுதற் கெர்ப்பமாக விருந்து பூரணமானவுடன், சதானீகனுடைய தேவியாகிய விண்டுமாமதி வயிற்றிலே விதூமனுஞ், சுகந்தரன் மனைவியாகிய சந்திரதீபிகை வயிற்றிலே மாலியவானும் விப்ரதீபன் மனைவியாகிய சுகந்தலாவணி வயிற்றிலேபுட்பகந்தனும், ஞானவல்லவனுடைய மனைவியாகிய சுகந்தராவதி வயற்றிலே பவோர்னுகடனும்வந்து பிறந்தனர், இவ்வகையாய் ஜனித்தவர்களுள் இராஜகுமாரனுக்கு சகத்திரானீக

னென்றும் மந்திரி குமாரனுக்கு யூகவல்லவனென்றுஞ் சேனாப திகுமாரனுக் குச்சதுரங்கனென்றும், புரோகிதகுமாரனுக்குவச ந்தனென்றும் நாமகரணஞ்செய்து நாளொருவண்ணமும் பொ ழுதொருமேனியுமாக வளர்த்து வந்தனர் இவ்வண்ணம் வளர்ந் துவரும் பிள்ளைகளுக்கு ஐந்துவயது பூரணமாகுங் காலையில், அயோத்தியா பட்டணத்துக் கிறைவனாகிய கிருதவன்மா வென் னுமரசன் புத்தரபாக்கிய மில்லாதவனாய்த் தவஞ்செய்ய அவன் மனைவி மனோவதியென்பவள் வயிற்றிலே அலம்புசை யென்னும் அரம்பாஸ்திரீ மிருகாவதி யென்னும் பெயரையுடைய பெண் ணாய்ப்பிறந்து வளர்ந்து வருகையில், தெய்வலோகத்திற் பாம் புப் பல்லனென்னு மிராக்கதனும் அவன் தம்பியாகிய தூலசெ ன்னியனும் தெய்வநாயகனாகிய இந்திரனை யெதிர்த்து யுத்தஞ் செய்கையிலப்போது தேவேந்திரனுக்கவர்களை வெல்ல முடியாது பூலோகத்தில் கௌசாம்பி தேசத்திற் கிறைவனாகியசதானீகனெ ன்னும் வேந்தன் புஜபராக்கிரமசாலியென்று கேள்வியுற்று அவ னை அழைத்து வரும்படியாகத் தன் சாரதியைத் தேர்கொண்டு போகும்படி உத்தரவளிக்க அவனுமப்படியே கொண்டுபோய் பூலோகத்திலிருக்குஞ் சதானீகனுக் கறிவித்து,இரதத்தின்மீதே ற்றிக்கொண்டு தெய்வலோகத்திற்குப்போய்த் தேவராஜன் முன் பாக விடுத்தனன் அப்போது தேவேந்திரனும் பூலோகத்தரசனா கிய சதானீகன் சவுரியங்களையுந் தேயுசுகளையுங்கண்டு தன்னி டமிருக்குமந்திரிமார் மூவர்களிலிவனுமொருவனாக விருக்க மந் திரி பட்டங்கட்டி முடிசூட்டிச் சில சயின்யங்களுடனே தானு ஞ்சதானீகனுமாய் புறப்பட்டுப் பாம்புப் பல்லன் 1 தூலசென்னி யனென்னுமாக் கருடனெதிர்த்து யுத்தஞ்செய்யும்போது தொந் தயுத்தத்திலே பாம்புப் பல்லனையுந் தூலசென்னியனையுஞ் சத னீகன்கொன்று பொன்னுலகத் திறைவனாகிய தேவேந்திரனுக்கு ச்சதானீகன் வெற்றிமாலையைச் சூட்டினான் அதுகண்ட இந்தி ரன் சந்தோஷமடைந்து ஜெயமுரசறைந்து சதானீகனுடனே அமராவதிப்பட்டணம் வந்து சேர்ந்து சதானீகனை மிகக் காத லோடும் நேசித்து வருகின்றநாளில், பிரமகற்பனைப்படி சதானீ கன் மரணமடைந்தான், அதுகண்டு இந்திரன் இரக்கமுற்று அ வனுடைய ஆத்மாவுக்கு தேவரூபத்தைக் கொடுத்து வைத்துக் கொண்டு தூலத்தைக் கௌசாம்பிய தேசத்திருக்கப்பட்ட அவ ன்குமாரனாகிய சகத்திராகனீகனிடத்திற்கு அனுப்பிவிட்டான்,

அதுகண்ட புதல்வனும் அவன் தாயும் மந்திரிமுதலிய யாவரும் வருத்தமடைந்துசெய்யும் விதிமுறையாவும்வழுவின்றிச்செய்து பின்னர் சதானீகனுக்கு இல்லாளாகவிருந்த விண்டுமோவதி நாயகனில்லாளாக விருந்தாள் பின்பு இராச்சியத்துக் கரசனில்லாமையால் சதானீகனது மந்திரிமார்களுஞ் சில பெரியோர்களுங் கூடி மந்திராலோசனைசெய்து அரசன் புதல்வனாகிய சகத்திரானீகனுக்கு நல்ல சுபமுகூர்த்தத்தில் பட்டாபிஷேகஞ் செய்து முடிசூட்டிவைத்தார்கள். அப்படி வைத்தபின் தன் தந்தையினும் எண்மணங் கதிகமாய் மநுநீதிவழுவாது இராஜரீகஞ் செய்து வருநாளில், சில நாட்களுக்குள் தந்தையரசாளுகையி லிருந்த முதியோர்களாகிய மந்திரி சேனாபதி புரோகிதன் இம்மூவரும் மரணகாலமடைய அதுகண்ட சகத்திரானீகன் தனது ஆளுகைக்கு மந்திரி முதலிய யாவரும் வேண்டியிருப்பதால் இறந்தவர்களது புதல்வராகிய மூவர்களில் யூகவல்லவனைத் தனக்குமந்திரியாகவும் சதுரங்கனைச் சேனாதிபதியாகவும் வசந்தனைப் புரோகிதனாகவுமமைத்து இரதகஜ துரகபதாதிகளென்னும் நால்வகைச் சேனைகள் சூழ எண்டிசையுங் கீர்த்தியோங்கத் தக்கதாய்ச்செங்கோனடாத்தி வருகையில் தேவேந்திரன் தெய்வலோகத்தில் தனக்கா யேற்படுத்தி யிருக்கின்ற காண்டாவனத்தில் நந்தவனச்சிங்காரம் பார்க்கும்படியாய் சகத்திரானீகனைக் கூட்டிவரும்படி தூதுவனுக்கு ஆக்ஞைசெய்ய, அவ்வாறே தூதுவர்களும் பூலோகத்திற்குப்போய் சகத்திரானீகனைக்கண்டுரைக்க அதற்கவனுஞ் சந்தோஷித்தனாய் இரதமேறித் தெய்வலோகம் போய்ச் சேர்ந்து தேவேந்திரனைக்கண்டு வணங்கினன. தேவேந்திரனும் வந்த புதல்வனுக்கு வேண்டிய வெகுமதிகளுஞ்செய்து நந்தவனங்களை யெல்லாங் காண்பித்து அவன தகப்பன் சதானீகன்தேவரூபம் பெற்றிருப்பதையுங காண்பித்தான் அப்படி காட்டியமாத்திரத்தில் சகத்திரானீகன் மிகவுஞ் சந்தோஷமடைந்து தகப்பனைக் கண்ணிறைக் கண்டு இந் ரன் சபையிலிருக்கும்போதுஅச் சபையில் நடனஞ்செய்து கொண்டு நிற்கிற திலோத்தமையின் மேல் மோகங்கொள்ள அவளு மிவன்மீது மோகமுற இக்குறிப்புகளையெல்லா முணர்ந்த தேவராஜன் குறுநகைசெய்து, ஏதோ மாச்சர்யமா யொருகதை சொல்லுவதுபோல முன்னடந்த சவிஸ்தார மெல்லாந் தெரியச்சொல்லி, உனக்கு மனைவியாகும்படி

யாய் அலம்புசை யென்னு மரம்பாஸ்திரீ அயோத்தியா பட்ட ணத்திலே மிருகாவதி யென்னும் பெயருடையவளாய்ப் பிறந்தி ருக்கின்றனள். அவளுடைய ரூபலாவண்யமானது சேடனாலுஞ் செப்பமுடியாது, அப்படிப்பட்ட ரூபவதியை உனக்கு நாயகி யாய்ப் பிரமன் விதித்திருப்பதினாலே நீபூலோகஞ்சென்று அவளை மனைவியாக்கிக் கொள்ளென்று உத்தரவுகொடுத்தனுப்ப அவ் வார்த்தையைக்கேட்ட சகத்திரானீகனுக்கு தேவேந்திரனால் வர் ணித்துச் சொல்லப்பட்ட அலம்புசையென்னும் அரம்பாஸ்திரீ யினது வனப்பின் கண்ணேசென்ற மனத்தைத் திருப்ப அசக்த னாய் அதிக காதல்மீறி, எப்போது அவளைக்கூடுவோமென் றேக் கங்கொண்டு தேவராஜனிடம் விடைபெற்றுத் தன்பட்டணத்து க்கு மீண்டுவருகையில், அங்குள்ள பூங்காவனத்தில், திலோத்த மையென்னுந் தெய்வகணிகை நின்றிருந்தவளாய் பூலோகத்திற் குச் செல்லுஞ் சகத்திரானீகனை வழிமறித்துச் சொல்லுவாள். தேவரீர் இந்திரன் சபையிலே நடித்து நின்ற என்மீது மோகங் கொள்ள யானுந்தங்கள்மீது மோகமுற்றுச் சகியாதவளாய்க்கா மநோயால் வருந்துகின்றமையால், சித்தமிரங்கி இப்பூங்காவனத் திலென்னைக்கூடிச் சுகித்தென்மீ தமர்செய்யு மனங்களைக் கள ங்குலைந்தோடும்படியாய்க் கருணைசெய்வீ ரென்று கூறுந்திலோ த்தமையினது மொழியைத் தினைத்துணையேனுங் காதிற் கொள் ளாதவனாய் ஏறிட்டும் பாராதவனாய்த் தன் பட்டணத்தைநோக் கிமிருகாவதியின்மேல் மோகமாய்த் திரும்பிவிட்டான். அப்போ துதிலோர்த்தமையானவள் அதிவிரகத்தால் மனமானது கொதி ப்பேறித் தன் சொல்லையுந் தான்கொண்ட காதலையுந்தணிக்கா மற் செல்லும் வேந்தனைநோக்கிக் கூறுவாள், வேந்தே, பெண்ணா கிய யான் உன்மீது மால்கொண்டு தியங்கிச் சேரும்படி விரை ந்து கூறு மெனதுவார்த்தையைக் கேளாமல் என்முகத்தைப்பா ராமலும் போகின்றமையால், நீயும் உனது பெண்சாதியுங்கூடிச் சுகித்துவாழ்கையில் அவள் முகத்தில் நீ விழியாமலும் உன்முக த்தில் அவள் விழியாமலும் பதினாலுவருடம்வரையில் பிரிந்திரு க்கக் கடவீர்களென்று சாபங்கொடுத்தாள். அவ்வாறு கடுங்கோ பத்தாற் கூறியதிலோத்தமையின்சாபத்தையுங்கேளாதவனாய் அ ரவினுங்கொடிய வேகமாய்த்தன் கௌசாம்பியபுரியென்னும்பட் டணத்தைச் சேர்ந்தான். அவ்வாறுசேர்ந்த சகத்திராநீகன் தன் மந்திரியாகிய கவல்லவனை யழைத்து அருகே வைத்துக்கொ ண்டு, தான் தெய்வலோகம் போயிருக்கையிலங்கு தேவராஜனாற்

சொல்லப்பட்ட அலம்புசையென்னும் பெண்ணை நான் அணைந் தாலல்ல தெனது ஆவி தரியாது என்செய்வேன், பஞ்சபாணங் களையுடையன் சமரி னின்று மெப்படி யுய்வேன் எனது மதியூகி யாகிய மந்திரியே யென்று கவலையுறுங் காவலனை மந்திரிபணிந்து கூறுவான், அரசே? தங்களுக்கு இந்திரனாற் சொல்லப்பட்டபெ ண் எவ்வுலக வாசியோ வறியோம் என்று கூறிய மந்திரியைநோ க்கி, அப்பா? இவ்வுலகின்கண் எனதாருயிர்த் துணைபோன்றயூக வல்லவனே, யான் காதல் கொண்டிருக்கும் அலம்புசை என்னு மரம்பையானவள் அயோத்தியாபட்டணத்தில் கோடிசந்திரலா வண்யம் போன்றவதனமும், கரும் புயலையுங் காளகோடி விஷத் தையுங் கடலையும் யானைக்கூட்டத்தையும் ஆலம் விழுதையும் பழித்த கூந்தலும், இந்திர தநுவையொத்த புருவமும், மானை யுஞ் சேல்மீனையும் ஒள்ளியவேலையும நீலோற்பலத்தையும்பழித் தகண்களும், மகரத்தைப்பழித்த செவிகளும், எள்ளிளம் பூவை ப்போன்ற அழகிய நாசியும் கண்ணாடிபோன்ற கன்னங்களும், பவளத்துண்டையுங் கொவ்வைக் கனியையும் நிகர்த்த அதரமு ம், வலம்புரிச்சங்கம்போன்ற கழுத்தும் மூங்கிற் கணுவையொ த்த தோட்களும், மேருவையுந் தங்கக்கிண்ணத்தையும் யானையி னுடைய மத்தகத்தையும் தென்னங் குரும்பையையுங் கூவிளங் கனியையும் பம்பரத்தையும் பந்தையும் பூசெண்டையும், புற்பு தத்தையும் பழித்த குசங்களும், நீர்ச்சுழியைப்போன்ற வுந்திக் கமலமும், சிங்கத்தையுங் கொடிமின்னலையும் உடுக்கையையும் பழித்திலகாநின்ற இடையும், பாம்பின் படம்போன்ற வல்கு லும், கதலியைப்பழித்த தொடைகளும், அலவனைப் பழிக்கு முழந்தாளும், வரால் மீனைப்போன்ற கெண்டைக்கால்களும், செ ம்பஞ்சைப்போன்ற புறந்தாளும், தாரசைப்போன்ற பரடுகளும் சண்பக மலரைப்போன்ற தேககாந்தியும், பிடியானையைப்போன் றநடையும் படைத்து, மிருகாவதியென்னும் அழகிய பெயர்வா ய்ந்து, என்மனதைக் கவர்ந்துபோய் வைத்திருப்பதால் அம்மங் கையை யான் மணமாலை சூட்டும்படி யிசைவிப்பாயென்ன அது போல் யூகவல்லவனென்று மந்திரி வேந்தனிடம் விடைபெற்றுக் கொண்டு, தானுஞ் சிலபெரியோர்களாகிய பிராமணர்களும்வாக ளுடனாய்ப் பிரயாணப்பட்டுக் காடுமலைவனம் வனந்தரங்காறு றுமுதலிய யாவுங்கடந்து, அயோத்தியாபுரிசேர்ந்து அவ்வரண் மனைவாயிற் காவலாளிகளிடந்தங்கள் வரவைத் தெரிவித்து, அர

சன் ஆஞ்ஞையின்மீது கொலுமண்டபஞ்சேர்ந்து, பெரியோர்க ளாகிய பிராமணர் வேந்தனைக்கண்டாசிகூறியும் யூகவல்லவனெ னுமந்திரி பணிந்தும் அங்குள்ள வாசனங்களி லாரோகணித்து அரசனைநோக்கி, சகத்திரானீகனுடைய ரூபாலாவண்ய சவுந்த ரிய குணாதிசயங்களையும் புஜபல பராக்ரமங்களையும் குலவரன் முறைகள் யாவுஞ் சாங்கோபங்கமாய்த் தெரிவித்து வேந்தனைச் சம்மதிக்கும்படி செய்து முத்துச்சிவிகையிலேற்றிச் சில படைக ளோடுங் கௌசாம்பிய தேசத்துக்கழைத்து வந்து நல்ல சுபமு கூர்த்தத்தில் செய்முறையாதும் பிறழாது முப்பத்திரண்டுமேள வாத்தியங்களுந் தாமதாமென்று முழங்க மிருகாவதியென்னுமங் ணங்கைச் சகத்திராண்கனுக்குப் பாணிக்கிரணஞ்செயது அவ்வி ருவரும் நிலாமணி முற்றத்தினின்று இரதியும் மன்மதனும்போ லும் மாலுங் கலையும்போலும் அன்னமும் பேடும்போலுங்கூடி இன்பசுகங்களையனுபவித்துக்கொண்டு அளவில்லாத போகபா க்கியங்களோடு மருவிக்குலாவி வாழ்ந்து வவுநாளில் பொன்போ ன்ற காநதியை தாராநின்ற மிருகாவதியின்மேனி பூரணசந்திர னைப்போல் வெளுத்த நிறங்கொடுத்து, நிமிர்ந்து விம்மிப்பூரித்து வட்டமிட்டுத் தங்கக்கிண்ணத்தை யொத்துக்கனத்த தனத்தின து அஞ்சூராணிபோன்ற முலைமுகங்கறுத்துப் புயல்போனொளி ரவும், கைத்தல் புளித்தல் கார்த்தல் உவர்த்தல் துவர்த்தல் தித் தித்தலென்னும் அறுசுவையில் புளித்தலையே நனி காதல்கொள் ளும் பருவமாகிய காலமும் நெருங்கிக் கருப்பிணியாயிருக்குஞ் சங்கையை நாயகனாகிய சகத்திரானீகனறிந்து, தன்னாளுகைக் குள் ளடங்கிய தேசங்களுக்கெல்லாம் வரியிறைவேண்டாமென் றுநிறுத்தி, அது முதல் அறநெறியினின்றும் ஆதுலர்க்குச்சாலை ஓதுவார்க்குணவு அறுசமயத்தார்க்குண்டி, சிறைச்சோறுஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவு வளர்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், சுண்ணாம்பு, நோய்மருந்து வண்ணான், நாவிதன், கண்ணாடி, காதோலை, கண்மருந்து தலைக் கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந் தல், மடம், தடம், சோலை, ஆவுறிஞ்சுதறி, விலங்கிற்குணவு,ஏறு விடுத்தல், விலைகொடுத்துயிர் காத்தல், கன்னிகாதானம், இவ்வ கையாகிய முப்பத்திரண்டு தருமங்களையும் யாவரு மானந்திக்கு ம்படி தினப்படிசெய்து சொர்ணத்திபாகியாய் இன்னிசைக் குயி ல்போன்ற மிருகாவதியைக்கணப்போதெனினும் பிரியாமல் இன்

பக்கடலுள் தாழ்ந்து, இனிது வாழ்ந்திருக்கையில் ஒருநாள்கெர்ப்பவதியாகிய மிருகாவதி பூங்காவனத்துக்குச்சென்று ஓர்தடாகத்திலிறங்கிச் சலக்கிரீடை செய்யவேண்டுமென்றுவல்கொண்டு தன் மணாளனுக்கறிவிக்க, அதுபோல் வேந்தனுமப் பூங்காவனத்திலுள்ளவோர் பொய்கையில் திவ்யவாசம் பொருந்திய குசும்பாப்பொடியையுங் குங்குமங்களையுங்கரைத்து இளஞ்சூரியனைப் போற் பிரகாசிக்கும்படிச்செய்து அந்தப்புரத்துக்கும் பூங்காவனத்துக்கும் புட்பங்களைப் பரப்பி மெல்லிய பட்டாடைகளையதன்மேல் விரித்துச் சேடியர்கள் நான்குபக்கமுஞ்சூழ்ந்து கைலாகுகொடுத்து வரவும் மயில் விசிறி வீசிப்பனிநீர் தெளிக்கத் தனதுநாயகனுடனே பூங்காவனம்போய்ச் சேர்ந்து பொய்கையிலிறங்கித் தானும் தனது மணாளனும் நிர்வாணிகளாய்ஜலத்தில்விளையாடுகையில் அப்பொய்கையிற் கொட்டிக்கலந்திருந்த குசம்பாப்பொடியுங் குங்குமமும் இவ்விருவர்களது தேகத்திலூறிச்சுவறியிருந்தமையால் பொன்போலிருந்த தேகம்செக்கர்வானம்போல்பிரகாசிக்க, சகத்திரானீகனைத் தடாகத்தில் விடுத்துத் தான்மாத்திரந் தனிமையாய்க் கரையேறிநின்றாள்.

மிருகாவதியானவள் அகாலையில் ஆகாயமார்க்கமாய் இரைவேண்டி வட்டமிட்டுக்கொண்டிருந்த மகிடனென்னும் அண்டரண்டபட்சியானது மிருகாவதியினது சரீரத்தை மாமிசமென்று கருதியும், நமக்கின்று நல்லவுணவு கிடைத்ததென்றுந் தாழ்ந்து திடீரெனப்பாய்ந்து காலினுலெற்றியிடுக்கிக்கொண்டு ஆகாயமார்க்கத்திற் பறந்து உதயகிரியிலே கொண்டுபோய் அதனசார்பிலிறங்கிப்பார்க்கும்போது நரஜன்மமான பெண்ணுயிருந்தமைகண்டு, அங்ஙனே விட்டு விட்டுத் தன்னிச்சையாய்ப் பறந்துபோய்விட்டது, பின்னர் மிருகாவதி திடீரெனத் தனக்கு இன்னதெனத் தோன்றுமற் பட்சியினது காலிலிடுக்கப்பட்டு ஆகாயவீதியிலெழும்புகையில் மூர்ச்சைகொண்டிருந்தமையால் அப்பட்சிதன்னை விட்டு நீங்கியவோர்கடிகைப் பாதுக்குள் அம்மூர்ச்சைதெளிந்து கண்விழித்துப்பார்த்துச் சித்தம் பிரமித்து யாதுந் தோன்றுதவளாய் தன் கணவனையுஞ்சேடிகளையும் ஜலக்கிரீடைசெய்த தடாகத்தையுங் காணுதுபருவதத்தின்மேல் கரடி புலி சிங்க முதலிய மிருகக்கூட்டங்கள் வாசஞ்செய்யும்படியாகிய தானமாய் பயங்கரமாகிய அடர்ந்த காடுகள் சூழ்ந்துஞ்சூரியனது கிரணமுந்தோன்றுது இருப்பது கண்டு, மிகவுஞ்சிந்தாக்ராந்தியாய், நமதுநாயு

கர் ஏதோ நெடுநாள் நம்மை வஞ்சிக்கக்கருதி இவ்வாறு செய்த னரோ கணப்போதேனும் பிரியாதவர் கானகத்தில் நம்மையெப் படிக் கைவிட்டார்.

அவர் சித்தத்துக்குப் பாபியாகிய யான் யாதுங்குறைசெய் தறியேனே, தெய்வமே, இதற்கோயான் ஜலக்கிரீடை செய்யவா சைகொண்டேன், என்செய்கேன் எவ்வித மிவ்வனத்தினின்றுமீ டேறுவேன் ஓ பிரமனே, இதுவும் நின் திருவுளச்செயலோவஸ் திரமுமில்லாமல் மெய்யைக் கைகொண்டு மூடும் மிடிக்காளா னேனே தெய்வமே தெய்வமே யென்றும் பின்னும்நாம் இதுபரி யந்தம் நாயகனோடு கூடிவாழ்ந்த வாழ்நாளெல்லாஞ் சொப்பன ம்போலிருக்கின்றதே ஏன் ஜென்மப்பிரகிருதியே யிப்படிதானோ பிரமன் இக்கோலத்தோடு தானம்மைச் சிருஷ்டித்தானோ இல் லாவிடில் நான் ஜலக்கிரீடைசெய்த குளமும் பூங்காவனமுங்கோ ட்டைக் கொத்தளமும் அரண்மனையும் நாயகனோடு சுகித்துச்ச ல்லாபலீலை புரிந்திருந்த நிலாமணிமுற்ற முதலிய யாவுங்காணு மற் கானலின் நீர்போல் மறைந்துவிட்டதே ஐயோ, என்காலிற் பட்டதைக் கண்ணிற்பட்டதுபோலும் உடலும் உயிரும்போலு ம்பாலும் நீரும்போலும் பூவுமணமும்போலும் எள்ளும் நெய் போலும் கரும்புஞ்சுவையும் போலுங்கலந்து வாழ்ந்தமணாளன் கானகத்திற்றனியாயும் வஸ்திரபங்கமாயும் வஞ்சித்து விட்டுப் போக யார்செய்த கற்பனையோ அந்தோ தெய்வமே, இக்கானக த்தில் ஒருவரையுங்காணோமே நாம்வாழ்ந்தபதி யெத்தனைதூர மிருக்கின்றதோ, வீரகண்டாமணி பொருந்திய பாதபத்மங்களை யுடையு நமது நாயகனது விலாசம்பொருந்திய மார்பும் இமாச லம்போன்ற திண்ணிய புயங்களும்பூரணசந்திரோதயம்போன்ற முகாரவிந்தமும் நானெப்போது காண்பேனோவென்று அழுது கூக்குரலிட்டு முகத்திலும் வாயிலும் மார்பிலு மறைந்து புலம் புகின்ற சத்தங்கேட்டு, அவ்வனத்தில் வாசஞ்செய்கின்ற மிருக க்கூட்டங்களும் பறவைக்கூட்டங்களும்நெருங்கிநின்றுபார்த்து மறுபடியுமோடிப்போய்விடும், இவ்வாறு அணியணியாய்வந்து பார்க்கும்படியான மிருகங்களைக்கண்டு, நாம் இப்படித்துன்பப் படுவதைப்பார்க்கிலும் இம்மிருகங்களுக்கு இரையாகிவிடுவதே நலமென்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, அம்மிருகங்க ளின் அருகேயோடுவாள் அவைகள் ஐயுறிவோடுங்கூடிய மிருக ங்களாயினும் இவள் தேவபிடமென்றும் இவளையாம் இச்சிக்கத்

தகாதென்றுஞ் சிந்தித்துப்பயநதோடும், இப்படி மிருகாவதிதன துபிராணனைக் போக்குவதற்கெவ்வித உபாயமுமில்லாமல் பிர லாபித்துக் கொண்டிருக்கும்போது அவ்வரணியத்தில் நீடூழியா ய்த்தவஞ்செய்து கொண்டிருக்கும் ஓர்முனிவர் குமாரன் இவள் பிரலாபிக்குமோசையைக்கேட்டு, அவ்வோசையின்வழியே நாடி வந்து மிருகாவதியைக்கண்டு, ரக்கங்கொண்டு, அருட்கடலாகி யஜமதக்கினிமுனிவரிட மிவளைக்கொண்டுபோய் விடுவோமென்று அழைத்துக்கொண்டுபோய் அவரிடத்தில்விட, அதுகண்டமுனி வர் மிருகாவதியினுடைய சவிஸ்தாரங்களையெல்லாம் ஆதியோ டந்தமாய் விசாரித்துத் தானுமறிந்தவராய் என்னைக்கிருகவன் மாவாக நினையென்றுசொல்லி தன் பத்தினிமுதலிய ரிஷிபத்தி னிகளுடனே சேர்த்து ஆதரவுசெய்து வருகையில், மிருகாவதி யுந்தனது விதியைநினைந்து வாழ்ந்துவருகையில், கெர்ப்பநோயு ற்று இருஷிபத்தினிகளினது கடாக்ஷவீட்சண்யத்தால் யாதுங் குறைவில்லாமல் ஆண்குழந்தையைப்பெற, உடனே உதயகிரிச் சாரலிற் பிறந்தமையால் இக்குழந்தைக்கு உதயநன் என்னும் பெயர் தருமென்று ஆகாசத்தில் ஓரசரீரிவாக்கு உண்டாயிற்று, அப்படியே முனிவர் இக்குழந்தைக்கு உதயநனென்று நாமகர ணஞ்செய்து வளர்த்துவருகையில், பிறைச்சந்திரன்போல் வள ரும் பிள்ளைக்கு ஐந்துவயதுநிரம்ப அப்போது முநிவரர் சிறுவ னுக்குச்சவுளம் உபநயனம் வித்யாப்பியாசம் தநுர்வேதம் மந்தி ரப்ரயோக முதலியன பூரணமாகக்கடாக்ஷித்து உணரச்செய்து, பாதுகாத்து வருகையில் உதயநனென்னுஞ்சிறுவன் அவ்வனத் தில் வாழும் மிருகங்களின்மீது வேட்டையாடிவருங்கோலத்தை த்தாயானவள் கண்டு களிப்புறத்தக்கதா யிருப்பினுந் தனதும ணாளனைவிடுத்துத் தான் தனித்திருக்குந் துன்பத்தையே பெரிது பாராட்டிவருநாளிலோர்நாள், அவ்வனத்தில்வாழுமோர்வேடன் ஒருபாம்பைப்பிடித்துக்கொண்டு வந்துகொண்டிருக்கக்கண்டஉ தயநன் அவ்வேடனை நோக்கி,நீயேன் இந்தப்பாம்பைப் பிடித்து க்கொண்டு போகிறுயென்று வினவ அதற்கவன்சிறுவனைநோக்கி அப்பா இதை யான் பட்டணங்களிற்கொண்டுபோய் ஆட்டிவை ப்பேனுகில் என் ஜீவனவிர்த்திக்கு குறைவில்லாலிருககு மெனக் கூற அதுகேட்ட உதயநன் அது பாவத்தொழிலாதலால்அதனை நீவனையில் விட்டுவிடு இந்தக் கடயத்தைக் கொடுக்கிறேனென்று சொல்ல, அவன் விட்டு விட்டபிறகு, அன்னையாற்போடப் பட்

டிருந்த இரத்தினக்கடயத்தைக் கழற்றிக்கொடுத்தான், பின்னர் வேடன்கையினின்றும் விடுபட்ட நாகமானது உதயநனென்னும் ராஜகுமாரனிடம் வந்து வணங்கி, வேந்தரிளங்கன்றே உம்மால் யின்றையதினம் யான் உயிர்பெற்றேனாதலால் உமக்குக்கைம்மாறுயானென்னசெய்யப்போகின்றேன், நீர் தயைசெய்து என்னுடன் வாருமென்று யினியவார்த்தைகளைச்சொல்லி யழைத்துக் கொண்டுபோய் அவ்வனத்தில் ராஜரீகஞ்செய்து கொண்டிருக்கு ந்தங்களுடைய நாகராஜன் முன்விடுத்து தனது ஆபத்தினின்று மீட்டதையும் அவனது குணாதிசயங்களையுமறிவித்து நிற்க, அப்போது நாகராஜன்முன் உதயநனென்னு மிராஜகுமாரனது ரூபலாவண்ய சவுந்தரியங்களைக்கண்டு, சந்தோஷங்கொண்டு கின்னரனென்னும் நாகத்தை நோக்கி, கின்னரா, நான்சொன்ன வண்ணம் நமது குமாரத்தியாகிய லளிதையென்பவளை இவ்விராஜகுமாரனுக்கு மணம்புரியவேண்டுமென்று சொல்ல அதுபோல் இந்தநாக கன்னியை மணஞ்செய்ய, உதயநனும் சந்தோஷித்தனையம்மணம் புரிந்துகொண்டு லளிதையுந் தானுமாய்க் கூடிவாழ்ந்து சுகசையோகங்களை யநுபவித்து வருநாளில் லளிதையென்னும் நாககன்னி கர்ப்போற்பத்தியா யோர்புத்திரனைப்பெற்றாள், பெற்றதும் நாககன்னியாயிருந்த லளிதை தேவகன்னிகையாயினாள். அவ்வாறுருக்கொண்ட பெண் உதயநனைநோக்கி, அரசே, நான் முன்பு வித்யாதரர் குலத்திலே உற்பவித்த தேவகன்னி என்பெயர் சுகண்டியென்பர் நான் ஒரு ரிஷிசாபத்தினாலே நாககன்னிகையாய்ப் பிறந்திருந்தேன் உன்வயிற்றிலே குழந்தைபிறந்ததும் சாபவிமோசனமாய் விடுமென்று முன்னாரந்த ரிஷியினிடத்திலே கேட்டிருந்தேன், இப்போது அப்படியே சாபவிமோசனமுமாகிவிட்டது யினியான்தெய்வலோகம்போகவேண்டுமாதலின் உமது குமாரனை நீர் ஒப்புக்கொள்ளுமென்று சொல்லித் தன்குமாரனுக்குச் சகல வியாதிகளுமெப்போது மணுகாதிருக்க ஓர் அமிர்த சஞ்சீவிக்குளிகையும் தன் கையிலிருந்த வீணையும் ஒருகாலத்திலும் வாடாத அல்லி மாலையையுங் கொடுத்துப்புருஷனிடத்திலும் மற்றுமங்குள்ள தந்தை முதலிய யாவரிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு தெய்வலோகம்போய்ச் சேர்ந்தாள்.

அப்பால் உதயநனென்னு மிராஜகுமாரன் தன்னுடையகுமாரனுக்கு லளிதையாற் கொடுக்கப்பட்ட மூன்றுவஸ்துக்களோடுங்குமாரனையழைத்துக்கொண்டு ரிஷியாசிரமத்திலிருக்குந் தன

துதாயாரிடம் வந்துசேர்ந்து நடந்தசெய்தியெல்லா மாதியந்தமாய்ச் சொல்லத்தாயாகிய மிருகாவதிகேட்டு மிகவுஞ்சந்தோஷமாயிருந்தாள். யிப்படியிருக்குங்காலத்தில் முன்பு தெய்வலோகத்தில் சகத்திரானீகனுக்குத் திலோத்தமையால் நேரிட்டசாபத்தின்பிரமாணமாகியபதினன்குவருடத்துக்குச் சமீபித்தபடியால் உதயகிரிச்சாரலிலிருக்கும் மிருகாவதியினது புதல்வனுற்கொடுக்கப்பட்ட ரத்தினவளையை வாங்கியவேடன், அவ்வளையைவிற்பனைசெய்து சீவிப்போமெனக்கருதி, கிராமங்களிலுஞ் சிற்றூர்களிலுந் திரிந்தும் விலைப்படாமையின் அதனைக்கௌசாம்பியபுரியென்னும் பட்டணத்திற்கொண்டுபோய் அங்குள்ள வியாபாரிகளுக்குக்காட்ட, அவ்வியாபாரிகள் இவ்விலையில்லா மணிகளிழைத்தொளிராநின்ற வளையைப்பார்த்தால் நமது வேந்தனது அரண்மனைக்குரியதுபோ லிருக்கின்றதேயெனறு ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு வளையோடுங்கொண்டுவந்த வேடுவனையழைத்துக்கொண்டுபோய் ராஜசமுகத்தில் விடுத்தார்கள் அப்படியிருக்க முன்னம் சரசகலாப மயிலைப்போன்ற மிருகாவதி ஜலக்கிரீடைசெய்த தடாகத்தினின்றுந் தன்னைத்திடீரென விட்டுமாயமாய்ப்போன நாண்முதல விதுபரியந்தம்மூணுறக்கமில்லாமலும் ராஜரீகஞ்செய்யாமலும் வஸ்திரபூஷணங்களைத் தரியாமலும்மஞ்சத்தின்மீது சயனிக்காமலும் தாம்பூலந்தரியாமலும் மஞ்சனமாடாமலும் மந்திரிமுதலிய சுற்றத்தாரோடும் பேசாமலும் பித்துக்கொண்டவனைப்போல் சரீரமுங்கறுத்து, அழகுங்குன்றி அல்லும்பகலும் ஒரே சிந்தையாய் அயர்வெய்தித்துக்கக்கடலிலழுந்தியிருந்த சகத்திரானீகன் வியாபாரிகளாற் கொண்டுபோய்வைத்த ரத்தினவளையைக்கண்டு தனது மங்கையினது கைவளையென்றறிந்து சொப்பனங்கண்டு விழித்தவனைப்போலுந் திடுக்கிட்டெழுந்து அங்குவைத்திருக்கும் ரத்தினவளையைக்கையி லெடுத்துக்கொண்டு அதனைக்கண்ணிமையாமற்கண்டு, தனது மங்கையினது கரம்போலப்பாவித்து அடிக்கடி யவ்வளையை முத்தமிட்டுங்கண்ணிலொத்திக்கொண்டும் அடங்காமகிழ்ச்சி யுடையவனுய்ப் பெருமூச்செறிந்து எதிரில்நிற்கும் வேடுவனைப்பார்த்துயிந்த வளையானது உனக்குக் கிடைத்தவித மெப்படி யென்று கேட்க, அப்போது வேடுவன சொலலுவான, சுவாமியின யான உதயகிரிச்சாரலில் வாசஞ்செய்யும் வேடுவனுதலால் ஒருநாள் எனது ஜீவகார்த்தத்தின பொருட்டு வேட்டையாடச்சென்று அத்தினம்

யாதும் கிடைக்காமையால் எனதுகண்ணுக்குமுன்தோன்றியோ டிப்போய் வளையிற்புகுந்த நாகனைத்தொடர்ந்துசென்று அதிக ப்பிரயாஸையோடும் பிடித்து கிராமங்களிற்கொண்டுபோ யாட் டிவைத்தால் நெல் கேழ்வரகு முதலிய தானியங்கள் கிடைக்கு மேயென்று ஆவலோடுங்கொண்டு வருகையில், என்னெதிர்ப்ப ட்ட ஓர்ராஜகுமார னென்னைப்பார்த்து அப்பா இதையேன்பிடி த்துக்கொண்டு போகிறாய் பாவமாதலால் விட்டுவிடு எனதுகை வளையைத் தருகிறேனென்று,சொன்னமையால் யானுமதுபோல் எனக்கிந்தவளையைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டமையால் பிதை விற்பனைசெய்து சீவிக்கலாமெனக் கொண்டுவந்தேன், மற் றையாது மறியேன் அரசேயென்று தனதிருகரங்களையுஞ் சிரமே ற்கூப்பித் தொழுதுநின்றான்.

அம்மொழிகேட்ட வேந்தன் தனது மந்திரியாகிய யூகவல் லவனையுஞ் சிலபெரியோர்களையும் அருகழைத்து வைத்துக் கொண்டு கேளுங்கள் பெரியோர்களே இவ்வேடுவன் சொல்லிய வார்த்தை உண்மையெனத்தோற்றுகின்றது, ஏனெனில் எனது மங்கை கற்ப்பிணியாகவிருந்தது உண்மை அவள் உயிர்பெற்றி ருந்தால் புத்திரனைப்பெற்றிருப்பாள் ஆயினும் உதயகிரிச்சாரல் வரையி லவள் சென்றமாயம் இன்னதென்று தெரியாமையால் இவ்வேடுவனைத் துணைகூட்டிக்கொண்டு போவோமாயின் யாவு ந்தெரிந்து கொள்ளலாம் உங்களுடைய கருத்துயாது, அதனை வெளியிடுங்களென்று கூறிய வேந்தனை மந்திரிமுதலியோர்நோ கி, அரசே, தாங்கள் கூறியதேசரி, அப்படியே சென்றறிவோ மென்ன, உடனே சிலசைந்யங்களோடும் அரசன் மந்திரிமுதலிய யாவரும் இரதாரூடராய் வேடுவனையுங் கூட்டிக்கொண்டு அன் றையிரவு போதுபோக்கி, மறுநாள் அருணோதயத்துக்குள்ள பிர யாணப்பட்டுத் தன்பதியைகடந்து, காடுமலைவனம் வனாந்தரங்க ளோடுங்கூடியிருக்கும உதயகிரியைச்சேர்ந்து, வேடுவன் ராஜ குமாரனைச்சந்தித்த இடத்தைக்காட்டச்செய்து அவணின்று நான்கு திசைகளிலுஞ்சுற்றிப்பார்த்து வருங்கால ஓர் பூங்காவில் முனிவராசிரமங்களும் பன்னசாலைகளுமிருக்க அப்பன்ன சாலை யில் அநேக ரிஷிபத்தினிகள் நடுவில் மதிபோற் பிரகாசித்துக் கொண்டிருக்குந் தனது நாயகியாகிய மிருகாவதியையும் இள ஞ்சூரியனைப்போன்ற குமாரனையுங்கண்டு பூரித்துப் பொங்கி

ஆனந்தக்கடலுட் டோய்ந்தவளாய், திடீரென்று இரதத்தைவிட்டிழிந்து, கன்றைக்கண்ட காலியைப்போலோடித் தனது நாயகியைக் கட்டியணைத்து முத்தமிட்டு விம்மி விம்மி யொருவர்க்கொருவர் படுந்துயரங்களை அவ்வாசிரமத்தி லெழுந்தருளியிருக்குஞ் சமதக்கினிமுதலிய ரிஷீசுவரர்களும் ரிஷிபத்தினிகளுங்கண்டு ஆச்சரியங்கொண்டு, இதுவரையில் நம்முடைய பன்னகசாலையில் வாழ்ந்திருந்த மிருகாவதியென்னும் பெண்ணை ஒருராஜனானவன் சதுரங்கதளத்துடனே வந்து நம்மையுங்காணாமல் என்ன காரணத்தாற் றுயரப்படுகிறானென்று பன்னகசாலையை விட்டு நீங்கி, துணையாய்வந்தவர்களைக்கண்டு அவர்களுள் மந்திரியின்னானெனவறிந்து, இஃதென்னகாரணமென்றுவினவ, அப்போது மந்திரியானவன் முநிவர்களைவணங்கி, அதிவிநயத்தோடுங்கேளுங்கள் சுவாமிகளே, கௌசாம்பிய தேசத்தையாளுகின்ற சகத்திரானீகனென்னும் வேந்தனிவர், அந்த மிருகாவதி யென்னும் பெண்ணிவருடைய தேவியார், இவ்விருவரும்பட்டணத்தில் வாழ்ந்து கொண்டிருக்கையில், கர்ப்பவதியா யிருந்தகாலத்தில் பூங்காவனத்தில் தடாகத்திலிறங்கி நீராடிக்கொண்டிருக்க அரசன் கண்டதேயன்றி யிதுபரியந்தம் எங்கெங்குந்தேடியுங்காணாதுசிந்தைவருந்தியிருந்த வேந்தனுக்கு ஒருவேடன் மூலமாயிருக்குஞ்செய்தி யறிந்துவந்தனரென்று மந்திரிசொல்ல, அதுகேட்ட ஜமதக்கினிமுநிவர் அரசனைக்கிட்டவழைத்து உட்காரவைத்துத்தேறுதல்செய்து, ஓய்வேந்தே, உமது மனைவியாகிய மிருகாவதிகுங்குமக்குழம்புதோய்ந்த தடாகத்தில் நீராடிக்கரையேறிநிற்கையில், விகடனென்னும் அண்டரண்டபட்சியானது மாமிசமென்று தூக்கிக்கொண்டுவந்து இவ்வுதயகிரியின்பேரில் விட்டுவிட்டது.

இவள் கெர்ப்பவதியாதலால் அடங்காத்துயரத்தோடும்பிரலாபிப்பதறிந்து யாம் எமது பத்தினியிடம் ஒப்புச்சொல்லிப்பாதுகாக்கச்செய்தோம் உடனே குமாரன் பிறந்தான் அவனுக்குஉதயநனென்று நாமகரணஞ்செய்து, பருவமறிந்து வித்தியாப்பியாசமுதலியவும் தனுர்வேதமுமுணரச்செய்தோம், யிதுதானிங்குநடந்த சவிஸ்தாரமாதலால், யிதுபரியந்தம் வால்மீகர் தமதாசிரமத்தையடைந்த சீதாபிராட்டியையும் அவள்குமாரர்களாகிய குசலவர்களையும் பாதுகாத்து ஸ்ரீராமனுக்கு ஒப்புவித்தது போல் எமது ஆசிரமத்தையடைந்த மிருகாவதியையும் அவள்புதல்வனாகிய உதயநனையும் பாதுகாத்துவந்து ஸ்ரீராமனுக்குச்சம

மாகிய சகத்திரானீகவேந்தனென்னும் நின்னிடம் ஒப்புவித்தோ மாதலால், நீயுனது தேவியையு மைந்தனையுமழைத்துக்கொண்டு போய் சுகஜீவியாக விருக்கக்கடவையென்று அநேக ஆசீர்வசன ஞ்செய்து, தம்மிடத்திலுள்ள அரிதாகிய சிலபதார்த்தங்களையு ங்கொடுத்து விடைகொடுக்க, சகத்திரானீகன் முனிவரைப்பணிந் துதனது மனைவியாகியமிருகாவதியையுங்குமாரனாகியஉதயனனை யும் அவன்குமாரனையு முத்துச்சிவிகையிலேற்றிக்கொண்டுதான் ரதாரூடனாய் மந்திரி முதலிய தளங்களை கூட்டிப்பிரயாணப்ப ட்டுக் கௌசாம்பியபட்டணம்வந்து சேர்ந்து இராச்சியபரிபால னஞ்செய்து கொண்டிருந்தான்.

இவ்விதமாய் வேந்தன் மனைவிமக்களோடுங்கூடிச் சகல சந் தோஷங்களையு மநுபவித்து வருங்காலையில் தனதுகுமாரனாகிய உதயனனுக்கு நல்ல சுபமுகூர்த்தத்திற் பட்டாபிஷேகஞ்செய்வி த்து செங்கோன் முறைமை யாவுந்தெளிவுறச்சொல்லி சாமபே ததானதண்டமென்னுஞ் சதுர்வித வுபாயங்களிலும் வல்லவனா கிய மந்திரியையுமமைத்து பின்னர் யுகந்தராயணன் வசந்தன்ம னைவியாகிய மிருகாவதியென்னும் மூவரோடுகூடித் துறவடைந் துபட்டணம் விட்டுப்பிரயாணப்பட்டு திவ்யக்ஷேத்திரங்களைக்க ண்டு தெரிசித்து திவ்யதீர்த்தங்களிலாடிவருகின்றபோது சேது வைச்சார்ந்த புல்லாரண்யமென்னும் க்ஷேத்திரத்திலே தேவிபட் டணத்தில் விலங்காநின்ற சக்கரதீர்த்தத்தில் மூழ்கினார்கள் அவ் வாறு அத்தீர்த்தத்திலாடியவுடனே தேவதுந்துபி முழங்கவும் தேவர்கள் மந்தாரம் பாரிஜாத முதலிய மலர்களைமாரிபோற்சல சலென்று வருஷிக்கவும் தாங்கள்முன்செய்தவினைப்போகங்களை யெல்லாமொழித்துச் சாபமனைத்துந் தீர்ந்து பழையபடி தேவ சொரூபம்பெற்று ராஜனாகிய சகத்திரானீகன் அஷ்டவசுக்களில் விதுமனாகவும், யுகந்தராயணனாகிய மந்திரி மாலியனாகவும்சே னாபதியாகிய சதுரங்கன் புஷ்பகந்தனாகவும்,புரோகிதனாகிய வச ந்தன் பலோற்கடனாகவும், மிருகாவதியென்னுமரசி அலம்புஷை யென்னு மரம்பைமாதாகவும் உருவம்பெற்று, பொன்னுலகத்தி லவரவர்கள் தொழிலிற்பிரவேசித்திருந்தார்கள். ஆதலாலித்த ன்மையாகிய மகிமைபூண்டசக்கரதீர்த்தம் தேவிபுரத்திலுண்டா யிருக்கின்றதென்று சூதமஹாரிஷியானவர்சொல்ல நைமிசாரண் யவாசிகளாகிய முனிவர்கள் கேட்டு மிகவுங்களிப்படைந்து பிரம்

மானந்த பரிதராய் முனிவரை நோக்கி சுவாமி செப்புதற்கரிய பிச்சக்கரதீர்த்தம் விளங்கிக்கொண்டிருக்கும் பட்டணத்திற்கு தேவியினது நாமத்தார் பெயர் பிரகாசிக்குங்காரணம் யாதோ அதனையும் அத்தீர்த்தத்தில் நரராய்ப்பிறந்தவர்கள் தீர்த்தமாடினால் அவர்கள் அடையும்படியாகிய பலனையுஞ்சிறியேங்களுக்குப்புலப்படும்படியாய் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுவினைந்துகேட்க சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

விதூமச் சரித்திரம்

முற்றிற்று.



## தேவிபுரச் சரித்திரம்.

நைமிசாரண்ய முனிவர்களே, கேளுங்கள் விண்ணாதி ஐந்தாகியும், விமலமாகியும், அமலமாகியும், விளங்காநின்ற ஜகதீசனது கிருபாநோக்காலிலகும் காசிபரிஷியினது தேவிமார்களாகிய திதியென்பவள் வயற்றிலே பிறந்த தேவேந்திராதி தேவர்களும், அதிதியென்பவள் வயிற்றிலே பிறந்த ராக்ஷஸர்களும் ஒருவர்க்கொருவர் தொந்தயுத்தங்கள்செய்து போராடி ராக்ஷஸர்களியாவருமடிந்து விட்டதனாலே அதிதியென்னப்பட்டவள் மிகுந்தவிசனத்தினாற் சோபக்கடலுட்டோய்ந்து சகிக்கலாற்றாதவளாய்த் தனது குமாரத்தியையழைத்து, அடியம்மணி இனியாகிலுமுனது வயிற்றிலே கர்ப்பமுண்டாகும்படி வனத்திற்போ யரிய தவஞ்செய்து வரம்பெற்றுவருவாய் மகளேயென்றுசொல்ல,அதனைக்கேட்ட அவளும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு வனத்துட்புகுந்து, சுபாரிசமுனியைநோக்கி, மகிஷரூபத்தோடுந் தவம்புரிய, அப்போது சுபாரிசமுனிவரானவ ரவளுக்குப் பிரசன்னமாகி, வாரும் பெண்ணே சத்குணீ, நீசெய்த அரியதவத்தாலுன்மீதெமக்கு மிகவுஞ்சந்தோஷமாய் தெரிசனந்தந்தோம் இனி நீ விரும்பியவண்ணம் உன்வயிற்றிற்பிறக்கும் பிள்ளையானவன் சுத்தவீரனாகவும் அதிவீரபராக்கிரம சாலியாகவும் அனேக வரங்களைப்பெற்றவனாகவும் உன்னைப்போல் மகிஷமுகத்தோடும் பிறப்பானாதலால், அதுவரையினும் நீ என்னிடமிருவென் றவனையும்

கூட்டிக்கொண்டுபோய்த் தானிருக்கும் பன்னகசாலையில் வைத்துக்கொண்டிருந்தார். இவ்வகையாய் சுபாரிசரிடத்திலே யிருக்கிறகாலத்தில் அவள் வயிற்றில் கர்ப்பமுண்டாய் ஆலகாலவிஷம் பிறந்ததுபோல மகிஷமுகத்தோடுங்கூடி யோர்பிள்ளை பிறந்தது அப்பிள்ளைக்கு மகிஷாசுரனென்று பெயரிட்டு வளர்த்துவருகையிலப்பிள்ளையானவன் சகல வல்லமைகளு முண்டானவனாகவும் பராக்ரமசாலியாகவு மிருக்கிறபோது முன்பு தேவர்களோடுயுத்தஞ்செய்து ஜெயிக்கமாட்டாதவர்களாய் தப்பிப்பிழைத்து ஓடியொளித்திருந்த ராட்சதர்களில் விப்பிரசித்துவினுடைய குமாரன் வித்துத்துமாலி யென்பவன்மகா பராக்ரமசாலிகளாகியசில ராக்ஷஸப்படைகளோடுங்கூடி இந்த மகிஷாசுரனிடத்திலேசேர்ந்து அவனை நோக்கிக் கூறுவார்கள். ஐயா மகிஷாசுரரே, எங்களையும் எங்கள் முன்னோர்களாகிய சிலராக்ஷஸர்களையும் அமராவதிக்கிறைவனாகிய தேவேந்திரன் விஷ்ணுமுதலாகிய தேவர்களெல்லா மெதிர்த்துப்போராடி நாசப்படுத்திய காலையில் நாங்கள் ஓடித்தப்பிப்பிழைத்தோம் என்செய்வோம், வேறு துணையில்லாமற் றுன்பப்படுகிறோமென்று சொல்ல, அவ்வார்த்தையைக் கேட்ட மகிஷாசுரன் கடுஞ்சினமடைந்து, கண்களிற்றீயெழும்படிநோக்கி பயப்படாதீர்கள் கணப்போதில்தேவர்களையெல்லாம் நாசப்படுத்துகிறேனென்று சீறியெழுந்து, அவ்வரக்கர்களைக்கூட்டிப் பிரயாணப்படுத்திக்கொண்டு தெய்வலோகத்தைச்சுற்றிவளைத்து, இந்திராதிதேவர்களுடனே தேவக்கணக்கில் நூறுவருடம் வரையில் தொந்தயுத்தஞ்செய்தான், அப்படியுத்தஞ் செய்கிற காலையில், இந்திரன் பிரமன் விஷ்ணு முதலாகிய தேவர்களெல்லாம் மகிஷாசுரனுக்கு முன்னின்று நிர்வகிக்கமாட்டாதவர்களாய், தங்கள் பதியைவிடுத்து உத்தரபாகத்திலோங்குங்கைலாசகிரியிற் சேர்ந்து, சந்திர ஜடாதர மூர்த்தியாகிய உமாமகேசனிடத்தில் முறையிட்டார். அம்முறைப் பாட்டைக் கேட்ட நீலகண்டன், ரவுத்ராகாரமாய்க் கோபங்கொண்டு, தனது கோபாவேசமாகிய தழலை வடவாமுகாக்கினியினும் கோடிபங்கதிகப்படுத்தி, அதனையோர் பெண்ணுருவின் முகமாகவும், மகாவிஷ்ணுவினது கோபத்தீயை தேகமாகவும், இயமனது கோபத்தை உதடாகவும், பிரமனது கோபத்தைப் பாதங்களாகவும் கைலாசகிரியை யிரண்டு குசங்களாகவும், அருணனது கோப

த்தை முழந்தாள்களாகவும், அஷ்டவசுக்களைக் கரசரணுதிகளி லுள்ள நகங்களாகவும், அஷ்டதிக்குப் பாலர்களை விரல்களாக வும், சந்திரனை நாசியாகவும், வடவாமுக்காளியைக் கண்களாக வும், சண்டமாருதத்தைப் புருவமாகவும், இந்திராதி தேவர்களி டத்துண்டாகிய கோபத்தீயே சதுர்ப்புஜங்களும் அஷ்ட கரங்க ளுமாகி ஆயுதங்கள் பிரகாசிக்கும்படியாகவும், அஷ்டதிசையும் நடுங்கும்படி பரஞ்சோதிவடிவாய் நின்றவளைக்கண்டதேவர்முத லியாவரும் தோத்திரஞ்செய்தார்கள். அவ்வாறு தோத்திரஞ் செய்ததுமன்றியும், அவரவர்களது மந்தரசக்திகளையும் ஆயுத ங்களையுங்கொடுக்க அவைகளைப் பெற்றுக் கொண்டவளாய்க் கோபாவேசத்தோடும் அண்டகடாகங்களும் நடுங்கும்படியாய் கெர்ச்சனைசெய்து, விசுவரூபங்கொண்டுநிற்பவளுக்குபரமசிவன் தனது மூவிலைவேற் சூலத்தைக்கொடுத்துச் சிங்கத்தை வாகன மாகவும், பூதவேதாளபைசாச கணங்களைப்படையாகவும், மாமி சாதிகளைபட்சணமாகவும், பாலைவனத்திலிருந்து மகிஷாசுரனைச் சங்கரித்துவரும்படி யருள்செய்தனுப்ப, விடைபெற்று, பூதவே தாள பைசாசக்கூட்டங்களுடனே சிங்கவாகனத்திலேறிவருகிற துர்க்கையை மகிஷாசுரன் முதலிய ராக்ஷஸர்கள் கண்டு, மகா கோபங்கொண்டு மகாதுர்க்கிபை வந்தெதிர்த்துச் சூழ்ந்துகொ ண்டார்கள். அப்படிசூழ்ந்த அரக்கர்களைக்கண்டு, அண்டமுகடு ந்திடுக்கிட, சமுத்திர ஜலமுங்கலங்கிச்சுவறும்படி கெர்ச்சித்து நின்ற துர்க்கையின்மீது அரக்கர்கள் வில்லைவளைத்து அநேகமா யிரம் பாணங்களைத் தண்டோப தண்டமாய் பிரயோகஞ்செய் தார்கள், அதைக்கண்ட தேவர்கள், தங்கள் வில்லைவளைத்து கு ணத்தொனிசெய்து ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் லட்சம் பத்து லட்சம் கோடி பத்துக்கோடி சங்கம் மகாசங்க மென்பதாய்க் கணக்குமித மில்லாமல் அளவிறந்த பாணங் களை ஆகாயம் பூமி எங்கும் பாணமயமாய் நிரப்பி இராட்சத க்கூட்டங்களைக் கால்வேறு, கைவேறு, தலைவேறு, உடல்வேறு கக்கண்டித்து, எங்கும் பிணமலைகளாகக் குவித்து, நாய்நரி கழு கு கூளி பூதவேதாள பைசாசகணங்களுக்கு விருந்திட்டு, இன்ன முண்டோ வாக்கர் சேனைகளெனச்சிங்கநாத வட்டகாசஞ்செய் தார்கள், அதுகண்ட மகிஷாசுரன் எரிந்து விழுந்து பற்களைநெ றநெற வென்று கடித்துக் கண்களில் நெருப்புப்பொறி குபீல்கு பீலெனச்சிந்தும்படியாய், வில்லைவளைத்து நாணேறிட்டுக்குணத்

தொனிக்காட்டி, எக்கிணற்செய்து விஷயங்தோய்ந்திருக்கும்படியாகிய நாராசங்களைவில்லிற்சந்தித்து, கர்னபரிசந்தமிழுத்துதேவேந்திரன்மீதாயிரமும், வருணன்மீதாயிரமும், வாயுவின் மீதாயிரமும், அஷ்டவசுக்கள் முதலிய தேவர்கள்மீதும் ஆயிரமாயிரமாகத்தொடுத்துச் சிங்கநாதஞ்செய்தான். அப்போதுதுர்க்கியானவள், மிகவுங்கோபங்கொண்டு, தன்னைச் சூழ்ந்திருக்கும் பூதவேதாள பைசாசங்களைத்தூண்ட, அவைகளாக்ரமித்துச் சண்டமாருதக் காற்றைப்போலெழும்பி மகிடன்விடுத்த பாணங்களையெல்லாங் குபீலெனப்பாய்ந்து கையினாற்பிடித்தும் முறித்தும் அரக்கர்கள்மேல் மோதியதன்றியும் தங்கள் கையிலிருந்தகதை சூலம் இருப்புலக்கை பிண்டிபாலங்களால் அரக்கர்கூட்டங்களை ஹதாஹதப்படுத்திக் கைவேறு கால்வேறாகச் செய்து, அவுணர்களைத் துண்டு துண்டாய்ச் சதைசதையாய்ப் பெயர்த்தெறிந்து அட்டகாசங்கள் செய்து நின்றனர்.

அப்போதுராக்ஷஸப்படைகளெல்லாங்கோவென்றுகூக்குரலிட்டுக்கொண்டு மகிஷாசுரனைநோக்கி, ஓடிவருகிறபோது அவனுடைய மந்திரியாகிய மகாநாதன், அநேகபாதன், கரவில்லன், சண்டன், மகோதரன், மவியுணன், கற்பகச்சூடன், மகோற்கடன், ஒற்றைகண்ணன், சுலோசனன் இவர்களெல்லாமொன்றாய்த்திரண்டு, தேவியைவந்து சிங்கத்தைநாய்கள்சுற்றிக்கொண்டதுபோற்சுற்றிக்கொண்டு, அவரவர்கள் வில்லைவளைத்து, இடிமுழக்கம்போலப் பேரொலிகாட்டி, அஸ்திரங்களைச்சேனைமாரிபோற்சிந்தினார்கள். அப்போது துர்க்கியானவள் கோபங்கொண்டு, வீரசிங்கம்போலார்ப்பரித்து வில்லை வளைத்து, அண்டமுகடுஞ் செவிடுபடும்படியாய்க் குணத்தொனிசெய்து, வச்சிராயுதத்துக்குச்சமானமான ஒருபிறை முகக்கணையை வில்லினிடமாகச்சந்தித்து அபிமந்திரித்து கர்னபரியந்தமிழுத்துப் பிரயோகஞ் செய்தாள், அப்பகழியானது மகிஷாசுரனுடைய சேனைகளிலே பிரவேசித்துயானைகளிலே லட்சம் குதிரைகளிலே பத்துலட்சம் காலாட்களிலே சங்கஞ்சங்கமாய் மலைமலையாய்க் குவித்து விட்டது.

அப்போது மாயவனென்னப்பட்ட ஓர்ராக்தன், அனேகஞ் சேனைகளோடுங்கூடி எதிர்த்து துர்க்கையின்பேரில் அளவிறந்த பாணங்களைத் தொடுத்துப்பிரயோகஞ்செய்ய தேவியார்கோபங்

கொண்டு எரிமுகவாளியை வில்லிடமாகச் சந்தித்துவிட அந்தப் பாணமானது சடசட வென்னும் ஓசையுடன், எங்கும் பொறிகளைச்சிந்தி, மாயவனது மார்பிற்றுக்கி, முதுகிலூடுருவிச் செல்ல, அதனாலவன் இரத்தங்களைக் கக்கிக்கொண்டு பூமியின்மேற்சாய்ந்து உயிர்துறந்தான் அதுகண்டமகிஷாசுரன் அதிவிசனமடைந்து தன்னண்டையிலிருக்குஞ் சண்டகோபனென்னும் ராக்ஷசனைப்பார்த்து, அடா சண்டகோபா, நமது மாயவனைக்கொன்ற இந்த துர்க்கையை நீபோயெதிர்த்துக் கணப்போதினிற் காலன்வசப்படுத்தி வெற்றிமாலை தரித்து வரவேண்டுமென்றனுப்ப, அப்படியே சண்டகோபனும் மகா ஆக்ருஷத்தோடு மநேகராக்ஷஸப் படைகளுடனே வந்து தேவியை யெதிர்த்து, அநேகமாயிரம்பாணங்களை பிரயோகிக்க, அப்போது தேவியார், சண்டகோபன் விடுத்த அஸ்திரங்களையெல்லா மோர் சிலீமுகக்கணையால் நாசப்படுத்தி, அவன் கைவில்லையுங்கண்டித்து, துவசத்தையும் வெட்டிச் சாய்த்துக் குதிரையையுங்கொன்று, இரதத்தையுஞ் சக்கை சக்கையாய்ப் பெயர்த்தெறிந்து, மற்றொரு அர்த்தசந்திரபாணத்தினால் அவன் சிரத்தையுந் துணித்துச்சாய்த்தாள் அவ்வாறு சண்டகோபன்சாய்ந்தவுடனே, சித்ரபானுவென்னு மோரரக்கன் கோபாவேசங்கொண்டு, கையிற் சக்கராயுதமெடுத்துச் சிங்கம் போற்பாய்ந்து, கரகரவென்று சுழற்றித் தேவியின்மீது விட்டெறிந்தான். அச்சக்கரமானது கிரிச்சலிட்டுக்கொண்டு வரும் வேகத்தைக்கண்ட தேவி ஓர்பகழியை வில்லினிடமாகச் சந்தித்து, அவன்விட்ட சக்கரத்தைவெட்டிச்சாய்த்து மற்றொருபகழியாலவன் தலையையும் வெட்டித்தள்ளினாள். அப்போது பாடகனென்னுமொரரக்கன்கண்டு, சினங்கொண்டு தனதுகையிலிருந்தவில்லையும் வேலையு மெறிந்துவிட்டுத் தேரைவிட்டுக்குதித்து தோள் தட்டித்தேவியின் முன்னின்று மல்யுத்தஞ்செய்யும்படியாய் அறைகூவிநின்றான். அதுகண்ட துர்க்கியானவள் கோபச்சிருப்புக் காட்டி இடக்கையாலோங்கி அவன் தலையிற்புடைத்த மாத்திரத்தில் தலையிலிருந்த மூளையானது கலங்கிக்காதின்வழியாகவும்வாயின் வழியாகவுஞ்சிந்தி நாக்கைத் தொங்கவிட்டுக் கதறிப்பதறி மடிந்தான். அதைக்கண்ட அந்தகனென்னு மோரரக்கன்வந்தெதிர்க்க, அவனையு மோர்கணையினாற்கொன்று இவ்வாறு மகிஷாசுரனுடைய இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளை

யுங் கால்மாடு தலைமாடாகச்சாய்த்துப் பனிக்கூட்டத்தை விலக்கியெழும் பானுவைப்போல இருட்பிழம்புபோன்ற இராட்சதக்கடலினின்றும் தேவியானவள் சூரியனைப்போற் பிரகாசித்துக் கொண்டிருப்பதை மகிஷாசுரன்கண்டு, வடவாமுகாக்கினிபோற் சீறியெழுந்து, காற்குளம்பினாலே பாதாளலோகம் வரையில்வெடிப்புறும்படியாய் வெட்டிப்பிளந்து, கொம்புகளை யசைத்துப்புருவங்களைவிதிர்த்து, கண்களில் அக்கினிப்பொறிகள் சிந்தும்படியாயுருட்டிப்பார்த்து, நீலகிரியைப்போலும் மேகக்கூட்டம்போலும் இரண்டு கடைவாய்களினின்று மிரத்தங்கள் கொப்பளித்துச்சிந்தும்படியாய் உதட்டைக்கடித்தும், முன்கையைக்கடித்தும், வாலையுதறி ஆகாயத்திற்கிளப்பியும் ஊழிகாலக்கடல்புரண்டுவருவதுபோலிராட்சதப் படையுடனே தேவியை வந்தெதிர்த்தான். அப்போது துர்க்கியானவள், இனியிந்த மகிஷாசுரனைப்பூமியிலிருத்துவது அழகன்றெனக்கருதி, நீலகிரியை ஆதிசேடன் சுற்றிவளைந்ததுபோல நாகபாசத்தையெடுத்து மகிஷாசுரன்மீதுவீசினாள், அந்நாகபாசமானது தேவியினது கரத்தினின்றும் வெளிப்பட்டதெப்படியிருந்ததென்னில் ஆலகாலவிடம்போலும் அந்தகாரவிருளைப்போலும் சண்டமாருதம்போலும் அதிவேகத்தோடுங்கூடி, மகிஷாசுரனை சுற்றிவளைத்துக்கொள்ள, கட்டுண்டுகண்பிதுங்கி, வாயிலே ரத்தங்கள் குபீல் குபீலென்றுசிந்த அம்மகிஷரூபத்தை நீக்கி, சிங்கவுருவெடுத்துப்பாய்ந்து, ஆக்ரமித்துதேவியை வந்தெதிர்த்தான். அப்போது தேவியார் அகோர ருத்ராகாரமாய் நாரசிம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து அச்சிங்கவுருவை யிருபிளவாகப் பிளந்தெறிந்தாள் பின்னும் யானையைப்போல் வந்தெதிர்த்து தேவியைச் சிங்கவாகனத்துடனே துதிக்கையாற் சுற்றித்தூக்கினான் அப்போது தேவியார் யானையாகிய மகிஷாசுரனது துதிக்கையைச் சக்கராயுதத்தினாலறுத்துத் தள்ளினாள். பின்னும் மகிஷாசுரனாக்ரமித்து ஆகாயத்திற்கிளம்பிபூமியிலே லாகுகொண்டு குதித்து மகிஷரூபத்தோடும் தேவிமுன்னின்று ஆர்பரித்தான் அதுகண்ட துர்க்கியானவள் பற்களைக்கடித்து,வில்லினிடமாக அநேகபாணங்களைத் தொடுத்துப்பிரயோகித்தாள் அவைகளை யெல்லாம் மகிஷாசுரன் தனது கொம்பினாற்றட்டி விட்டு பருவதங்களையும் விருட்சங்களையுங் கொம்பினாற் குத்திக் கிளப்பித் துர்க்கி தேவியின் மீதெறிந்தான்.

அப்போது தேவியானவள் தனது தண்டத்தினாற்றட்டித்த விடுபோற்செய்து காட்டிலலேயவிட்டு, மகிஷனைப்பார்த்து,மகாவுக்ரத்தோடும், அடா உனது ஜீவனைக்கணப்போதில் மடித்துதென்றிசைக் கடவுளாகிய இயமபிரானுக்கு வாகனமாக வனுப்புகிறேனென்று வீராவேஷத்தோடுங் கையை மேலேதூக்கி மகிஷாசுரன் தலையிலே கோடைகாலத் திடிபோற்குத்தினாள், அக்குத்தினால் அசுரனுடைய கபாலமானது கலங்கிக்கண்கள் தெறித்து தேகத்திலுள்ள எலும்பெல்லாமுறிந்து நெக்குவிட்டு, உள்ளம்பதறி, நிலைநிற்கமாட்டாமற் றென்றிசையைநோக்கி யோட்டமெடுத்தான். அதுகண்டு தேவியானவள் மிகவும் ஆக்ரமித்து குருகென்னும் பறவையை யிரைகொள்ள வெழுந்த இராஜாளியைப்போற்றொடரச் சிங்கத்தையேவுகையில் அப்போது அசுரனானவன் ஓடுவதற் கசக்தனாய் இனி நம்மால் ஓடமுடியாதெனக்கருதித்தான் ஓடுந்திசைக்கு எதிரிலிருக்க சேதுவுக்குச்சம்பந்தமாகவிருக்கும் சக்கரதீர்த்தமானது வெகு விஸ்தாரமாய்ப் பத்துநாழிகைதூரம் பரப்பும் ஆழமுமுள்ளதா யிருந்ததைக்கண்டு குபீலென்று அத்தடாகத்திற்பாய்ந்து அழுந்திவிட்டான் அப்போது பின்தொடர்ந்து வந்த தேவியானவள் அசுரனைக்காணாமற் றிகைத்து எவ்விதமாயையினாலோ மறைந்தானென்றுயோசித்துக்கொண்டு, வந்தவழியைப்பார்க்க வடக்குமுகமாகத் திரும்பி யந்தச் சக்கரதீர்த்தக்கரையிலே நிற்கும்போது, மகிஷாசுரனித்தடாகத்திலொளித் திருக்கிறானென்று ஆகாயத்தில் அசரீரிதோன்றியது அதுகேட்டவுடனே தன்னுடைய வாகனமாகியசிங்கத்தையேவ அச்சிங்கமானது தடாகத்தில் வாயைவைத்துச் சலத்தையெல்லாஞ்சேறு படக்குடித்தமையால் அப்போது அசுரன் பதுங்குவதற்கிடமின்றி வெளிப்பட்டான்.

உடனே துர்க்கியானவள் கண்டு விடப்படாதென்று ருத்ராகாரமாய் ஆக்ரமித்து எழும்பி அண்டரண்டபட்சியானதுயானைகளின்மீது பாய்ந்து காலினால்பிடிக்குவதுபோல மகிஷாசுரன் மீதுபாய்ந்து ஓர்கால் உடலத்திலும் ஓர்காற்சிரத்திலு மூன்றிச் சூலத்தினாற் குத்திப்புரட்டி கத்தியினால்வெட்டி அவனது உடலத்தைக்காலா லெற்றினமாத்திரத்தில் மகிஷாசுரன் யுகாந்தகாலப்பேரொலிபோ லிரைச்சலிட்டுக் கொண்டு இரத்தங்களைக் குபீல் குபீலென்று கக்கிக்கொண்டு மரணமடைந்தான். அதுக

ண்டதேவியுந் தனது வாளாயுதத்தினாலே அவனுடைய வுடல் வேறு கால்வேறாக வெட்டியெறிந்து தலைபைக்காலால் மிதித்துக்கொண்டு ரவுத்ராகாரமாய்த் தனது தேகமனைத்துஞ் சிவந்து செக்கர்வானம்போற் பிரகாசித்தாள், அதுகண்ட தேவர்களெல்லாம் ஆச்சரியங்கொண்டு மெத்தவுஞ் சந்தோஷத்தோடுங் கற்பகமலர்களைத் தேவியின்மீது சோனைமாரிபோற் சலசலவென்று வருஷித்தார்கள் அவ்வாறு வருஷித்ததன்றியும் தேவர்களுக்கு இவ்வசுரன் மரணமடைந்தது எப்படி யிருந்ததென்றால் இராண்யாட்சதர்களைப்போ லொருகோடி பேர்கள் தாருகாசுரனைப்போ லொருகோடிபேர்கள் மடிந்தால் எவ்வளவு களிப்புண்டாகுமோ அதற்கு எண்மடங் கதிகமாகிய சந்தோஷங்கொண்டு தேவியைத்துதித்துப்பாடி ஆனந்தக்கூத்தாடினார்கள் அதன்றியும் பூதவேதாள பைசாசகணங்கள் முதலிய யாவும் மலையைப்போற் குவிந்திருக்கும் மகிஷாசுரனது இரத்தமாமிசங்களைத் தின்று இன்று நமக்கு நல்ல விருந்தென்று சொல்லிக் கூத்தாடின சர்வலோகங்களிலுமுள்ள சகல ஜீவாத்மாக்களுஞ் சந்தோஷமடைந்தார்கள். அப்போது தேவர்களெல்லா மொன்றுகூடி மகிஷாசுரனைச் சங்கரித்த மகாதேவிக்குச் சக்கரதீர்த்தக்கரையிலே ஆலயமும் பட்டணமு முண்டாக்கி அதிற்குடிகளையேற்றி அதற்குத் தேவிபட்டணமென்று பெயரளித்து தேர் திருவிழாமுதலியயாவு முண்டாக்கி, மகிஷாசுர மர்த்தனியென்று பெயர்கொடுத்து தேவியைப் பூசித்து வணங்கி எங்களுக்கெவ்வித இடுக்கண்வந்த போதிலும் தீர்க்கவேண்டு மென்று வரப்பிரசாதமும் பெற்றுக்கொண்டு அவரவர்களுடைய இருப்பிடங்களுக்குப்போய்ச் சேர்ந்தார்கள்பின்னும் அன்றுமுதல் அப்பட்டணத்திலே யாதொரு குறைவுமில்லாமல் சகலருக்கு மிஷ்டசித்திகளைத்தந்து வெற்றியைத்தருவதுமன்றி அச்சக்கரதீர்த்தமானது சிங்கங்குடித்துச் சுவறிப்போனமையால், தேவி தனது அருளால் அதிலமுர்தம்பெருகச்செய்து சகலருந் தீர்த்தமாடும்படி உபயோகப்படுத்தினபடியால்இதற்கு அமிர்த தீர்த்தமென்றும் பெயர் கொடுத்து அதில் மூழ்கினபேர்களுக்கு நினைத்த காரியங்களெல்லாங் கைகூடிவரும்படியாய்ச் செய்தும், மோட்ச சாம்பிராச்சியமுங் கொடுக்குந்தேவிப்பட்டணமுண்டான வர்த்தமானம் இத்தகையதென்றுந் தேவிப்பட்டணத்தில் ஸ்ரீராமச்சந்திரன் திருவணைகட்டும்போது முன்னர்க

ணேசரையும் நவக்ரகங்களேயும் பூஜித்துச் சேதுபந்தனஞ்செய் யவாரம்பித்தான்.

அப்போதந்த தேவதச்சனுகிய நளன் ஸ்ரீராமச்சந் ரசுவாமிக்கு ஒரு சிங்காசனம்செய்து கொடுத்து அதிலே ஸ்ரீராமஸ்வாமியை யெழுந்தருளி யிருக்கும்படிசெய்து பின் ஐந்துநாளேக்குச்சேதுவைக்கட்டி முடித்துச் சகலதேவா சொரூபமான வானரர்களும் ஸ்ரீராமச்சந்திரனது பிரசாதமுங்கூடிய திருவணையினது தொடக்கத்துக்கு கிழ்ப்பாகத்திலே ஸ்நானவிதியின்படி யாத்திரைசெய்யப்பட்டவர்கள் முதல் கணேசரைப் பூசித்துப் பின்பு சேது மூலத்தில் ஸ்நானஞ்செய்து க்ஷேத்திர பிண்டமுதலியவை கொடுத்துப் பிறகு சக்கரதீர்த்தத்தில் மூழ்கி அங்கும் க்ஷேத்திரபிண்டமுதலானவைகள் செய்து சேதுவுக்கு நாயகனுகிய ஸ்ரீராமச்சந்திரனேப்பூசித்து கிரமப்படி ஸ்நானஞ்செய்து ஜபதபநியமமிட்டைக ளநுட்டிப்போர்களுடைய சென்மாந்தரங்களிற் செய்த கர்மாநுபவங்களும் நீங்கி மோக்ஷத்தை யடைவார்கள். அதன்றியும் தர்மபுஷ்கரிணி யென்னுந் தீர்த்தத்துக்குச் சமானமானது எவ்வுலகத்திலுங்கிடையாது. உலகிலுள்ள சகலநதிகளும் மூழ்கினும். இத்தீர்த்தத்திலாடிய புண்ணிய பலத்தில் பதினறி லொருபங்குக் கிடைக்காது யாத்திரைசெய்கின்றவர்கள்முன் நவபாஷாணமாகிய சேது மூலத்தில் மூழ்கிபின்பு சக்கரதீர்த்தத்திலாடி இவ்விரண்டிடங்களிலும் க்ஷேத்ரபிண்டங்கொடுத்து தர்ப்பணங்கள் செய்து ஸ்ரீராமனேப்பூசித்து வணங்கி அப்பால் தர்ப்பசயனத்திற்குப்போய் நளனுலே நியமிக்கப்பட்ட சிங்காசனத்தைத் தெரிசித்தவர்கள், நரகவேதனேயடைய மாட்டார்களாதலால் அதன் மகிமையை இன்னும் கேளுங்கள் யாதெனில் அந்தச் சேதுவானது மோட்சமார்க்கத்துக்கு ஏதுவாகி சீதாலட்சுமியினது இதய கமலத்தை விகசிதஞ்செய்வதற்கு இளஞ்சூரியனேப்போல் விளங்கிக்கொண்டிருக்கு மென்று சூதபுராணிகர் சொல்லி மறுபடியுஞ் சொல்லுவார் கேளுங்கள் முனிவர்களே இத்தன்மைவாய்ந்த சேது மூலத்திலே விளங்குஞ்சக்கர தீர்த்தத்திலேமூழ்கிய புண்ணியர்கள் அதற்கு தக்ஷிணபாகத்தி லிருக்கும் வேதாளவரத்தீர்த்தம் ஆடவேண்டிய விதியாதலால் அத்தீர்த்தத்துக்கு உத்தரபாகத்தில் சக்கரதீர்த்தமும், தக்ஷிணபாரிசங்கந்தமாதன பருவதமும் விளங்கிக்கொண்டிருக்கு மென்று சூதமுநிவர் சொல்ல அதைக்கேட்டு ஆனந்தங்கொண்ட நைமிசாரண்

யமுனிவர் சுவாமின் அத்தீர்த்தத்துக்கு வேதாளதீர்த்த மென்று பெயர் வந்த காரணத்தையும் அதன் மகிமையையும் அடியேங்களுக்கு திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று பணிந்து கேட்கச்சூதமகாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

தேவிபுரச் சரித்திரம்

முற்றிற்று

---

# வேதாளவரத தீர்த்தம்.



கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே, ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த சின்மயஸ்வரூப சாட்சாத்காரமாகி விளங்குஞ் ஜகதீசன், கயிலாசவாசன், உமாமகேசன், பவநாசன் தனது மங்கையாகிய பர்வதராஜக்குமாரிக்குரைத்தகதையையாம் உங்களுக்குரைக்கின்றோம் அதாவது தண்டகாரண்யத்தில்வாசமாயிருக்குங்காளமகாரிஷியானவர்பஞ்சாக்கினியுடைநின்று தபஞ்செய்து கொண்டிருக்குங்கால், அவர் புத்திரியாகிய காந்திமதி யென்பவள் அதிரூபலாவண்ய சவுந்தரியத்தோடுங் கூடியிருப்பவள், அவள் நித்தியபடியாய்த்தனது தந்தையாகிய காளவரிஷியின் தேவபூசைக்கு வேண்டிய தீர்த்தம் பத்திரம்புட்பஞ்சமித்து முதலாகியவைகளைக் குறையின்றிக் கொண்டுவந்து கொடுத்துப்பணிவிடை செய்துகொண்டு வருவாள் அதுபோலொருநாள் வனத்திற் பிரவேசித்துப் பத்திரபுட்பமெடுத்துக்கொண்டிருக்கும்போது, காந்தர்வலோகத்திலேயிருந்து சுதரிசனன் சுகன்னன் என்னுமிரண்டு காந்தருவச்சிறுவர்கள் நவமணிவெயில் பரப்பி யிலகாநின்ற விமானத்தேறி ஆகாயவீதியிற் செல்பவர்கள், இப்பெண்ணினுடைய ரூபலாவண்ய சவுந்திரியத்தையும் அன்னப்பேட்டைபோன்ற நடையையுங்கண்டு மயங்கி, மூத்தவனாகிய சுதரிசனனென்பவன் விமானத்தைவிட்டு பூமியிலிறங்கி அந்தப்பெண்ணிடத்தில்வந்து ஓபெண்பாவாய் இவ்வனத்திலிருக்கும் நீ யார் உன்தந்தையார் பெயரென்னை சொல்லுவாயென்றுகேட்க அதற் கவளொன்றுஞ் சொல்லாமல் மவுனமாகவிருந்தும் அவ்வித்யாதரன் ஆராக்ருதமாய் வாராய் பெண்கள்

நாயகமே எனக்கு உன்மீது மிகவும் மோகமாயிருப்பதால் நான் காந்தாவலோகத்திலே விஞ்சையர்களுக் கரசனாகிய கோசரானுடைய குமாரன், என்பெயர் சுதரிசனனென்று சொல்லுவார்கள், யான் மன்மதனுடைய அஸ்திராக்கினியால் வெதும்பித் துன்பப்படுகின்றமையால் அதைத்தவிர்த்தாட் கொள்ளவேண்டுமென்றுவெகுவாய் வருந்திப் பிரலாபமுற்றான், அதுகேட்ட அப்பாவை கூறுவாள் வாரும் சுதரிசனனே நான்தண்டகாரண்யத்தில் தவஞ்செய்து கொண்டிருக்கும் காளவமகாரிஷியினுடைய குமாரத்தி, என்பெயரோ காந்திமதியென்று சொல்லுவார்கள் யான் அவருடைய பூசைக்குப் பத்திரம் புட்பம் குசை முதலானவைகள் கொண்டுபோய்க் கொடுக்கின்ற வழக்கமாதலால் இன்றைக்குவெகுநேரந் தாமதப்பட்டு விட்டது. அவரது பூசாகாலத்துக்குகணப்போது தாழ்க்குமாயின் கோபித்துச் சாபங்கொடுப்பாராதலால், அவ்வாறு நடந்தபின்னே பேதையாகிய எனக்கு கதியாது, ஆனதால் நீர் என்தந்தையினிடம் வந்து என்னைக்கேட்டு மணம்புரிந்து கொள்ளுமென்று சொல்லிக் காளவரிருக்கும் பன்னசாலையைநோக்கி நடந்தாள் அப்போது சுதரிசனனும் பின்தொடர்ந்து துராக்ருதமாய் அவள் கூந்தலைப்பிடித்துத் தூக்கிக்கொண்டு போகும்போது, காந்திமதி, கோவென்றலறிக் கூக்குரலிட, அவ்வோசையைக் காளவமகாரிஷிகேட்டு, பன்னசாலையை விட்டோடிவந்து தன்மகளை விடுவித்துக் கோபாவேசத்துடனே சுதரிசனனைப்பார்த்துச் சொல்லுவார், அடாபாதகனே நீமலமூத்திரநாற்ற மாமிசங்களுடனே கூடின பெண்ணின்மீது மோகமாய்ச் சற்றுமஞ்சாமற் பூதவேதாளங்களைப்போற் பற்றியிழுத்து வருந்தியதனால் நரனாகப்பிறந்து வறுமையடைந்து பின்னர் வேதாளமாகவும் உன்னுடைய தம்பி நரனாகவும் இன்பதுன்பங்களை யநுபவித்து அப்பால் விஞ்சையர்க்கு ராஜனான விக்கின தநிகவுதகனை நீங்கள் காணும்போது உங்களுக்கு இச்சாபவிமோசன மாமென்று சொல்லிச்சீடர்களுடனே தன்மகளையு மழைத்துக்கொண்டுபன்னசாலையைப் போய்ச்சேர்ந்தார். அப்பால் சுதரிசனனும் அவனுடைய தம்பியும் மிகவுந் துன்பமடைந்து தங்களுடைய லோகம்போய்ச்சேர்ந்து இருவரும் பூமியிற்பிறக்க வேண்டியதற்குயோசித்து யமுனாதீரத்திலே கோவிந்தஸ்வாமியென்னும் பிராமணனுக்குப்பிள்ளைகளாய் மூத்தவன் விசைய தத்தனென்றும்

இளையவன் அசோகதத்தனென்றும் பிறந்து வளர்ந்துவருகின்ற போது, அந்த யமுனாதீரத்தில் மழையில்லாமல் பன்னிருவருடம் பஞ்சமுண்டாய்ப் பிரஜைகள் துன்பமடைந்து சீவனத்துக்கிடமின்றி இறந்தபேர்கள் தவிர மற்றவர்கள் திசைக்கொருவராயோடிப்போனார்கள். அப்போது கோவிந்தஸ்வாமியென்னும் பிராமணன் தனது பெண்சாதிபிள்ளைகளை யழைத்துக் கொண்டு காசிநகரத்துக்கருகே வரும்போது, சூரியாஸ்தமாகி விட்டபடியாலும்பசியின் கொடுமையினால் நடப்பதற்கு அசக்தர்களாய் மிகுந்த இளைப்போடும் கால்கள் பின்னலிட அவ்விடத்திலுள்ள கபாலமாலாபரணன் என்னும் ஒருதபோதனருடைய பன்னசாலையைக்கண்டு அதிற்போய்ச்சேர்ந்து அங்கிருக்கு முனிவரைக் கண்டு பணிந்து தங்களது குறையனைத்துஞ்சொல்ல, அம்முனிவர் இரக்கமுற்று அவ்வேதியனை நோக்கி ஓய் பிராமணோத்தமா, உனது தந்தை மெத்தவும் நல்லவனென்று எமக்குக்கேள்வி உமக்கு ஈசுவரன் பிள்ளைகளையுந் தாரித்திரத்தையுங் கொடுத்திருக்கிறார். உன் மூத்தமகனுக்கும் உனக்கும் பிரிவுண்டாகும் வினைப்போகங்களை யநுபவிக்கவேண்டியிருப்பதால் அநுபவித்தே தீரவேண்டும் இதோ நம்மிடத்திலிருக்கும் உணவைப்புசித்து பசியாறுங்களென்று கொடுத்த அன்னத்தைப் பெண்சாதிபிள்ளைக ளுடனேயுண்டு ஜலபானஞ்செய்து, அந்தமுனிவரிருந்து தவஞ்செய்கிற ஆலமரத்தருகே ஒருபாழ்ங்கோயிலில் சயனித்துக் கொண்டிருக்கையில், நள்ளிருளில் மூத்தமகனாகிய விசையதத்தனென்பவனுக் குளிருங் காச்சலுமுண்டாக, அதனாற் சகிக்கலாற்றாதவனாய்த் தனது தாதையை யெழுப்பி, இவ்வேளை நெருப்பெடுத்துவந்து விறகுகள்தேடி நெகிடி போட்டாலொழிய வெண்பிராணன் தரியாதென்று சொல்லுவதைக் கேட்டபிராமணன், புத்திரவாஞ்சையால் அவ்வேளையில் எங்குந்தேடியுங் கிடைப்பதரிதாக விருந்தமையால் எங்குங்கிடைக்கவில்லையே என்செய்வன் சுதனேயென்று துயரப்பட அப்போது விசைய தத்தனென்னுஞ்சிறுவன் பெருந்துன்பத்துக் குள்ளானவனாய்த்தனது தந்தையைப்பார்த்து, நீர்பொய் சொல்லுகின்றீர், அதோ வெளிச்சம் புலப்படுகின்றமையால் எவ்விதமேனும் போய்க் கொண்டுவாருமென்றுசொல்ல, அதுகேட்ட பிராமணன் அடா குழந்தாய், நீ சொல்லுகிறது உண்மைதான் அது சுடலைக்கரையாதலாலும் அங்கோர் சவசரீரம் வேகின்றமையாலும் அத்தீயைத் தொடப்படாதென்றும், ஏனெனில், அப்புகை நமது தேகத்திற்படி ஆயுளுஞ்

ஜீரணமாவதோடும் வியாதிகளும் விசேஷப்படுமென்றும் தகப்ப
னை பிராமணன் சொல்ல, அதுகேட்டவிசையதத்தன், அந்தோ
நீரென்னை யநியாயமாய்க்கொல்ல நினைக்கின்றீர், அச்சவத்தைச்
சுடுந்தீயே இந்த வேளையி லென்னைக்காப்பாற்றும், போய்க்கொ
ண்டு வாருமென்று சொல்ல, அதுகேட்ட பிராமணன் மிகவுந்து
ன்பத்தோடும் புத்திரசோகத்தால் எழுந்து மயானத்தைநோக்கி
ப்போகையில் விசையதத்தனும் யானும் வருகிறேனென்று பிற
கேசெல்ல, அப்போது பிராமணன் பிணம் வைத்தெரிகிற விடத்
திற்போய் அந்தச்சவநெருப்பில் குளிர்காயச்செய்து, புதல்வனு
க்கு இதஞ்செய்த பிறகு, அப்பிணத்தின் தலைமூளையில் அக்கி
னிபிடித்துப் பச்சைவர்னமாகவும் நீலவர்னமாகவும் பிரகாசந்
தோன்றுகின்றதை விசையதத்தன் கண்டு, தகப்பனைப்பார்த்து
ஐயா இதுவென்ன இப்படியாகப் பிரகாசிக்கின்றதென்றுகேட்
க, அப்போது தந்தையானவன் புத்திரனைப்பார்த்து, அடாகுழ
ந்தாய் அந்தப்பிணத்தினது தலையிலிருக்கும் மூளையில் அக்கினி
பிடித்து எரிகின்றமையால் அவ்வாறு ஒளி தோற்றுகிறதென்று
சொல்ல, அதுகேட்ட விசையதத்தனென்பவன் உடனேயொரு
கட்டையை யெடுத்து அப்பிணத்தின் தலையிலேயடிக்க,மண்டை
யானது தெறித்து அம்மூளையிற் கொஞ்சம் தன் உதட்டின்மீது
பட, அதனை வினைப்போகத்தினால் அதியாவலோடும் நக்கிச்சுவை
யாயிருந்தமையால் மறுபடியும் அந்த மண்டையைக்கையி லெடு
த்துக்கொண்டு அதிலிருந்த மூளையனைத்தையும் புசிக்க உடனே
வானத்துக்கும் பூமிக்குமொன்றாய் நீலகிரிபோல காத்திரமானவு
ருவங்கொண்டு மூன்றாம் பிறையைப்போன்ற வக்ரதந்தங்களும்
சிவந்தமயிரும் உருண்ட கண்களுமாய் வேதாளரூபத்தோடும் அ
ண்டகடாகங்களெல்லாமதிரும்படி கெர்ச்சித்துப்பாய்ந்து அவன்
வெந்துகொண்டிருக்கும் பிணத்தைத்தூக்கிவாயிற்போட்டுக்கொ
ண்டு அங்கிருந்த தனது தாதையாகிய பிராமணனையும் பட்சண
ஞ்செய்ய நினைத்து, நெருங்கும்போது ஆகாயத்தினின்று யவ
னைத்தொட வேண்டாமென்று ஒரு அசரீரி யுண்டானமையால்,
அவ்வோசையைக்கேட்டவுடனே பயந்து அகலச்சென்று ஆகா
யமார்க்கமாய்த்தாவி அம்மயானத்திலுள்ள காளிகூளி பூதப்ரே
தபசாச கணங்களுக்கு அரசன் மகிழும்படியான காணிக்கையா
கிகபாலபோடன் என்னும் பெயர்பூண்டு, நராத்திபூடணனென்
னும் வேதாளராஜனிடத்திற்போய்ச்சேர்ந்து அவனுடையசேனை
களுக்கெல்லாம் சேனாபதியாயிருந்தான்.

இப்படியிருக்கும்போது அந்த வேதாளராஜனாகிய நராந்தி பூடணன் சித்திரசேனனென்பவனால் மடிந்துவிட்டபடியால்இக் கபாலபோடன் அப்பட்டத்துக்குரியவனாயிருந்து சஞ்சரித்துக் கொண்டிருக்கும்போது, முன்னர் அம்மயானத்திலிருந்த கோவிந்தஸ்வாமியென்னும் பிராமணன் தனது பிள்ளைக்கு நேர்ந்தகாரணத்தைநோக்கி, மகாவிசனத்தோடும் அம்மயானத்தைவிட்டுநீங்கித்தாங்களிறங்கியிருந்த பாழ்ங்கோயிலைச்சேர்ந்து, தனது பாரியாளிடத்திலும் இளையகுமாரனாகிய அசோகதத்தனிடத்திலும் நடந்த சவிஸ்தாரங்களை யாதியந்தமாய்ச்சொல்லிக் கொடுந்துன்பத்தோடுந் தங்கள் மனதைத்தாங்களே தேறுதல் செய்துக்கொண்டு அவணின்றும் பிரயாணப்பட்டுக்காசிநகரத்திற்சேர்ந்துஒரு வருடகாலம் வரையில் முஷ்டியெடுத்து ஜீவித்துக்கொண்டிருக்கையில் தனக்கு நெடுநாள் நேசனாகவிருந்த சமுத்திர தத்தனென்னுமோர் செட்டியைக்கண்டு தனக்குற்ற துன்பங்களையெல்லாம்அவனுடன்சொல்லித் துன்பப்பட அவனும் விசனமடைந்துபிராமணனுக்குத் தேறுதலை சொல்லித்தன்னிடத்தில் வைத்துக் கொண்டு அன்னவஸ்திரங்களுக்குக் குறைவின்றிப் பாதுகாத்து வருகையில் அம்மறையவனுடைய இளையகுமாரனாகிய அசோக தத்தனென்பவன் தன் மரபுக்குரிய வேதசாஸ்திர புராணங்களியாவு மோதியுணர்ந்த தன்றியும் க்ஷத்திரிய தர்மத்துக்குரியதநுர்வேதங்களையுங்கற்று மகாவல்லவனாய் ஒப்புயரவில்லாதவனாகியும் யாவரும் பார்த்துச் சந்தோஷமுறும்படி வல்லமைபொருந்தியிருப்பதை யந்நகர்வேந்தன் கேட்டுச் சந்தோஷித்து அசோக தத்தனைவருவித்துப்பலவகையினு மவனைப்பரீட்சித்து அவனது பராக்ரமத்துக்கு மெச்சிவேண்டிய பரிசீந்து தன்னிடம் வைத்துக்கொண்டிருக்குங் காலையில் தென்றிசையிலிருந்து ஒரு மல்லன் வந்தான் அவனைக்கண்டு ராஜசதசிலுள்ள மல்லர்கள் அஞ்ச யரசன் அசோகதத்தனைநோக்கி இந்தமல்லனைவெல்வையாயின்உனக்குவேண்டிய வற்றைத்தருவேன் என யப்படியே யந்த மல்லனை ஓர் யறையினாலேயே கொன்றுவிட்டதைக் கண்ட யரசனுக்கு இவனிடத்தில் முன்னையினும் சந்தோஷமிருந்து இவனைத் தனக்கு உயிர்த்துணைவனாய் வைத்துக்கொண்டான். இங்கனமிருக்கையில் ஒருநாளிவ்விருவரும் வேடிக்கையார்த்தமா யிரண்டுகுதிரைகளின்மீதேறி வனத்தைநோக்கிச் சாரிமார்க்கமாய் வனத்து

ள்நெடுந்தூரங் குதிரைகளை விடுத்துப் போதுபோய் விட்டது கண்டு திரும்பிவருகையில் அவ்வனத்தில் இவ்வரசனது ஆஞ்ஞை ஞற் கழுவேற்றப்பட்டிருக்கு மொருவன் எட்டுதினமாய் அக்க ழுவினின்றி மரணமாகாமற் பிராணாவஸ்தையனுபவித்து நாவற ட்சிகொண்டு இன்னாரென்றிவர்களை யறியாதவனாய் ஐயா புண் ணியர்களே பாபியாகிய வெனக்கு இவ்வேளை ஜலந்தருவீர்களா கில் பெரும்புண்ணியமுண்டாமென்று கூறியதைக்கேட்ட யர சன் அசோகதத்தனைப்பார்த்து அப்பா இவன்படும் பிராணவே தனைக்கு இவ்வேளை ஜலந்தேடிக்கொடுப்பது புண்ணியமாதலா லும், ஜலஞ்சமீபத்திற்கிடைப்பது யரிதாயிருப்பதாலும் கொஞ் சம் பிரயாசை யெடுத்துக்கொண்டு ஜலமிருக்குமிடந்தேடிக்கொ ண்டுவந்து அவனருந்திய பின்னர்வந்து சேரக்கடவையென்றும், போதுபோய் விட்டமையால் நான் நகரத்திற்குபபோய்ச்சேருகி றேனென்றுஞ் சொல்லித் தான்குதிரையை வேகமாய் விட்டுக் கொண்டு பட்டணம்வந்து அரண்மனைசேர்ந்தான். பின்னர் அசோ கதத்தனனவன் அரசனது ஆஞ்ஞையின்படி அவ்வனமுழுதுஞ் சுற்றித்திரிந்து ஒரு தடாகத்தைக்கண்டு பாத்திரமில்லாமையால் அக்கானகத்துள்ள தேக்கிலையைபபறித்து தொன்னையைப் போல் தைத்து யதிற்சலத்தை முகந்துகொண்டு குதிரையேறிக் கழுவை நாடிவருகையில் யக்கழுமரத்தினடியில் மிகவும் ரூபலா வண்யத்தோடுங்கூடிய வொருபெண்ணானவள் படுத்திருந்து இவ ன்வருதலைக்கண்டெழுந்திருக்க யப்பெண்ணைநோக்கி அசோகத் தனனவன் ஓ பெண்பாவாய், நீயார் நீயிருபபதற்கு காரணமெ ன்னவென்று கேட்க யதுகேட்ட யம்மாது ஐயா நான் இக்கழு விலிருப்பவரது மனையாளாதலால் எனது கணவன் இக்கழுவி னின்றும் பிராணன் விடுந்தவுடனே யானும் பிராணனை விடுவத ற்கு எண்ணங்கொண்டு எட்டுநாளாய்வந்து காத்திருக்கின்றேன் யவர் தாகவிடாயைத் தணிப்பதற்குங் கழுமரம் உயர்வாயிருப் பதால் யாதும் வகையில்லாமல் வருந்துகிறேனென்று சொல்ல, யவ்வுரைக்கேட்ட யசோகதத்தன், இவள் உண்மையானவளெ ன்று மதித்துத்தன்னிடமிருந்த ஜலத்தை யவளிடங்கொடுத்து இதனை உன்புருஷனுக்குக் கொடுத்துத் தாகத்தைத்தணிப்பாயெ ன்றுசொல்ல, யதற்கவள், ஐயா, கழுமரம் உயர்வாயிருபபதால் எவ்வாறு எட்டிக்கொடுப்பேனென்று சொல்ல, யதற்கு யசோக தத்தன். ஓபெண்பாவாய் நானிந்தக்கழுமரதத்டியினிற்கின்றேன்

நீ எனது தோளின்பேரிலேறி நின்றுகொண்டு உன்கணவனை ஜல மருந்தச்செய்வாயென்றுசொல்ல, அதுபோலவளு மிவன்றோளி ன்மீதேறிநின்று தனது கணவனுக்கு ஜலத்தைக் கொடுத்துக்கழு விற்றொங்கு மவனுடைய தேகத்திலிருந்து பெருகுமுதிரத்தை வாயினாலவளுரியும்போது, இதுவென்னவென்றுஅசோகதத்தன் அண்ணாந்து பார்க்கையில், அவன் ராட்சதவுருவங்கொண்டுகர்ச் சித்து ஆகாயவீதியிலெழும்பும்போது அவளது கால்களைகெட் டியாய் பற்றியிருந்தவனாதலால் இவனுமாகாயத்திற் கூடவேகி ளம்பி யவள் காலிலிருந்த சிலம்புகளிலோர் காற்சிலம்புவிடுபட்டு இவன்கையிற்சிக்க அச்சிலமபோடும் பூமியில் லகுவாய்குதித்து இம்மரத்தடியிற் படுத்திருந்தவளேயரக்கி யென்றறியாமல்மோச ம்போனோமே யென்றுகருதி, மனத்தைத் தேற்றிக்கொண்டுகுதி ரைமேலேறி, சிலம்போடும் பட்டணம்போய்ச்சேர்ந்து தான்கொ ண்டுவந்த சிலம்பை யரசனிடங்கொடுத்து, நடந்தசவிஸ்தாரங்க ளையாதியந்தமாய்ச்சொல்ல, யதுகேட்ட அரசன் அசோகதத்த னுடைய தைரிய பராக்ரமத்துக்கு மெத்தவுஞ் சந்தோஷமடைந் து,தனதுபுத்திரியாகிய மதனலேகை யென்பவளை யவனுக்கும ணம்புரிய, அதுபோலவனு மப்பெண்ணை மணந்து அவ்வரசனுக் குமருகனாகி வாழ்ந்து வருநாளில், ஒருநாள் அசோகதத்தனது மாமனாகிய வேந்தன் இவனாற்கொண்டுவந்து கொடுக்கப்பட்ட பொற்சிலம்புக் கிணையானசிலம்பு சம்பாதித்துத் தன்னுடைய தேவிக்குக் கொடுக்கவேண்டுமென்னு மாசையோடுங்கூடிச்சொ ல்லிக்கொண்டிருக்கையில் அதைக்கேட்ட அசோகதத்தன்யோ சித்து இதற்கிணையாகிய சிலம்பைக்கொண்டு வருகிறேனென்று பிரயாணப்பட்டுத் தாங்கள் முன்பு தங்களது சுதேசத்தைவிட் டுப்பிரயாணமாகி வரும்போது தங்கியகோயிலைச்சார்ந்த மயான த்திற்கு நடுஜாமராத்திரியிற் போய்ச்சேர்ந்து தனக்குத்தெரிந்த மந்திரங்களைப்பிரயோகஞ்செய்து டாகினி முதலாகியபூதவேதா ளங்களையும் பேய் பசாசங்களையும் வரவழைக்க அதனோடும்கழு மரத்தடியிலிருந்து, இராட்சத வுருவத்தோடும் ஓடிப்போன அரக்கியும் வந்துநிற்க, அவளைக்கண்ட அசோக தத்தன் மந்திர பீஜங்களா லவளைக்கட்டிக்கொண்டு, வாரும் பெண்ணே நீ முன் என்னை விட்டுப்போகின்ற போது தவறிப் போட்டு விட்டுப்போன வுனது சிம்பில் ஒரு சிலம்பு என்னிடத் திலிருப்பதால் மற்றொரு சிலம்பையுங் கொடுப்பாயென்றுகேட்க

அதுகேட்ட அரக்கியுஞ் சந்தோஷித்து, அவனுடைய சவுரியப ராக்ரமங்களைக்கண்டு அதிசயித்து, தன்னிடமிருந்த பொற்சிலம் பைக்கொடுத்ததோடும் அவனது பராக்ரமத்துக்கு மெச்சிப் பொ ற்றாமரை மலரொன்றையும், தன்னுடைய குமாரத்தியாகிய வித் துத்துப் பிரபையையுங்கொடுத்துப் போய்வாருமென்றுசொல்ல அப்படியே அசோகத்தன் மகாசந்தோஷத்தோடுஞ்சிலம்பையெ டுத்துக்கொண்டு வித்துத்துப் பிரபையென்னும் பெண்ணுடனே காசிப்பட்டணம்வந்துசேர்ந்து, அரசனைக்கண்டுதான்போய்வந்த சங்கதிகளை யாதியோடந்தமாகச் சொல்லிச் சிலம்பையு மரச னிடங்கொடுத்துச் செலவுபெற்றுக் கொண்டு வித்துத்துப் பிர பை யென்பவளைத் தனது பத்தினியாகிய மதனலேகை யுடனே சேர்த்துச்சுகமாய் வாழ்ந்து வருநாளில், ஒருநாள் வித்துத்துப் பிரபை யென்பவளும் அசோகத்தனும் அம்ஸதூளிகா சயனத் துக்கொண்டிருக்கும்போது, அவள் குழலிலே தரித்திருந்தபொ ற்றாமரை மலரைக்கண்டு ஆச்சரியங்கொண்டு அடிபெண்ணே, இந்தப்பொற்றாமரைமல ருனக்கேதென்றுகேட்க, அதற்கு வித் துத்துப் பிரபையானவள் நாயகா, இம்மலர் இப்பட்டணத்துக் கருகிலுள்ள வணத்திற கபாலபோடனென்னும்வேதாளத்தினது பூந்தோட்டத்தில் பொய்கையிலே யுண்டாயிருக்கிறதென்றும், யாரோகொண்டுவந்து உன்மாமனாராகிய வேந்தனுக்குக்கொடுத் ததாய் எங்களுக்குக் கொடுத்தனுப்பினா ரென்றுசொல்ல, அது கேட்ட அசோகதத்தன் வேதாளமாவது பூந்தோட்டமாவதுபா ர்ப்போம் வருவாயென்று கூட்டிக்கொண்டு, அந்தப்பட்டணங் கடந்து, வனத்திற் பிரவேசித்து, வேதாளம் வாழ்ந்துவரும் வன த்திலே பூங்காவைக்கண்டு அக்காவிலிருக்குந் தடாகக்கரையின் மீது வந்துநின்றார்கள். அதுகண்ட அப்பூங்காவின் காவலாளிக ளாகிய பூதப்பிரேதகணங்கள்கோபங்கொண்டு, கொல்லுவதற்கு நெருங்கி யட்டகாசஞ் செய்வதைக்கண்ட அசோகதத்தன் சிங் கம்போற்பாய்ந்து தன்னிடத்திலிருக்குஞ் சந்திராயுதத்தினால் அவைகளைச் சின்னபின்னங்களாய்வெட்டிச் சிதைத்துத் தலைவி ரி கோலமாய் நான்கு திக்கினுமோடும்படி செய்ய அப்போது அ வைகள் மிகவு மச்சங்கொண்டோடித் தமது இறைவனாகிய கபா லபோடனிடத்தில் முறையிட அம்முறைப் பாட்டைக்கேட்ட வேதாளமுங் கோபாவேசங்கொண்டு கர்ச்சித் தாரவாரத்தோ டும் அசோகதத்தனை யெடுத்து விழுங்குவதற்கு நெருங்கின அ

ப்போது அசோகதத்தன் மந்திரவாளை யுருவிக்கொண்டு வேதாளத்தைச் சின்னபின்னமாகும்படி வீசி, மயங்கச்செய்து கொல்ல வேண்டுமென்று வாளையுருவி யோங்குகையில், அப்போது ககனமார்க்கத்திற் செல்லும் விக்கின கவுத்திகனென்னும் விஞ்சையராசன் கண்டு அடா அசோகதத்தா வேதாளத்தை வெட்டிக் கொல்லாதே யென்றான். அதுகேட்ட வுடனே ஆகாயத்தை நோக்குகையில் விஞ்சையராசனான விக்கினகவுத்திகனைக் கண்ணினாற் கண்டான். அவ்வாறு கண்டவுடனே யிவன் சாபநீங்கித் தன் நினைவுண்டாகிப் பழைய சொரூபமுடையனாய்ச் சுகன்ன னென்னப்பட்டவனாய் விளங்கினான் அப்போது இந்தச் சுகன்னனைப் பார்த்து வாரும் பிள்ளாய் சுகன்னனே! இந்த வேதாள சொரூபம் பெற்றுள்ளவன் உனது தமயனாகிய சுதரிசனனாதலால், உங்களுக்குக் காளவமகாரிஷியினுடைய சாபத்தால் இப்படி நேரிட்டிருந்தது அதில் உனக்கு என்னைக் கண்டவுடனே சாபவிமோசனமாயிற்று உனது தமயன் சாபந்தீரவேண்டியிருப்பதால், ஆதியிற் பிரமதேவன் சனகாதியர்களுக்குச் சொல்லியிருந்ததை உனக்கு நான் சொல்லுகிறேன் கேட்பாயாக யாதெனில், ஸ்ரீராமசந்திரமூர்த்தியினாற் கட்டப்பட்டு விளங்குஞ் சேதுவிற் சக்கரதீர்த்தத்திற்குத் தென்பாகத்திலே ஒரு புண்ணிய தீர்த்தமுளது, அப்புண்ணிய தீர்த்தத்திலே இவ்வேதாளத்தைக் கூட்டிக்கொண்டுபோய் தீர்த்தமாடும்படி செய்து வைத்தால் இதனுடைய சாபவிமோசனமா மென்று சொல்ல, அதுகேட்ட சுகன்னனும் மந்திரசக்தியினால் வேதாளத்தை யழைத்துக்கொண்டு தென்றிசையை நோக்கிச் செல்லும்போது, விக்கினகவுத்திகனும் ஆகாயவீதியில் விமானத்தைவிடுத்துக்கொண்டு தனதுலகம் போய்ச் சேர்ந்தான். அக்காலையிற் சுகன்னனானவன், சக்கரதீர்த்தத்திற்குத் தென்பாலுங் கந்தமாதனத்திற்கு வடபாலு மிருக்கும் புண்யதீர்த்தக்கரை வந்து சேர்ந்தார்கள்.

அச்சமயத்தில், காற்றினால் அலைகள் அதிவேகமாயெழுந்து, அவற்றினின்றுந் திவலைகள் வேதாளத்தின்மீது தெரிக்கவுடனே சாபநிவர்த்தியாய் வேதாளரூபமாறிப் பழைபசொரூபத்தோடுஞ் சுதரிசனன் தம்பியாகிய சுகன்னனைக் கட்டிக்கொண்டான். இப்படி யிருவரு மொருவரையொருவர் கட்டித்தழுவியானந்தங்கொண்டு அப்புண்ணிய தீர்த்தத்திலே சங்கற்பவிதிப்படி நீராடித்திவ்ய சொரூபத்தை பெற்றுகொண்டவர்களாய் அத்தீர்த்தத்திற்கு

வேதாளவரத தீர்த்தமென்று விளங்கக்கடவதென்றுபெயர்கொடுத்துப் பின் இருவரும் விமானத்தேறி, தேவர்கள் மலர்மாரிதூவத்தேவ துந்துபிமுழங்க அப்ஸரஸ்த்ரீகள் நடிக்ககாந்தர்வலோகம்போய்ச் சேர்ந்தார்கள். அன்றுமுதல் அத்தீர்த்தத்திற்குவேதாள வரததீர்த்தமென்றுபெயர் விளங்கிக்கொண்டிருப்பதன்றியும், அதில் மூழ்கினவர்களுக்கு, பூதப்பிரேத பசாசகணங்களின் உபத்திரவங்களிருந்தபோதிலும் விலகுவதோடு மவர்கள்செய்த பாபங்களும் நிவர்த்தியாகும் அதின்மகிமையளவிட்டுச் சொல்லலாகாதென்று, சூதமகாமுநிவர்சொல்ல, அதைகேட்ட நைமிசாரண்யமுநிவர்கள் சந்தோஷமடைந்து, அம்முநிவரை நோக்கி, சுவாமி, இன்னம் அச்சேதுவின் மகிமைகளைச்சொல்ல வேண்டுமென்று பணிந்து வினவ, முநிவரவரும் சொல்லத்தொடங்கினர்.

வேதாளவரததீர்ததம்

முற்றிற்று

---

கூ-வது,

## பாவநாசதீர்த்தம்.



கேளுங்கள் முநிவர்களே, இப்போது யாம் சொல்லிவந்த புண்ணிய தீர்த்தங்களன்றியும் இன்னந்தீர்த்தங்களு மனேகமகிமைகளுங் கந்தமாதன பருவதத்திலேவிளங்கிக்கொண்டிருக்கும் அக்கந்தமாதனபருவதம் நாமிப்போது சொல்லிவந்த வேதாளவரதீர்த்தத்திற்கு தட்சிணபாகமாகியுங் கைலாசபதியாகியசாம்பமூர்த்திக்கு இருப்பிடமாகியும் விசுவகர்மாவால் நிருமிக்கப்பட்ட வேதாரண்யமுதலிய சிவஸ்தலங்களிலும் விஸ்ணுஸ்தலங்களிலும் சிரேஷ்டமாய்த் தென்கடல் சூழ்ந்ததாய் சகலதேவர்களும் நவகோடி சித்தர்களும் சித்துபுருஷர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் கின்னர கிம்புருட கருட காந்தருவ சித்தவித்யாதரர்களும் அஷ்டவசுக்களும் ஒன்பது கோட்களும் வாசஞ்செய்து கொண்டிருக்கப்பட்டதாய் அநேக வளம்பொருந்தியிருக்கும் கந்தமாதன பருவதத்திலே, சந்திரஜடாதர மூர்த்தியா

கிய பரமேசுவரன் பார்வதிசமேதராய் மகாவிஷ்ணு முதலியவர் களுடனே விளங்கிக்கொண்டிருப்பார். அக்கந்தமாதன பருவதத்தைக் கண்ணுற்கண்ட புண்ணியர்களுக்கு நித்தியானந்தமோட்ச சாம்பிராச்சியங் கிடைப்பதன்றியும் பரஸ்திரீ கமனத்தால் வந்த பாதகங்களும் சிசுஹத்தி பிரமகத்திகள்செய்த பாதகங்களும் மாதாபிதா குருமுதலாகிய பெரியோர்களை நிந்தனைசெய்த பாதகங்களும் பரப்பிரம்ம சொரூபமாய் விளங்கப்பட்ட கந்தமாதன பருவதத்தை தெரிசித்தாலும் அவ்வெல்லையை மிதித்தாலும் அதிலுண்டாகிய காற்றினது பரிசம் பட்டாலும் மகாபுண்யசாலிகளாய் திவ்யசொரூபங்களைப்பெற்று புண்யலோகங்களை அடைவார்கள். அக்கந்தமாதனத்திலே குடிகொண்டிருந்துவாழப்பட்ட நரஜென்மங்களும் மிருகஜாதிகளும் பட்சிசாதிகளுமாகிய யாவும் தேவதா சொரூபங்களைப்போலும், விருட்சங்களெல்லாங் கற்பகவிருட்சங்களைப்போலும், தீர்த்தங்களெல்லாம்புண்யதீர்த்தங்களாகவும், அப்பருவதத்திலுள்ள மணல்களெல்லாஞ் சிவலிங்க சொரூபங்களாகவும் விளங்கிக்கொண்டிருக்கும், அக்கந்தமான பருவதத்திலே வசிக்குந் தேவர்களைத் தெரிசித்தவர்கள் சக்கரதீர்த்தத்திலும் வேதாளவரத தீர்த்தத்திலும் விதிப்படி மூழ்கிபின்னர் அப்பருவதத்தின் எல்லையைக்கண்டவுடனே வணங்கிப்பூசித்து அடியேங்கள் கடைத்தேறும்பொருட்டு யாத்திரைசெய்து வருகிறவரையில் எங்களுடைய கால்கள் உன்மீதிற்படுகிற குற்றத்தைப் பொருத்து ரட்சிக்கவேண்டு மெனத்துதித்து பின்பு தங்களுடைய கால்களிற்பாதுகையில்லாமல் கீழ்முகமாய்த் திரும்பிமெல்ல நடந்து அக்கந்தமாதனத்திலே விளங்குகின்ற புண்ணிய தீர்த்தங்களிலாடி இராமலிங்கத்தைத் தெரிசித்து வருபவர்கள் ஒருகடு களவு பிண்டமாகிலும் அக்கந்தமாதனபருவதத்தில் தங்களுடைய பிதிர்களை நினைத்துத் தர்ப்பணஞ் செய்து தத்தம்பண்ணினால் அவர்கள் கற்பகோடி காலம்வரையிலும் புண்ணியலோகத்திலே சுதானந்தத்தை யடைவார்கள். அவ்வாறு செய்பவர்களுக்கு அதுமுதல் பிதுர்களில்லாதிருப்பதோடும் அவர்கள் வமிசத்தில் கோடி தலைமுறைவரையிற் சேர்ந்தபேர்களென்ன சென்மமெடுத்து மென்னபாபங்கள் செய்திருந்தபோதிலும் அவர்களுக்கு இயமதரிசனமுந் தண்டனையும் கிட்

டாமல் விலகிப்போம். இவ்வித மகிமைவாய்ந்த கந்தமாதன பருவதமானது ஸ்ரீராமமூர்த்தியின் வாக்கியப்படியே தெய்வத்தச்சனானவன் அநுமார் முதலிய வானரவீரர்களைக்கொண்டு சேதுபந்தனஞ் செய்கிறபோது தென்சமுத்திரக் கரையோரமாய்ச்சமுத்திரத்திலிருந்ததை ஸ்ரீராமமூர்த்திக்குத் தெரியப்படுத்தி அவருடைய ஆஞ்ஞையின்படி யதனைச்சேதுவின் மத்தியிலேவைத்து அணைகட்டினார்களாதலால், அச்சேதுவின் மத்தியில்விளங்குகிறகந்தமாதனமலையிலே அனேகங்கோடி தீர்த்தங்கள் விளங்குவதில் பாவநாசமென்றொரு தீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்தில் முன்னொருகாலையில் இமயமலைச்சாரலில் பிர்மவாசிரமமென்னும் வனத்தில் கற்பகம் சண்பகமுதலிய விருட்சங்களும் பருவதங்களும் நெருங்கிச்சோலைகளாகாயத்தை யளாவவும், வண்டுகள் கீதம்பாடவுஞ்சிங்காரத்தோடுங் கூடியிருக்கு மவ்வனத்தில்ருஷீசுவரர்கள் தபோதனர்கள் பிரமசாரிகள், வானப்ரஸ்தர், சந்யாசிகள் முதலியோர் அடர்ந்து கூடியிருப்பவர்களிடத்தில் திடமதியென்னும் பெயரையுடைய ஒரு சூத்திரன்சேர்ந்து அவர்களாலோதப்பட்ட வேதசாஸ்திரங்களைக் கேட்டு அன்னவர்களைப்பணிந்து நமஸ்கரித்து ஏபெரியோர்களே நீங்கள்செய்கிற கிரியைகள் யாவுந் யான்செய்யவேண்டுமென்றுமிகவுமாவலாயிருப்பதால்என்னை உமது தொண்டனாகவடிமைப்படுத்தி எனக்குவேதங்களைபோதுவித்து நீங்கள் நடாத்திவரும் யாகாதி கிர்த்தியங்களைப்போல் யானுமநுட்டிக்கக் கருணைசெய்யவேண்டுமென்று அவகளை வேண்டுதல் செய்தான்.

அதற்கவர்கள் அச்சூத்திரனைநோக்கி வாராய் திடமதியே, நீசூத்திரனாகப்பிறந்து புலால்புசித்து அநேகபாவங்களைச்செய்திருப்பதால் உனக்கு யாகாதிகிர்த்தியங்கள்செய்கின்ற வேதமந்திரங்களை யுபதேசஞ்செய்யப்படாதாதலால் நீ மநுசாஸ்திரவிதியின்படி நடக்கவேண்டிய சரிதையை யநுட்டியாமல்வேதயுக்தமானகாரியங்களைகேட்கிறது சரியன்று மேலும் நன்மார்க்கத்திலே நடந்துமேலான ஜென்மமெடுத்தால் இக்காரியங்கள் கைகூடுமென்று யப்பெரியோர்கள் சொல்லினார்கள் அவ்வாய்மையைக்கேட்டதிடமதியானவன் விசாரமடைந்து நாம் ஆவலுடன் கேட்டகா

ரியம் கைகூடாமற் போய் விட்டதேயென்று நாணமுற்றுத் தலை குனிந்து தனது கிருகத்திற்போய்ச்சேர்ந்து யோசனைசெய்துமே லோரார்சொல்லிய சரிதைமார்க்கங்களில் நடக்கவேண்டுமென்று மனத்தை திடஞ்செய்துகொண்டு அதுமுதல் நந்தவனங்களை வைத்தும் தடாகங்கள் வெட்டியும் விரதங்களையநுட்டித்தும் தலங்களைத்தெரிசித்தும் தீர்த்தயாத்திரைகள்செய்தும் பெரியோர்களை யுபசரித்தும் புண்ணிய காரியங்களுக்குவேண்டிய திரவியங்களைக்கொடுத்தும் சித்து புருஷர்களுக்குக் கந்தமூலாதிகளை யுதவியும்,மார்க்கங்களில் சத்திரங்கள்,சாவடிகள்,மடங்கள், புதுக்கியும்,தண்ணீர்ப்பந்தர்களமைத்தும்,வேதவிதியிற்கூறிய முப்பத்திரண்டறங்களையும் வழுவின்றி நடத்திவருவானாயினன், அக்காலத்தில் அம்மார்க்கத்தில் சதாகாலமும் வரத்துப்போக்காயுள்ள சுமதியென்னும் பிரமசாரிக்கு வேண்டிய வுபசாரணைகள் யாதுங் குறைவின்றி விசுவாசத்துடனே நடத்திவருகையில் யவருக்கிவன்மீது பிரியமுண்டாகி நேசித்து வருகையில் ஒருநாள் திடமதியென்பவன், சுமதியென்பவரெழுந்தருளியிருக்கு மாசிரமத்துக்குப்போய் அவரைக்கண்டுபணிந்து சுவாமி யடியேனுக்கு நெடுநாளாய் ஓர் கருத்துண்டாயிருக்கின்றது.

அதுயாதெனில் வேதவிதிப்படி ஆசாதிகிர்த்தியங்கள் ஜெபதபஹோமங்கள் முதலியயாவு மடிமையே செய்யும்படி யெண்ணமிருப்பதால் யதற்குரிய வேதயந்திரமூலங்களைத் தமியேனுக்குக் கடாக்ஷிக்க வேண்டுமெனக்கேட்க அப்போது சுமதியென்பவர் யவன்மீது வைத்திருக்கும் பிரியத்தினாலே பிரம்மகுலத்திற்குரிய மந்திரதந்திரயோகங்களையெல்லாந்திடமாயவனுக்குப்போதிக்க அவனுமுணர்ந்திருக்கையில் இச்செய்தியை இமயமலைசாரலிலெழுந்தருளியிருக்கும் பெரியோர்கள் கேட்டறிந்து யச்சுமதியை யாவருந்தூஷிக்கத் தலைப்பட்டார்கள் அதுமுதல் யவருக்குநாளுக்குநாள் தேஜசுகுறைந்து வியாகுலத்தோடும் மரணமடைந்தார், அவ்வாறு மரணமடைந்தவர் யமங்கிலியர்களாது தண்டனைக்குட்பட்டு இரவுரவாதி நரகங்களின்மேல கற்பகோடிகாலம்வரையிலுழலுவானாயினன். ஆ கொடியபாவம் பின்புதாவரங்களிற் சம்பந்தித்த புல் பூடுமுதலிய பளபிறவிகளெடுத்து அதனினின்றும் நீங்கிமிருகசாதியிற் கழுதையாகவும் பன்றியாகவும் நாயாகவும்பிறந்து யதனினின்றும் நீங்கிமானிட சாதியில் நீசனாகவுஞ்

சூத்திரனுகவும் வைசியனுகவும் க்ஷத்திரியனுகவும் பிறந்து அநேக துன்பங்களையெல்லா மநுபவித்து தனது கன்மங்களைப்போக்கிப்பழையபடியே பிரமகுலத்திற் பிறப்பானுயினன், அப்போது தனக்கு ஐந்துவயதிற் சவுளவுபநயனங்கள் வித்யாப்யாசங்கள் பண்ணிக்கொண்டு, யாவுமுணர்ந்தவனுகவிருக்கின்ற நாளிலொரு நாள் தர்ப்பைசமித்து வேண்டியிருந்து வனத்திற்குப்போய்சேகரஞ் செய்துகொண்டு வருகிறபோது, அவனையோர் பிராமணப் பேய்பிடிக்க, அதனுலியாதுந்தோன்றுமல் பிரமைகொண்டு கண்கள்சுழலமிட்டு, நாத்தடுமாறிப் பிதற்றலுண்டாய் நானுவிதசேட்டைகளுண்டாகியழுது கூக்குரலிட்டுத்தாவிக்குதித்து நாளுக்கு நாளதிகரித்து சிறுநீர் குடிக்கும் பெரும் பயித்தியங்கொண்டவனுய் அதிகதுன்பங்களை யநுபவித்துக்கொண்டு வருகையில் அவனைப்பயந்த தந்தையானவன் கண்டு விசனமடைந்து துக்கசாகரத்தில் மூழ்கி இந்தவினையை யெவ்விதமாய்த் தீர்ப்போமெனக்கருதி அவனைக்கூட்டிக்கொண்டு யாத்திரைவாசியாய் சிவஸ்தலங்களையும் விஷ்ணுத்தலங்களையுந் தரிசித்துந்தீராததாய் தென்றிசையிலே யோங்கும் பொதிகைமலச்சார்பாய் வாராநின்றுன் அங்ஙனம் வருகிறபோது முன்னொருகால் சமுத்திரத்தை உள்ளங்கையிலேந்திக்குடித்த யகத்தியமகாமுநிவர் யவ்வனத்தில் வரக்கண்டு இவ்விருவரும் அவரது பாதாரவிந்தங்களிலேவீழ்ந்து நமஸ்கரித்து சுவாமி யடியேனுக்கு நெடுநாளாய்ச்சந்ததியின்றி அநேக விரதங்களையநுட்டித்துப்பிறந்த இப்பிள்ளைக்கு எட்டுவயதுமுதல் பயித்தியங்கொண்டு தீராமற்றுன்பத்தை யனுபவித்துக்கொண்டு வருகின்றுன்.

தேவரீர் க்ருபைசெய்து இது தீரும்படி கடாக்ஷிக்கவேண்டுமென்று துதித்துநிற்க யப்போது யகத்தியமுநிவர்கருணைகலந்தஞானதிருஷ்டியாற் பார்த்து வரும் பிராமணு இவனுடைய சரித்திரங்களைப்பேசினுலும் மகா பாபம் வருமாதலாலும் இவனெடுத்த ஜென்மங்களுங்கணக்கு வழக்கில்லை யாதலாலும் இவன் பாபங்கள் நாசமாகவேண்டுமாதலாலும் யதற்கொருவகைசொல்லுகிறோம் யதாவது சேதுவிலோங்குங் கந்தமானபருவதத் தருகில் வேதாளவரத தீர்த்தத்திற்கு ஈசான்யதிசையில் புண்ணியதீர்த்தமொன்றுண்டு அப்புண்ணியதீர்த்தத்தில் இவனைக்கொண்டுபோய் ஸ்நாநம் பண்ணுவித்தால் உடனே இவனுடைய பாபங்

கள் விமோசனமாவதுடன் இப்பயித்தியமும் நீங்குமென்றுசொ ல்லினார். யதுகேட்ட பிராமணன் சந்தோஷமுற்று முனிவரைப் பணிந்து விடைபெற்றுக்கொண்டவனாய்ப் பிள்ளையைக் கூட்டிக் கொண்டு சேதுவைச்சேர்ந்து அவ்விடத்திலுள்ள கந்தமாதன பருவ தச்சாரலிலுள்ள புண்ணியதீர்த்தங்களைக்கண்டு வியப்புற்று, சங் கற்பவிதியின்படி புத்திரனைமூழ்குவித்து, தானும் நீராடினான். உடனே பானுவைக்கண்ட பனிபோலும் யனலைக்கண்ட குளிர் போலும் யப்பிள்ளையினது பாபங்களெல்லாம் நீங்கிக்கிருதார்த் தனாய் சரியான மனத்தோடு தகப்பனைப்பார்த்துப் பணிந்து ஓபி தாவேநாம் இங்குவந்ததற்குக் காரணமியாதென்று கேட்டான். யதற்குத் தந்தையானவன் மகாசந்தோஷத்தை யடைந்து, நடந் தசவிஸ்தாரங்களை யெல்லா மவனுக்குரைத்து, மூன்றுநாள்வரை யில் யங்கிருந்து தீர்த்தமாடி நான்காநாட் பிரயாணப் பட்டுத்த னதிருப்பிடம் வந்துசேர்ந்து யளவிறந்த செல்வத்தோடும் வாழ் ந்து பின்னர்ஞானசொரூபத்தையடைந்து மோட்சத்தை யடை ந்தான்.

இது இங்ஙனமிருக்க இவனிடத்தில் வேதமந்திரங்களைக் கேட்டுணர்ந்த திடமதியென்னுஞ்சூத்திரன் அதுமுதல் வறுமை நீதசையையடைந்து உயிர் விட்டவனாய் அநேக கற்பகோடிகால மளவும் இரவுரவாதிநரகவேதனைக்குள்ளாகி யநேககோடிஜென் மங்களிற்பிறந்து அப்பால் கழுகுருவமாய்ப்பிறந்து பிணமுதலிய மாம்சாதிகளைப் புசித்துக்கொண்டுதிரிகிறபோது ஒருநாள்தானே சுயமாய்க கந்தமாதனச்சாரிலே விளங்குகின்ற புண்ணியதீர்த் தத்தில்வந்து தாகத்தினால் தண்ணீரருந்தி வெய்யிலின் தீட்சண் யத்தால் அப்புண்ணியதீர்த்தத்திலே சிறகைவிரித்து ஜலத்தை மேலெல்லா மிறைத்துக்கொண்டு அச்சலத்திற்றலையைத் தோய் த்து மூக்கினாலே தண்ணீரைக்கோதி விளையாடுகிறபோது அதி னுடையபாபங்களெல்லாம் நாசமாய்முன்செய்திருந்த புண்ணிய விசேடத்தினால் தேவசொரூபம்பெற்று ஆடையாபரணாதிகளுட ன் விளங்கினவனாய் தெய்வவிமானத்திலேறி தேவர்கள், மலர்மா ரிசிந்தி தேவதுந்துபி முழக்கவும் தேவர்கள் ஆலவட்டம் பீலி க்குடை பிடித்துச் சாமரம் வீசி வரவும் அரம்பை யூர்வசிதிலோ த்தமை மேநகை முதலிய அப்ஸரஸ்த்ரீகள் நடனஞ் செய்து

வரும்படியாயும் தெய்வலோகம்போய்ச் சேர்ந்து தேவபோகங் களை யனுபவித்துக்கொண்டிருந்தான். இவ்வாறு திடமதி சுமதி யென்னு மிருவர்களினுடைய அளவிறந்த ஜென்மங்களிலுஞ் செய்த பாவங்களையெல்லாம் நாசப்படுத்திய புண்ணியதீர்த்தத் திறகுப் பாவநாசமென்று அதுமுதற் பெயர் விளங்கிக் கொண் டிருக்கிறபடியால் அப்படிப்பட்ட புண்ணியதீர்த்தத்திலே தகாத காரியங்கள்செய்து அதனல் பாபிகளானபேர்களும் மூழ்கினல் உடனே யவர்கள்செய்த பாவங்கள்நாசமாய்ப் புண்ணியர்களாகி திவ்யசொரூபத்தைப் பெறுவார்கள். அத்தீர்த்தத்திற்குக் கீழ்ப் பாரிசத்திில் சீதாதீர்த்தமென்று ஒரு தடாகமிருக்கின்றது அத் தடாகத்தில் அமராவதிபட்டணத்துக் கிறைவனுகிய தேவேந்தி ரனது பிரமஹத்தி விமோசனமா யிருக்கிறதென்று சூதமுனிவர் சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்கள் சந்தோஷமடைந்து சுவாமீ! தேவேந்திரனுக்குப் பிரமஹத்திசம் பவித்தவிதமும், சீதாதீர்த்தத்தினல் அவை விலகியபெருமையுந் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்கச் சூதமுனி வர் கருணைசுரந்து அவர்களுக்குச் சொல்லத்தொடங்கினர்.

பாவநாசதீர்த்தம்

முற்றிற்று

---

௩௰வது

# சீதாகுண்டதீர்த்தம்.



நைமிசாரண்ய முனிவர்களே கேளுங்கள், முன்னொருகால த்திலே வைஜயந்தமென்னும் பட்டணத்திலே கபாலபரணனென் னும் ஓர்ராக்ஷதன் பிரமதேவனைநோக்கித் தவஞ்செய்து அநேக வரங்களைப் பெற்றுக்கொண்டவனய் குணபலூணனென்னு மந்தி ரியுடனுமநேக ராக்ஷதப்படைகளுடனே வாசாண்டுவருகையில்,

திக்குவிஜயஞ்செய்யவேண்டுமெனக்கருதி மனவலிகொண்டு, ரத கஜதுரகபதாதிகளுடனே யுத்தசந்நத்தனாய்ப் பிரயாணப்பட்டுப் போய் அமராவதிபட்டணத்தை முற்றுகையிட்டான்.

அதுகண்டதேவராஜனும் யுத்தகோலங்கொண்டு, அனேக சேனைகளுடனே வந்து எதிர்த்து, இருதிறப்படைகளுங் கலந்து யுத்தஞ் செய்கிறபோது, கபாலபரணனுடைய மந்திரியாகிய குணபலூணனென்னும் பிராக்கதன் ஓர் தண்டத்தைக் கையிலேந்தி இந்திரன்படையிற் சண்டமாருதம்போற்பாய்ந்து கொக்கரித்துக் கதையைக் கரகரவெனச்சுழற்றி இரதங்களையும்யானை குதிரை சேனைகளையுஞ் சின்னாபின்னமாய்ச் சிதைத்துமோர்கணப்போதில் முப்பது அக்குரோணி சேனைகளையும் பெருங்காற்றிலகப்பட்ட பஞ்சுபோற் பறக்கவிடுத்துக் கியாவென்று சிங்கநாதஞ் செய்கையில் அப்படை வீரனாகிய வருணன்கண்டு மனம் வெதும்பி, ரவுத்ராகாரனாய்த் தனது தேரைக் குணபலூணன் மீதுசெலுத்தி வளைத்துக்கொண்டுதனதுவில்லினிடமாக அநேகமாயிரம் எரிமுகக்கணைகளைச் சந்தித்துப்பிரயோகஞ்செய்து அவன் கையிலிருந்ததண்டத்தைப் பொடிப்பொடியாய்ச்செய்து ஓர் அர்த்தசந்திரபாணத்தா லவன்சிரத்தை வெட்டித்தள்ளிஅட்டகாசஞ்செய்து குலாலனது திகிரியைப்போலக் கரகரவென்று இராக்ஷதசேனைக் கடலுட்புகுந்து திரிந்து நாசப்படுத்தும் போது அவன் தம்பியாகிய கோரதீவத்தியென்பவன் கண்டு ஆலகாலம்போற் சீறியெழுந்து வருணனையெதிர்த்து வில்லைவளைத்து குணத்தொனிசெய்து சோனைமாரிபோல் அம்புகளைக் கணக்கில்லாமற் பிரயோகஞ்செய்து, வருணன் கைவில்லைக்கண்டித்துகண்ணைவிழித்துப் பார்க்கவொட்டாமற் சங்கஞ் சங்கமா யம்புகளை வாரியிறைக்கையில் அதுகண்டவருணன் கோபதீப்தனாயெரிந்துவிழுந்து ஓர் வாளாயுதத்தைக் கையிலேந்தித் தேரைவிட்டு பூமியிற்குதித்துக் கோரதீவத்தியின்பேரிற் சிங்கம்போற்பாய்ந்து, அவன் கரத்திலிருந்த வில்லைத் துணித்து அவன் றலையையும் வெட்டி, அவனை யமபுரத்துக்கனுப்பி கொக்குத்திரளில் இராஜாளி புகுந்ததுபோல் அரக்கர் சேனையிற்பாய்ந்து நான்கு திக்கினுஞ்சுழன்று இராக்ஷதகர்களைக் கால்வேறு தலைவேறு வுடல்வேறாகக் கண்டித்து எங்கும் பிணக்காடாகிச் சிங்காதஞ் செய்கையில் அதுகண்ட அவன் தம்பிமார்களாகிய எரியூணனும் கவுணனும் வந்தெதிர்த்து யுத்தஞ்செய்ய அவர்களிருவரையும் வரு

ணன் வாளுக்கிரையாக்கி ருத்திரமூர்த்தியைப்போற் கோபாவேகப்துடன் இராக்கதர்களை நாசப்படுத்தும்போது அதைக்கண்சடபாலபரணன் சகிக்கமாட்டாதவனாய் வடவாமுகாக்கினியைத்போலெழுந்து மேருவுக்குச் சமமாகிய தனது இரதத்தை இந்திரன் சேனைகளின்மீது செலுத்திக்கோடை காலத்திடிபோல் கர்சித்து, வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்து அவ்வில்லினிடமாகக் கணக்குமிதமில்லாமல் காளமுகியென்று மேகமானதெழுந்து வருஷிப்பதுபோல எங்கும் பாணமயமாகச்செய்து தேவசேனைகளைச்சின்ன பின்னப்படுத்தி மலைமலையாய்க்குவித்துநூறு அக்குரோணிசேனைகளையும் பாழ்பட தூறிப்பாற்கடலைக்கடைந்தமந்தரமலைபோற் பண்ணவர்கள் சேனையாகிய கடலைப்பங்கப்படச் சிதைத்துத் தனது வெற்றிச்சங்கத்தை வாயினிடமாகவைத்து அண்டகடாகங்களு மதிரும்படியாய்ப் பம்பம்மென்று பூரித்தான்.

அப்போது அயிராணி கேள்வனாகிய இந்திரன்கண்டு அடங்காக்கோபங்கொண்டு அரக்கன்மேல் வெகுண்டு பளாபளாவென்றுகூறி ஆலகாலம்போற் சீறித் தனது தேரைக்கபாலபரணன்மேற்றாண்டி வில்லைவளைத்து அவ்வில்லினிடமாக வச்சிராயுதத்துக்குச் சமமாகிய சிலீமுகக்கணைகளைக் கணக்குமித மில்லாமற்றொடுத்து கர்ணபரியந்த மிழுத்துப் பிரயோகித்துக் கபாலபரணனுடைய தேரைத் தூளாய்க்காற்றிற் பறக்கவித்து கவசத்தைக்கிழித்துகைவில்லையுமொடித்துச் சாரதித்தலையைவெட்டிச்சண்டனென்னு மியமனுக்குக் காணிக்கையாகவனுப்பி கியாவென்று சிங்கநாதஞ்செய்யும்போது கபாலபரணன் கண்களினின்றும்நெருப்புப்பொறிகள் குபீல்குபீலென்று சிந்தும்படியாயுருட்டிவிழித்து, யுகாந்தகாலப் பேரொலிபோற் கர்ஜ்ஜித்து ஓர்சூலாயுதத்தையெடுத்துத் தேவேந்திரன் மார்பிற்பொருந்தும்படியாய் விட்டெறிந்தான் அதுகண்ட தேவராஜன் தனதுவில்லினிடமாகவொருபிறைமுகக்கணையைச் சந்தித்து அரக்கனெறிந்த சூலத்தைவெட்டித் தள்ளுகையில் உடனே யவன் வேறொருதேரின்மீதேறித்தேவேந்திரனது சேனையிற்புகுந்து, வில்லினிடமாக யம்புக்கூட்டங்களைக் கும்பல் கும்பலாகச்சொரிந்து, தேர் கரிபரிகாலாள்களைத் தும்புதும்பாய்ப் பறக்கச்செய்ததுமன்றி இந்திரனையுந்தேரோடு வாரிக்கீழேயடித்தான் அப்படி யடித்ததும் அவனுடைய தேர்பரி முதலிய யாவுமொழிந்து மரணமூர்ச்சை யுடைந்திருக்

கையில் அதைக்கண்ட தேவர்கள் உள்ளம் பதைத்து, அருகிற் சென்று வேண்டிச்சயித் யோபசாரங்களாற் றேற்றுகையிலவனு மூர்ச்சை தெளிந்தெழுந்திருந்து, அயிராவதமென்னு மியானையி ன்மீதேறிக் கபாலபரணனை யெதிர்த்து வில்லைவளைத்துக் காள முகியென்னு மேகத்தைப்போற் பாணங்களைச்சங்கோப சங்க மாய்த் தொடுத்துக் கபாலபரணனது கரசரணாதிகளை யசையா மற்செய்து கிரீடத்தையுடைத்து, வில்லையுமுறித்துத் தேரைச்சக்கையாய்ப் பெயர்த்தெறிந்து, நூறுபாணத்தினாலே அவனுடையமார்பைச் சல்லடைக்கண்களாகத் துளைத்துப்பின்பு வச்சிராயுதத்தால் அரக்கனது சிரமற்று விழும்படிசெய்தான் அதனால்தேவேந்திரனைப் பிரமஹத்திதோஷம் பற்றியதென்று சூதமாமுனிவர்சொல்ல, அதைக்கேட்ட முனிவர்கள் ஆச்சர்யமடைந்து சூதனைநோக்கி சுவாமி, இந்தக்கபால பரணனென்கிற அரக்கனைவதஞ்செய்த இந்திரனைப் பிரமஹத்தி பற்றியதென்பது எப்படிஉலகின்கண் பிரம்மகுல சிரேஷ்டர்களை வதைப்பதே தொழிலாகப் பெற்ற இராக்கதனைக் கொன்றவனுக்கு பிரமஹத்தி யெப்படியுண்டாம், மேலும் பசுவைக்கொன்ற புலியைக் கொல்லுபவனுக்குப் பசுவைக்கொன்றதோஷம் சம்பவித்ததென்பதுபோல்தேவரீர் சொல்லுவது எங்களுக்குப் புலப்படவில்லையேயென வினவ, அதற்குச் சூதமாமுனிவர் ஓ முனிவர்காள் இந்த ரகசியம் நாம் சொல்லுகிறோம் கேளுங்கள் யாதெனில் விந்தாரண்யத்திலேதிரிவக்கிரனென்னு மோரிராக்ஷதன் சுசீலையென்னும் பெயர்பெற்று அதிரூபலாவண்யத் தோடுங்கூடிய ஓர் அரக்கியைக் கூடிக்குலாவிச் சுகித்திருக்குங்காலையில் அவ்வரக்கி ஒருநாள் அவ்வாரண்யத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த சுசியென்னு முனிவனது ஆசிரமத்துக்கு வந்தாள். பிரமனுக்குச் சமானமாகிய அந்த முனிவர் அவளைக்கண்டு, மோகங்கொண்டு அடி பெண்ணே, இங்கு நீ தனித்து வந்த காரணமியாதென்றுகேட்க, அதற்கவள் சுவாமி அடியாள் திரிவக்கிரனென்னு மிராக்ஷதனுடையமனைவிஎன்பேர் சுசீலையென்று சொல்லுவார்கள் அடியாளுக்கு நெடுநாளாகப்புத்ரசந்தான மில்லாதது கண்டு எனது மணாளனைக் கேட்கையில் அதற்கு என் மணாளன் ஓ பெண்பாய் இவ்வனத்தில் சுசியென்னும் ஓர் முனிவரிருக்கின்றார், யவரைப்போயடுத்து யவருடைய அருள்பெறுவையாகிலுனக்குப் புத்திரபாக்கியமுண்டாமென்று

சொல்ல, அப்படியே பேதையாகிய நான் தேவரீரைவந்து தெரிசித்தமையால தேவரீர் திருவுளங்கனிந்து, யடியாளைக்கடாக்ஷித்து, புத்திரபாக்யமளிக்க வேண்டுமென்று பணிய, அவ்வுரை கேட்ட முனிவர், சந்தோஷமடைந்து, பக்ஷ்வரக்கியாகிய சுசீலைக்குவேண்டிய வுணவுகளைக்கொடுத் தா தரித்துத் தனது பன்னசாலையில் மூன்றுநாள்வரையி லயளைக்கடாக்ஷித்து யவள் மனம் போலவேண்டிய இன்பங்களைக்கொடுத்து நாலாநா ளவ்வனிதை யைநோக்கி, ஓபெண்பாவாய், உனது மனம்போல், இதுமுதல் உன்வயிற்றில் கருவுண்டாகி மகாபுஜபலபராக்ரமத்தோடுங்கபாலபரணனென்றொரு புத்திரன் பிறப்பான், அவன் பிரமனால்வேண்டியவரங்களைப்பெற்று இராஜரீகஞ்செய்துகொண்டு இந்திரனையன்றி மற்றதேவர்களி யாவர்களாலுஞ் ஜெயிக்கமுடியாதவனாயிருப்பானென்று சொல்லி அவளை விடைதந்தனுப்பிப் பின்பு பிரமகுல சிரேஷ்டராகிய சுசியென்னு மகாமுனிவர் ஸ்ரீகைலாசபதியாகிய உமாமகேசனைத் தரிசிக்கவேண்டி வெள்ளியங்கிரிக்கெழுந்தருளினார்.

பின்பு சுசீலையும் முனிவரருளியவண்ணங் கர்ப்பிணியாய்க் கபாலபரணனென்னும் பெயருடைய பிள்ளையைப்பெற, அவனும்யாதொரு குறைவின்றி வளர்ந்து, பிரமனைநோக்கித்தவஞ்செய்து அப்பிரமனால் வேண்டியவரப்பிரசாதங்களைப்பெற்று இராஜரீகஞ்செய்து கொண்டிருக்கும்போது திக்குவிஜயஞ் செய்யவேண்டிப்புறப்பட்டு தேவேந்திரனையெதிர்த்து சமர்செய்து தேவர்களையெல்லாம் ஹதப்படுத்திப்பின்பு அவ்விந்திரனால் மரணமடைந்தான் இந்த அரக்கவன் பிரமகுலோத்துங்கராகிய சுசியென்னும்மகாரிஷிக் ப் பிறந்தவனாதலால் இந்திரனைப்பிரமஹத்திபிடித்ததென்று சூதமுனிவர்சொல்ல யதைக்கேட்ட நைமிசாரண்யமுனிவர்கள் சந்தேகநிவர்த்தியாய்ச் சந்தோஷமடைந்தார்கள். பின்னும் சூதர் முனிவர்களைநோக்கி அப்பால் கேளுங்கள் நைமிசாரண்யமுனிவர்களே அமராவதிக்கிறைவனாகிய தேவேந்திரன் மிகவுந்துன்பமடைந்து பிரமனிடத்தில் முறையிட யம்முறைகேட்ட பிரமன், வாரும் தேவராஜனே பூலோகத்திலோங்கும் பரதகண்டத்தில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சேதுவிற் கந்தமாதனகிரிச்சார்பில் பாவநாசனத்தீர்த்தத்திற்கு கிழ்ப்பாலாக ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் தேவியாகிய சீதாபிராட்டியாரால் உண்டா

க்கப்பட்ட சீதாகுண்டமென்னும் பெயரையுடைய தீர்த்தத்தி லேபோய்த் தீர்த்தமாடுவையாகில் உன்னைப்பற்றிய பிரமஹத் தி நீங்குமாதலாற் போய்வாவென்றுசொல்ல, அதைக்கேட்டதே வேந்திரன் பூலோகத்திற்குவந்து சேதுவைச்சார்ந்த கந்தமாத னத்தில் வழங்குஞ் சீதாகுண்டத்திற் சங்கற்பவிதியின்படி தீர்த் தமாடி, ஸ்ரீகைலாசபதியாகிய உமாமகேசனைத்தெரிசித்துத்தன் னைப்பற்றிய பிரம்மஹத்தி தோஷத்தை நிவர்த்திசெய்துகொண் டு, தனது லோகம்போய்ச்சேர்ந்து, சுகமாயிருந்தான் அத்தன்மை வாய்ந்த சீதாகுண்டமானது, உண்டாகிய காரணமியாதென்று வினவுவீராகில் முன்னர் சீதாபிராட்டியை இராவணன் கொண் டுபோய் அசோகவனத்தில் வைத்திருந்ததனாலே அத்தேவியின துகற்பை உலகத்திற் பிரசித்தப்படுத்தும்பொருட்டு இராவண னைப்புத்திரமித்ர பவுத்ராதிகளோடும் நாசப்படுத்தித் தேவியை மீட்டுவருகையில் அக்னிகுண்டமேற்படுத்தி அதிற் சீதாதேவி யை முழுகச்செய்து, பின் அதற்குச்சீதாகுண்டமென்று பெயர் கொடுத்திருப்பதால், அதில் மூழ்கினவர்கள் பாதகங்களெல்லாம் விமோசனமாய்ப் புண்ணியசென்மம்பெற்று அஷ்ட ஐசுவரியத் தோடும் விளங்கிக்கொண்டிருப்பார்கள் மேலுமச் சீதாகுண்டத் திற்குச் சமீபமாய் மங்கலதீர்த்தமென்றொருதீர்த்தமிருக்கின்றது அத்தீர்த்தத்தின் பெருமை இன்னதெனச்சொல்லி முடியாதெ ன்று சூதமகாமுனிவர் சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யமு னிவர்கள் வியப்புற்று முநிவரைப்பணிந்து, சுவாமி அடியேங்க ளுக்கு அத்தீர்த்தத்திற்குப் பெயர் வந்தகாரணத்தை யின்னதெ னத்தெரியப்படுத்தவேண்டு மென்று வினவ, சூதமுனிவர் திரு வுளங்கனிந்து சொல்லத்தொடங்குவாராயினர்.

## சீதாகுண்டதீர்த்தம்.

முற்றிற்று.

## ரு-வது,

# மங்கலதீர்த்தம்.



கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே உலகின்கண் ஓங்கும் சோமசூரியாக்கினியென்னு முக்குலத்தரசருள் சந்திரகுலசிகாமணியாகியும் சயிந்தவமென்னும் பட்டணத்துக் கிறைவனுகியும் விளங்குமனோசவனென்னும் சக்ரவர்த்தியானவன் சுமித்திரை யென்னும் தேவியுடன், சந்திரகாந்தனென்னுங் குமாரனுடனும், மந்திரி பிரதானிகள் முதலிய இரதகஜதுரகபதாதிகளோடும், மனுநீதி தவருமற் குடிகளிடத்தில் ஆறிலொருகடமை பெற்றுத் திங்கண் மும்மாரிபெய்துவர, அளவிறந்த கீர்த்தியோடு மிராச்சிய பரிபாலனஞ்செய்துவருவதன்றியும் தன்னுடைய நகரமானது சதாகாலமும் வேதியர்களாலோதப்பட்ட வேதபாராயணவோசையுடன் யாகாதிகிர்த்தியங்கள் நடத்தி, தேவர்களுக்குக் கவிர்ப்பாகங் கொடுக்கையில், அவை பெறும்படியாய் வந்து நிறைந்து வாசஞ்செய்து கொண்டு தங்களுடைய பொன்னுலகவாழ்வை விரும்பாமல் மறந்திருக்குந் தேவர்களினேசையும். ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவன், வைகுண்டவாசியாகிய மகாவிஷ்ணு சிருட்டிகர்த்தாவாகிய பிரமதேவன் இம்மூவரும் தத்தம் பத்தினிகளோடும, அவ்வவர்களது தொழிலையும் பதியையுமறந்து இப்பட்டணத்திலெந்நேரமும் வாசஞ்செய்து கொண்டிருக்கு மற்புதத்தோடுங் கூடியிருப்பதன்றியும்,வேந்தன் கொடுக்கும் நித்திய சிரார்த்தங்களைப் பெறவேண்டிப் பிதுர்லோகத்தை மறந்து வந்து காத்துக்கொண்டிருக்கும் பிதுர்களுக்கும் முனிவார்முதலிய தபோதனர்களுக்கு மிருப்பிடமாகிய அனந்தமான பூங்காவனங்களுஞ் சோலைகளுஞ்சூழ்ந்து பானுவின் கிரணத்தையு மறைத்து, இலகாநின்ற பட்டணத்தை யரசாண்டுவருஞ் சக்கரவர்த்தியினது செங்கோற் பெருமையால், சந்திரசூரியர்களை இராகு கேது வென்பவர்களுந் தீண்டுவதற்கு அச்சப்படும்படியாய் மனோசவனென்பவன் இராஜரீகஞ் செய்து கொண்டு வருவானாயினன். அக்காலையில்தேவாமிர்தத்துக் கொப்பாகிய தீம்பாலில் வேப்பர்நைதலங்கலந்ததுபோல்ஊழ்வினையானது சக்ரவர்த்தியையணுகிற்று அதனல் தனது நல்லறிவழிந்

துச் செங்கோன்முறைமை யாவும் பிறழ்ந்து கொடுங்கோலாகி யும், அநீதியிற் பிரவேசித்தும், வேதசாஸ்திர புராணங்களை மற ந்தும்யாகாதி கிர்த்தியங்களை நீக்கியும், அறங்களை நிறுத்தியும், பிராமணருக்கு விடப்பட்டிருக்கும் காணிபூமிகளை யவர்களிட த்தில் துராக்ருதமாய்க் கவர்ந்தும், சிவாலயவிஷ்ணுவாலய முத லிய தேவாலயங்களுக்கு நடந்துவருந் திருவிழாக்களையும் நித் தியகட்டளை நிறுத்தியும், அவ்வாலயங்களினுள்ளகடவுளர்க்குச் செய்தளித்திருக்கும் ஆடையாபரணங்களைக் கவர்ந்தும், குடிக ளை துராக்ருதத்தாற் றுன்பப்படுத்தியும் யாவரும் நிந்திக்கும்படி யரசாண்டுவரத் தலைப்பட்டான், அக்காலத்தில், கோலபனென் னுமோரரசன் படையெடுத்து வந்தெதிர்த்துப் போர்செய்து ம ன்னேசவனது ராச்சியத்தைப் பிடித்துக்கொள்ள அதனால் மெத் தவுந் துன்பமடைந்து, தான் தன் பத்தினி குமாரருடன் வெளி ப்பட்டுப் பட்டணத்துக் கருகிருக்குமோர் சோலையில்எட்டுநாள் வரையில் அன்னபானாதிகளின்றியொளித்திருந்து ஒருவரும்போ யெட்டிப் பாராமையால் மிகுதுன்பத்தோடுமவணிருந்து பிரயா ணபட்டு, பரதேசிகளாய் ஓர் அந்தகாரமான காட்டிற் பிரவேசி த்து, வெய்யிலின் தீட்சண்யந்தாளாதவர்களாய், விடாய்ப்பட்டு சோபத்தோடும் பிள்ளையானவன் தந்தையை நோக்கி ஐயா பசி நோயானது என்னை வருத்திக் கொல்லுகின்றதேனன்செய்வேன் எப்படிச் சகிப்பேனென்று சொல்ல அவ்வுரைகேட்ட வேந்தன் திடுக்கிட்டு மனங்கலங்கிப் பலவாறாகச் சிந்தித்து, இக்குறையை யாரிடத்திற் சொல்லியாறுவோமென ஏக்கங்கொண்டு தனது தேவியாகிய சுமத்திரையைப் பார்த்து ஓ பெண்பாவாய் நமது குமாரனாகிய சந்திரகாந்தனது பசியை யெப்படி தணிப்போம் எங்கே போயிரப்போம் யாம்செய்த வினையாதோ பிரமன் நமக் கு இப்படியாய் விதித்துவிட்டான். அந்தோ ஸ்ரீகைலாசபதியா கிய பரமசிவனைப் பணியாமலும் பக்திசெய்யாமலும் மறையவர் களுக்கீந்த மண்பொன் முதலிய நிதிகளை பறித்துக்கொண்டத னலன்றோ பெருந்துன்பத்துக் காளானேம். இவைதல்லாமலும் பசித்தோர்முகம்பார்த்து அன்னங்கொடுக்காதிருந்தேனே உரு த்திருந்தேனே உருத்திராட்சமாலிகாபரணத்தோடுங் கூடிச்சிவ மாய் விளங்குஞ் சிவனடியார்களை சிந்தியாமனிந்தித்தேனே சி றைச்சோற்றை யிடவொட்டாமற் றடுத்தேனே பரதேசிகளுக் கிடங்கொடாமல் துரத்தினனே சிறுபிள்ளைகளினது உணவை யருந்தவொட்டாமற் றடுத்தேனே, கோயில், குளம், நந்தவன

முதலியவைகளைப் பாழ்படுத்தினேனோ, யாதோ உலகின்றேன், என்செய்வேன் தெய்வமே தெய்வமேயென்று வேந்தனானவன் மூர்ச்சித்து பூமியிற் சாய்ந்து பிரேதம் போலாயினான். இங்ஙன மிருந்த மணாளனைக்கண்ட சுமித்திரையானவள், திடுக்கிட்டு, மெத்தக் கிலேசத்தோடு பூமிமேற் சாய்ந்த தன்மணாளனது மேனியிற் புழுதியடைந்திருப்பதைக் கண்டு சகிக்கப்படாத துன்பங்கொண்டு, தங்களுக்கு வந்து சம்பவித்த வினைப்பகுதியை விண்டு, என் பிராணநாயகனாகிய மகா மண்டலேசுவரர், சந்தனகளப கஸ்தூரி புனுகு ஜவ்வாதணிந்து மேருவுக்குச் சமமாய் பிரகாசியாநின்ற நினது தோளினும் மார்பிலும்புழுதிபடர்ந்திருப்பதை யான் காணுங் காலம் நேரிட்டதேயென்று உள்ளம் பதைத்துப் பண்டு யான் செய்தவினையோ, முண்டகனாகிய பிரமன் தான் இவ்வாறு விதித்தானோ வென்றேங்கிப பரதவித்து அரசே தேவரீர் என்னைவிட்டுப் பிரிந்துபோகவா நினைக்கின்றீர் அந்தோ தாங்கள் அடியாளை விட்டுப் பிரிந்தால் இமைப்போதேனு முயிர் வைத்திருப்பேனோ வைத்திருக்கமாட்டேன், இதோயானுங்கூட வருவேனென்று புலம்புவதைக்கேட்ட புத்திரனானவன் தனது தந்தை மூர்ச்சித்திருப்பதைக்கண்டு, மிகவும் வருத்தங்கொண்டு ஆ என் தந்தையே மிகுபந்தமோடும் பெற்றுவளர்த்துப் பாராட்டிய வென்னைப் பரதவிக்கவிடுத்துப் போவதழகோ ஐயோ நான் பசிப்பிணியால் மெலிந்துவாடுகின்றேனே யென்று உள்ளம்பதைததுச் சோர்ந்தீரே யென்செய்வேன், சிறுவனாகிய யான் இப்புவியினின்று மெவ்வாறுய்வேன் தாதையே தாதையே யென்று புலம்பிக் கொண்டிருக்கின்றான் அப்போது அம்மார்க்கத்தில் சந்திர சடாதரமூர்த்தியாகிய சிவபெருமானைப்போன்ற பராசரமகாமுநியென்பவர் விபூதிருத்ராட்ச மாலிகாபரணராய் தண்டுகமண்டலத்துடனே அததடத்தில் வருபவரிவர்களைக் கண்டு, க்ருபாநோக்கத்தோடும் இவ்வனத்தில் ஆதரவின்றிப் பரதவித்துக் கொண்டிருக்கும் நீங்கள் யாவரென்று கேட்க, அம்முநிவரது க்ருபாநோக்கம் பட்டதும் சுமித்திரையும் அவள் சுதனாகிய சந்திரகாந்தனுஞ் சோபந்தீர்ந்து எழுந்திருந்து, பராசரமுனிவரது பாதபத்மங்களிலே விழுந்து நமஸ்கரித்துச் சொல்லுவார்கள், சுவாமி, நாங்களிருப்பது சயிந்தமாநகரம், அந்த நகரத்தை யரசாளு மனோசவனென்னும் பெயர் வாய்ந்த இவர் மூர்ச்சித்திருப்பவர் எனது நாயகர் இச்சிறுவன் என் குமாரன், இவனுக்குச்

சந்திரகாந்தனென்று பெயர், எளியாளைச் சுமித்திரை யென்று சொல்லுவார்கள் நாங்கள் இராச்சிய பரிபாலனஞ் செய்து கொண்டிருக்கையில் எங்களது ஊழ்வினையால் கோலபனென்னும் வேந்தன் படையெடுத்துவந்து அமர் விளைந்து, எங்களைத்தோற் பித்து, இராச்சியத்தைக் கைப்பற்றிக்கொண்டான் பின் யாங்க ள் பாரிகளைப்போல் நிர்ப்பாக்கியத்தோடும் அன்னபானாதிகளு க்கு மேதுவில்லாமல் இவ்வனத்தில் வந்து கொண்டிருக்கும்போ து குமாரன் பசிப்பிணியால் வருந்துவதைக்கேட்ட வரசர் சகி யாதவராய்த் தாமும் பசியால் மெலிந்து மூர்ச்சித்து நிலத்தின் மேற் சாய்ந்தனர், யாங்களிருவரும் எவ்வகையுமில்லாமற் பரத விக்கின்றேம் என் செய்வோம் சுவாமீ என்று இரக்கத்தோடுங் கூறிய சுமத்திரையின் மொழியைக்கேட்ட பராசரமுனிவர் வா ராய் சுமித்திரையே இவ்வகைத் துன்பங்களெல்லாஞ் சம்பவித் தற்குக் காரணமியாதெனின் உனது நாயகன் அரசரிமையில் ம நுநீதிக்கு விரோதமாய் நடந்து வாக்கினுலுஞ் சொல்லப்படாத கொடிய கர்மாநுபங்களுக்குடன்பட்டமையால் அநுபவிக்கவே ண்டி வந்தன வாதலால் நீங்கள் வீணே துன்பப்படுவதில் என்ன பிரயோசன முண்டாம் இப்போது உனது நாயகனை யெழுப்பித் தருகின்றேம் விசனமுறுதிருவென்று கூறித்தமது கமண்டலத்தி லுள்ள ஜலத்தை மனோசவன் மீதிற்றெளித்தார் உடனே மனோசவன் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து எதிரில்சாம்பவமூர்த்தியைப்போ ற்சேவைதந்து நிற்கும் பராசகரை, பக்திவிநயத்தோடும்பணிந்து சுவாமி அடியேனது ஜென்மசாபல்ய மாச்சுதென்று பலவாறாய்த் துதித்துத் தனக்கு நடந்த காரியங்களையெல்லா மாதியோடந்த மாய்ச் சொல்லி இத்துன்பம் நீங்கும்படியாய் தேவரீர்கடாக்ஷித் தருளவேண்டுமென்று பணிந்து நிற்கும் வேந்தனை நோக்கிப்பரா சர முனிவர் கூறுவாராயினர்.

கேளும் மனோசவனென்னும் வேந்தனே! இனி யுனக்குஸ்ரீகை லாசபதியாகிய சந்திரஜடாதரமூர்த்தியினருளால் உனது துன்ப மியாவுநீங்கிவஞ்சத்துருவாகிய கோலபனென்பவனையுஞ்செயித் துப்பழையபடி இராச்சியத்தைப் பெறவேண்டுமாயின், தென்றி சையில்ஸ்ரீராமமூர்த்தி யாற் கட்டப்பட்ட சேதுவில் வழங்குங் கந்தமாதன பருவதச்சார்பில் சீதாகுண்டத்துக்குச் சமீபமாய் ஓருதிவ்யதீர்த்தமிருக்கிறது: அத்தீர்த்தத்திலேயிமுன்னுண்டாய

தேவியுங் குமாரனுமாய்ப்போய் தீர்த்தமுழுக்கச்சங்கற்ப விதியின் படிச் சிராத்தமுதலியயாவும் வழுவின்றிச்செய்துவருவாயேல்உனது துன்பங்களெல்லாம் நீங்குமாதலால்யாமும் வருகின்றோம் வாருங்களென்று சொல்ல, மனோசவன் மிகவுஞ் சந்தோஷித்து அவ்வாறே முனிவரோடும் பிரயாணப்பட்டுக், காடு மலை வனம் வனாந்தரங்க ளெல்லாங்கடந்து, அநேக திவ்யக்ஷேத்திரங்களையுந் தரிசித்து, சேதுவிலோங்குங் கந்தமாதன பருவதச் சார்பிலிருக்கு மங்கலதீர்த்தக்கரையில் வந்துசேர்ந்து, அத்தீர்த்தத்தில் பராசரமகா முனியின்சொற்படி மூன்றுமாதம் வரையிற் றீர்த்தமாடி, சிராத்தங்கள்செய்து ஸ்ரீராமமந்திரத்தை யிடைவிடாமற் சேபித்து வாசஞ்செய்து கொண்டிருக்கும்போது, அவ்வேந்தனது கிரீடமகர குண்டலங்களும் உடைவாளும்வில்வேல்முதலிய படைகளும் பட்டத்துக்குதிரையும் இரதகஜதுரகபதாதிகளும் மந்திரிகண் முதலியவர்களோடு சமஸ்தநிதிகளும்ஒவ்வொன்றாய் மங்கலதீர்த்தத்திற்றோன்றிக் கரையேறுகையில், அதைக்கண்ட வேந்தனும் அவனது பெண்டுபிள்ளைகளுஞ் சந்தோஷங்கொண்டவர்களாய், அருகிலெழுந்தருளிய பராசரமகாமுனிவரது பாத பத்மங்களை வணங்கி எங்களுக்கென்னவுத்தர மென்றுகேட்க, பராசரும் ஆனந்தக்கடலுட்டோய்ந்து, அம்மங்கலதீர்த்தத்தில் வேந்தனுக்கபிஷேகஞ்செய்து, தனதுதபமகிமையால்தெய்வநாயகன் முதலிய சமஸ்ததேவர்களையும் வருவித்துஅன்னவர்களாசிகூறி ஜெயாவிஜயீபவவென்றோதித் துந்துபி முழக்கி, மலர்மாரி தூவி, அக்ஷதையிறைக்கையில், அரசனுக்கு முடிசூட்டி, இந்திராதி தேவர்களிடத்தி லநேகவரங்களும் ஆயுதவகைகளும் வாங்கியளித்து, தானுமாசீர்வதித்துத் தன்னுடைய நகரத்துக்குச்செல்லும்படி விடைகொடுத்தனுப்பினர். அதுபோலவேமனோசவன் தனதுதேவியோடுங் குமாரனோடும் பராசர முனியைப்பணிந்து, சதுரங்கதளத்துடனே பிரயாணப்பட்டுக், காடு மலை வனம்வனாந்தரங் கானாறுமுதலியவைகளும் பதிகளுங்கடந்து, தமதுபட்டணம்வந்துசேர்ந்து, கோலபனென்னும்வேந்தனைஜெயித்துப்பழையபடி இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தார்கள். இவர்களிவ்வாறிருக்கையில், பராசரமகாமுனிவர், அம்மங்கல தீர்த்தக்கரையில் நெடுநாள் வரையிற் றவஞ்செய்து கொண்டிருந்து, அப்பால் தெய்வலோகத்தை நாடிச்சென்றார் பின்னர் மனோசவ

னென்னும்வேந்தன் தனது தேவியோடும் ஆயிரம் வருடம் வரை யில் ஆளுகையிலிருந்து அப்பால், தனது குமாரனாகிய சந்திரகாந்தனுக்குப்பட்டாபிஷேகஞ் செய்வித்து, இராச்சியபரிபாலனஞ் செய்யும்படி யமர்த்திப் பின்னர் தானுந் தன் தேவியும் பிரயாணப்பட்டுச் சேதுவைச்சார்ந்த கந்தமாதன பருவதச்சாரலில் விளங்கும்மங்கலதீர்த்தத்தில் மூழ்கி, அத்தடாகக்கரையில்இரு வருமிருந்து ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவத்தைஇதயகமலத்தி லிருத்தித் தவஞ்செய்து கொண்டிருக்குங் காலையில் மனோஜவ னென்னும் வேந்தன் சடத்தை விடுத்துச் சாரூபத்தைப்பெற, அதுகண்ட அவன் தேவியாகிய சுமித்திரையென்பவள் நாயகனை விடுத்துத்தான் தனித்துவாழ்வதற்கு மனமில்லாதவளாய்தனது மணாளனது சடத்தோடு தானுஞ் சககமனஞ்செய்து கொள்ள யத்தனித்து, அத்தீர்த்தக்கரையில் மங்கலத்துடனே அக்கினிப் பிரவேசமானபடியால் அப்புண்ணிய தீர்த்தத்துக்கு அன்று முதல் மங்கல தீர்த்தமென்று பெயர்விளங்கிக் கொண்டிருக்கின்றது. அம்மங்கல தீர்த்தத்தில் மூழ்கினவர்களுக்கு அஷ்டமங்கலயோகாதிசய விராச்சிய பாரங்களும் நித்தியமங்கள சுபகாரமும் உண்டாயிருப்பதால்அது அநேகமகிமைகளோடுங் கூடியிருக்கின்றது அத்தன்மைவாய்ந்த தீர்த்தத்துக்குச்சமீபமாய் ஏகாந்தராமமென்று ஒருதலமும் அத்தலத்தில் அமுததீர்த்தமென்று சூதமுனிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்ய முனிவர்கள் உள்ளம் பூரித்து சுவாமீ, அத்தலத்தினது பெருமையும், அதுவந்த காரணத்தையும் அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க முனிவர்பெருமான் திருவுளங்கனிந்து சொல்லத்தொடங்கினர்.

மங்கலதீர்த்தம்

முற்றிற்று

---

கூ-வது.

# அமுததீர்த்தம்.



முனிவர்களே கேளுங்கள், நெடியகடல்சூழ்ந்த இந்நிலவுல கின்கண் வழங்கும் உத்தரபாகத்தில் இலகாநின்ற இமயமலைச் சாரலில் சந்திரஜடாதர மூர்த்தியினது நுதல்விழியினின்றும் ஆறுபுலிங்கமாயெழுந்த சிவசண்முகக்கடவுளா லுபதேசம்பெ ற்றுக் குறுமுனியென்னுங் குடமுனியென்றுங் கலசமுனியென்றும் அங்குஷ்டமுனியென்றும் அகஸ்தியமுனியென்றுங் காரணப்பெ யரெய்தி தக்ஷிணபாகத்திற் பொதிகைமாமலையி லெழுந்தருளியி ருக்கும் மகாமுனிவர்க்கு இளையோனுகிய நாரணமஹாரிஷியென் பவர் நாலுவேதமாறுசாஸ்திர மறுபத்துநான்கு கலைக்கியான ம நுவிக்கியான முதலிய யாவுமுணர்ந்து காமக்குரோதாதி யறுவி தப்பகையுமகற்றிச் சுத்தசத்துவத்திற்பொருந்திப் பசுபதியாய நீலகண்டக்கடவுளைத் தனது உதயகமலத்திலிருத்தி யநேகநாள் வரையிற் பூசைபண்ணியும் வந்தித்தும் சிவனடியார்களுக் கன்ன ங்கொடுத்தும் வேதபாராயணஞ்செய்தும் மறைவிதியினின்றுந் தினைத்துணையேனும் பிறழாது நித்தியசிராத்த அக்கினிஹோத் திரவேள்விமுதலிய யாவும்நடாத்தியும் ஈசிவரகடாக்ஷமுண்டா கிப் பிரமசொரூபம்பெற்று முத்திவீட்டைப் பெறுவதற் கேது வில்லாமையால் அன்னபானுதி முதலியவற்றையும் சருகுஜலப ட்சணங்களையும் வெறுத்து, தேகாபிமானத்தையறுத்து, மழை க்கும் வெய்யிலுக்கு மெலியாமற் பஞ்சாக்கினி இடைநின்று, ஆ யிரம்வருடம்வரையிற்றவஞ்செய்து வருவானுயினன், ஜகதீசனு கிய பரமசிவன்கருணைசுரந்து முனிவர்காணும்படியால் மான்மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திரங்களோடும் பார்வதிசமேத ராய் வெள்விடையேறிப் பிரமன் விஷ்ணுவாதி தேவர்களுஞ் சிவ கணங்களுங் புடைசூழத்தக்கதாய் நாரணமகாரிஷிக்குப் பிரசன் னமானுர். அவ்வாறு தரிசனந்தந்ததை நாரணமுனிவர்கண்டு திடீ ரென்றெழுந்து தனதிருகரங்களையுஞ் சிரத்திறகூப்பி, மகாதேவ சம்போ, சங்கரா, காளகண்டதிரிநேத்ரா, சந்திரஜடாதரா, சய ம்பூ, கங்காதரா, காமகோடிநாயகா, கௌரிமனேகரா, கருணைக டாக்ஷா, நிர்மலா, நிஷ்களானந்தா, பார்வதிசமேதா! பசுபதிதிரி

புராந்தக! தீனதயாளா! கடையேனைக்காத்தருளவல்லநாயகாச பிரம்மாண்டநாயகா! அகிலபுவன காரணா! ஹரஹரவெனத் தோத்திரஞ்செய்து, நிலத்தின்மேல் அஷ்டாங்கபஞ்சாங்கதிரியாங்கமாய்ப் பணிந்தெழுந்து,பக்திவிநயத்தோடுங் கைகட்டிவாய்பொத்தி நிற்கு முனிவரைப்பார்த்து, வாரும் நாரணமகாரிஷியே, நீர் செய்ததவத்திற்கு நாம்சந்துஷ்டியடைந்தோமாயினும், இப்போது உமக்கு முத்திசித்திக்காது ஏனெனில், நீர் தட்சிணபாகத்திலோங்குங் கந்தமாதனச்சார்பில் மங்கல தீர்த்தத்துக்குச் சமீபமாய் ஓர்திவ்யதீர்த்தமிருக்கின்றது அத்தீர்த்தத்தில் மூழ்கி அத்தீரத்திலே வாசம்பண்ணிக்கொண்டிருந்தால் உமக்குப் பிரமசைதன்யமாகிய முத்திகிடைக்குமென்று திருவாய்மலர்ந்தருளி உமாகாந்தன் தேவகணங்களோடும் ஸ்ரீகைலாசத்துக் கெழுந்தருளினார்.

கேளும் முனிவர்களே, அப்பால் நாரணரிஷியும் ஜகதீசனாகிய உமாகாந்தனது கட்டளையின்படி அவணின்றும் நீங்கிக் காடு மலைவனம் வனந்தரங் காறுமுதலியநதிகளும் பதிகளுந் திவ்யஸ்தலங்களுங்கடந்து சேதுவைக்கண்டு தரிசித்து அவ்விடத்திலருங்கந்த மாதனபருவதச்சார்பில் வழங்கும் அமுததீர்த்தத்தில் மறைவிதிப்படிமூழ்கி அத்தீர்த்தக்கரையில் மூன்றுவருடகாலம்வரையில் நிஷ்டைசெய்துகொண்டிருக்கையில் பிரமசொரூபமாகிய ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த சின்மயசொரூப சாட்சாத்காரமாகிய பரசிவத்தோடிரண்டறக் கலந்தமையால், அப்புண்யதீர்த்தத்திற்கு அன்றுமுதல் அமுததீர்த்தமென்று பெயர்விளங்கிக்கொண்டிருக்கிறதென்று சூதமுனிவர்சொல்லினார் அதுகேட்ட நைமிசாரண்யர் பிரம்மானந்த பரிதராய், முனிவரைப்பணிந்து சுவாமி! அத்தீர்த்தம்விளங்குமிடத்திற்கு ஏகாந்தராமமென்று பெயர்வந்தகாரணத்தையும்புலப்படுத்த வேண்டுமென்றுவினவ, முனிவர்பெருமான்கருணைசுரந்து—ஓ முனிவர்களே! அயோத்தியாபட்டணத்துக் கிறைவனாகிய தசரதமகாராஜன் குமாரனாகிய இராமமூர்த்தியினிடத்தில் இலங்கையினின்றும் அடைக்கலம் புகும்பொருட்டு விபீஷணன்வந்துசேர்ந்து, சேதுபந்தனஞ்செய்வதற்கு தானும் தன்தம்பியாகிய இலட்சுமணனுஞ்சூரியகுமாரனாகிய சுக்ரீவனுமவிபீஷணனும் மகாபலமபொருந்திய அநுமானும வானராதிகளுமாகவொருங்குகூடிச் சீதாதேவியைக் கண்டுவரவேண்டிய காரியங்களைக்குறித்தும் இராவண

னை ஜெயிக்கவேண்டிய காரியங்களைக்குறித்தும் ஏகாந்தமாயிருந்து யோசனைசெய்து கொண்டிருக்கும்போது, மகரங்கள் குதிகொண்டு விளங்காநின்றகடல் ஆரவாரத்தோடு மிரைச்சலிட்டிருந்தமையால், இரகசியமாகப்பேசும் வார்த்தையானது ஒருவர் சொல்லொருவருக்குக் கேளாதிருக்க, அப்போது ஸ்ரீராமனிடத்தில் இவ்விரைச்சசலால் ஒன்றுங் கேட்கவில்லை யென்று யாவருஞ்சொல்லினார்கள். அவ்வார்த்தையை ஸ்ரீராமமூர்த்திகேட்டுக் கோபங்கொண்டு தனது இருபுருவங்களையும் நெரித்துச் சயிக்ஞையாய் சந்தடியடக்கும்படிகாட்ட, அக்கணமே கடலானது அச்சங்கொண்டு ராமமூர்த்தியினது ஆஞ்ஞையின்படியே கோஷ்டமடங்கியிருந்துவிட்டபடியால், அவ்விடத்திற்கு ஏகாந்தராமமென்று பெயர் விளங்கிக்கொண்டிருக்கின்றதோடும் அதற்கு வடபாரிசத்தில் விலலூன்றியென்றுமோர்திவ்யத்தீர்த்தமுண்டு ஆதலால், இத்தன்மையான மகிமைபொருந்திய அமுததீர்த்தத்திலே நாரணரிஷியானவர்யோகஞ்செய்து அமிர்தங்களைப்புசித்து முத்தியடைந்ததினாலே அத்தீர்த்தத்திற்கு அமுததீர்த்தமென்றும் முத்திதீர்த்தமென்றும் பெயர் விளங்குவதோடுங்கூடி, அதிற்றீர்த்தமாடி அங்ஙனம் வாசஞ்செய்பவர்களுக்குச் சந்தேகமில்லாமல் மோட்சங்கிடைக்குமாதலால் கந்தமாதன பருவத்திலே யுண்டாயிருக்கிற மகிமைகளைச்சொல்லி முடியாதுமேலும் இதைப்பார்க்கிலு மகாமகிமைபொருந்திய பிரமகுண்டமென்றோர் தடாகமிருக்கின்றது.

அத்தடாகத்தில் உண்டாயிருக்கின்ற மிர்த்திகையை யாரொருவ ரெடுத்துக் கொண்டாலும் புசித்தாலுந் தீர்த்தமாடினாலும் அவர்களை மகாபுண்யசாலிகளென்று சொல்லுவதுண்டு. அல்லாமலும் சதுர்வேதங்களையு முணர்ந்தோதவல்ல கோடிதேவப்பிராமணனைவதஞ்செய்த பாபிகளாயினும் அப்பாபமனைத்தும் பெருங்காற்றிற்பஞ்சுபோற் பறந்துவிடுமென்று சுருதிவாக்கியங்களாற் சொல்லப்பட்டிருக்கின்றதென்று சூதமுனிவர் சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யவாசிகள் ஆனந்தபரவசராய் முனிவரைப்பணிந்து சுவாமீ, தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய வண்ணம் அப்பிரமகுண்டத்திலே விளங்குகின்ற மிர்த்திகையை யெடுத்துத் தரித்துக்கொண்டாலும், புசித்தாலும், அதிற்றீர்த்தமாடினாலுங்கோடி பிரம்மஹத்தி தோஷங்களாயினும்நீங்குமென்று

கூறியமகிமை அத்தடாகத்துக் கெவ்வகைபாயுண்டாகியதோ அதைத்திருவுளம்பற்றவேண்டுமென்று மிருகாதலோடுங்கேட்க அவர்கண்மீது கருணைகூர்ந்து சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

## அமுததீர்த்தம்.

முற்றிற்று.

---

### எ-வது,

## பிரமகுண்ட தீர்த்தம்.



கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே! முன்னொரு காலத்தில் ஸ்ரீவைகுண்டவாசராகிய மகாவிஷ்ணுவும் அவரது உந்திக்கமலத்தினின்று முதித்த பிரமனும் முறையே சகல அண்டங்களையும் படைத்தளிக்க வல்லராதலால் நான்பெரியன் நான் பெரியன் என்று இருமாப்புற்று வார்த்தையாடிக் கோபாவேசங்கொண்டவராய் பூவுலகத்தில் வந்துஇமாசலத்துக் கொப்பாகிய இரண்டுபருவதங்களைப்போலும் இரண்டு சிங்கங்களைப்போலும் மும்மதம்பொழியு மிரண்டு யானைகளைப்போலும் யுகாந்தகாலப் பேரொலியைப்போற் கர்ச்சித்துத் தோள்கொட்டி தொந்தயுத்த முதலிய யுத்தங்கள் செய்து ஒருவருக்கொருவர் தோல்வியின்றி நெடுநாள்வரையில் அமர்செய்து வருகையில் சமுத்திரங்களும் வரண்டு வானத்திலுள்ள நட்சத்திரங்களுமுதிர்ந்து சூரியசந்திரருமகதிமாறி, புவனத்திலுள்ள மன்னுயிரனைத்துங் கலங்கிப் பரதவித்துஉயிர்விடுவதைக்கண்ட இந்திராதியரும் பயந்து ஈடுசெய்யமாட்டாதவர்களாய் ஸ்ரீகைலாசவாசியாகிய பரமசிவத்தினிடஞ்சென்று, சரணாகதியெனப்பணிந்து தமது குறையைத்தெரிவிக்க அதுகேட்ட சந்திரசடாதரமூர்த்தியாகிய பெருமான் கோபங்கொண்டு காலாந்தருத்திரனைப்போற் சீறி இவர்களது செருக்கைபோக்கவேண்டுமென்று கருதி அக்கினிபருவதம்போலுருவங்கொண்டு யுத்தஞ்செய்து கொண்டிருக்கு மிருவர்களின் மத்தியில்வந்துதோன்றினர்.

அதுகண்ட பிரம விஷ்ணுக்களிருவரும் அச்சங்கொண்டவர்களாய் இஃதென்ன ஆச்சர்யமென்று நிதானித்துத் தோற்றுதவர்களாய் விஷ்ணுமூர்த்தியானவர் பன்றி யுருவங்கொண்டு யானிவ்வரையினது அடியைக்கண்டு வருகிறேனென்றும்,பிரமன் அன்னவுருவங்கொண்டு முடியைக்கண்டு வருகிறேனென்றும் வாதஞ்செய்துகொண்டார்கள். அவ்வாறே பன்றியாகிய மகாவிஷ்ணுவானவர் பாதாளபரியந்தந் தேடிச்சென்றும் பிரமன் தான் கொண்ட அன்னவுருவத்தோடும் ஆகாயத்தை நோக்கிச் சென்றுங்கற்பகோடிகாலம் வரையிற்றேடுகையில் விஷ்ணுவானவர் தனதுகோரைகளால் பூமியைததிட்டுதிட்டாகப் பெயர்த்தெறிந்து பாதாளம் வரையில் சல்லடைக்கண்களைப்போற் றுளைத்துப்புகுந்துபார்த்தும், அவ்வரையினுடைய அடியைக்காண்பதற்கு அரிதாய்தனது கோரைகளாகிய தந்தங்களுங் காற்குளம்புகளுந்தேய்ந்து ஆற்றப்படாத துயரத்தோடும் அக்கினி வடிவமாகிய சொரூபத்தை யின்னதென்று நினைப்பதற்கே சக்தியற்றவராய் அதிக நாணத்தோடும் இதுபரமசிவத்தின பெருமையென் றுணர்ந்து தான்கொண்ட செருக்கழிந்து பூவுலகத்திற்வந்து வீதியினிற்கு நின்றதேவேந்திராதி ககனயும்பர்களைக்கண்டு கூறுவார்.

கேளுங்கள் தேவர்களே! யானும் பிரமனும் நீ என்படைப்புக்குரியவனென்றும் நீ என்படைப்புக் குரியவனென்றும் ஒருவருக்கொருவர் போர்புரிந்திருக்கையில் திடீரென எங்கள் மத்தியிலெழுந்த இவ்வக்கினி பருவதத்தைக்கண்டு ஆச்சரியமுற்று இதனது அடியையேனும் முடியையேனுங் கண்டுவந்தவனேபெரியவனென்றுபேசிச்சம்மதித்து அவ்வாறே யான்பன்றியாகவும் பிரமன் அன்னப்பறவையாகவும் உருவங்கொண்டு பாதாளமெல்லாங்கல்லியும் அடியைக் காண்பதற்கரிதாய் இத்தன்மையாகிய துன்பத்தோடு பூவுலகம்போய்ச் சேருமளவும் இப்பொந்தியில் உயிர்பொருந்துமோ பொருந்தாமலகலுமோவென ஐயமுற்று அச்சங்கொண்டு பரசிவத்தினருளால் இங்ஙனம் வந்து சேர்ந்தேன் முடியைக்கண்டு வருகிறேனென்று சென்றபிரமன் என்ன கதியானானோ யான்கொண்ட நானென்னும் அங்காரத்தால் நைந்தேன், இனிச்சகியேன், என்செய்வேன், தேவர்களே யென்று சொல்லிக்கொண்டிருக்கையில் அன்னவுருக்கொண்டு முடியைக் கண்டு வருகிறேனெனச் சென்றபிரமன் மகாபராக்ரமத்தோடும்

அதிவேகமாய் ககனவீதியிற்கிளம்பி பூவுலகமுதல் தட்டுத்தட்டாயூடுருவிப் புகுந்தும் இணுக்கிணுக்காய்ச் சோதித்தும் அகப்படாமையால் அக்கினி வடிவமாயிருக்கின்ற பருவத்தின் பிரமாணத்தை யிவ்வளவென்றறியக்கூடாதவனுப் இதற்குகளெல்லா முதிர்ந்துங் கால்களசைந்தும் சரீரம் வற்றியும் பறப்பதற்குவலியில்லாமல் மறுபடியும் பூவுலகத்தை நோக்கிப்பெருந்துன்பத்தோடும் தணதுமனத்தில் அடியைக்காணச்சென்ற விஷ்ணுயான் கண்டுவந்தேனென்று சொல்ல நான் முடியைக் காணவில்லை யென்று சொல்லுவோமாகில் நம்மைதேவர்கள் முதலியயாவர்களும் மதியாமற் போவதோடும் அவனுக்குப் பின்னும் கர்வமுங்கீர்த்தியும் உண்டாகுமன்றோ? மேலும் நானகண்டு வந்தேனென்று பொய்யேனுஞ்சொல்லி மேம்பாடுபெறுவோமென்றால்அதற்கொருசாட்சிவேண்டுமொதலால், இதற்கென்செய்வோமென்று யோசித்துக்கொண்டு வருகின்றபோது ஆகாயத்திலிருந்து ஓர் தாழம்பூவானது வருவதுகண்டு அதனை வழிமறித்து வாராய்தாழம்பூவே நீ யெங்கிருந்து வருகின்றுயென்று கேட்க அதுகேட்ட அப்பூவானது கேளும்பிரமனே? யான் அநேகங்கோடி கற்பகாலத்துக்குமுன் ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவமூர்த்தியினது சடாவியிலிருக்கும்போது பூவுலகத்தில் நீரும் மகாவிஷ்ணுவும் ஒருவருக்கொருவர் நீ பெரியன் நான் பெரியனென்று வாதமிட்டு யுத்தஞ்செய்ததினுல் பூவுலகமுதலிய யாவும்நாசமுறக்கண்ட தேவர்களச்சங்கொண்டு சாம்பசிவமூர்த்தியிடம் வந்து பணிந்து முறையிட அம்முறை கேட்டவுடன் உங்களது கலகத்தை நிவர்த்திசெய்வதற்கு அக்கினிமலையாக வடிவங்கொண்டு உங்களிருவர் மத்தியில் பூமியிற் குதிக்கையில் அவருடைய திருமுடியினின்றும்நழுவிய யான் இதுவரையினும் நிலையில்லாமல் பெருந்துன்பத்தோடும் வருகின்றேன் இன்னம் பூமியைக்காண எத்தனைகாலஞ் செல்லுமோ தெரிகிலேன் யான் செய்வபாவத்தினுல் பரமசிவனது முடியைவிட்டுப்பிரிந்து, இவ்வாறு பரதவிக்கின்றேனென்று சொல்ல அதுகேட்ட பிரமன், களிப்புடையவனுய் அப்புஷ்பத்தினிடத்தில் தங்களுக்குள் நடந்தகாரியங்கள் யாவுஞ்சொல்லி மிக நயத்தோடும் ஓ தாழம்பூவே நீ என்மீது தயைசெய்து எனக்கோருதவி செய்வையாகில் அவ்வுதவியை யெனது ஆயுள்ளபரியந்தம் மறவேன் உனக்கும் பெரும்புண்ணிய முண்டாம்.

அது யாதெனில் நான் தேவர்களிடத்தில் பரமேசுவரனுடைய திருமுடியைக்கண்டுவந்தாய்ச் சொல்லுகிறேன், அதுபோலவே நீயும் இவர்வந்து கண்டது உண்மையென்றும் யானுமங்கிருந்து தான் வருகிறேனென்றுஞ் சொல்லுவையேல் உனக்குமெத்தவுஞ் சுகிர்தமுண்டாமென்று மெத்தவும் உபசாரவார்த்தைகளாற் சொல்ல, அதுகேட்ட தாழம்பூவானது ஐயா! பிரதேவனே நீர் அஞ்சவேண்டாம் உமது மனம்போல் யான் சொல்லுகிறேனென ஒப்புக்கொண்டு பிரமனுடனேகூடி பூவுலகத்திக்குவருகிறபோது ஆகாயவீதியில், இந்திராதிதேவர்களும் மகாவிஷ்ணுவு மிருப்பதைக்கண்டு பிரமனவன், சந்தோஷத்தோடுமகாவிஷ்ணுவின் முன்னின்று ஓய் விஷ்ணுவே நீரிந்த அக்கினிமலையினுடைய அடியைக்கண்டு வந்தீரோவென்று கேட்க அப்போது திருமால் பிரமனை நோக்கி ஓய் பிரமனே! நான்காணவில்லை நீயாவது முடியைக்கண்டு வந்ததுண்டோ சொல்லெனக்கேட்க அதற்குப் பிரமன் ஆம்நான் முடிகண்டு வந்தேன், அதற்குச்சாட்சி வேண்டுமாயின் இத்தாழம்பூவைக் கேட்டறிந்து கொள்ளுமென்றுசொல்ல, அதற்குத்தாழம்பூவும் கண்டுவந்தது உண்மைதான் யானும் அவர் முடியினின்றுங்கூடவே வந்தேனென்று சொல்லியதைக்கேட்ட இந்திரன்முதலிய தேவர்களெல்லாம் ஆச்சரியங்கொண்டிருக்கும்போது அக்கினிவடிவாய்நின்ற மலையினின்றுமோர் அகண்டாகார ஜோதிபோற்றோன்றி மான்மழு சதுர்ப்புஜகாளகண்ட திரிநேத்திரங்களோடும் ஸ்ரீகைலாசபதியாகிய சாம்பமூர்த்தி எழுந்துபிரமனைநோக்கி அடாபிரமனே நீ என்னசொன்னாய் இன்னொருக்காற் சொல்லுவாயென்று வீரா வேசத்தோடுங்கேட்க, அவ்வுரைகேட்ட பிரமனும் தாழம்பூவும் உள்ளம்நடுங்கிமெய்சோர்ந்து பிரதியுத்தாஞ்சொல்லுவதற்கு நாவெழாதவர்களாய்த் தலைகுனிந்து நிற்பதுகண்ட மகாவிஷ்ணுவும் இந்திராதிதேவர்களும் இதென்னகாரணமென்று பிரமித்துப் பார்த்துக்கொண்டிருக்கையில், சாம்பமூர்த்தியாகிய உமாகாந்தன் கூறுவார், ஓ பிரமனே! நீ நம்முடைய முடியைக்கண்டுவந்தோமென்று இத்தேவசபையில் பொய்சாட்சியேற்படுத்திக் கொண்டுவந்து கிஞ்சித்தேனும் அச்சமில்லாமற் சாதித்தபடியால் இன்றுமுதல் புவனத்தில் உனக்கு ஆலயமில்லாமலும் யாரும் வணங்காமலும் போகக்கடவதென்று சாபங்கொடுத்ததோடுந் தாழம்பூவைப்பார்த்து ஓ புட்பமே, நீ இப்பிரமன் வார்த்தையைக்கேட்டுபொ

ய்சாட்சியாகவந்து சாதித்தமையால் இன்றுமுதல்நமது கண்ணி ற்படாமலுந்தேவர்களுக் குபயோகமில்லாமலும் போகக்கடவை யென்று கூறிபின் மகாவிஷ்ணுவைப்பார்த்துச் சொல்லுவார்.

வாரும் பரந்தாமா நீர் இத்தேவசபையில் சத்தியமாய்உண் மையை வெளியிட்டமையால் இப்புவனத்தில் நீர்மேன்மேலாகிய புகழும் பூஜிதமும் ஜெயமும் மங்களாகரமும் பெற்று வாழக்க டவீரென்று முகமலச்சியோடுங் கூறியதல்லாமலும் நாமே நீர் நீரே நாம் என்றும் விஷ்ணுவை கடாலிங்கனஞ்செய்து அநேக வுபசாரவார்த்தைகள் சொல்லிக்கூட்டிக்கொண்டு தேவேந்திரா தியர் புடைசூழும்படியாய்க் கயிலாயத்துக்கெழுந்தருளும்போ து பிரமதேவனுப் பெருந்துன்பங்கொண்டு சந்திரஜடாதரமூர்த் தியாகிய பரமசிவத்தினது பாதபத்மங்களிற் பணிந்துஇருகரங் களாலும்விடாதுபற்றிக்கொண்டு, சுவாமீ! அறிவிலியாகிய சிறி யேன்செய்தகுற்றத்தைப் பொறுத்துச் சாபநிவர்த்திசெய்யவே ண்டுமெனத் துதிக்கலாயினர். அதற்குப் பரமசிவங்கருணைகூர்ந் துவரராய் பிரமனே உனக்கு நம்மால்நேரிட்ட சாபநிவர்த்தியாக வேண்டுமாயின் வுலகத்தில் பாதகண்டத்தில் தெட்சணபாகத் தில் சேதுவிலோங்குங்கந்த மாதன பருவதச் சார்பிலிருந்து யா காதிகிர்த்தியங்கள் செய்து தேவர்களுக்குப் பூரணாகுதிசெய்து வருவையேயாகில் இச்சாபவிமோசன மாகுமென்று திருவுளம்ப ற்ற அதுகேட்ட பிரமன்சந்தோஷங்கொண்டு அவ்வாறே தேவர் கள்முதலிய மகாரிஷிகளையுஞ் சித்தபுருஷர்களையு மழைத்துக் கொண்டு கந்தமாதனகிரிச் சார்பில்வந்துசேர்ந்து வேள்விக்குண் டமுதலியவைகளை விதிப்படியமைத்து யாகாதிகளைச்செய்து மு டிக்கையில் பரமேசுவரன்விருஷபவாகனரூடரா யெழுந்தருளிப் பிரமனுக்குத் தெரிசனந்தந்து அநேகவரங்களைக்கொடுத்து இன் றுமுதல் உன்னைச்சுருதிவாக்ய ப்ரமாணங்களினாலே பூசுரர்கள் வந்தனைவழிபாடு செய்யக்கடவதென்று திருவாய்மலர்ந்தருளிப் பின்னும் தன்னுடைய சாபவிமோசனமாகும்படி யாகஞ்செய்து கொண்டிருந்த ஓமகுண்ட பூரணாகுதிசெய்து அவ்விடத்தில் நிர ம்பியதீர்த்தங்களிலே யாவருமூழ்கி அவற்றிலுள்ள மிர்த்திகை முதலான நீற்றையெல்லாமெடுத்துத் தரித்துக்கொள்ளக் கடவ தென்றும் இவ்வோமகுண்டம் உன்னுடைய நிமித்தம் உண்டா கியபடியால் இதுமுதலிதற்கு பிரமகுண்டமென்று பெயர்விள

ங்கக்கடவதென்றும் இப்பிரமகுண்டத்தில் மூழ்கினவர்களுக்கு பேரின்பவீடு கிடைப்பதோடும் இதில் உண்டாயிருக்கிற விபூதியை யாரொருவர் தரித்துக்கொள்ளுகின்றார்களோ அவர்கள் புண்ணியரென்றுந் தரியாதவர்கள் பாபிகளென்றுஞ் சொல்லியதோடுஞ் சூரியசந்திராருள்ளவரையில் மங்களகரமாயிருக்கக்கடவதென்றுஞ் சொல்லிச் சகலதேவர்களுடனும் சாம்பசிவமூர்த்தியானவர் ஸ்ரீகைலாசத்திற் கெழுந்தருளினார். ஆதலால் அதுமுதல் அதற்குப் பிரமதீர்த்தமென்று பெயர்வழங்கி வருகின்றதென்று சூதமுனிவர்சொல்ல, நைமிசாரண்யர் சந்தோஷங்கொண்டு சுவாமி! கந்தமாதனத்தில் இத்தன்மையவாகியமகிமைகளுண்டாயிருக்கின்றதன்றோவென அப்போது முனிவர் அவர்களை நோக்கி ஓ முனிவர்களே! இப்பிரமகுண்டத்துக்குச் சமானமாகிய அநுமகுண்டமென்று ஒரு புண்ணியதீர்த்தமிருக்கின்றது. அதின் பெருமையைச் சொல்லுகிறோம் கேளுங்களென்று நைமிசாரண்யருக்கு சூதமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

பிரமகுண்ட தீர்த்தம்

முற்றிற்று

---

அ·வது,

## அநுமகுண்ட தீர்த்தம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே! தசரதகுமாரனாகிய ஸ்ரீராமமூர்த்தியும், இலட்சுமணரும், விபீஷணரும், சுக்ரீவன் அநுமன் முதலியவானரவீரரும், எழுபத்திரண்டுவெள்ளம் வானரசேனைகளும் ஏகாந்தராமமென்னும் ஸ்தானத்திலிருந்து ஆலோசித்துப் பின்னர் பிரயாணப்பட்டு இலங்கையிற் பவளமாமலையிற் சேனைகளையிறக்கி இராவணாதிகளை யெதிர்த்து வதஞ்செய்து விபீஷணனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்த பி

ரமஹத்தி தோஷமானது இராமனைப் பிடித்துக்கொண்டு சகிக்கப்படாததுன்பங்கள் நேரிட்டமையால் அது நிவர்த்தியாகும் பொருட்டு மகாரிஷிகள் கூறியவண்ணம் சேதுவின்மத்தியில் கந்தமாதனபருவதத்தில் சிவபூசைசெய்யவேண்டி யோசித்து இலிங்கங்கொண்டுவரும்படியாய் அநுமானை காசிநதிக் கனுப்பிவைத்து அதற்குரியசாமக்கிரிகளெல்லாஞ் சேகரஞ்செய்து அநுமான்வரவையெதி ர்பார்த்திருக்கையில் அப்போது இலிங்கப்பிரதிஷ்டைக்குரிய இலக்கினம் நேரிட்டுத் தப்பிப்போகின்றதென்று கருதினவராய்ச் சீதாபிராட்டியினது கையினாற்பிடித்து செய்துக்கொண்டிருந்த மிர்த்திகையினாலே பார்த்திபலிங்கமாகச் சமைத்து அதனை ஸ்ரீராமன் பூசைசெய்ய அப்போது ஸ்ரீகைலாசபதியாகிய சாம்பவமூர்த்தியானவர் இராமமூர்த்திக்கு தெரிசனந்தந்து வேண்டியவரங்களையுங் கொடுத்து கைலைக்கெழுந்தருளிய பின்பு இலிங்கங்கொண்டுவரச்சென்ற அநுமானானவர் காசிதீரத்திலிருந்து அதிபிரயாசையோடும் இலிங்கத்தைக்கொண்டுவந்து இராமமூர்த்தியினெதிர்நின்று வணங்கிநிற்க, அவ்வநுமானைக்கண்ட இராமன் வாராய்அநுமானே நீ வருவதற்குள் முகூர்த்தந் தப்பிப்போகிறதாயிருந்தமையால் சீதையின் கையிற் பிடித்திருந்த மிர்த்திகையினாலே சிவபூசைசெய்து முடிந்தது இப்போதுநீ கொண்டுவந்த இலிங்கத்தை நாம் பூசைசெய்திருக்குமிடத்தில் உத்தரபாரிசத்திலே பிரதிஷ்டை செய்து உன்பெயர் விளங்கத்தக்கதாய் பூசைசெய்வாயென்றுசொல்ல அவ்வார்த்தையைக்கேட்டஅநுமான் சகிக்கப்படாததுன்பமுங் கோபமுங்கொண்டு முகம்வேறுபட்டிருப்பதைக்கண்ட ராமர் அநேகவிதமாய்த் தேறுதலைசொல்லியுங் கேளாததுகண்டு பின்னும் இரக்கத்தோடும் அப்பா அநுமானே உன்பெயராற் பிரதிஷ்டைசெய்த இலிங்கத்துக்கு முதற்பூசையும் நிவேதனமும் நடந்தபின் நம்முடைய இலிங்கத்துக்கு நடக்கும்படியாய் கட்டளையிட்டோம், அன்றியும் இவ்விரண்டிலும் பராபரன் பேதமில்லாமல் விளங்கிக்கொண்டிருப்பார்.

அப்படியிருப்பதிலும் உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கத்தைச் சகலருந் தெரிசனஞ்செய்து பின்னர் யான் பூசித்தலிங்கத்தை தெரிசித்தால் அவர்களுக்கு அநேகம் பலனுண்டாம் இதன்றியும் நீ ஸ்தாபித்தலிங்கத்தை தெரிசியாமல் யான் பூஜித்ததை மாத்திரம் தெரிசிப்பவர்களுக்கு யாதொருபலனு முண்டாகமா

ட்டாது ஆதலால், இதனை நீ உண்மையாக நம்பி யான் சொல்லி யவண்ணம் முடிப்பாயென்று சொல்லியுங்கேளாது அநுமானுன வர் இராமமூர்த்தியைநோக்கி சுவாமீ! தேவரீர்பூசித்த இலிங்கத் தைப் பிடுங்கியெறிந்து, அடியேன்கொண்டுவந்த இலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்றுசொல்ல, அக்கணமே இராம மூர்த்தி சிவசிவாவென்று செவியைப்புதைத்துக்கொண்டு. அநு மானைப்பார்த்து. வாரும் அநுமானே சர்வாந்தரியாமியாகவுஞ் ஜகதீசனுகவுமிலங்குஞ் சிவபெருமானைப் பிடுங்கவும் வைக்கவு மும்மாற்கூடுமோ என்னவார்த்தைசொல்லுகிறுய், சரியல்லவெ ன்று சொல்லியுங் கேளாததுகண்டு, இராமமூர்த்திக்கு மனத்தி ற்கிஞ்சித்துவருத்தமுண்டாகி அப்பா அநுமானே யான் பூஜித் தலிங்கத்தைப் பிடுங்கிப்போடும்படியாகிய வல்லப முனக்குண் டாயிருந்தால் அவ்வாறே செய்யென்றுசொல்ல அநுமான் அவ் வுரைக்குச் சம்மதங்கொண்டவராய் விசுவரூபங்கொண்டுதனது வாலைவளர்த்தி நீட்டி இராமமூர்த்தி பூஜித்த இலிங்கத்துக்கு மூ ன்றுசுற்றுய் வளையச்சுற்றி இறுக்கிப்பிடித்துக்கொண்டு தனது பூரணவலுவோடுமசைக்க அணுவளவேனு மசையாததுகண்டு மிகக்கோபங்கொண்டு பின்னுங்கெட்டியாய் வாலினுலிறுக்கித்த னதிரண்டுகாலையும் பூமியின்மீது வலுவாயூன்றி இருகரங்களா லும் வாலைப்பிடித்துக்கொண்டு மகா பராக்ரமத்தோடும் ககனவீ தியில் விசைகொண்டெழும்புகையில், அநுமான் வாலானது அ றுப்புண்டு அவ்விலிங்கத்திற்கு வடபாலாகக் கூப்பிடுதூரத்தில் பூமியில் விழுந்தபோது அப்பூமியானதுபத்தல் பத்தலாய்ப்பிள ந்து பாதலமளவும் பள்ளமுண்டாகி அவற்றில் நீரூற்றுத்தோ ன்றியது, அதில்வீழ்ந்த அநுமானுடைய வாயினிடமாகவும் செ வியினிடமாகவும் பெருகியஉதிரமும்நீரும் ஒன்றுபட்டு அப்பள் ளமானது நிறைந்து பிரவாகம்போற் பெருகிவழியும்பள்ளத்திற் சாவுக்குச்சரியாகிய மூர்ச்சைகொண்டிருப்பதை இராமமூர்த்தி முதலிய யாவருங்கண்டு வியாகுலங்கொண்டு சீதாபிராட்டியோ டும் அநுமானைக்கிட்டி நெருங்கி அந்தோ பண்டு யான் சொல்லி யதைக்கேளாது மெலிந்தாயேயென விரக்கத்தோடும்அநுமானை யெடுத்து அம்மனும்சுவாமியுமாக அநுமானது சரீரத்தைத்தட விக்கொடுத்து அவரது சோபத்தைமாற்றி, அநேக வுபசாரவார் த்தைகளைச்சொல்லித் தேறுதல்செய்து தனது புதல்வனுக்கொ ப்பாகிய அநுமானுக்குற்ற விபத்தைநீக்கிய அப்பள்ளத்திற்கு குழந்தைகளுக்குவந்த துன்பத்தையும் குழந்தைகளில்லாத பே

ர்களுக்குக்குழந்தைகளுண்டாகும்படிப் பெருமையும் அநேகபாவங்களும் இதில் மூழ்கியபேர்களுக்கு விலகக்கடவதென்று வாக்களித்ததோடும் அத்தாடகத்திற்கு அநுமகுண்டமென்று நாமஞ்சூட்டிப்போனமையால் அத்தன்மைவாய்ந்த அநுமகுண்டத்தீர்த்தமானது உலகத்திற் பெருமையோடிருக்குநாளில், கேகயதேசயாளப்பட்ட தருமசகன் என்னும் வேந்தன் நூறுபெண்களை விவாகஞ்செய்துகொண்டு இராச்சியபரிபாலனஞ் செய்துவருகையில், தனக்குப்பிள்ளை யில்லாததுகண்டு அநேகவித நோன்புகளை யநுஷ்டித்துக்கொண்டு மறைவிதியிற் கூறியவண்ணம் முப்பத்திரண்டறங்களை வழுவின்றி நடாத்தியும் வருகையில் தனது மஹிஷியின் வயிற்றில் ஓர் பிள்ளையானது பிறக்க வேந்தன் மிகவுஞ் சந்தோஷங்கொண்டு அப்புத்திரனை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமாய் வளர்த்துவருகையிலொருநாள் அந்தப்புரத்தில் நவரத்னகசிதமாகிய தொட்டிலில நித்திரைசெய்துகொண்டிருக்கும் குழந்தையினது காலில்ஒருதேள்கொட்டஉடனே அக்குழந்தை வீறிட்டழுதவோசையைக்கேட்ட குழந்தையின்தாயாகிய பட்டமஹிஷியும் பாங்கியர்களுமாயோடிவந்து தொட்டிலைச்சூழ்ந்துகொண்டு யாதுகாரணத்தால்அழுகிறதென்றுபார்க்கையில் அத்தொட்டிலின் ஒருபுறத்தில்தேளிருக்கக்கண்டுஇத்தேளின் கொடுமையால் பிள்ளைக்கு உபத்திரவம்நேரிட்டதென்றறிந்தவர்களாய் சகிக்கமாட்டாமற் கதறுகின்ற அரும்புதல்வனது கோரத்தைக்கண்ட யாவரும் கோவென்று வாய்விட்டலறுகையில் அவ்வோசையானது கொலுமண்டபத்தி லநேக ராஜாக்கள் நெருங்கிப் பணிந்துநிற்கவும் நவமணியிவெயிலெறிக்குஞ்சிங்காசனத்தி லினிது வீற்றிருக்கும் அரசனது செவிற் கேட்டவளவில் திடுக்கிட்டு அருகிருக்கு மந்திரிமுதலிய காரியர்களை நோக்கி அந்தப்புரத்திலெழுந்த கூக்குரலினது காரணத்தை யின்னதென்றறிந்துவரும்படியாய் ஆஞ்ஞைசெய்ய அவ்வாறேயவர்களந்தப்புரத்திற் கதிவேகமாய்ச் சென்று விசாரணைசெய்கையில், சந்திரனென்னுங் குழந்தையைத் தேள்கொட்டியதாகச் சொல்ல, அதுகேட்ட மந்திரிமுதலானோர் துன்பமடைந்து ஓடோடியும் வந்து அரசனுக்குரைக்க, அரசன்கலங்கி அங்குள்ள மணிமந்திரசித்திபெற்ற வல்லவர்களையும் பூசுரர் முதலிய பெரியோர்களையு மழைத்துக்கொண்டு அந்தப்புரஞ்சேர்ந்து தொட்டிலிற் கதறுங் குழந்தையையுந் தன் மனைவியரும் தோழிப்பெண்களும் படுந்துயரத்தையும்கண்டு சகிக்கமாட்டாதவனாய்த்தா

னுஞ்சலனமுற்றிருக்க அதுகண்ட மணிமந்திரவல்லவர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குத் தெரிந்தமூலிகைகளினாலும் மந்திர உச்சாடனங்களாலும் குழந்தையின் துன்பத்தைத் தணித்துவருகையில் வேந்தன் தன்னிடமிருக்கும் மறையவர் முதலானபெரியோர்களைப்பார்த்து ஐயா நான் நூறுபெண்களை மணந்தும் நெடுநாட் பிள்ளையில்லாததைக்கண்டு பற்பலவிரதங்களை யனுஷ்டித்து ஸ்ரீகைலாசபதியினருளால் உண்டாகிய என்னரும்புதல்வனுக்கு இத்தகைய இடுக்கண் சம்பவித்தால்எவ்வாறுய்வேன் மேலும் எனக்கோ விருத்தாப்பதிசை வேறுபிள்ளையில்லாமையால் இவ்வொரு குழந்தைக்கு யாதொருதீங்கும் நேரிடாமற் கடவுள் அனுக்ரகிக்கப்படாதோ, பாதகனாகிய என்மீது பரமசிவத்துக் க் கருணையுண்டாகவில்லையே அந்தோவென்று கவலையுற்றிருக்குங் காவலனைக்கண்ட பூவலராகிய பெரியோர்களும் பூசுரர் முதலிய பாவலர்களும் வாரும் வேந்தே! உமது இச்சையின்படி மணஞ்செய்த நூறுதேவிகளுக்குங் குழந்தைகளுண்டாகும்படியாயும் அவர்களுக்கு யாதொரு தீங்குகளனுகாதிருக்கும்படியாயும், எண்ணமிருந்தால், இவ்வுலகின்கண் தட்சிணபாகத்தில் ஸ்ரீராமமூர்த்தியால் கட்டப்பட்ட சேதுவிலோங்குங் கந்தமாதன பருவதச்சாரிபில் வழங்கும் அநுமகுண்டத்தைக்கண்டு தெரிசித்து அத்தீர்த்தத்தில் நீரும் உமதுதேவிமார்களும் நீராடி அதன் கரையில் புத்ரகாமேஷ்டியாகஞ்செய்து முடித்தால் யாதுங் குறையின்றி புத்ரபாக்யமும் வேண்டியசம்பத்துகளுண்டாமென்றுகூற அதுகேட்ட தருமசகன் பிரமானந்தபரிதனைப் மிகு காதலோடும் பெரியோர் கூறியவண்ணம் தனதுகுழந்தை முதலியபேர்களையும், மந்திரி முதலியபேர்களையும், மறையோதும் வேதவாயினர்களையும், சேனைசைன்யங்களையுங் கூட்டித்தானும்ரதரூடனாய் பிரயாணப்பட்டுத் தனதுபட்டணத்தைவிடுத்துக் காடு மலைவனம்வனந்தரங்காறு கதிகள் முதலியவைகளையுந் தலங்களையுங்கடந்து சேதுவைச்சேர்ந்து, அவணுங்குங்கந்தமாதன பருவதச்சாரிபில் அநுமகுண்டத்தைக்கண்டு தரிசித்து அக்குண்டக்கரையில் தனது தேவிமார்களோடும் புத்திரன் முதலியபேர்களோடுமிறங்கி வேதவிதிப்படி யதிற்றீர்த்தமாடினபின்பு அக்கரையில் புத்ரகாமேஷ்டியாகஞ்செய்யவிரும்பிச் சித்திரைமாதத்தில் அநேகந் தேவப்பிராமணர்கள் முன்னிலையில் யாகத்தை நியமப்படி நிறைவேற்றிப் பூரணாகுதிசெய்து பிண்டசேடத்தைத் தனது நூறுதேவிமார்களுக்குங் கொடுத்து, அநுமகுண்டத்தை

வலஞ்செய்து, பின்பு சாம்பசிவமூர்த்தியையுந் தரிசனஞ்செய்து அவணின்றும்பிரயாணப்பட்டுத் தனதுபட்டணம்வந்துசேர்ந்து இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருக்கும் நாளையில் யாகத்திற் பெரியோர்களாற் கொடுக்கப்பட்ட பிண்டத்தின் பெருமையால் அதே கர்ப்பமாகவிருந்து பத்துத்திங்களும்பூரணமாய் முடிந்தபின் தருமசகன் தேவிமார்களாகிய நூறுஸ்திரீகளும் நூறுபிள்ளைகளைப் பெற்றார்கள். அதுகண்ட வேந்தன் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து அநேகம் பிராமணர்களுக்கும் பெரியோர்களுக்குங் கோதான பூதான கன்னிகாதான முதலிய முப்பத்திரண்டு தருமங்களையுங் குறைவின்றிச்செய்து, தனது புத்திரர்களினுடைய பூரணசந்திரனைப்போன்ற முகாரவிந்தங்களைக்கண்டு அடங்காக்காதல்கொண்டு முதல்மனைவிக் கிரண்டுபுத்திரரும்மற்றவர்க்கொவ்வொரு புத்திரருமாக நூற்றொருகுழந்தைகளையும் நாளொருமேனியாய் வளர்த்து இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டு வருகிறபோது பிள்ளைகள் மூன்றாம்பிறைபோல் வளர்ந்து இராஜவர்க்கத்துக்குரிய சகலவித்தைகளினும் வல்லவராய் உலாவிவருகையில் தருமசகன்கண்டு பேரானந்தங்கொண்டு. அண்டையிலிருக்கும் நூற்றொரு பிள்ளைகளுக்குந் தனது பண்டாரங்களையுந் தேசத்தையும் நூற்றொருபாகமாக்கிக்கொடுத்துமுதல்மனைவியின் முதற்பிள்ளையாகிய சந்திரனென்பவனுக்கு திவ்ய முகூர்த்தத்தில் முடிசூட்டிப் பட்டாபிஷேகஞ்செய்து அவன் கையினு லநேக தானதருமங்கள் செய்வித்துப் பிள்ளைகளுக்கு வேண்டிய நீதிவாக்கியங்களையுரைத்து அன்னவரிடஞ் செலவு பெற்றுத் தானுந் தன்னுடைய தேவிமார்கள் நூறுபேருமாய்ப் பிரயாணப்பட்டு தட்சிணபாகத்தோங்கும் கந்தமாதனபருவதச்சாரில் அறுமகுண்டத்தைச்சேர்ந்து தரிசித்துத் தீர்த்தமாடி அத்தீர்த்தக்கரையில், ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவத்தை இதயகமலத்திலிருத்தி தர்ப்பாசனத்திலிருந்து சிலகாலந்தவஞ்செய்து பின்னர் வேந்தன தேகவியோகமாக, அதுகண்ட அவனுடைய தேவிமார்கள் நூறுபேரும் அரசனோடும் அக்கினிப்பிரவேசமாகியதைக் கேள்வியுற்ற சந்திரனென்பவன் தனது தம்பிமார்களாகிய நூறுபேரோடும் மாதாபிதாக்களுக்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்துமுடித்து, அவர்களை வைகுண்டபதவிசேர்த்து, தனது மந்திரிமுதலியவர்களோடுங் காரியர்களோடுங்கூடி மனுநீதிகுறைவின்றி இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டி

ருந்தானுதலால், அத்தன்மையாகிய மகிமைவாய்ந்த அநுமகுண்டத்தின் பெருமையைச்சீர்தூக்கி யாவருஞ் சொல்லிமுடியுமென்றுசொல்லியதைக்கேட்ட நைமிசாரண்யமுநிவர்கள் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து. சூதமுநிவரைப்பணிந்து சுவாமீ! தேவரீர் புன்மையேன்களாகிய எங்களுக்கு இன்னம் அச்சேதுவிலுள்ள மகிமையைச் சொல்லவேண்டுமென்று, பக்தியோடும்வினவியதைச்சூதமுநிவர்கேட்டுக் கருணைசுரந்து ஓ முநிவர்களே. அகஸ்திய தீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அதன்பெருமையைச்சொல்லுகிறேம்கேளுங்களென்று திருவாய் மலர்ந்தருளினர்.

அநுமகுண்ட தீர்த்தம்.

முற்றிற்று.

---

சு-வது.

## அகத்திய தீர்த்தம்.



கேளுங்கள் முநிவர்களே! முன்னொருகாலத்தில்ஜகதீசனது கிருபாநோக்கத்தினு லுண்டாகிய இலவணம், இட்சு, சுரா, சற்பிததி, க்ஷீரம், சுத்தோதகமென்று கூறுகின்ற எழுகடல்சூழ்ந்த இவ்வுலகின்கண் வழங்கும் பருவதங்களில் விந்தியகிரியென்னும் மலையானது ஸ்ரீசந்திரஜடாதர மூர்த்தியினது வாமபாகத்திலொளிரும் உமாமகேஸ்வரிக்குத் தாயகமாகிய இமாசலத்துக்கொப்பாக வேண்டுமெனக்கருதி, ஆகாயமளாவியுயர்ந்து வட்டமிட்டுப் பரவிப்பூரித்து தாபராதிகளுக்கும் விலங்கினங்களுக்கும் மானிடஜீவங்களுக்கு மிடுக்கணைக்காட்டி இறுமாப்புக்கொண்டிருக்குந் தன்மையை நீலகண்டமூர்த்தியாகிய பராபரனறிந்திருந்தும் பருவதராஜகுமாரியை மணஞ்செய்யவேண்டித் தம்முடன் ஸ்ரீகைலாசகிரியிலெழுந்தருளியிருக்கும் இரண்டாஞ் சம்புவாகிய நந்திதேவர், பிருங்கி, நாரதர் சப்தரிஷிகளாகிய சிவகணங்களோடும் தேவேந்திராதி முப்பத்துமுக்கோடி தேவர் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகள் கருடகாந்தர்வசித்தவித்யாதர ருரகாஷ்டவசுக்களோடும் விரு பவாகளுருடாய் பிரயாணப்பட்டுக் கையிலையி

னின்றும் வருகிறபோது பரமேசுவரன் அகஸ்தியரை நினைத்து வருவித்து அன்னவரைநோக்கி வாருமகஸ்தியரே, இப்பூவின்கண் விந்தியகிரியானது மேருவுக்கு நிகராகவேண்டுமெனக்கருதிவளர்ந்து ஜீவர்கள்முதலியயாவுக்கும் இடுக்கணைக்கொடுத்து கர்வித்திருக்கின்றமையால் நீர்போய் அதனைக்கர்வ பங்கப்படுத்திவரக்கடவீரென்று திருவாய்மலர்ந்தருளினார் அதுகேட்ட அகஸ்தியமுனிவர்கங்காதரனைப்பணிந்து சுவாமிதடையேன்தேவரீருடைய திருமணக்கோலத்தைக் கண்டுதரிசிக்க அதிபாவலோடுங்கூடிவந்த எனக்கு இவ்வாறு ஆக்ஞைதந்தது எளியேன் வினைப்பகுதியென்று துன்புறுகின்றேன் என்செய்வேனென்று வியாகுலத்தோடுஞ்சொல்லினார். அதுகேட்டசோமசுந்தரக்கடவுள் இரக்கமுற்று, ஓய் அகஸ்தியமுனிவரே நீர் நம்முடையமணக்கோலத்தைப்பார்வதியுடனே வேதாரண்ய மென்னுந்தலத்தில் தரிசிக்கலாமாதலால் நீர் போமென்றுகூற, அவ்வுரையைச் சிரமேற்கொண்ட அகஸ்தியர் பிரயாணப்பட்டு, வானத்திற்கும் பூமிக்குமொன்றாய் வளர்ந்து இறுமாப்புக்கொண்டிருக்கும் விந்தியகிரியின் சிகரத்தில் தனது கரத்தை வைத்தமாத்திரத்தில் அப்பருவதமானது நெறநெறவென்று நெறிந்து பூமியிறுழ்ந்து பூமியோடு சமமட்டமாய்ப்போய்விட்டமையா லதுகண்ட அகஸ்தியர் சந்தோஷத்தையடைந்து, அவணின்றும் நீங்கித் தென்றிசையை நோக்கிப் பிரயாணப்பட்டு சேதுவைசார்ந்த கந்தமாதன பருவதத்தைச்சேர்ந்து அதன்மகிமையையுஞ் சேதுவினதுமகிமையையுங்கண்டு ஆனந்தங்கொண்டு இங்ஙனம் நம்முடைய பெயரால் ஓர் தடாகமுண்டு பண்ணவேண்டுமெனக்கருதி, அதுபோல் தடாகமொன்றுபண்ணி, அத்தடாகக்கரையிற் முன்சிறிதுகாலந் தவஞ்செய்துகொண்டிருந்து அதிற்றீர்த்தமாடி, அதற்கனேக வரங்களைக்கொடுத்து, பின்பு பொதியை மலையைநோக்கிச் சென்றார்.

கேளுங்கள்நைமிசாரண்ய முனிவர்களே, மகாதபோதனராகிய அகஸ்தியமுனிவரால் நியமிக்கப்பட்ட அத்தடாகத்திற்கு அன்றுமுதல் அகஸ்தியதீர்த்தமெனப்பெயர் விளங்கிக்கொண்டிருக்கும அத்தீர்த்தமானது அநேககோடி பாதங்களைப்போக்குவதோடும் செல்வம், கல்வி, அழகு, ஆண்மை, பிள்ளைப்பேறு முதலிய அஷ்டகாமியங்களையும் மோக்ஷகாமியங்களையும்நினைத்து அதில்தீர்த்தமாடுபவர்களுக்கு அவரவர்களெண்ணபடி யளித்துக்கொண்டுவரும் அது எப்படியென்றால், வேதாரண்யமென்

னூர் தலத்தில் வசிக்கும் வேதவாயினராகிய மறையவருள் தீர்க்கதருமனென்றொரு பிராமணனுண்டு அப்பிராமணனுக்கு சுபரனென்னுமோர்புத்திரன்பிறந்தான் அப்புத்திரனுக்கு சவுள உபநயனமுதலிய கருமங்களைவிதிப்படி முடித்தும் பிரமசரியத்திலே நின்றும் வழுவின்றி வேதபாராயணஞ்செய்தவருகையில்இன்னஞ்சாத்திரங்களை யறியவேண்டுமென்னும் விருப்பங்கொண்டு, உதங்கமகாரிஷியிடஞ்சென்று அவரது பாதபத்மங்களிற்பணிந்து, தனதுகருத்தைப் புலப்படுத்தி, அம்முனிவரது கருணையைப்பெற்று நான்குவேத மாறுசாஸ்திர பதினெண்புராண முதலிய சாஸ்திரங்களனைத்தும் அறுபதுவருடம் வரையிலிருந்து அன்னவரிடமோதியுணர்ந்து ஐயந்திரிபறத் தெளிந்துபின்பு தன்னாற்கூடிய பார்த்தங்களைக் காணிக்கையாகவைத்துப்பணிந்து, சுவாமீ அடியேன் இதுவரையினுந் தேவரீரது பாதபத்மங்களுக் கற்பிதமாகும் பணிசெய்து செப்பற்கரிய வாகமவேத புராணங்களையுணர்ந்தேன். இனிதங்களுடைய அனுக்கிரகத்தினால் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டில்லறதர்மத்தி லிருக்கவேண்டுமென்று அபேட்சையிருக்கின்றபடியால் அருள்செய்ய வேண்டுமென்று பணிந்துநின்றனர். அங்கனம்நின்ற மாணாக்கனை உதங்கமாமுனிவர்கண்டு, சந்தோஷங்கொண்டு கூறுவார், வாராய் சுபரனென்னுமன்பனே, உன்னுடைய மனத்தின்படியே இல்லறத்திலிருக்க வேண்டுமாயின் உனக்குக்கலியாணஞ்செய்து கொள்ளுவதற்கு ஓர்வகைசொல்லுகின்றோம். அதுயாதெனில் ஸ்ரீராமமூர்த்தியார் கட்டப்பட்டசேதுவிற் கந்தமாதனகிரிச்சார்பில்உமாமகேசனது நுதல்விழியினின்றுமெழுந்த சண்முகக்கடவுளுக் கன்பராகியும் மகாதபோதனராகியு மிலங்கும் அகஸ்தியமகாமுனிவரால் உண்டாக்கப்பட்டு அகஸ்தியதீர்த்தமென்று விளங்குமோர் தீர்த்தமிருக்கிறது, அத்தீர்த்தம் இஷ்டகாமியங்களையும் மோக்ஷகாமியங்களையுங் கைகூட்டிவைக்குமாதலால் நீ அத்தீர்த்தத்துக்குப்போய்சங்கற்பவிதியின்படி திரிகாலமும்ஸ்நானமுஞ்செய்து வணங்கி மூன்றுவருடம்வரையில் வருவாயாகில் முடிவி லத்தடாகத்தினின்றும் தேவராஜனுடைய அயிராவதமென்னும் வெள்ளையானையானது எழுந்து மகாபராக்ரமத்தோடும் உன்னெதிரிற் பாய்வதுபோல்வரும் அச்சமயத்தும் நீபயப்படாமல் நிற்பாயேல் பின்னர் அந்தயானையானது உன்னைப்பணிந்து தலைகுனியும் அக்காலையிலதன் துதிக்கையைப்பற்றிக் கால்வழியேறி மத்தகத்தின்மீது தேவேந்திரனைப்போல் இருந்து யானையைநடத்தினால் அப்

போது மதுராபுரிக்கிறைவனுன சுவநயனென்னும்வேந்தன் வே ட்டையாடும்பொருட்டுக் கந்தமாதனகிரிச்சாரலில் வருபவன் உ ன்னைக்கண்டு வந்தனைவழிபாட்டுடனழைத்துக் கொண்டுபோய் தனதுகுமார்த்தியை உனக்குமணஞ்செய்துவைப்பான். ஆதலால் சுகஜீவியாய்ப்போய்வாக்கடவை யென்று விடைகொடுத்தனர். அதைக்கேட்ட கிபரன், முநிவரைப்பணிந்து, சுவாமீ! தேவரீர்தி ருவாய்மலர்ந்தருளியவண்ணம் அடியேன் அகஸ்தியதீர்த்தத்தி னின்று வெளிப்படும் வெள்ளையானையின்மீதேறிச்செல்லுகையில் கந்தமாதனகிரிச்சாரலில் வேட்டமாடவரும் வேந்தன் தனதுகு மார்த்தியை எனக்கு விவாகம்பண்ணிக்கொடுக்குங்காரணத்தை இன்னதெனத் தமியேனுக் கருள்செய்யவேண்டுமென்றுகேட்க, அதற்கு உதங்கமாமுநிவர் கிடனைப்பார்த்து, வாராய்கிபரனே, அவ்வேந்தன் புதல்வியாகிய புண்யவதியென்பவள் தான் பிரவி டையாவதற்கு முன்னமே இவ்வுலகின்கண் பொன்னுலகத்துக் கிறைவனுகிய தேவராஜனைப்போல் யாவரொருவர் வெள்ளையா னையின்மீது ஏறிவருகின்ருர்களோ அன்னவர்களை யான்மணம்பு ரிவனேயன்றிம் பலரைக் கனவினு நினையேனென்னு பிரதிக்கினை செய்திருந்தவண்ணம் எவ்வாறு முடியுமென்று அவள்தந்தை பெருந்துன்பத்தோடும் புதல்விக்குச்சுயம்வரம் நாட்டாமலும்ம ணம்புரிவியாமலும் இத்தொல்லையெப்போது நிவர்த்தியாகுமோ வென்று எதிர்பார்த்திருக்கையில், நாரதமகாமுநிவர் ஒருநாள் அவ்வேந்தனிடஞ்சொல்ல, அன்னவர்வரவுகண்டவேந்தன் சிங் காசனத்தைவிட்டெழுந்து எதிர்சென்று முநிவரைப்பணிந்து, சோடசோபசாரத்தோடு மழைத்துக்கொண்டுபோய் நவரத்னக சிதமாகிய சிங்காசனத்தி லெழுந்தருளச்செய்து க்ஷேமலாபங்க ளைப் பேசிக்கொண்டிருக்கையில் அரசன் தனதுகுமாரத்தி செய் திருக்கும் பிரதிக்கினையை நாரதருக்குரைக்க அதுகேட்ட நாரத முநிவர் ஞானதிருஷ்டியினூற்பார்த்து வாராய் வேந்தே! உனது புதல்வியாகிய புண்யவதியென்பவள் கருத்தின்படி கலியாணம் நடக்கவேண்டியதாய்ப் பிரமகற்பனையிருப்பதால் அப்பெண்ணி ன்வாக்கி லவ்வாறுதித்தது அதுபோலவே வெள்ளையானையின்மீ தேறிக்கொண்டு கிபரனென்ருெரு புருடன்வருவான் அவனைக்க ண்டு அழைத்துவந்து பாணிக்கிரகணஞ்செய்து கொடுக்கக்கட வாயென்றுகூறி, நாரதமகாமுநிவர் தெய்வலோகஞ்சென்றபின், வேந்தனுங் கனக கவலையொழிந்து எதிர்பார்த்திருப்பதால் நா

ன்சொல்லியபடி நீ கந்தமாதனகிரிச்சாரலிலிருக்கு மகஸ்தியதீர்த்தக்கரையில் மூன்றுவருடம்வரையிற் காத்திருந்தால் கைவல்யமாகும் போய்வாவென்று உத்தரந்தந்த உதங்கமகாரிஷியைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு மகாசந்தோஷத்தோடும் கிபரனென்பவன் அவணின்று பிரயாணப்பட்டு, கந்தமாதனபருவதச்சாரலி லோங்கும் அகஸ்தியதீர்த்தத்தைக்கண்டு தரிசித்து அத்தீர்த்தத்தில் திரிகாலங்களிலும் ஸ்நானஞ்செய்தும் ஜபதபங்களையநுஷ்டித்தும் மூன்றுவருடகாலம்வரையிற்காத்திருந்து அத்தீர்த்தத்தினின்றெழுந்த வெள்ளையானையின்மீது ஏறிநடத்துகையில் மதுராபுரிக் கிறைவனாகிய சுவனயனென்னும் வேந்தன்கண்டுதிடுக்கிட்டு, அப்பால் தெளிந்து நமக்கு நாரதமகாமுநிவர்சொன்னவாக்கியப்படி அமைந்தமையான் நமதுபுதல்வியினது சபதமும் இன்று நிறைவேறிவிட்டதெனக்கருதிச் சந்தோஷங்கொண்டு அயிராவதத்தின் முன்பாகவந்து அதில்மீ தாரோகணித்துக்கொண்டிருந்தான்.

அங்ஙனமிருந்த புண்ணியவடிவமாகியவேதியனைக்கண்டுவாரும் பிராமணா, நீரெங்கேபோகின்றீர், உமக்கு இந்தவெள்ளையானையேது, சொல்லுமென்றுகேட்க, கிபரன்சொல்லுவான், ஓ வேந்தே! யான் உதங்கமாமுனியினுடையசீடன் என்பெயர் கிபரனென்று சொல்லுவார்கள் என்னைப்பயந்ததாதையாகிய தீர்க்கதருமனென்பவரிடத்திருந்தும் விடைபெற்று முநிவரையடுத்திருந்த செய்திகளையெல்லாம் ஆதியோடந்தமாய் வேந்தனுக்குரைக்க அதுகேட்டவேந்தன் புளகமுற்றுவாரும் பிரமகுலோத்துங்கரே, இதுமுதல் நாமுமக்குமாமனாகவும் நீர்நமக்கு மருகராகவுமிருக்கவேண்டி என்னுடைய குமாரத்தியை உமக்குப் பாணிக்கிரகணஞ்செய்துகொடுக்கிறேனாதலால் இதுவரையினும் பிரமசாரியாயிருந்தீர், இனிமேலெனது கருத்தின்படிமணஞ்செய்துகொண்டு இல்லறதர்மத்தில் விழுவின்றி சுகசந்தோஷத்தை யநுபவித்துக்கொண்டிருமென்று அநேக வுபசாரவார்த்தைகளைச் சொல்லினார் அதுகேட்டகிபரனுஞ் சந்தோஷமடைந்து அயிராவதத்தைவிட்டுக்கீழிறங்கி அதற்கு மகாபக்திவிநயத்தோடு மநேகவுபசாரங்கள்செய்து ஓ அயிராவதமே, எனக்கு கலியாணமாகுமளவும் நீயுஞ் சந்துஷ்டியாகவிருந்து போகவேண்டுமென்றுசொல்ல அதுபோலவே யானையும் சம்மதித்து நின்றுவிட்டது அதின்பே

ரில் சுவநயனென்னும் வேந்தனும் கேபரனும் மற்றமந்திரிபிரதானி களுமொருங்குசேர்ந்து ஆலோசனைசெய்து, இக்கந்தமாதனபரு வதத்திற்றனே கலியாணஞ்செய்யவேண்டுமென்றுதீர்மானித்து கேபரனுடைய தாய்தந்தை முதலியவர்களை வேதாரண்யத்தினி ன்றும் வருவிக்கும்பொருட்டுத் திருமுகமெழுதி சுதரிசனனென் கிற ஓர் பிராமணனிடத்திற் கொடுத்தனுப்ப அவனும் வேந்தனி டத்தில் விடைபெற்றுக் காடுமலைவனம் வனுந்தரமியாவுங்கடந்து வேதாரண்யத்தைச்சேர்ந்து, தீர்க்கதருமனைக்கண்டு, திருமுகத் தைக்கொடுத்து நடந்தசவிஸ்தாரங்களையெல்லாமறிவிக்க. அது கேட்ட தீர்க்கதருமனுஞ் சந்தோஷத்தையடைந்து, பிராமணனை ப்பார்த்து, சுவாமி உம்மைக்கண்டு வெகுநாளாகின்றமையாற்பா ர்க்கும்படி மிகவபேட்சைகொண்டிருந்த வெனக்கு உமது தரிச னங்கிடைத்தது யான்செய்த பூஜாபலமெனக் கருதுகின்றேனாத லால் உமதுக்ஷேமலாபங்க ளென்னவென்றுவினவ, அதற்குச்சு தரிசனன், தேவரீருடைய ஆசீர்வாதத்தினால் யாதுங்குறையின் றிஉமது சம்பந்தியாகிய சுவநயவேந்த னரண்மனைப் புரோகித னாக விருக்கின்றனென்ன, தீர்க்கதருமன்கேட்டுச் சந்தோஷித்து, தனதுகுமாரன் கலியாணத்துக்காகவேண்டிய சாமக்கிரியைகளை ச்சேகரஞ் செய்துகொண்டு வேதாரண்யத்தைவிட்டுப் பிரயாண ப்பட்டு அதிதீவிரமாய்க் கந்தமாதனபருவதச்சாரலில் சுவனய வேந்தனு லமைத்திருக்கும் விடுதியில்வந்து சேர்ந்தார்கள்.

இவ்விதமாய்வந்த தந்தையைக்கண்டகேபரன் நனிகாதலோ டும் பிதாவின் பாதகமலங்களினும் அன்னையினது பாதகமலங்க ளினும்பணிந்து, பக்திவிநயத்தோடும் நிற்கையில் தீர்க்கதருமன் புதல்வனது முகாரவிந்தத்தைக் கண்குளிரக்கண்டு. ஆனந்தங் கொண்டு அடாசுதனே, பண்டு நீ எங்களைவிடுத்துவந்தபின்னர் நடந்தசங்கதி யாதென்றுகேட்க, கேபரன் தான் ஊரைவிட்டு நீங் கியபின் நடந்தவையாவு மாதியோடந்தமாய்ச்சொல்லிநிற்கத்தா தையானவன், தனதுகுமாரன் கற்றுணர்ந்த வேதாகமங்களுக்கு ப்பேரானந்தங்கொண்டவனாய், மகனைக் கட்டியணைத்து முத்த மிட்டுச் சந்தோஷித் ருக்கையில் அவண்சுவநயனென்னும் வேந் தன்வந்து தீர்க்கதருமனைக்கண்டு, நமஸ்கரித்து அன்னவரிடம் ஆக்கம்பெற்று, பின்னரவர்களுடைய க்ஷேமலாபங்களையெல்லா

ம் விசாரித்து கிபரனுடைய குருவாகிய உதங்கமாமுனிமுதலிய பெரியோர்களையெல்லாம் வருவிக்கும்பொருட்டுத் திருமுகமனுப்ப அதுபோல் அவரும் பிரயாணப்பட்டுத் தனது சீடர்களுடனுஞ் சிலபெரியோர்களுடனுஞ் சேடவில் விளங்குந்தநுக்கோடியில் தீர்த்தமாடக்கருதிச் சங்கற்பவிதிப்படி சக்கரதீர்த்த முதன் மற்ற தீர்த்தங்களெல்லாமாடி பின் அகஸ்திய தீர்த்தத்திலே தீர்த்தமாடவேண்டுமென்று வருகையில், கிபரனனவன் தனதுகுருவாகிய உதங்கமாமுனிவர் வரவுகண்டு தாயைக்கண்ட சேய்போற் சந்தோஷத்தோடுமெழுந் தெதிர்கொண்டோடி அவருடையபாதகமலங்களில் அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்கனுப்பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிறத்தின் மேற்கூப்பி, அனந்தவிதங்களாற் றோத்திரஞ்செய்து நிற்பதுகண்ட ஓர்க்க தருமன்முதலிய வேந்தன் மந்திரி பிரதானிகளியாவருந் திடுக்கிட்டெழுந்து திரிகரணசுத்தியோடும் உதங்கமா முனிவரைப்பணிந்து நிற்கையில் அதுகண்ட உதங்கர் யாவருக்குமாசிகூறி யிருக்கச்செய்து,க்ஷேமலாபங்களை விசாரித்து, பின்நடக்கவேண்டிய காரியங்களுக்கு எத்தனஞ்செய்வீர்களென்று சொல்ல, அதுபோல் வேந்தனும் வேவுகாரரை வருவித்து, அவர்களுக்குவேண்டிய பரிசுகொடுத்து, மதுராபுரிக்குப்போய் தனதுகுமாரத்தியாகிய புண்ணியவதி முதலிய பெண்களையெல்லாமழைத்துவரும்படியாய்த் திருமுகங்கொடுத்தனுப்ப, அதைப்பெற்ற வேவுகர் கந்தமாதன பருவதத்தைவிட்டுப் பிரயாணப்பட்டுக் காடுமலைவனம் வனாந்தரங்களையெல்லாங் காற்றினு மதிவேகமாய்ச்சென்று கடந்தவாறுய், மதுராபுரியைச்சேர்ந்து இராஜனரண்மனையிலந்தப்புரத்திலிருக்கும் இராஜபத்தினி முதலிய பெண்களுக்குத் தங்கள்வரவை யறிவித்து திருமுகத்தையுங்கொடுக்க அத்திருமுகத்தைவாசித்த இராஜபத்தினிகள் சந்தோஷமடைந்து குமாரத்தியாகிய புண்ணியவதியினது பெருமையைக்கொண்டாடி. யாவரும் பிரயாணசித்தமாய், அளவிறந்த முத்துச்சிவிகைகளினும் இரதங்களினுமேறிச் சர்வாடம்பரத்தோடும் பிரயாணப்பட்டு, அதிவிரைவோடுங் கந்தமாதன பருவதச்சாரலில் வந்திறங்கினர்கள் அதுகண்டவேந்தன் முதலியயாவருஞ் சந்தோஷமடைந்து, உடனே வானநாடருக்கிறைவனுகிய இந்திரன்வாழுங் கொலுமண்டபமும் இதற்கிணையோவென்று சொல்லத்தக்கதாய் வதுவைமண்டபஞ்சோடி

த்து மகரதோரணங்கள் கட்டிஎங்குங்கொடிகள் தூக்கிப்பூரண கும்பங்க ணிறுத்தி வாழை கமுகு பலா கூந்தற்பனை முதலிய சோலைகளையுங்கட்டிச் சரஞ்சரமாய் முத்துக்குஞ்சங்களைத தூக்கி, நவமணிவெயிலெறிக்கு மாசனங்களையணியணியாய்ப் பரப்பி எங்குஞ் சுகந்தமுலாவும் பனிநீரைத்தெளித்து நல்ல சுபமுகூர்த்தத்தில் கீரனுக்கு மஞ்சனமாட்டி ஆடையாபரணங்களைப்பூட்டிச் சிங்காரஞ்செய்து அதுபோ விராஜகுமாரத்தியையும் அலங்கிருதஞ்செய்து இருவரையு மணவறைப்பந்தலிலே அநேகமேளவாத்தியங்கள் முழங்கத் தோழிப்பெண்கள் புடைசூழ்ந்துகவரியவீசும்படியாயழைத்துவந்து, நவரத்தின கசிதமான பீடத்தின்மீ துட்காரவைத்தார்கள். அதுகண்ட உதங்கமாமுனிவர் மிகுகளிப்போடும் வேதாகமங்களுணர்ந்த பெரியோர்களுடனே கலியாணச்சடங்கின் விதிமுறைவழுவாதுசெய்து, விநாயகமூர்த்தியை ஆவாகனப்படுத்தி, தூபதீப நிவேதனங்காட்டி, அயிராவதத்தைவருவித்து, அதல்குப்பூசைமுடித்துக் கீரனையதன்மீ தாரோகணிக்கச்செய்து, பேரி, பூரி, தாரை, தவுண்டை, மல்லரி, குடமுழா, கொம்பு, காளம், எக்காளம், சின்னங்களென்னுமுப்பத்திரண்டு வாத்தியங்களையும்பேதாவியோடு முழங்கச்செய்து, கீரனைமணக்கோலங்காட்டி, பந்தரிற்சேர்ந்து, வெள்ளையானையை விட்டிறங்கி நமஸ்கரித்து, மணவரையி லுட்கார்ந்தபின், வேதவாயினர்களாகிய பெரியோர்களால் ஓமகுண்டமுண்டுபண்ணி, அதில் ஓமச்சமித்துக்களாலே யக்கினிவளர்ப்பித்து, விதிப்படி நடத்தி வேந்தனுற்றனது குமாரத்தியை கீரனுக்கு தாடாவார்த்துக்கொடுக்கும்படிசொல்ல, அதுபோல் ஆகாயவாணி பூமிதேவி அக்கினிசாட்சியாகவுந் தேவப்பிராமணர் முன்னிலையில் வேதபாராயணத்துடனே தாரைவார்த்துக் கொடுக்கும்போது, பூசுராள்முதலிய பெரியோர்களியாவரும் ஆசிகூற அட்சதையிறைக்கவுந் தேவதுந்துமி முழங்கவும் புண்ணியவதிக்குக்கீரனுல்திருமங்கல்யதாரணஞ்செய்வித்து, அதன்பேரிற் செய்யவேண்டிய சடங்குகளியாவுங் குறைவின்றி நடத்திப் பின்னர்மங்களவாழ்த்து முதலியவுஞ்செய்து கலியாணமண்டபத்தினின்றும் இருவரையும்வேறே மண்டபத்திலிருக்கச்செய்து, பால்பழங்கொடுத்து, பின் திருமணத்திற்கு வந்திருந்த உதங்கமுனிவராதி பெரியோர்கள் யாவருக்கும் முப்பழச்சக்கரை யோடு சட்சுவைப்ப

தீர்த்தங்களோடும் விருந்தமு துண்ணச்செய்து, பின்புசந்தன புஷ்பதாம்பூலாதிகள்கொடுத்து, இவ்வாறு ஐந்துநாள்வரையிலு ஞ் சடங்குகளியாவுஞ்செய்து, பின்னர் முநிவராதிபெரியோர்க ளுக்கும் பிராமணருக்கும் வேண்டியமரியாதைகள்செய்து, அவ ரவர்களிப்பிடம் போகும்படி விடைகொடுத்து நமஸ்கரித்து நின் றூர். குருவாகிய உதங்கமாமுனிவர் தம்பதிகளை யாசீர்வசனஞ் செய்து, தனது சீடர்களுடனே இராஜனிடத்திலும் சோன்முத லிவ யாவரிடத்தும் விடைபெற்று சேதுவிற்றீர்த்தமாடித் தமது ஆசிரமத்துக்கெழுந்தருளினூர்கள். அதன்பின் தீர்க்கதருமன் த னதுகுமாரனை வேதாரண்யத்துக் மழைத்துக்கொண்டு போகக் கருதி வேந்தனிடத்திற்கூற, வேந்தன் சந்தோஷமடைந்து தன் மகளுக்குச் சீதனமாக இரதகஜதுரகபதாதிகளும் ஆடையாபர ணங்களுந் தோழிப்பெண்களுங்கோடி பசும்பொன்னும் கொடு த்ததுமன்னியில், அநேகபசுநிரைகளையிம் ஏவயிாளிகளையுங்கொ டுத்து, சுகஜீவிகளாய்ப்போய்வரும்படி விடைதர, அப்போது சோனு மவன்தேவியும் இராஜனையுந் தனதுதாயையும்பணிந்து அவர்களாலாசிபெற்று இரதகஜதுரகபதாதிகளோடும் வேதார ண்யம்வந்து சேர்ந்தார்கள் அதன்பேரில் சுவநயனென்னும் வேந் தன் தனதுதேவிமார்களோடும் மந்திரிபிரதானிமுதலிய இரதக ஜதுரகபதாதிகளோடும் பிரயாணப்பட்டு, மதுராபுரியைச்சேர்ந் து, இராச்சியபரிபாலனஞ்செய்து கொண்டிருந்தாள், கேட்டீர் களோ முநிவர்களே! இப்படியாகவந்த அகஸ்தியதீர்த்தமானது அநேகமகிமையோடுங்கூடி இஷ்டகாமிய மோக்ஷகாமியங்களை யெல்லா மவரவர்க ளெண்ணப்படி நிறைவேற்றிக்கொண்டிருப்ப தால் அத்தீர்த்தத்திலேமூழ்கிய புண்ணியபுருஷர்களுக்கு மூன் றுவருடத்தில் நினைத்தகாரியங்கள் கைகூடுமென்று சொல்லிய ருளினர், அதுகேட்ட நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்கள் சந்தோஷமடைந்து, சூதமுநிவரைப்பார்த்து, சுவாமி! தேவரீர்தி ருவாம்மலர்ந்தருளிவருங் கந்தமாதனத்தின்பெருமையைக் கே ட்கக்கேட்கப் புன்மையேங்களது செவியாகிய வாயினிடத்துத் தேவாமிர்தத்தை யருந்துவதுபோற் சுகாநந்தத்தைத்தருகின்ற மையால் இன்னும் அப்பருவதத்திலுள்ள தீர்த்தங்களின் பெரு மையை எளியேங்களுய்யும்படி கருணைசுரக்க வேண்டுமென்று கனிந்த முநிவர்வர்களைப்பார்த்து, ஓ முநிவர்களே, அக்கந்தமா

தனச்சார்பில் இராமதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு, அதன்ம கிமையைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத்தொட ங்கினார்.

அகஸ்தியதீர்த்தம் முற்றிற்று

---

கூ-வது,

## இராமதீர்த்தம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே! தச ரதகுமாரனாகிய ஸ்ரீராமமூர்த்தியும் இலக்குமணனும் அநுமன் சுக்ரீபன் முதலிய வானவீரர்களுங்கூடி, இராவணகும்பகர்ணா திகளோடு மளவிறந்த இராக்கதசேனைகளை வதஞ்செய்து, இல ங்கையைவிபீஷணக்குப் பட்டங்கட்டி. சீதாபிராட்டியைமீட்டுக் கொண்டு புட்பகவிமானத்தேறி வருகையில் இராமமூர்த்தியை பிரம்மஹத்திதோஷமணுக, அதனை நிவர்த்திசெய்யவேண்டி,கந் தமாதனபருவதத்திற் சிவலிங்கபிரதிஷ்டைசெய்து பூசைமுடித் துச் சாம்பசிவமூர்த்திபா லநேகவரப்பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டு, அயோத்தியாபட்டணத்துக் கெழுந்தருளுகிறபோது தன்பெயரால் இக்கந்தமாதனபருவதத்தில் ஓர் தீர்த்தமுண்டுப ண்ணவேண்டுமெனக்கருதி, அவ்வாறேயேற்படுத்தி, அதிற்றானு ம் தம்பி முதலிய வானரவீரர்களுந் தீர்த்தமாடி, அத்தடாக த்துக்கு அநேகவரங்களைக்கொடுத்து இராமதீர்த்தமென்று பெ யர்கொடுத்து அயோத்தியாபுரிக் கெழுந்தருளினார்.

அதுமுத லத்தீர்த்தத்திலே நீராடியபுண்ணியபுருஷர்களுக் குநான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராண கலைகளியாவு ஞ்சம்பூரணமாய்ப் பலிதமாவதோடுஞ் சரிதை கிரியை யோகஞா னமென்னும் நான்குநிலையுங் கிடைக்குமென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை, அஃதெப்படியெனில்,வேதகுலததிலுற்பவித்த

சுதீக்கணனென்றொரு பிராமணன் எப்போதும் ஸ்ரீவைகுண்டவாசகராகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத்தனது இதயகமலத்திலிருத்தித் துதிச்செய்து, கிரியையின் விதிப்படி பூசித்தும்யோகசாதனங்கள் செய்தும் மகாவிஷ்ணுவின் சொரூபத்தை தெரிசிக்கவேண்டுமென்னும் அபேட்சையோடும் பிரயாணப்பட்டுகந்தமாதனகிரிச்சாரலிலே விளங்கும் இராமதீர்த்தத்தில் தீர்த்தமாடி அத்தடாகக்கரையிலிருந்து, இராமமந்திரத்தை இடைவிடாமற் ஜெபித்துக்கொண்டும் அத்தடாகத்தில் தீர்த்தமாடிக்கொண்டும் நியமத்தோடி யிருக்குங்காலையில், அம்மறையவனுக்குக் குருவினுடைய உபதேசமில்லாமல் தனக்குத்தானே தன்னுடைய அறிவை குருவாகப் பாவனைசெய்து ஸ்ரீராமனுடைய கிருபாகடாக்ஷத்தினாலே பிரம்மானந்த சொரூபத்தையடைந்து, வேதாகமங்களெவற்றினுந் தேர்ந்து, ஞானஞாதுரு ஞேயங்களையுங் குருவில்லாமலறிந்து, சடத்தோடுந் தேவலோகத்துக்குப்போய்வரச் சித்திகளைப்பெற்று தேவர்களோடொப்பாய் பிரம்மலோகம் வைகுண்டம் கைலாசம் என னுமிடங்களுக்குச்சென்று, அங்குள்ள மகிமைகளையெல்லா மறிந்து அதனோடும் அணிமா, லகிமா, கரிமா முதலிய அஷ்டமாசித்திகளினுந்தேர்ந்து பிரம்மானந்தத்தையடைந்து பூலோகத்துக்குவந்து காசிப்பட்டணத்தை நோக்கிப் போய்விட்டான்.

கேளுங்கள் முனிவர்களே! அம்மறையவன் கற்றுணராதவனாயிருந்தும் அந்த ராமதீர்த்தத்தில் தீர்த்தமாடிய பெருமையால் அணிமாவாதி அஷ்டசித்திகளும் அஷ்டாங்கயோகமும் பெற்று சச்சிதானந்த சொரூபத்தையடைந்து பேரின்பவாழ்விலே சுதீக்கணனென்னும்பிராம்மணோத்தமன் வாழ்ந்துக்கொண்டிருந்தான் ஆதலால் அவ்வண்ண மேன்மையானபுகழையும் புண்ணியத்தையுமுடைத்தாயிருப்பதோடும், பாபவிமோசனஞ்செய்யத்தக்கதாகவும் பாதாளலோகத்தை யளாவி இஷ்டகாமிய மோக்ஷகாமியங்களையுந்தரத்தக்கதாய் ஸ்ரீராமனுடைய பாதாரவிந்தத்தின்மகிமைகளைக்கொடுக்கப்பட்டதாய்விளங்கு மத்தடாகத்தினிடமாக ஸ்ரீராமன் சீதா சமேதனாய் எப்போதும் வாசம்பண்ணிக்கொண்டிருப்பதோடும் அத்தடாகத்திற் சுத்திமக்களாகிய பாண்டவர்களைவரில் தருமபுத்திரனுக்குண்டான பாபமானது இத்தடாகத்தில் வந்துதீர்த்தமாடி ஸ்ரீராமமூர்த்தியாற் பிரதிஷ்டை செய்து வணங்கப்பட்ட இலிங்கமாகிய இராமநாதனைத் தெரிசித்தவனா

ங்கித் தன்னுடைய பாவங்களைப்பறக்கவடித்து, பிரம்மானந்தத் தோடும் அஸ்திநபுரம் போய்ச்சேர்ந்து இராஜரீகம் பண்ணிக் கொண்டிருந்தானென்றுசூதமகாமுனிவர் சொல்லியதைக்கேட்ட நைமிசாரண்யர்சந்தோஷமடைந்து, முனிவரைப்பணிந்து, சுவாமீ பாண்டவர்களி லொருவராகிய தருமபுத்திரருக்குப் பாபம்வந்த காரணத்தையும் அன்னவர்க்குச் சம்பவித்த பாபந் தீரும்பொ ருட்டு இராமதீர்த்தத்தில் தீர்த்தமாடும்படி உபதேசித்தவர்களை யும் அடியேங்களுக்குத்தெரியும்படி அநுக்ரகஞ் செய்யவேண்டு மென்று பணிந்து வினவிய முனிவர்கள்மேற் கருணைசுரந்துசூத மாமுனிவர் கூறுவார். கேளுங்கள் நைமிசாரண்யரே, பஞ்சபாண் டவர்கள் அவர்களது புத்ரமித்ர களத்ராதிகளோடும் அநேக போகபாக்கியங்களோடுங் கூடி வாழ்ந்துவருகையில், அவர்கள் தாயாதிகளாகிய துரியோதனாதியர்கள் வஞ்சமனத்தாற்பாண்ட வரைவருவித்து மாயச்சூதாடி அவர்களுடைய பதிநிதி முதலிய யாவு மபகரித்துப் பாரிகளாக்கிப் பன்னிரண்டுவருடம்வனவா சமும் ஒருவருட மக்கியாதவாசமும் நாட்டிலொருவ ரறியாமற் றிரியும்படியா யனுப்பி அவ்வாறு அவர்கள் சஞ்சரித்து வந்தபி ன்புஒருவருக்கொருவர் பாரதப்போற் தொடங்கியுத்தஞ்செய்து வருகையிற் பத்தாநாட்சண்டையில், துரியோதனாதியர்கள்மெத் தவுந் துன்பமடைந்து, பின்னர் துரோணாசாரியருக்குச் சேனா பதிபட்டங்கட்டிப் பதினோராநாள்முதல் தொந்தயுத்தங்களாய் நடந்துகொண்டிருக்கிறபோதுபதினைந்தாநாள்துஷ்டத்துய்மனை துரோணரெதிர்த்து அமர்செய்து பாணங்களைச் சரமாரியாக வருஷித்துப் பாண்டவ சைந்யங்களைச் சின்னா பின்னப்படுத்தித் துரத்துகிறபோது, சேனைகள் பயந்து நான்கு திக்கினுஞ் சிதறி யோடுவதைக்கண்ட துஷ்டத்துய்மன் மகாகோப தீபதனாய் .ரி ந்துவிழுந்து கவுரவசேனையென்னு மாட்டுத்திரளிற் பெரும்புலி போற்பாய்ந்து பாணவருடம் பொழிந்து சின்னாபின்னப்படுத்து கையில்அதுகண்ட அர்ச்சுனனு மவனுக்குத்துணையாய்க்கலந்து இருவரும்சங்கோபசங்கமாய் பாணங்களை வானம்பூமியெங்கும் நிரப்பியதன்றியும், இரதத்தை துரோணாசாரியின்மீது அண்டிச் சிலையாசிரியரை யெதிர்த்து இரண்டு சிங்கங்களைப்போலும் இர ண்டுபருவதங்களைப்போலும் இரண்டுவடவா முகாக்கினியைப் போலும் போர்புரிகையில், அண்டகடாகங்களெல்லா மதிரத்தக் கதாகவுஞ்சமுத்திரஜலமுஞ் சுவறிப்போகும்படியாயும்அர்ச்சுன

னும்துரோணரும்விடுக்கும்வாளிகளின்கொடுமையால்லோகாலோ கங்களெல்லாந் தத்தளிப்பதைப் பொன்னுலவாசிகளாகிய இந் திராதிதேவர்களியாவரும் அந்தவீதியினின்று பார்ப்பதற்குபய ப்பிராந்தியுற்றவராய் நடுக்கங்கொண்டிருக்கையில், அர்ச்சுனரா ஜனைச்சோர்வடையச்செய்வதற்கு அசக்தரால் அவன் பக்கத்தி லிருக்கும் துஷ்டத்துய்மன்பேரி லெதிர்த்து பாணங்களைத்தூ ண்டி, நாலுபாணங்களினு லவனிரதத்திற் கட்டியிருக்குங் குதி ரையைத்துண்டித்து, இரண்டுபாணத்தினுல் தேரையுமுடைத்து ஒருபாணத்தினுல் சாரதியைக்கண்டித்து கியாவென்று சிங்கநா தஞ்செய்தார் அதுகண்ட வீமசேனன்தன்னிரதத்தைத்தூண்டி துரோணருக்கு முன்கொண்டுவந்து நிறுத்தி, துரோணரைநோ க்கி வாருமையா எமது ஆசிபபர பிரம்மகுலத்திற் பிறந்தவர்க ளாகியும் வேதாகமங்களை யுணர்ந்தவர்களாயுமிருக்கும்பெரியோ ர்கள் பிறருக்கிடர்செய்யமாட்டார்கள், தாயாதிகளாயிருப்பவர் கள்புத்ரமித்ர களத்திராதிகளோடுமொன்றுகூடியிருப்பவர்களை வேறுபடுத்தவுமாட்டார்கள், உலகின்கண் சகிக்கப்படாத துன் பம்வந்தபோதினும் தங்கள்குலமுறையினின்றும் பிறழார்களாத லால் தேவரீர் அத்தன்மைவாய்ந்தவராகவிருந்தும் மாபுக்குரி தொழிலைவிடுத்து க்ஷத்திரியர்களுக்கொப்பாகக் கொலைபாதகங் களுக்கு முதன்மையாயேற்பட்டு இராஜரீகஞ்செய்யப்பட்ட அர சர்களை யனியாயமாயெதிர்த்து உயிர்வதைசெய்துளக்களிப்போ டிருப்பது பிராமணதருமமல்லவேமேலும் ஒருவருக்குப்பிறந் துமற்றொருவருக்குப் பிள்ளையாய்ப்புகுந்து இப்படியனியாயஞ் செய்வது நும்போலியர்களுக் கழகல்லவே, ஓமவேதகுலாத்துங் கரே வனசரனுக்கொப்பாய் வில்லுமம்புங் கையிற்பிடித்து;ஜீவ ஹிம்சைசெய்து அதனுல் வயிறுவளர்ப்பது தகாதகாரியமன் றோ? தேவரீர் மறைவிதிப்படி யாகாதிகிர்த்தியங்களைச்செய்யவும் வேதாகமங்களை மரபினருக்கோதிவைக்கவும் இகபரசாதனத்து க்கேதுவாகிய பகவத்தியானஞ்செய்து உலகினரை உச்சீவிக்கச் செய்யும்நியமத்தை நாசப்படுத்தவோ ஏற்பட்டீர் இதோ உம து முதுகின்பேரிலிருக்கும் அம்புக்கூடென்ன வேதசாஸ்திரங்க ளோ கரத்தினிடமாகவிளங்குந் தநுசென்ன ஓலையோ வலக்கா த்திலோங்குஞ் சிலையென்ன எழுத்தாணியோ அந்தோ இப்படி ரணங்கத்தினின்று கிஞ்சித்தேனு மிரக்கமில்லாமல் வதஞ்செய் யும்படியா யுமக்கு உபதேசித்தவா யாவர்; மேலும் பெறுதற்கு ரிய உமது புத்திரனுகிய அசுவத்தாமன் யுத்தகளத்தில் மடிந்து

போயிருக்க அச்சலனத்தையும் நினையாமல் யுத்தமுனையில் நிற்பதுமெத்தவும் ஆச்சரியமாயிருப்பதோடுந் தங்களைப்போன்றவர்களைப்பார்த்துமறியேன் கேட்டுமறியேனென்று சொல்லியபீமனதுரையைக்கேட்ட சிலையாசிரியர் அசுவத்தாமன் மடிந்தானென்பதையுன்னித் திகைத்துக் கரத்தினிடமாகவிருந்த வில்லைத்தரையில்விடுத்து ஒன்றுந்தோன்றாதவராய் பீமனுரையை யெவ்வாறு நம்பலாமென்று யோசித்திருக்கையில்,பீமசேனன் தனது ரதத்தை துரோணருக்குப் பின்புறமாய்த்திருப்பி சேனைக்கடலுட்புகுந்து, இரதங்களை தும்சப்படுத்தியும், யானைக்கூட்டங்களை கால்வேறு தலைவேறு உடல்வேறு துதிக்கைவேறாகத் துண்டித்தும், குதிரைகளை நாசப்படுத்தியும், காலாட்களைச் சண்டமாருதக்காற்றிலகப்பட்ட சருகுபோல் நான்குதிக்குகளினுஞ் சிதறியோடச்செய்தும் அட்டகாசம்பண்ணிக்கொண்டு சக்ராகாரமாய்சுழன்றக்கொண்டிருக்கையில் பகதத்தன்கண்டு கோபாவேசங்கொண்டு தன்னுடைய யானைப்படைகளோடும் வந்து பீமராஜனைமறித்துப்போர்புரியத்தொடங்கி, பாணங்களைமாரிபோற்பொழிய அதுகண்டபீமன் பகதத்தன்பேரிலெரிந்துவிழுந்து சிங்கத்தைப்போற் கர்ச்சித்து, வில்லினிடமாக அளவிறந்த தீக்கணைகளைச்சந்தித்துப்பிரயோகஞ்செய்து அவனுடைய யானைக்கூட்டங்களைத் தும்சப்படுத்திக்கொண்டிருக்கும்போது துரோணர்பீமன்வார்த்தையைக்கேட்டு யுத்தஞ்செய்யாமல் திகைத்துக்கொண்டிருப்பதை கிருஷ்ணமூர்த்திகண்டு இதுநல்லசமயமென்று மனக்களிகொண்டு அர்ச்சுனனுடைய ரதத்தை தருமராஜன் ரதத்திற்குச் சமீபமாய்க்கொண்டுபோய்நிறுத்தி தருமனைப்பார்த்து ஒய் தருமநந்தனு! இச்சமயம் நான்சொல்லும் வார்த்தையைத் தடுக்காமல் துரோணரைப்பார்த்து அசுவத்தாமன் மரணமடைந்தானென்று சொல்லுவாயாகில் சிலையாசிரியரை வெற்றிபெறலாம் மேலும் பீமன் அவ்வாறுசொல்லியதைக்கேட்டு நம்புவதற்கிடமில்லாமல் ஏதோ எப்படியோவென்று திகைத்திருப்பதால்உனது வார்த்தையை உண்மையென்று நம்பிவில்லைவிட்டுவிடுவார்நமக்கு ஜெயமுண்டாமென்றுசொல்ல, அதுகேட்ட தருமநந்தனன் சிவசிவவென்று செவியைப்புதைத்து ஐயோ இப்படிக்கெல்லாம் வருமென்று ஆதியிற் றெரிந்திருந்தால் இந்த பாரத யுத்தத் ற்குத் தொடங்காமல் வனத்திற்றானே யிருந்து விடலாமன்றோ, பொய்சொல்லித்தானு இராச்சிய

மாளவேண்டும், அப்படிக்கொத்த இராஜரீகங் கிடைத்தாலென்ன கிடைக்காமற் போயிற்றாலென்ன ஓய் சுவாமி! இப்பேர்க்கொத்த அபவாதமானவார்த்தைசொல்ல வென்னால் முடியாதென்று சொல்ல, அப்போது கிருஷ்ணமூர்த்தியானவர் கோபங்கொண்டு ஓய்தருமநந்தனு, உங்களால் நான்பட்டபாடெல்லாம் பாழாகிப் போய்விட்டது அந்தோ நீங்கள் சவுக்கியத்தை யடையவேண்டுமென்றுநான் அநேகம் பொய்சொல்லியும் பிறரைவஞ்சித்தும் தூதுசென்று சங்கடப்பட்டும் உங்களோடு வனத்திற் றிரிந்தும் சாரத்யஞ்செய்தும் என்னபிரயோசனமாச்சுது? நான்சொல்லியபடி ஒருசொற்பகாரியத்திற்கு உடன்படாமல் என்னால் முடியாதென்றுசொன்னால் எனக்காவதென்ன இங்குயாருக்காகப் பாடுபடுகிறேன் யாருக்காகக் கெடுகிறேன் பளாபளா நன்றாயிருக்கிறது உலகின்கண் பொய்சொல்லாதவர்களார், சமயோசித மறிந்தல்லவோ நடக்கவேண்டும் இப்படி சொல்லுவா யென்றறிந்தால் இவ்விண்காரியங்களுக்குப் பிரவேசிக்கமாட்டேன் இப்போதும் எனக்கென்ன வந்ததென்று மெத்தவு மனஸ்தாபங் கொண்டவரைப்போல் தேரைவிட்டு பூமியிற் குதித்துவிட்டார்.

அதுகண்ட தருமநந்தன் திடுக்கிட்டு மனங்கலங்கி, தானும் பூமியிற்குதித்துகிருஷ்ணமூர்த்தியைத் தழுவிப்பிடித்துக்கொண்டு அனேக உபசாரவார்த்தைகளைச் சொல்லித்தேரின் மீதிருக்கச்செய்து, ஓய் ஜனார்த்தனு! வேதவேதாந்தமூர்த்தியாகிய தேவரே யிவ்வாறுசெய்தால் இங்குயாங்கள் செய்வதாவதென்னவிருக்கின்றது அடியேன் பொய்சொல்லவேண்டு மென்றுரைத்ததைக்கேட்ட எனதுசெவியும் மனமுங் குழைந்து நடுக்கமுற்றதே என்னுவிநாலேபொய்யைச் சொல்லிவிட்டு உலகிலெப்படி பிராணனை வைத்திருப்பேன் சுவாமீ! பேதையே னிச்செய்கையைக்குடன்படுவனேயாகில் புவனமுள்ளளவும் நிந்தைக்காளாவதன்றியும் இகபரசாதனத்துக் கேதுவில்லாமற் போய்விடுவேனே என்செய்வேன் எவ்வணமுய்வேன் என்று தருமநந்தனன் துக்கசாகரத்துளழுந்தி யிருப்பதை மாயவன்கண்டு வாரும் தருமராஜனே கிஞ்சித்தேனு மும்மிடத்தில் க்ஷத்திரியதருமமில்லை, எவ்விதமேனும் எதிர்த்த பகைவரை வெல்லவேண்டுமாதலால் நீர் ஒன்றும் யோசிக்கவேண்டாம் ஆயினும் நான் ஒருதந்தியஞ்சொல்லுகின்றேன், அதுயாதெனில் பீமசேனன் பகதத்தனுடைய யானைத்தளத்தில் சிங்கத்தைப்போற்புகுந்து சர்வசங்கார மூர்த்

தியைப்போல் அதப்படுத்துகின்றனுதலால் அந்தயானைத் திரளு ண் முதன்மையாயிருக்கும் யானையின்பெயர் அசுவத்தாமமென்று வழங்குகின்றபடியாலும் அதனைபீமசேனன் கொன்றுவிட்டபடி யாலும் நீர் துரோணுசாரிக்கு முன்னம்போய்நின்று அவரைப் பார்த்து, அசுவத்தாமா ஹதாகுஞ்சரமென்றுசொன்னல் யான் சங்கம் பூரிக்கிறேனென்றுசொல்ல, அதுகேட்ட தருமந்தன் இது வுமொரு தந்திரந்தானென்று நினைந்து தனது ரதத்தை சிலைக்கு ருவின் முன்னங்கொண்டுபோக யத்தனிக்கையில், கிருஷ்ணமூர் த்தியானவர் தருமன் தேரினின்றுங் கீழேகுதித்து, அர்சுனன் தேரிமேலறிக்கொண்டுவரும்போது தருமராஜனைதுரோணர்கண்டு அப்பா தருமநந்தனு அசுவத்தாமன் மடிந்தானென்று பீமன்சொ ன்னதுவுண்மைதானுவென்றுகேட்க, அதற்குத்தருமராஜன் ஆம் சுவாமீ! கவுரதளததிலேஅசுவத்தாமன் பட்டானென்றுசொல்ல அதுகேட்ட துரோணர் புத்ரவாஞ்சையால் வில்லையெறிந்துவிட் டு மூர்ச்சித்து தமுவணையின்மீது சாயஅப்போது தருமநந்தனர் சுவாமீ! பகதத்தனுடைய யானைத்திரளிற் றலைமைபூண்ட அசுவ த்தாமமென்னும் யானையல்லவோ பட்டது நீரேன் மூர்ச்சித்தீ ரென்று சொல்லுவதற்குள் கிருஷ்ணபகவான் துஷ்டத்துய்மனை சைகையால் சிரத்தைக்கண்டித்துவிடுமென்று காட்ட, துஷ்டத் துய்மனும் மூர்ச்சித்திநம்பவர்மீது ஒரு சந்திராயுதத்தைப் பிர யோகஞ்செய்து சிரத்தைக்கண்டித்துக் கீழேசாய்த்தான்.

அக்காலையில் சிலையாசிரியனைக் கண்டித்த வாளியானது நம் மை யாதுசெய்யுமோவென்று அச்சங்கொண்டொளித்ததுபோல சூரியன்மேற்றிசையிற் புகுந்தான். உடனே அஞ்ஞானிகளதுஇத யம்போலக் காடாந்தாரமாகிய விருண்மூடினமையால்அவ்வேளை யிற் பாண்டவர்கள் வெற்றிச்சங்கம்பிடித்து மகிழ்ச்சியோடுபாச றைபோய்ச்சேர, அதுகண்ட கவுரவாகள்-துரோணர் பட்டாரெ ன்னுந் துன்பத்திலாழ்ந்து அவர்களும் பாடிவீடு சேர்ந்தாகள். இவ்வாறுஅற்றைத்தினமுடிந்து மறுநாள்முதற்கர்னன் சல்லியன் துற்சாதனன் துரியோதனுதியரோடுபதினெட்டு நாள்வரையில்யு த்தஞ்செய்துபாண்டவாகள் ஜெயத்தையடைந்தவர்களாய்வெற் றிமாலைபூண்டு அஸ்தினுபுரஞ்சேர்ந்து தருமனந்தருக்குப் பட் டாபிஷேகஞ் செய்யவேண்டி யத்தனிக்கும்போது தவுமியாசாரி

யார் தருமாராஜனைப்பார்த்துக்கூறுவார். வாரும் தருமநந்தனுப தினெந்தாநாள் துரோணருடனே யுத்தஞ்செய்கிறபோது உமது வாக்கிலே பிறந்தசொல்லினுல் அவரிறந்தபடியினுலே அத்தோஷம் உமக்குண்டாயிருப்பது மன்றியில் துரோணருக்கு முன்நீர் கண்டதுபோல் மாயப்படரேற்படுத்திச்சொன்ன பொய்வார்த்தையினுல் உயிர் நீங்கியதோஷம் உம்மைச்சார்ந்திருக்கப்பட்டாபிஷேகஞ்செய்துகொள்வது சரியல்ல. ஆதலால், அந்தத்தோஷத்தை நிவாரணித்துப் பின்பு மகுடந்தரித்துக்கொள்ளவேண்டுமென்று தவுமியர் சொல்லியதைக்கேட்ட தருமநந்தனர் மெத்தவுந்துன்பமடைந்து தன்னுடைய தம்பிமார்களையுங் கிருஷ்ணபகவானையும் வரவழைத்து தவுமியர் கூறியதை யவர்களுக்குரைத்து யோசித்துக்கொண்டிருக்கையில், அவன்வேதவியாச மஹாருஷியானவர் தம்மிடம்விட்டுவந்தார்.

அப்போது தருமர் முதலியயாவரு மெழுந்து வந்தனைவழிபாடுசெய்து ஆசனத்திருந்து நடந்தகாரியங்களை யன்னவரோடுரைத்து பின்நடக்கவேண்டிய கட்டளையென்னவென்று வினவ, அதற்குவேதவியாசர் சற்றுநேரம் யோசித்துநிட்டையிலிருந்து ஞானதிருஷ்டியினுற் பார்த்துச்சொல்லுவார். கேளும்தருமநந்தனரே, நீர்செய்திருக்கும் பாவந்தீரவேண்டுமாயின் பரதகண்டதட்சிணபாகத்திற்சேதுவின் மத்திலோங்குங் கந்தமாதனபருவதச்சாரலில் ஸ்ரீராமமூர்த்தியினுலுண்டாக்கப்பட்ட ராமதீர்த்தத்தில்தீர்த்தமாடிப்பின் இராமநாதனைத் தெரிசித்துவந்தால் பொய்வார்த்தைசொல்லிக்கவங்கச்செய்து குருவைக்கொன்றபாபமும்மற்ற எல்லாக்கர்மங்களும் நிவர்த்தியாவதோடும் நீர்நினைத்த இஷ்டகாமியத்தையும் மோட்சகாமியத்தையுந் தருமென்று சொல்லிவியாசபகவான் செலவு பெற்றுக்கொண்டனர்.

பின் தருமாராஜன் மெத்தவுஞ்சந்தோஷமடைந்து தனதுதம்பிமார்களுடனும் தவுமியர்முதலிய சிலசைந்யங்களுடனும் பிரயாணப்பட்டுக் காடு மலை வனம் வளுந்தரங் காறுறு நதிமுதலியவற்றையும் புண்ணியக்ஷேத்திரங்களையுந்தலங்களையுந் தெரிசித்துக்கடந்து, சேதுவைக்கண்டு அதன்மத்தியில் விளங்குங் கந்தமாதன பருவதச்சாரலில் இராமதீர்த்தக்கரையில்வந்துசேர்ந்தார்கள் அப்படிச்சேர்ந்தபிறகு அந்தராமதீர்த்தத்தில் தருமநந்தன

ன்முதலிய யாவரும் தவும்மியர்சொல்லியசங்கற்பவிதியின்படித்
தீர்த்தமாடி அநேககோதானபூதான கன்னிகாதான முதலியமு
ப்பத்திரண்டாரங்களையும் வழுவின்றிச்செய்து ஸ்ரீராமநாதனையு
ந்தெரிசித்து அந்திசந்தி இரண்டுவேளையினும் இராமமந்திரத்
தை யிடைவிடாமல் செபித்துக்கொண்டு, இப்படியொருமாதகா
லம்வரையில்கடந்து வருகையிலொருநாள், ஆகாயத்தினின்றும்,
ஓய்தருமராஜனே! நீர்சொல்லியபடராகிய பாபம் உம்மைவிட்டு
நீங்கியதென்று அசரீரியோத அவ்வாய்மைக்கேட்டதருமராஜன்
முதலியயாவருங்கேட்டு சந்தோஷமடைந்து தம்பிமாருடனும்
ஸ்ரீராமநாதனுடைய பாதபத்மங்களிற்பணிந்து அநேகவிதமாய்த்
துதித்து அவணின்றுந்திரும்பி அஸ்தினபுரம்வந்துசேர்ந்து
திவ்யமுகூர்த்தகாலத்தில் வியாசமகாமுனிவர்முதலியபெரியோர்
கள் முன்னிலையிற் பட்டாபிஷேகஞ்செய்துகொண்டு இராச்சிய
பரிபாலனஞ்செய்துகொண்டிருந்தார். ஆதலால் அத்தன்மையா
கிய மகிமைபொருந்திய ஸ்ரீராமதீர்த்தத்தில் மூழ்கி ஸ்ரீராமமூர்த்
தியையுஞ் சீதாபிராட்டியாரையுந் தெரிசித்தான் அவர்களுக்கு
வைகுண்டபதவி சித்தியாகும் ஆதலால் அத்தீர்த்தத்துக்குச்ச
மீபமாய் இலட்சுமணதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு, அத்தீர்
த்தமும் இவ்வாறே மகிமையுற்றதென்று சூதமகாமுனிவர்கூறிய
தைக்கேட்ட நைமிசாரண்யர், மெத்தவுஞ் சந்தோஷமடைந்து
முனிவரைப்பணிந்து, சுவாமி! தேவரீர் இப்போதுசொல்லிய இல
ட்சுமணதீர்த்தத்தின்பெருமையை அடியேன்களுக்குத் திருவா
ய்மலர்ந்தருளவேண்டுமென்றுவினவிப்பணிந்துநின்ற முனிவர்மே
ற்கருணைகூர்ந்து சூதமுனிவர்சொல்லத்தொடங்கினர்.

## இராமதீர்த்தம்.

முற்றிற்று.

---

க0-வது

# இலட்சுமண தீர்த்தம்.

கேளுங்கள் முனிவர்களே! இமையாநாட்டரென்னுந்தேவர்களுக்கு இராக்கதர்களாலுற்ற இடுக்கணைத் தவிர்த்தாட்கொள்ளவேண்டிய ஸ்ரீவைகுண்டவாசகனாகிய ஜகதீசன் கருணைகூர்ந்து இவ்வுலகின்கண் ஓங்கும் பரதகண்டத்தில் வயங்கும் அயோத்தியாபட்டணத்துக் கிறைவனாகிய தசரதமகாராஜனுக்குச் சுதனாக வந்தவதரித்து இராமமூர்த்தியெனப் பெயர் பூண்டதன்றியுந் தனக்குத்துணைவனாக ஆதிசேடனை இலக்குமணனென்னுந் தம்பியாக வருவித்துக்கொண்டும் இலக்குமியைச் சீதாபிராட்டியென்னும் பெண்ணாய் ஜனிப்பித்து அன்னவளை மணந்தும்மூவரும் வனத்திற் பிரவேசித்து பிராட்டியை இராவணனாற் சிறையிடுவித்து வானரவீரர்களைக் கூட்டி இலங்கைக்குச் சேதுபந்தனஞ்செய்து இராவணாதிராக்ஷதர்களையெல்லாம் வதஞ்செய்து அம்மையின் சிறைமைபமீட்டு அவணின்றும் திரும்புங்காலையில் சேதுவின்மத்தியிற் கந்தமாதன பருவதத்தில் சிவலிங்க பிரதிஷ்டைசெய்து வணங்கியபின் இலட்சுமணரானவர் தனித்துச்சிவபூசைபண்ணக்கருதி ஸ்ரீராமநாதனுக்கு மேற்பாகத்தில் சிவலிங்க பிரதிஷ்டைசெய்து ஓர்தடாக முண்டுபண்ணி அத்தீர்த்தத் தினாற் சுவாமிக்குத் திருமஞ்சனஞ்செய்து, கந்தபுட்ப தூபதீபங்களாற் பூசித்து நிவேதனங்காட்டிப்பணிந்து பின் அத்தீர்த்தத்திற்கு இலட்சுமண தீர்த்தமென்று நாமகரண[redacted]ாற்றிச் சென்றமையால் அதுமுதல் இலட்சுமண தீர்த்தமென்று வழங்கி வருவதனோடும் அதிற்றீர்த்தமாடியபேர்களுக்கு வேதாகமசாஸ்திரப்பயிற்சியும் தனகனகவஸ்துவாகனங்களும் புத்ரசம்பத்தும்தயாளகுணமும் அணிமாவாத்யஷ்ட சித்திகளும் அஷ்டாங்க யோகங்களும்அநுகூலப்படுவதோடும் பிரமசொரூபம்பெற்று அண்டபரிபூரண சச்சிதானந்த சின்மய ஸ்வரூப சாட்சாத்காரமாகிய பரசிவத்துடனிரண்டற கலப்பார்கள்.

மேலும்அத்தடாகத்தில்மூழ்கி அதன்கரைமீதிருக்குஞ் சிவலிங்கப் பெருமானைப் பஞ்சசுத்தியோடும் பூசித்துப் பணிந்தவர்

கள் அகண்ட ஐசுவரியத்தைப் பெறுவதோடுஞ் சுத்த சத்துவத்திலிருந்து கிடைப்பதற்கரிய சாயுச்யமென்னு முத்திவீட்டையடைவார் ஆதலாலத்தீர்த்தத்தில் வசுதேவதனயனாக வந்தவதரித்துக் கஞ்சனைக்கடிந்து காலிகளோடு மோடித்திரிந்தும் கருதற்கரிய லீலாவிநோதங்களைப் புரிந்த கண்ணபிரானாகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கு நந்தன்மனையில் முன்னுதித்தோனாகிய பலராமன் தீர்த்தமாடிபிரம்மஹத்தி விமோசனமாயிற்றென்று சூதமாமுனிவர் கூறியதைக்கேட்ட நைமிசாரண்ய வாசிகளாகியமுனிவர்கள் அதிகாதலோடுஞ் சூதமுனிவரைப்பணிந்துசுவாமீ! தேவரீர்கூறியவண்ணம் பலராமனுக்குஎவ்விதமாய்பிரம்மஹத்தி பற்றியதோ அதனையடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று வினவ முனிவர் சொல்லத்தொடங்கினர்.

கேளுங்கள் நைமிசாரண்யரே! குந்திமக்களாகிய பாண்டவர்களுக்கும் கவுரவர்களுக்கும் பாரதயுத்தந்தொடங்குங்காலையில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் பாண்டவர்பக்களில்அர்ச்சுனனுக்குச்சாரதியாக வமைந்ததுகண்ட பலராமர் தனதுதம்பியாகியகிருஷ்ணமூர்த்தியை வெறுத்து, இருதிறத்தாரோடும் வார்த்தையாடாமல் யாத்திரைசெய்யக்கருதிப் பிரயாணப்பட்டு சிவஸ்தலங்களையும் விஷ்ணுஸ்தலங்களையும் தெரிசித்துக்கொண்டு; கங்கை யமுனை கோதாவரி சிந்து காவேரி நர்மதா முதலிய நதிகளிலாடியுந் திவ்விய க்ஷேத்திரங்களில் வாசஞ்செய்து மிருக்கிற காலையில், நைமிசாரண்யத்தில் தீர்க்கசத்ரயாகஞ் செய்வதாய்க் கேள்வியுற்று அதனைப் பார்க்கவேண்டி, நைமிசாரண்யத்தை நோக்கிவருகையில், பலராமர் வருதலைக்கண்ட நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவாக[redacted]ழுந்து எதிர்கொண்டுபோல் வந்தனை வழிபாடுசெய் தழைத்து வந்து ஆசனத்திருத்தி தோத்திரஞ்செய்து கொண்டிருக்கையில் அம்முனிவர்களுக்குள் தலைமைபூண்டு அவர்களுக்கு வேதாகமசாஸ்திர ரகஸ்யங்களை யுபவேசித்துக் கொண்டிருக்கும் சூதமாமுனியென்னும் யான்மாத்திரம் பலராமரைக்கண்டு எழுந்திராமலும் வணங்காமலு மிருந்ததுகண்டு இத்தனைபேருக்குள் இவனுக்கு மாத்திரம் இந்தகர்வம் எப்படி வந்ததென்றும் இவனை உலகில் வைக்கப்படா தென்றும் சங்கரித்து விடவேண்டுமென்றும் மனத்தி லுன்னியமாத்திரத்தில் உடனே தனக்கு முன்பாக அநேக வலுமேவோடும் வரப்ரசாதத் [illegible] கலப்பை காணப்பட்டது. அப்பு

டித்தோன்றியமாத்திரத்தில அதையெடுத்துக்கையிலேந்திக்கொண்டவராய் அதன்பிரயோகத்தினால் தர்ப்பாசனத்திலிருந்தபுராணிகனாகிய என்னைக்கொன்றுவிட்டார். கொன்றமாத்திரத்தில் அங்குள்ளயாவருங்கண்டு திடுக்கிட்டுமெய்மறந்து நடுக்கத்தோடெழுந்து பலராமருடைய பாதகமலங்களிற்பணிந்து நமஸ்கரித்துகைகளைக்கட்டிக்கொண்டு சுவாமீ பலராமரே! தேவரீரதுமகிமைதெரியாமல் சிறியோர்களா யுள்ளவர்கள் செய்தபிழையை பெரியோர்கள் பொருத்தாட்கொள்ளக் கடனன்றோ ஆதலால் தேவரீரே யிவ்வாறு கோபஞ்செய்தால்வேதங்கள்நிலைகுலைந்து போவதன்றியும் அண்டங்களும்வெடித்து சமுத்திரமுஞ்சுவறி சந்திரசூரியாளுங்கதிமாறி விபர்த்தமாய்விடு மாதலால் இப்பிள்ளையின் குற்றத்தைப்பொறுத்து ரட்சிக்கவேண்டுமென்று முனிவர்கள்வணங்கித்தோத்திரஞ்செய்ய, அப்போது பலராமர்கொண்டகோபந்தணிந்து கூறுவார்.

வாருங்கள் மஹாருஷிகளே, உங்களுக்கெல்லாமிவர் பெரியவரென்று யோசித்துப்புராணங்களைக்கேட்டுக்கொண்டிருப்பதேயன்றி நமக்கிவர்பெரியவரா, சத்தியவதி குமாரராகிய பராசரர் முதலாகியபேர்களும் நம்மைக்கண்டு உபசாரஞ்செய்யும்போது இவர் எம்மாத்திரமென்று பலராமர் சொல்லக்கேட்ட மஹாருஷிகள்மறுபடியுமவரைவணங்கித்துதித்து சுவாமீ! புராணகாலக்ஷேபஞ்செய்துகொண்டிருக்கிறகாலையில், அவ்விடம் மெத்தன்மையானவர் வந்தபோதிலும் பிரசங்கத்தைவிடுத்து உபசரிக்கவேண்டுவதில்லையென்று சுருதிவாக்கியங்களால் சொல்லப்பட்டிருக்கின்றபடியினாலே சூதர் அதையோசித்திருந்தேயன்றி கர்வித்திருந்தவரல்லர் ஆயினுந் தேவரீரைக்கண்டு மதையோசித்திருக்கக் கூடாமையாதலால் இவர்செய்த தப்பிதத்திற்குஅடைந்த தண்டனை போதுமானதால் பழையபடி எழுப்பித்தருவதன்றியும்இவ்வனத்தில் எங்களுக்கு இம்சையைக்கொடுத்துவரும்வில்வலாசுரனுடைய குமாரன் வற்கலாசுரனைச்செயஞ்செய்து எங்கள்துயரத்தைப்போக்கவேண்டுமென்று வினவியதுகேட்ட பலராமர், கோபந்தணிந்து குழந்தைகளாய் நமக்குவிளங்குகின்ற நீங்கள்சுருதிய வண்ணமுடிப்போமென்று யோகானுக்ரகத்தினாலும் முனிவர்களதுயாகாதிமகிமைகளினாலும் என்னையெழுப்பினன்கு வேண்டியவரங்களைக்கொடுத்து முனிவர்களைப்பார்த்து, ஓமுனிவ

ர்களே! இன்றைக்குத் துவாதசி திதியாதலாலும் இன்று நம்மாற் சூதமுனிவர் வாதஞ்செய்யப்பட்டு உங்களுக்கு நடந்துவரும்புராண காலக்ஷேபஞ் சூந்யப்பட்டுப்போனமையாலும் இதுமுதல் உலகின்கண்வரும்பிரதிதிகடோறும் காலக்ஷேபமில்லாமல் புராண சூந்ய திதியென்று விளங்கக்கடவதென்று கட்டளையிட்டுச் சூத மாமுனிவர்முதலிய சகலர்களோடும் தீர்க்கசத்திரயாகத்தை நடத்துகின்ற விநோதங்களைப்பார்த்துக்கொண்டிருந்தார்.

அப்படியிருக்கையில் வற்கலாசுரனென்பவன் பௌரணை யாகுமத்தினத்தில் முனிவர்களால் நடத்துந்தீர்க்கசத்திரயாகஹோம குண்டத்தில் மலமூத்திரங்களும் மாமிசாதி யென்புகளுங் கொண்டுவந்து சொரிந்தும், மதுக்குடங்களைப்போட்டுடைத்தும் நிணங்களைச்சொரிந்தும் யாகசாலையில் இம்சைசெய்யும்போது முனிவர்கள்கண்டு வெகுண்டு பலராமரிடத்திற்சொல்ல பலராமர்கேட்டுக்கோபங்கொண்டு ஆகாயத்தை யேறிட்டுப்பார்க்கிறபோது ஆகாயவீதியினின்றும் வெளியெல்லாம் நெருங்கிமூடி கன்னங்கறேலென்று நீலபருவதத்தைப்போன்ற தேகமும் செவ்வானம் போன்றசடைகளும்கரத்திற் சூலாயுதமும்பிடித்து சத்தாடம்பரத்துடனே நிற்கும் வற்கலாசுரனைக்கண்டு, கோபாவேசங்கொண்டு, தன்னுடையகரத்திலிருந்த கலப்பையைவற்கலாசுரன்கழுத்திலேமாட்டிக்கீழேதள்ளிக்கொண்டு வலதுகையிலேயிருந்தஉலக்கையினாலே ஓரேயடியாயடிக்க, அவ்வசுரன் வாயினாலுமூக்கினாலு மிரத்தங்களைக் கக்கிக்கொண்டு தேவேந்திரனாற் சிறகறுப்புண்டு விழுந்தபருவதங்களைப்போல வெத்திசையு மிரத்தங்கள் கொப்பளித்தோட வலறிவிழுந்துமரணமடைந்தான். அப்போது நைமிசாரண்யமுனிவர்களியாவருஞ்சந்தோஷமடைந்து, பலராமரைவணங்கித்தழுவித் தீர்த்தமாடச்செய்து பட்டுவஸ்திரங்களைத்தரிக்கச்செய்துவிபூதிருத்திராக்ஷமாலிகாபரணங்களையணிந்து தோத்திரஞ்செய்து, வாருமையா சுவாமி பலராமரே! இவ்விராக்ஷதன் பிரமபீஜத்துக்குரியவனாதலா லிவனைக்கொன்ற பாபம் நீரும்பயோய்புண்ணியநதிகளிலேபோய்த் தீர்த்தமாடிவரவேண்டுமென்றுசொல்லியதைக்கேட்டபலராமர் அப்படியேயாகட்டுமென்றுநைமிசாரண்யரிடத்தில்விடைபெற்றுக்கொண்டுகோதாவரி, பிரயாகை காவேரிசரஸ்வதிநர்மதா துங்கபத்திராமுதலியநதிகளில்சங்கற்பவிதியின்படிஸ்நானஞ்செய்துஅஸ்தினபுரத்தைநோக்கி

ப்பிரயாணப்படுகிறபோது, அண்டகடாகங்களுமதிர்ந்துபோகும் படியாய்ச்சத் தாடம்பரஞ்செய்துகொண்டுநீலபவர்வதம்போலப லராமருக்குமுன் மறித்துக்காட்டிப்பின்பக்கத்தில்ஆகாயம்வரை யிலுயர்ந்து வற்கலாசுரனுடைய பிரமஹத்தி தொடர்ந்துபற்ற போது பலராமர்கண்டுபயந்து இதுவென்னகாரணமென்றுயோ சித்துநிற்கிறபோது ஆகாயத்தினின்று ஓ உரோகிணிகுமாரா, பிரம்மகுலத்திலே யுற்பவித்த வற்கலாசுரனைக் கொன்றதோஷம் சிறிதுநீங்கியும் நீங்காமலு மிருக்கிறபடியினாலே அந்த பிரமஹத் தி உன்னைத் தொந்தரவு பண்ணுகின்றதென்று அசரீரியுரைக்க அவ்வார்த்தையைப்பலராமர்கேட்டு மறுபடியுந்தருகாவனத்தை நோக்கிப்பிரயாணப்பட்டுப்போய் ருஷிகளைக்கண்டு, இவ்வனத் தில் வற்கலாசுரனைக்கொன்ற தோஷம் ஒருவருடமாய்ப் புண்ய நதிகளிற் றீர்த்தமாடியும் திவ்யக்ஷேத்திரங்களிலே வாசம் பண் ணியும் என்னைவிட்டகலா திருப்பது யாதுகாரணமென்றுநடந்த வர்த்தமானங்களைச்சொல்ல, முனிவர்கள் கேட்டு யோசித்துச் சொல்லுவார் வாருமையா சுவாமிகளே தேவரீர் மனதின்படியே இத்தோஷ நிவாரணமாக வேண்டுமாயின், கந்தமாதன பருவத த்தில் ஸ்ரீராமச்சந்திரனுடைய சகோதர[illegible]கிய இலட்சுமணன் இந்திரஜித்தைசெயஞ்செய்து தன்னுடைய தோஷந்தீரவேண்டி சிவபூசைசெய்து உண்டாக்கப்பட்ட தடாகமாகிய இலட்சுமண தீர்த்தமென்று ஒருபுண்யதீர்த்தமிருக்கின்றது. அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்த மாத்திரத்தில் தோஷநிவர்த்தியாமென்று முனி வர்சொல்ல பலராமர்கேட்டுச் சந்தோஷமடைந்து அவணின்றும் பிரயாணப்பட்டுகொடுமைலவனம் வனாந்தரமுதலிய யாவுங்கடந்து சேதுவிலோங்கும் கந்தமாதனகிரிச் சாரலிலே விளங்கும் இலட் மணதீர்த்தத்தில்வந்து விதிப்படி ஸ்நானஞ்செய்து, சந்தியாவந் தன நியமநிட்டைகளை முடித்துக்கொண்டு கோதும்பைஎன்முத லிய நவதானியங்களும் பொன் ஆடையாபரண முதலியயாவும் வேதியர்களுக்குக் கொடுத்து, இலட்சுமணேசனை பிரதட்சிணஞ் செய்து நமஸ்கரித்து அபிஷேகமுதலியயாவும் நடப்பித்து ஆரா தனைசெய்து துதித்துநிற்கையில் ஆகாயத் தினின்றும், ஓ பலரா மமூர்த்தியே உன்னைப்பற்றி யிருந்த பிரமஹத்தி நிவர்த்தியாகி விட்டதென்று அசரீரிதோன்ற அவ்வாய்மையைக் கேட்டபலரா மர் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து துவாரகையை நோக்கிப் பிர யாணப்பட்டுப் போய்விட்டாரென்று சூதமகாமுனிவர் சொல்லி

பதை நைமிசாரேண்யருஷிகள்கேட்டு சுவாமீ! தேவரீர்சொல்லிய யாவுங்கேட் டானந்த பரிதராநோம். ஆயினும் பலராமர் ஸ்ரீராமநாதனைத் தெரிசியாமல் வந்துவிட்ட காரணமியா தெனவினவ, சூதமாமுநிவர் கேளுங்கள் நைமிசாரண்யரே, சேதுவின் மத்தியிலே விளங்குந் தீர்த்தங்களாடப்போனவர்கள் ஸ்ரீராமநாதனைத் தெரிசிக்காமலும் சேது தநுக்கோடியிலே மூழ்காமலும் வருகிறபேர்களுமுண்டோ, இலட்சுமண தீர்த்தத்தின் மகிமைகளைச் சொன்னோமல்லது மற்ற மகிமைகளை இக்கதையிலே சொல்லவில்லை யாதலால் பலராமரித்யப்படியாய்ச் சேதுகோடிக்கரையில் மூழ்கி ஸ்ரீராமநாதனைத் தெரிசித்து விடை பெற்றுக்கொண்டு அஸ்தினபுர மார்க்கமாய் துவாரகைக்குப் போய் விட்டாரென்று சூதமாமுநிவர்சொல்ல முநிவர்கள் கேட்டுச் சந்தோஷமடைந்து இன்னமந்தச் சேதுவில் விளங்கிய தீர்த்தமகிமைகளைச் சொல்லவேண்டு மென்று வினவ, சூதமுநிவர் சொல்லத் தொடங்கினார்,

இலட்சுமண தீர்த்தம்.

முற்றிற்று.

---

கக-வது.

## சடாமகுட தீர்த்தம்.

கேளுங்கள்நைமிசாரண்யவாசிகளாகியமுநிவர்களே, அயோத்தியாபுரியினின்றும் ஸ்ரீராமமூர்த்தியானவர் பிதுர்வாக்கியப்படி சீதாபிராட்டியோடும் இலட்சுமணப் பெருமாளோடும் பிரயாணப்பட்டு வனத்தைநோக்கிச் செல்லுகையில், அரசக்குரிய கிரீடமகரகுண்டல வாகுவலய முதலியயாவும் நீக்கிச் சிகையைக்கோதி சடைமுடியாய் வகுந்துகட்டிக் கந்தமூலபலாதிகளைப் பூசித்துச்சஞ்சரிக்கையில் தேவியைச்சிறைகொண்டுசென்ற இராவணனைவதஞ்செய்யுநிமித்தம் இலங்கைக்குச் சேதுபந்தனஞ்செய்து வானரப் படைகளோடுஞ் சென்று அன்னவனைக் கிளையோடும்

காய்ந்து சிறைமீட்டுத்திரும்பிக் கந்தமாதனகிரிச்சார லில்வரும்போது தனது சடாமகுடத்தில் இசாவணாதி ராட்சத ர்களுடைய இரத்தமாமிசத்தூளிகளடர்ந்திருக்குமெனக் கருதி யவ்விடத்திலோர் தடாகமுண்டுபண்ணியதிற்றீர்த்தமாடிச்சடை முடிகளைச் சுத்திசெய்து அத்தீர்த்தத்திற்குச் சடாதீர்த்தமென் றுநாமகரணஞ்செய்து சென்றமையால் அதுமுதல் அத்தீர்த்தத் தில் மூழ்குபவர்களது நரைதிரை மூப்புங்காமக்குரோதாதியறு விதப்பகையும் நீங்குவதோடும் ஆணவகாமியமாயையென்னுமல ங்களுமற்று, சரிதைகிரியையோக ஞானங்களை யநுட்டித்து நித் தியானந்த சொரூபராய் முத்திவீட்டைப்பெறுவார்கள். அத்தீ ர்த்தத்தில் மூழ்கிச்சித்திபெற விருப்பமில்லாதவர்கள் தங்களுட ச்சிவெடிக்கும்படியாய் வேதாகமசாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்தும், பிரதமைசஷ்டி ஏகாதசிபிரதோஷம்அமாவாசைபௌ ர்ணைசாந்திராயன விரயங்களிருந்தும், வனங்களிலும் மலைநுழை வுகளிலும் ஜலததில் மூழ்கியிருந்தும், கந்தமூலங்கள் முதலியசு ருகு ஜலபக்ஷண வாயுபட்சணங்களைச்செய்தும், தலைகீழாகநின் றும், ஒற்றைக்காலில் நின்றுங் மான்றோல் புலித்தோல்வெண்டு கில் இரத்தினகம்பளம் தருப்பை முதலிய[illegible]சனங்களிலிருந்தும் பத்திரம்வீரம் குக்குடம் பங்கயம் கோமுகமென்னும் அங்காத ஞ்செய்து உருத்திரமுகமாயிருந்தும் இயமநியமாதி யஷ்டாங்க யோகங்களைச்செய்தும், பஞ்சாக்கினி யிடையினின்று தபஞ்செ ய்தும், முத்திபெறாமல் இராகத்வேஷங்களைப்பெற்று பிறவிப்பி ணியிலுழன்றுதிரிவார்கள் மேலும் ஒருநா ளச்சடாதீர்த்தத்தில் மூழ்கினல் அறுபதினாயிரம்வருடம் கோதாவரிதீர்த்தத்திலஸ்நா னஞ்செய்த பலன்கிடைக்கும் நித்தியப்படி மூழ்கினவர்களுக்கு கங்கை யமுனை கோதாவரி சிந்துகாவேரி நர்மதா துங்கபத்திரா பிரயாகைமுதலிய புண்ணியதீர்த்தங்களிலே ஆடிய பலனுண்டா ம், அன்றியு மச்சடாதீர்த்தத்தில் மூழ்கினபேர்களுக்கு அந்தக் கரணசுத்தியாய் அஞ்ஞான நிவர்த்தியாகி அபரோட்சஞானத் தையடைந்து சாயுச்சியமடைவதற்குச் சந்தேகமிராது மேலும் இத்தன்மையாகிய மகிமைவயப்பெற்றிலகும் அச்சடாதீர்த்தத் தில் பண்டொருகாலத்தில் வேதவியாச மஹாருஷியினுடைய கு மாரர் சுகரென்பவர் வந்துமூழ்கி யந்தமகரணசுத்தியாய் நித்தி யானந்த சொரூபத்தைப்பெற்றுவிளங்கினர்.

அஃதெப்படியெனில், ஒருநாள் வேதவியாசரைச் சுகர்வண ங்கி அநேகதோத்திரங்கள்செய்து சுவாமி? வேதவேதாந்தமூர்த் தியே அடியேன் அகண்டபரிபூரண சின்மயத்தை யடையவேண் டி அநேகதபங்களும் யாகாதி கர்மங்களும் தீர்த்தயாத்திரைக ளுஞ்செய்தும், வேதாகமசாஸ்திர புராணங்களையறிந்தும் மனச் சந்தேகமகன்று சுத்தஞானமடையும் விதியைத்தெரியாமல் உள் ளக்கலக்கமுற் றிருக்கின்றபடியால் அதுநீங்கும்படி ஒருபாயஞ் சொல்லவேண்டுமெனப் பணிந்துநின்ற புத்திரனைப்பார்த்துவேத வியாசர்கூறுவார். வாராய்சுதனே தக்ஷிணபாகத்தில் ஸ்ரீராமமூர் த்தியாற்கட்டப்பட்ட சேதுவிலேலாங்கும் கந்தமாதனபருவதத் தில் சச்சிதானந்த சொரூபமாயுஞ் சடாதீர்த்தமெனப் பெயரு டையதாயும் விளங்குமோர் தீர்த்தமுண்டு அத்தீர்த்தத்தில் நீ போய்மூழ்கி இராமமந்திரத்தை இடைவிடாமற்செபித்துக்கொ ண்டு வருவாயாகில் அந்தக்கரணசுத்தி பெற்றுபேரின்பத்தைச் சார்ந்தபுண்யலோகத்தையடைவாய் அஃதெப்படியெனில் முன் னொருகாலத்தில் உன்னைப்போலவே வருணராஜனுடைய குமார ன்பிருகுமாமுனியென்பவன் அந்தக்கரண சுத்தியாகவேண்டிய தாய்தனதுதாதை[redacted]டத்தில் மந்திபராபலேசம் பெற்றுக்கொ ள்ளவேண்டுமெனக்கருதி வணங்கும்போது வருணராஜன் புத்தி ரன்மேற் கிருபைகூர்ந்து வாராய்பிருகுவே, உனது அந்தக்கரண சுத்தியாகவேண்டியதற்கோ ருபாயஞ்சொல்லுகின்றேன், அஃது யாதெனில் உலகின்கண்வயங்கும் பரதகண்டதட்சிணபாகத்தில் சேதுமத்தியில் ஓங்கும் கந்தமாதன பருவதச்சாரலில் இராமலி ங்கத்திற்கு வலப்பக்கத்தில் இராமலட்சுமணர்களால் உண்டாக் கப்பட்ட சடாதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு அத்தீர்த்தத்தில் நீபோய் தீர்த்தமாடினால் உனது அஞ்ஞானமகன்று பிரமசைதந்ய த்தை யடைவாயென்றுரைக்க அதுபோற்பிருகுமாமுனிவர்சென் றுதீர்த்தமாடிகாமக்குரோதாதி பகைமைக்காய்ந்து நிர்மலசித்த ராய் நித்தியானந்த சொரூபத்தையடைந்தார்.

இதுவுமல்லாமல் துர்வாசமஹாருஷியுமிப்படியே தீர்த்தமா டி இராமமந்திரத்தை யுச்சரித்து விஷ்ணு சொரூபத்தையடைந் துவைகுண்டபதவியப்பெற்றிருக்கின்றபடியால் நீயும்அவ்வாறே சென்று மூழ்கிவரக்கடவையென்று வேதவியாச சொல்ல அது கேட்டசுகரும் தாதையைப்பணிந்து விடைபெற்றுச்சென்று தீர்

த்தத்தில்மூழ்கி இராமமந்திரத்தை ஜெபித்து அந்தக்கரணசுத்தி யாய்மெய்ஞ்ஞானவீட்டையடைந்து பரப்பரம்மசொரூபத்தைக் கலந்தார். ஆதலால் ஓ நைமிசாரண்யர்களே நீங்களுமதுபோற் சடாதீர்த்தத்தில் மூழ்குவீர்களாகில் உங்களைப்பற்றிய அஞ்ஞானமியாவு மகன்று காமதேனு சுரபிவடிவாய் தேவாமிர்தங்களைப் புசித்துப் பேரின்பத்தை யடைவீர்களென்றால் அத்தீர்த்தத்தின் பெருமையை யாவராற்சொல்லிமுடியும் மேலுமத்தீர்த்தத்தில் பிதுர்களுக்கும்பிரீதியாய்த்திலதர்ப்பண திவசமுதலானவைகள் செய்து பிண்டமளித்தால் ஒன்றுகோடியாய்ப் பிதுர்க்களுமானந்தாதிபோகங்களை யநுபவிப்பார்களென்று சூதமுனிவர் கூறியதைக்கேட்ட நைமிசாரண்யர் சந்தோஷசாகரத்தில் மூழ்கி முனிவரைப்பணிந்து சுவாமி! அடியேங்களுக்கு இன்னமக் கந்தமாதனத்தில்விளங்கும் மகிமைகளைத்திருவுளம்பற்ற வேண்டுமென்று வினவ முனிவருளங்கனிந்து அன்னவரைநோக்கி ஓ முனிவரரே! இலக்குமி தீர்த்தமுண்டு அதன்பெருமையைச் சொல்லுகிறோம் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினர்.

சடாமகுட தீர்த்தம்.

முற்றிற்று.

---

கஉ-வது.

# இலக்குமி தீர்த்தம்.

---

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களேமுன்னொருகாலத்தில் சர்வலோக சரண்யனாகவும், ஜகதீசனாகவும், சர்வாந்தரியாமியாகவும், சலசலோசனனாகவும் விளங்கும் வைகுண்டவாசனாகிய மகாவிஷ்ணுவுக்கும் அவரதுதேவியாகிய மகாலட்சுமிக்கும் ஊடல்விளைந்துஒருவருக்கொருவர் கலகமிட்டுஇலக்குமிதேவியார் தனது நாயகனைவிட்டு நீங்கி உலகின்கண் சேதுவிலோங்கும் கந்தமாதனகிரிச் சாரலில்வசிக்கும் முனிவர்களிடம்

வந்துசேர்ந்து தனக்கோர் பன்னசாலை புதுக்கிக்கொடுக்கும்படிகே ட்க அன்னவர்களதுபோ லமைத்துக்கொடுத்த பன்னசாலையி லெழுந்தருளியிருக்கையில் நாரதமகாமுனிவரவண் விஜயஞ் செய்து அம்மையைக்கண்டு பணிந்து கூறிச்சென்ற வண்ண மங்ங னம் ஓர் தடாகமுண்டுபண்ணி அத்தடாகக்கரையிற் சிவலிங்க பிரதிஷ்டைசெய்து பிரதிதினமுந்தான் அத்தடாகத்தில்மூழ்கிச் சிவலிங்கத்துக் கபிஷேகஞ்செய்து மூன்றுகாலமும் பூசித்துநிட் டைசெய்துகொண்டிருந்தார். விஷ்ணுவானவர் வருத்தமுற்று தேவியை யெங்குந்தேடிக்காணுது முடிவில் கந்தமாதனகிரிச் சாரலிற் கண்டு மணக்களிகொண்டு அம்மைக் கநேக வுபசாரவா ர்த்தைகளைச் சொல்லி யழைத்துக்கொண்டு ஸ்ரீவைகுண்டத்துக் கெழுந்தருளும்போது மகாலட்சுமி தன்னுலேற்படுத்திய தடா கத்துக்குத் தன் பெயர்விளங்கும்படியாகவும் அதில் ஸ்நானஞ் செய்து இலிங்கத்தைத் தெரிசிப்பவர்களுக்கு கலிப்பட ரணுகா மலும், அஷ்ட ஐசுவரியங்களுங் கைகூடும்படி வரங்களைக்கொ டுத்துச் சென்றமையால் அதுமுதல் அத்தீர்த்தத்திற்கு இலட் சுமி தீர்த்தமென்றுபெயர். அதில் மூழ்கியபேர்கள் மேன்மையா கிய போகபாக்கியங்களும் அஷ்டைசுவரியங்களும் பெற்றுச் சக் ராதிபதிகளாய் அரசாட்சிசெய்து பரத்துக்கேதுவாகிய மோட் சத்தையு மடைவார்கள்.

ஆகலால், அதுபோல் நந்தியாவட்ட மாலையையுடைய துரி யோதனுதிகளும்பாண்டவர்களும் ஒருவருக்கொருவர்மனஸ்தா பப்பட்டு பாண்டவர்கள் இந்திரப்பிரஸ்தத்திலிருக்கையில் அவர் கள் பிதாவாகியபாண்டுபூபதியை இந்திரசபைக்கு வரப்படாதெ ன்று தேவராஜன்நீக்கிவிட்டமையால் தேவர்களியாவருஞ்சந்தோ ஷிக்கும்படியாய் இராஜசூயயாகஞ்செய்து நிறைவேற்றினுல்தேவ சபையிற் சேர்த்துக்கொள்வார்களெனக்கருதி, நாரதரிடம்தன்பு த்திரர்களுக்குச்சொல்லியனுப்ப அதுபோல் நாரதர்பூலோகத்து க்குவந்து, பாண்டவர்களுக்குரைக்க, அதுகேட்ட பாண்டு மக்க ளாகிய வைவர்களுந் துன்பமடைந்து, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை யழைத்துவந்து ஆலோசிக்கவிரும்பிச் சிலதூதர்களை வருவித்து நிருபமெழுதிக் கொடுத்து துவாரகைக்குப்போய் அதிதீவிரமா யழைத்து வரும்படியாய் உத்தரவு செய்தனுப்ப அவர்களுங்

களிப்புடன் பிரயாணப்பட்டுக் காற்றுங்கடியவேகமாய் துவார கையையடைந்து கிருஷ்ணபகவானைக்கண்டு பணிந்து, திருமுக த்தைக்கொடுக்க, அதை வாசித்துணர்ந்தமாயவன் அவ்வாறேஇ ரதாரூடராய்ப் பிரயாணப்பட்டு இந்திரப்பிரஸ்தத்தைநோக்கி வருகையில் பரந்தாமன் வரவுகண்ட பாண்டவர்கள் பரிவோடு மெதிர்கொண்டுவந்துவணங்கி வந்தனைவழிபாடுசெய்து அழைத் துக்கொண்டுபோய் நவரத்தினகசிதமாகிய அரியாசனத்திலெழு ந்தருளச்செய்து, தங்கள் மனக்குறையை யோதியபோது அது கேட்டவாமனன், பாண்டவர்களைநோக்கிக்கூறுவார். ஓ பாண்ட டவர்களே! உங்கள்தாயையாகிய பாண்டுபூபதி சொல்லியனுப்பி யது சரிதான் ஏனெனில் அதிவீர பராக்ரமசாலிகளாய்ஒப்பொ ருவரின்றி விளங்கும் உங்களை அவர் புத்திரராய்ப்படைத்துந் தேவசபைக்குப்போகயோக்கியதையில்லாதிருப்பது அழகன்று. ஆதலால் இந்திரபதவியினு மதிகமாயிருக்கவேண்டுமாயின்இரா ஜசூயயாகஞ்செய்தாற்றான் கிடைக்கும் மேலும் அந்தயாகஞ்செ ய்வதற்கோவென்றால், வேள்விக்கு வரும்படியாகிய பிராமணர்க ளில் ஒவ்வொருவருக்கும் இரதங்களிலொன்றுங்குதிரைகளிலொ ன்றும்ஒருகூடை பசும்பொன்விழுக்காடு மூன்னூற்றறுபதுநாள் வரையிற் கொடுத்துக்கொண்டு வரவேண்டுமாதலால்அப்படிகொ டுப்பதற்கு உங்களிடத்தில் ஒன்றுமில்லாமையால் மகாவிஷ்ணு வின் தேவியாகிய இலட்சுமியாகிலும் கருணைசெய்து இவண்வந் திருப்பாளாயின் யாகத்தை நிறைவேறச்செய்யலாமென்று கிரு ஷ்ணபகவான் கூறியதுகேட்ட தருமராஜன் வாரும் சுவாமீ!ஸ்ரீம ந்நாராயணமூர்த்தியாகிய பகவானே பிரசன்னமாயெழுந்தருளி யெங்களிடத்தில் விளையாடிக்கொண்டிருக்கிறபோது மகாலட்சு மிவந்து குடிகொள்வதாபெரியகாரியமென்று தருமநந்தனர்சொ ல்ல, அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லுவான்வாரும் தரு மநந்தன நீர்சொல்லுவது சரிதானாயினும் உங்களிடத்திலே லட் சுமி பிரசன்னமாய் அநேக பாக்கியங்கள்வந்தடைந்து இராஜசூ யயாகம் நிறைவேறும்படியாய் நாமோருபாயஞ்சொல்லுகின்றோ ம். அதுயாதெனில்தென்றிசையிற் சேதுமத்தியிலோங்குங்கந்த மாதனகிரிச்சாரலிலே இலட்சுமிதீர்த்தமென்றோர் தடாகமிருக் கின்றது. அத்தடாகத்துக்கு நீங்கள்யாவரும் பிரயாணப்பட்டுப் போய் ஒரு மண்டலப்போதுவரையிலிருந்து பிரதிதினம் புரித வாசார நியமத்தோடும் மூன்றுவேளையுந் தீர்த்தமாடித் தானத

ருமங்களைச்செய்தால் அஷ்டலட்சுமிகளுங் கைவசப்படுவதுமல்லாமலுந் திக்குவிஜயஞ்செய்து அளவிறந்த திரவியங்களையும்இரதகஜதுரகபதாதிகளையுஞ் சேகரஞ்செய்துகொண்டுபின்னர்இராஜசூயயாகத்துக் கெத்தனிப்போமென்று கூறிய கிருஷ்ணபகவான் வாய்மையைக்கேட்ட தருமராஜன் மெத்தவுஞ்சந்தோஷித்து புரோகிதரை வருவித்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியின் முன்னிலையில் பொருந்தின தினம்பார்த்துப் பாண்டவர்களைப் பிரயாணப்படுத்தி அவர்களிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு பகவான் துவாரகைக்குச்செல்ல அப்போது பாண்டவர்கள் சுபமுகூர்த்தத்தில் இரதகஜதுரகபதாதிகளோடும் இந்திரப்பிரஸ்தத்தைவிட்டு நீங்கிக் காடு மலை வனம் வனாந்தரம் காறு நதிகள்முதலிய பதிகளையும் திவ்ய க்ஷேத்திரங்களையுந் தெரிசித்துக் கடந்து சேதுவைச் சேர்ந்து கந்தமாதன பருவதச்சாரலில் விளங்கும் இலட்சுமிதீர்த்தக் கரையிலிறங்கி பகவான் திருவாய்மலர்ந் தருளியதுபோல் ஒரு மண்டலப்போது வரையினும் உபவாசமாய்க் கந்தமூலபலாதிகளைப்புசித்து திரிகாலமுந் தீர்த்தமாடி நியமத்தோடும் நித்யபடியாய் வேதியர்களுக்குக் கோதானம் பூதானம் கன்னிகாதானம் வஸ்திரதானமுதலிய முப்பத்திரண்டறங்களையும் விசேஷமாகநடத்தி இராமநாதனை அந்திசந்திகளில் தரிசித்துத் தோத்திரஞ்செய்து ஒரு மண்டலப்போது நிறைவேறிய பின்னர் அக்கினிச்சாரியிலுண்டாகிய தீர்த்தங்களிளெல்லாந் தீர்த்தமாடி கடவுளைவணங்கி இரதகஜதுரகபதாதிகளோடும் பிரயாணப்பட்டு இந்திரப்பிரஸ்தம்வந்துசேர்ந்து, துவாரகைக்குத்தெரிவித்து ஸ்ரீகிருஷ்ணபகவானை வரவழைத்து வேண்டிய உபசரணைகள் செய்து, தாங்கள்தீர்த்தமாடிவந்ததை ஆதியந்தமாகத் தெரிவிக்க, அதைக்கேட்ட கிருஷ்ணமூர்த்திமெத்தவுஞ் சந்தோஷமடைந்துபின்பு பீமசேன அர்ச்சுன நகுல சகாதேவர்களோடும் சேனாதிபதிமுதலிய இரதகஜதுரக பதாதிகளோடுந் திக்குவிஜயஞ்செய்துவரும்படியாய்பிரயாணப்படுத்திவிட்டுசெத்யபாமையோடும்இந்திரப்பிரஸ்தத்திலிருந்து யாகத்துக்குவேண்டியசாமக்கிரிகைகளைச்சேகரஞ்செய்துக்கொண்டிருக்கையில,வீமசேனன் அருச்சுனன்நகுலன் சகாதேவர்களிந்நால்வருஞ் சேனைசெனியங்களோடும்பதினெண் பூமியிலுள்ளராஜவர்க்கங்களையும் ஐம்பத்தாறுதேசத்துப்பொக்கிஷபண்டாரங்களையும் இரதகஜதுரகபதாதிகளையுந்தங்கள்கை வசப்படுத்திக்கொண்டு இந்திரப்பிரஸ்தம்வந்து சேர்ந்து அநேக

மாயிரங் கோடிவெள்ளமாய் யானைகுதிரை முதலியவைகளும் அநேகங்கோடிபாரம் பசும்பொன்னும் இலங்கைவேந்தனாகிய விபீஷணனாற் கொடுக்கப்பட்ட அளவிறந்த நவமணிக்குவியல்களும் பொற்குவியல்களும் ஆடையாபரணாதிகளுஞ் சேர்ப்பிக்க விடமில்லாமல் நிறைத்துவைத்ததை ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுந் தருமராஜனுங்கண்டு சந்தோஷமடைந்து நல்லசுபமுகூர்த்தத்தில் இராஜசூயயாகத்துக் காரம்பஞ்செய்து, திரௌபதைசமேதராய்தபோதனர் ருஷீசுவரர்முநீஸ்வரர்கள் முன்னிலையில் பந்துமித்ராதியர்கள் சந்தோஷிக்கும்படியாய் த்ரியவுபவாசமாய் மூன்றுகாலம் வேதாகமவிதிப்படி ஸ்நானஞ்செய்து முன்னூற்றறுபது நாள் வரையில் யாகத்தை யநுட்டித்து, பூரணாகுதிசெய்து தேவர்கள் சந்தோஷப் படும்படியாய்க்கொடுத்து, வேதியர்முதலிய பெரியோர்களுக்கு ஒவ்வொருவருக்கும் இரதகஜதுரக முதலிய வைகளும், பசும்பொன்னும் ஆடையா பரணங்களுங்கொடுத்து திருப்திசெய்வித்து யாகமுடிந்தபின்னர் இவர்கள் தந்தையாகிய பாண்டுபூபதியை பொன்னுலகத்தரசனாகிய இந்திராதிதேவர்களெதிர்கொண்டுபோய் அநேகசைத்யோபசாரங்களோடு மழைத்து வந்து தேவராஜனுக்கிணையாய் இந்திரநீலமரகத வெயில்பரப்புமரியாசனத்தில் உட்காரவைத்துக் கொண்டிருக்கையில, இங்ஙனம்தானம்வாங்கிய பிராமணாள்முதலிய பெரியோர்களியாவரும் பேரானந்தமுற்றுப்பாண்டவர்களைப்புகழ்ந்துவிடைபெற்றுஅவர்களுடைய ஸ்தானங்களுக்குப் போய்ச்சேர்ந்தார்கள். பின்பு குந்திமக்களாகிய பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை யுள்ளன்போடுபுகழ்ந்து துதித்து, துவாரகைக்கு அனுப்பி தாங்கள் அஷ்டலட்சுமி கடாக்ஷம் பொருந்த வாழ்ந்திருந்தமையால் அத்தீர்த்தத்தின்பெருமையை யாவராற்சொல்லிமுடியுமென்று சூதமுனிவர் கூறியதைக்கேட்டமுனிவர்கள் சந்தோஷங்கொண்டுசுவாமிபின்னுமங்குள்ள தீர்த்தமகிமைகளைச் சொல்லவேண்டுமென்று வினவ, சூதர் உளங்களிகூர்ந்து ஓ முனிவர்களே! அக்கினிதீர்த்தமென்று ஓர்தீர்த்தமுண்டு, அதன பெருமையைச் சொல்லுகிறேனென்று சொல்லத்தொடங்கினார்.

## இலக்குமிதீர்த்தம்.

முற்றிற்று.

---

கஅ-வது.

# அக்கினி தீர்த்தம்.

கேளுங்கள் முனிவர்களே! செப்புதற்கரிய சிறப்புற்றிலகுங் கந்தமாதன பருவதச்சாரலில் தருமசொரூபமாயுஞ் செல்வவடிவாயும் தபோதநராதி புண்ணியர்களுக்குத தாயகமாயும் சமுத்திரக்கரையருகில் விளங்காநின்ற அக்கினிதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு. அத்தீர்த்தத்தில் மூழ்கினவர்களுக்கு உண்டாகிய அஞ்ஞானங்களகன்று தேஜோமயமாய் விளங்கும்படி செய்யும் அதன் பெருமையை யாவரார் சொல்லப்படுமென்று சூதமகாமுனிவருரைத்த வாய்மையைக்கேட்ட நைமிசாரண்யர் மிகவுஞ் சந்தோஷமடைந்து, சுவாமீ! தேவரீர் கூறியவண்ண மத்தீர்த்தம் செல்வவடிவாயிருப்பதற்கு அக்கினி தீர்த்தமெனப் பெயர்வந்த காரணமியாதோ, அதனை அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுகேட்க, அதற்குக்கூறுவார் ஓ முனிவர்களே ஸ்ரீராமமூர்த்தியின் தேவியாகிய சீதாபிராட்டியை இலங்கைவேந்தன்கொண்டுபோய் அசோகவனத்திற் சிறையிட்டிருந்தபோது அன்னவன் தம்பியாகிய விபீஷணனை இராமமூர்த்தியானவர் அடிமைகொண்டு இலங்கைக்கு சேதுபந்தனஞ்செய்து வானரவீரர்களோடுஞ்சேனைகளோடுஞ்சென்று இராவணனதுபத்துமுடியும் பனங்கொத்துபோல அற்றுவிழச்செய்து அவ்விலங்கைக்கு விபீஷணனைப்பட்டாபிஷேகஞ்செய்து, அவணின்றுஞ்சீதாபிராட்டியோடும் மீண்டு, கந்தமாதன கிரிச்சாரலில் வழங்கும் வனத்தில் வந்துசேர்ந்து உம்பராதி யிம்பர்களுக்குரிய மனக்கலக்கம் நீங்கும் படியாய் மனதில்நினைத்தும் இராமமூர்த்தியானவர் அக்கினிதேவனைவரும்படியாய் நினைத்தமாத்திரத்தில், அக்கினிதேவன் தன்னுடைய இச்சாசொரூபமாய் சிவந்ததேகத்துடனுஞ் சிவந்தகண்களுடனும் வக்ரதந்தங்களுடனும் எழுநாவுடனும் சிவந்த ஆடையாபரணங்களுடனும் சிவந்தவில்லும் அம்புங்கொண்டு நாற்றிசையுமக்கினிச் சுவாலையானதுவீசும்படியாய் இராமமூர்த்தியின் முன்வந்துநிற்கும்போது, அவனைக்கண்ட தசரததநயன்சந்தோஷத்தையடைந்து, சீதாபிராட்டியைப்பார்த்துக் கூறுவார். வா

ருஞ்சனகனுக் கிருகண்மணிபோல்விளங்கும் பெண்ணே! உனது பதிவிரதாதன்மம் யாவருக்கும்விளங்கும்படியாய் இந்தஅக்கினியிலே மூழ்கி வரவேண்டுமென்றுசொல்ல, அதுகேட்டதேவியார் மகாசந்தோஷத்தை யடைந்து யானையைக்கண்ட சிங்கத்தைப் போலும்கலையைக்கண்டபுலியைப்போலும் அக்கினியிற்பாய்ந்து நாற்றிசையுமுலாவ, அதை தேவேந்திராதி முனிவர்கள் முதலிய யாவருங்கண்டு அம்மையின் கற்புக்கு ஆச்சர்யமடைந்து பாரிஜாத மந்தாரமுதலிய மலர்களைச் சோனைமாரிபோற் சலசலவென்று வருஷிக்கும்படியாய்ச்செய்து தேவதுந்துபி முலக்கும்போது அக்கினிபகவானு அம்மையின்கற்பாகிய கடுங்கனலைத்தான் தாங்கமாட்டாமல், தாயே, நினதுகுழந்தையாகிய எனக்கு தேகங்குழைந்து வெந்து நொந்து போகின்றதே என்செய்வேனம்மணீ, கடையேனை யிவ்வேளை காத்து இரட்சிக்கும்படிக் கருணை செய்து வெளிப்படுவாய் தாயேயென்று துன்புறுவதைக்கண்ட இராமச்சந்திரமூர்த்திசந்தோஷத்தை யடைந்திருக்கஅப்போது அக்கினிதேவன் பயபக்தி விநயத்தோடும் சுவாமியின் பாதத்திற் பணிந்து கூறுவான்.

சுவாமி இந்த சீதாலட்சுமியினுடைய மகிமையை ஆயிரஞ்சிரமு மிரண்டாயிரம் நாவும்படைத்த ஆதிசேடனுக்குஞ் சொல்லவரிதென்றால் ஏழுநாவையுடைய நானெவ்வாறு சொல்லுவேன் மேலும் இந்த மகாலட்சுமியைப் பரிசோதிக்கவுங் கூடுமோ சகல லோகங்களினும் விளங்கும் பெண்களுக்குட சிரோமணியாயிருப்பதன்றியுந் தேவர்கண் முதலிய யாவருக்குந் தாயகமாயிருப்பவள், நரவுருவ்வாயவதரித்து தேவரீருக்கு பாரியையாகத் தோன்றிய மாயா சொரூபி நித்தியமங்கல கலியாணி சகல ஜனபரிபாலினி ஜெகன்மோகினியே யிந்த வுருவங்கொண்டு சீதையென்னும் பெயர்பூண்டு இந்த யுகத்திலனந்த வற்புதங்களை யெல்லாம் நடப்பிக்கும்பொருட்டு அவதரித்திருக்கு மம்மணியே தேவரீர் பரிசோதிப்பதெவ்வாறெனச் சொல்ல அப்போது தேவேந்திரன் முதலியயாவருஞ் சந்தோஷமடைந்து அம்மையாரை மேன்மேலும் புகழ்ந்தார்கள். அது கண்ட இராமமூர்த்தி மனமகிழ்வுகொண்டு தனது தேவியைக் கருணையோடும் நோக்கி வாரும் பெண்ணே யெனறழைக்க உடனே சீதாபிராட்டியார் தனது கூந்தலிலே யணிந்திருந்த புட்பங்களெல்லாம் அன்றலர்ந்த புட்பம்போற் பிரகாசிக்கும்படியாய் அக்கினியை விட்டு வெளிப்பட்டு தனது நாயகனாகிய இராம மூர்த்தி

யைப்பணிந்து நிற்கையில் அக்கினிதேவனும் சீதாலட்சுமியைச் சோதித்தபாபந்தீரும்படியாய் சமுத்திரத்திலேஸ்நானஞ்செய்து இராமமூர்த்தியைவந்துவணங்க அப்போதுஇராமர்வாருமக்கினி பகவானே! நீர்சமுத்திரத்தில் மூழ்கினமையால்அவ்விடத்துக்கு இன்றுமுதல்அக்கினிதீர்த்தமென்றுசந்திரசூரியருள்ளவரையில் விளங்குவதோடும் மகாமகிமைகளைப் பெற்றும் எவ்வகைப்பாவி கள் வந்து தீர்த்தமாடியபோதிலும் அவர்களுடைய பாவங்களி யாவுமகன்று புண்யதேகத்தைப் பெற்று சாலோகசாமீபசாரூப சாயுச்யமென்னும் பதவிகளைப் பெறுவதோடும் பெண்களாய்ப் பிறந்தவர்கள் கற்பும் மக்கட்பேறும் பெற்றுப் பரிசுத்தராவதன் றியும் அன்னவர்களைப் பற்றிய பிரமராக்ஷஸிமுதலிய பேய்பிசா சுகளும் விலகிப்போகுமென்றும் வாக்களித்து இராமமூர்த்தியா னவர் சீதாபிராட்டிமுதலிய யாவரோடு மவணின்றெழுந்தருளிக் கந்தமாதன பருவதத்திற் சேர்ந்திருந்தாரென்றுசூதமுனிவர்சொ ல்ல அதுகேட்ட நைமிசாரண்யர் சுவாமீ! தேவரீர் பூதபிரேதபி சாச கணங்களும் விலகுமென்று கூறியது எவ்வண்ணமோ அத னைத் திருவளம்பற்ற வேண்டுமென்று வினவிய முனிவரைப்பார் த்து, ஓ முனிவர்களே இந்த பூலோகத்திலே பாடலிபுரமென்றோ ர் பட்டணமுண்டு.

அந்தப் பட்டணத்திலே பசுமானென்னுமோர் செட்டியா னவன் மிகவும் போக்யதாபட்ச முடையவனாகவும் புத்திசாலி யாகவும் வெள்ளி பொன்முதலிய பலபல வியாபாரங்களிலும் கீர் த்திவகித்தவனாகவும் இராஜ சன்மானமுடையவனாகவு மிருப்ப வனுக்கு இரத்தினவதியென்றும் சொர்ணவதியென்றும் குண வதியென்றும் பெயரையுடைய மூன்று பத்தினிகளுண்டு அம்மூ ன்றுபேர்களுள் மூத்தவளாகிய இரத்தினவதியென்பளுக்கு சுவ ண்யனென்றும் மண்யனென்றும் சொரூபண்ய னென்றும் மூன் று பத்திரர்களும் அவளுக்கிளையாளாகிய சொரூபண்ய னென் றும் மூன்று புத்திரர்களும் அவளுக்கிளையாளாகிய சொர்னவதி யென்பவளுக்கு சுகோகனென்றும் கோசகனென்றும் இரண்டு பிள்ளைகளும் அவளுக்கிளையாளாகிய குணவதியென்பவளுக்குப் பண்ணியனென்றும் கோசனனென்றும் துர்ப்பன்னியனென்று மூன்றுபிள்ளைகளுமாக எட்டுப் பிள்ளைகள் பிறந்தமையால் அவ ர்களது தாய்மார்களுந் தந்தையு மிகவுங் களிப்போடு நாளொரு மேனியாப் வளர்த்து மூன்றும்பிறைச் சந்திரனைப்போல வளர் ந்து வரும் அப்பிள்ளைகளுக்கு ஐந்து வயது பூரணமாகக்கண்டு

வித்யாரம்பஞ்செய்யக்கருதி சுபமுகூர்த்தங்கொண்டு பள்ளிக்கூடத்தில்வைத்து கல்விப்பயிற்சி செய்துவருகிறபோது தம்முடைய குலாசாரவித்தைகளையும் போதனைசெய்வித்துச் சமர்த்தராகும்படிசெய்து சுவண்யன் முதலிய எட்டுப்பிள்ளைகளுக்குந் தாய் தந்தையர்களும் சந்தோஷித்தர்களாய் வாழ்ந்துவருநாளில் அப்பிள்ளைகளினது சமர்த்துகளைத்தெரிந்த தந்தையானவன் வர்த்தகஞ்செய்யும்படியாய்ச் செய்யவேண்டுமென்று யோசிக்கும்போது யாவருக்குமிளையவனாகிய துற்பன்னியனானவன் மிகவுஞ் சிறுவனாக விருப்பதால் அறிவீனத்தால் துன்மார்க்கத்திற் பிரவேசித்து இளங்கன்று பயமறியாதென்னுந் தன்மைபோல் பாம்பின் குட்டியைப்போல் மனத்தில் விஷத்துக்கொப்பாகிய துர்ப்புத்தியை வகித்துக்கொண்டு தன்னிச்சையாய்த் திரிந்து வருவதைநோக்கில் எவ்வாறிருந்ததெனில் அஷ்டதிக்குப் பாலர்களிலொருவனாகிய அந்தகனென்னும் யமன் எப்படி உலகினருக்கு பயங்கரத்தைத் தாத்தக்கவனாக விருப்பானோ வதுபோ லிச்சிறுவன் அப்பாடலிபுரத்தில்வாழும் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரனென்னு நான்கு வருணத்திலும் தன்னைப்போன்ற சிறுவர்களையுந் தனக்கு ஒருவருடமிரண்டுவருடம் பெரியவர்களாகவிருக்கும் பிள்ளைகளையும் நேசித்து, அப்பா நேசரே! இவ்வூருக்குப் புறம்பாயிருக்கும் ஏரிகளிலுங் குளங்களிலும் மடுக்களிலும் விசேஷமாய்த் தாமரை அல்லி நீலோற்பலஞ் செங்கழுநீர் முதலிய புட்பங்கள் அபரிமிதமாய் புட்பித்திருப்பதால் நாம்போய்பறித்துவந்து விளையாடுவோம் வாருங்களென்று கூட்டிக்கொண்டு போய் ஊருக்குப் புறம்பாய் இரண்டுநாழிகை தூரத்திலிருக்குங்குளங்களிலேனு மடுக்களிலேனு மிழியச்செய்து ஜலத்துள்ளமூழ்கி மிதித்துக் கொன்றுவிட்டு பிறரறியாமல் மவுனமாயிருந்தும் இதே தொழிலாய் அவ்வூரிலுள்ள சிறுவர்களை நாசப்படுத்தி வருகையில் பிள்ளையை யிழந்தவர்க ளிச்சங்கதியைத்தெரிந்துகொள்ள மாட்டாமல் கூகூவென்றலறியும் வயிற்றிலறைந்துகொண்டும் ஐயோ இப்போது தயிருஞ்சாதமுஞ் சாப்பிட்டு வெளியில்வந்தவனைக் காணகிலேனே என்செய்வோமென்பவர்கள் சிலரும் இதோ பட்சணம் வாங்கி யுண்ணவேண்டுமென்று படாதபாடுபடுத்திக் காசுவாங்கிவந்தவனைக் கடைவீதியிலுங் காண்கிலோமே யென்பவர்கள் சிலரும் ஐயோ அடியக்கச்சி நேற்றையதினஞ் செய்துவைத்திருந்த பட்சணத்தைக் கொடுக்கச்சொல்லி வாங்கிவந்த மைந்தனைக் காண்கில மெண்போர்கள் பலருமாய் இ

றைச்சலிடுவதோடும் ஐயோ காலன்வந்து ஆவியைக் கொண்டு போனபோதிலும் நகரமுழுதுந் தேடியும் உடலத்தையுங் காணோமே யென்பாரும் அல்லதுபட்டணம்விழுங்கிவிட்டதோவென்பாரும் அடிதங்காய், இப்போதுதான் என்னொரு குழந்தைக்குத் தைலமிட்டு மஞ்சனமாட்டி அகிற்புகையூட்டிவிடுத்தபிள்ளை மாயமானால் இக்கொள்ளைக் கென்செய்வே னென்பாரும் ஐயோ என்மகன் கடாவிளையாட்டுப்பார்த்துக்கொண்டு அரண்மனைவாயலில்நின்றவன் இதற்குள் எங்குசென்றானென்று ஓடிப்போய்த் தேடுவாரும், சிலர் அரைக்கணமேனு மென்னை விட்டுப்பிரியாதவன் இப்போதென்னமாயமானானோ வென்கண்மணியைக்காணோமே யென்பாரும் இவ்வாறு பற்பலவிதமாய்த்துன்பப்படுவதைக் கண்ட துற்பன்னியனானவன் இருபதுநாள் முப்பதுநாள்வரையிலசரப்போட்டுத் தானுமவர்களோடு கூடிக்கொண்டு பிள்ளைகளைத்தேடி விசனமடைந்து மெத்தவுந் துன்பப்படுபவனைப்போலிருந்து ஊரிற் சந்தடியடங்கியபின் மறுபடியும் அவ்வாறு செய்து ஒன்று மறியாதவனைப்போ லிருப்பான்.

மேலுமிவன்றந்தையாகிய பசுமானென்பவன் திரவியவந்தனாகவும் பெரியவியாபாரியாகவுந் தயாளகுணமுடையவனாகவும் அரசனுக்கு கண்மணிபோ லிருக்கின்றவனாகவு மிருப்பதுபற்றி அவனுடைய புத்திரன்பேரில் சந்தேகநினைப்பதற்கிடமில்லாமல் அவரவர்கள் பிள்ளைகளைத் தேடிக்காணாமலழுவதுங் கருமஞ்செய்வதுமேதொழிலாய் அப்பட்டணமுழுமையும் புத்ரவிர்த்தியில்லாமல் நாளுக்குநாள் க்ஷீணப்பட்டு இழந்தயாவரு மரசனிடத்தில் ஓரேகூட்டமாய்ச் சேர்ந்துவருஞ் சங்கதிகளைச்சொல்லிவயிற்றிலறைந்து கூக்குரலிட்டார்கள். அதுகேட்டவரசன் ஆச்சர்யமும் அடக்கப்படாத துன்பமுங்கொண்டு உடனே காவலாளரைவருவித்து அடாகாவலாளிகளே நமதுபட்டணத்திற்கிஞ்சித்தேனுமச்சமில்லாமல் பிள்ளைகளைப் பிடித்துக்கொண்டு போகுங் கள்ளரைப்பதிவிருந்துபார்த்துப் பிடித்துக்கொண்டுவாருங்களென்றுகட்டளையிட அப்படியேஅக்காவலாளிகள்அவர்களாற்கூடியதந்திரங்கள்செய்தும்கள்ளரகப்படாததுயாதெனின், இக்கொடுமைக்குரிய துற்பன்னியானவன் குழந்தைகளோடு குழந்தையாய்க்கூடிவிளையாடி யிழுத்துக்கொண்டுபோய்க் கொல்லுவதை

யோசியாமலு மவன்பேரிற் கலவரப்படாமலு மிருப்பதனுல் மேலு ம்மேலும் விர்த்திபட்டு மறுபடியும் பிள்ளைகளைப் பறிகொடுத்த வர்கள் அரசன்கொலு முகத்திற்போய்க் கூச்சலிட்டுழல்வதைக் கண்டவேந்தன் மிகவும் பரிதாபங்கொண்டு அயர்வுற்றிருக்கை யில்ஒருநாள் துற்பண்ணியானவன் அந்நகரத்தும்பிள்ளைகளிலே ஐந்து பிள்ளைகளைத்தாமரைப்பூப் பறித்துக்கொண்டுவரலாம்வா ருங்களென்று ஊருக்குப்புறம்பாயோங்கும் காட்டிலேயழைத் துக்கொண்டுபோய் மெத்தவும் ஆழம்பொருந்தியதாகவும் ஆம்ப ல்நெய்தல் கொட்டிமுதலிய புட்பங்கள் புட்பித்திருக்குமோர் மடுவில் இவ்வைந்து பிள்ளைகளையு மிறங்கச்செய்து தானுங்கூட விழுந்து கழுத்தளவுஜலம்வரையி லவர்களைப் பற்றிக்கொண்டு போய் ஒவ்வொருவராய்ச்சேற்றுள் ளழுந்தும்படிமிதித்துத்து வைத்துவிட்டுத்தான் கரையேறிப்பட்டணத்துக்கோடிவந்து ஒன் றுந்தெரியாதவனைப்போலிருக்கையில் சேற்றிலழுந்திய வச்சிறு வர்களுக்குயிர்நீங்காமல் ஜலத்தைக் குடித்துத்திகைத்து ஒருவ ரையொருவர் பற்றியிழுத்துத்தமொறிக் கடவுளினருளாற்கரை யேறித் தங்கள் வீடுவந்துசேருவதற்குத் தடந்தெரியாமல அம் மடுக்கரையிற்றனே கோவென்றழுதுகொண்டிருக்கும் ஓசையை வழிப்போக்கர் அறிந்து பாடலிபுரத்திற் போய்ச்சொல்ல, அச்ச ங்கதியைப் பட்டணத்திலுள்ள யாவருங்கேட்டு ஐயோ என்பிள் ளையென்று ஓடோடியும்போய்ப்பார்க்கையில் அப்பிள்ளைகள்தே கமெல்லாஞ் சேறுகவுஞ் ஜலமானது காதிலும் மூக்கிலும் வாய் வழியிலுமேறிப் பெருமூச்செறிந்து வயிறுகளுப்பிப் பேசுவதற் குமசக்தமாயும் துற்பண்ணியனதுகாலினுல் மிதிப்பட்டிருக்கும் வருத்தத்தோடு மெலிந்திருப்பதை யக்குழந்தைகளின் தாய்தந் தைகள்கண்டு துக்கமேற்கொண்டு ஒருவாறுதேர்ந்து அடாநீங்க ள் இங்குவந்தவிதமென்ன உங்களைக்கூட்டிவந்தவர் யார் உங்க ளுக்கு உடம்பெல்லாஞ் சேறுகிவிதமெப்படி? சொல்லுங்கடாகு ழைந்தைகாளென்றுகேட்க, அதற்கந்தபிள்ளைகள் தத்தம் தாய் தந்தைகளோடு நடந்தசங்கதிகளை யாதியந்தமாச்சொல்ல, அவ் வார்த்தையை யாவருங்கேட்டுத் திடுக்கிட்டு அடா அப்பாஇந்த சண்டாளச்செட்டிபயலா சதிசெய்து ஊரிலுள்ள பிள்ளைகளை யெல்லாங்கொன்று வருகிறுனென் றுநடுங்கி மெய்சோர்ந்துபெரு மூச்செறிந்து ஒன்றுந்தோற்றுதவராய், அவ்வைந்துபிள்ளைகளையு

மெடுத்துக்கொண்டு பட்டணம்வந்துசேர்ந்து கொலுமுகத்துக் குப்போய் வேந்தனிடத்தில் முறையிட்டார்கள். அவ்வாறுரைத் தமொழியைக்கேட்ட வேந்தன் திடுக்கிட்டு மனங்கலங்கிச் சிவ சிவவென்று செவிகளைப்புதைத்தும், இப்பாதகத்தை யெவ்வகை துலைப்போமென்று யோசித்தும் மந்திரிபிரதானிகளுடனே யோசித்துப்பசுமானென்கிற செட்டியைக்கூட்டிவரும்படியாய் தூதர்களையனுப்பிவைக்க, அதுபோலத்தூதர்களோடிப்போய்ச்செட்டிக்கு அறிக்கையிட்டளவிற் செட்டியானவன்கேட்டுத் திகைத்தெழுந்திருந்து மிகுந்தபயத்தோடு அரசனைவணங்க, அரசன்கண்டு வாராய்பசுமானே! உனது இளையகுமாரனாகிய துற்பன்னியனானவன் பிள்ளைகளைக்கொல்லும் பெருப்பூதமாய் இதுவரையில்நமது பட்டணத்திலுள்ள நான்குவருணத்தவர்களது பிள்ளைகளை நாசப்படுத்தூறிவந்ததுமல்லாமல் இன்றையதினம் ஐந்துபிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு ஊருக்குப்புறம்பாயிருக்கும் மடுக்கரைக்குப்போ யமமடுவி லவர்களைச்சேற்றிலழுத்திவிட்டு ஓடிவந்துவிட்டதாய்ப் பிரசைகள்சொல்லுகின் றமைபால், அதற்குநீ என்னசொல்லுகிறாயென்று கேட்கச் செட்டியானவன் சிந்தைகலங்கி ஓ வேந்தே, யானென்செய்வேன், கடவுளெனக்கு இத்தன்மைபூண்ட கொடும்பாவியாகிய பிள்ளையைக் கட்டளையிட்டிருககின்றபடியாலும் இராஜநீதிக்குவழுவில்லாமற் கொன்றவனைக்கொல்லவேண்டுமென்னுந் தன்மையின்படி தேவரீருக்குப் புண்ணியமுண்டாகும்படியாய் அப்பாவியைக்கொலைசெய்யாமல் இச்சீமையெல்லையைக் கடந்துபோகும்படியாய் ஓட்டிவிடும்படி உத்தரவுசெய்தால் கொன்றவனைக்கொல்லுங் கொலையென்னும் வாக்கியம்போல், தானேகொலையுண்டுவிடுவா னாதலால் தாயென்னுந்தமரென்றும் மனைவிமக்களென்றும் சிநேகிதர்களென்றும் பார்க்கப்படாதாதலாலும், அங்ஙனம் ஒருக்கால் அபிமானத்தால் யோசிக்கில் செங்கோல் கொடுங்கோலாய் இலட்சுமியும் விலகிச் செய்த புண்ணியங்களும் பாழ்படும் ஆதலால் தேவரீர் எனது தாட்சிண்யத்தை மனத்திலே நினைத்தால் இச்சண்டாளன் செய்துவரும கொடுமை யினாலே இந்நகரமும் நாசமாய் என்குலத்துக்குங் கெடுதி சம்பவிக்குமென்று, கொயிலாமல்துரத்திவிடும்படியாய்ப் புத்திரவாஞ்சையாற்சொல்லுஞ் செட்டியைநோக்கி,அரசனானவன், ஐயா செட்டியாரே! நீசொல்லியவண்ணம் உன்பிள்ளையை விடலாமோவென்று கேட்க, அதற்குச்

செட்டியானவன், மகாராஜனே! தேவரீர் கூறியமொழியை யடியேன்கேட்டவுடனே நானேயவனைக் கொல்லவேண்டு மாதலால் தமதுசித்தம்போற் செய்துகொள்ளுமென்றுகூற, அப்போதரசன், அவ்விடமிருக்குந் தூதுவர்களைநோக்கி, அடா தூதர்களே! துற்பன்னனைக் கொண்டுவாருங்களென்றுகூற, உடனே தூதர்களோடிப்போய் துற்பன்னனைப்பிடித்துவந்து இராஜ சமுகத்தில்விட, இராஜன் அக்கொடியவனைநோக்கி அடா துற்பன்னு! நீநடந்தகாரியங்களை ஒளியாமற்சொல்லடாவென்றுகேட்க, அப்போது துற்பன்னன் தான் நடத்திவந்தகாரியங்களை யாதும் ஒளியாமல் வேந்தன்முன் உண்மையாய்க்கூற அவ்வுரைகேட்ட அரசன் சினங்கொண்டவனாய் அங்குள்ள கொலைஞரைப்பார்த்து, அடா கொலைஞர்களே! இச்சண்டாளனை ஒருகணப்போதினும் வையால் இவ்வெல்லைக்குப்புறம்பாய்க்கூட்டிக்கொண்டுபோய் இவ்வழி மறுபடியும் நோக்காமலிருக்கும்படியாய் துரத்திவிட்டுவாருங்களென்றுகூற அதுபோற்றலையாரிகளும் அரசனது உத்தரவின்படி அவ்வூரிலுள்ள ஜனங்கள் காணும்படியாய் துற்பன்னனுடையபிடரியைப்பற்றி முன்னும்பின்னுமாயிழுத்துத் தள்ளிக்கொண்டுபோகின்றபோது அப்பட்டணத்திலுள்ள ஜனங்களியாவருமவனைப்பார்த்து மண்ணைவாரித்தூற்றி என்பிள்ளையை அனியாயமாய்க்கொன்ற இச்சண்டாளனை ஜாக்ரதையாய்கொண்டுபோங்கள் இல்லாவிட்டால் உங்களையும் மோசம்பண்ணிவிட்டுவந்துவிடுவானென்பாரும், இவன் இதுபரியந்தஞ்செய்துவந்தவிசித்ரமொருவருக்குந்தெரியாமலிருந்தபடியால் நாய்செய்தவூழ்வினையெல்லாங்கூடி இவ்வுருவாய்வந்து ஜனித்தானோவென்பாரும் ஐயோதருமசொரூபியாகிய பசுமானனுக்கு இக்கொடும்பாவி பிள்ளையாய் வந்து ஜனித்தது அவனது பண்டைவினையோ வென்பாரும், ஐயோ இக்கொடும்பாவிக்கு இத்துற்புத்தியை யார்போதனைசெய்தாரோவென்பாரும், அடியம்மா இதோபிள்ளையைக் கொல்லும் பெரும்பூதம்வருகுதடிபென்பாரும், இவ்வாறுபலபலவிதமாய்ப் பேசி அவர்கள் தத்தம்வீடுபோய்ச்சேருகையில் இவைகளையெல்லாங்கேட்டுக்கொண்டேவருகிற துற்பன்னியனைத் தூதர்கள் பட்டணத்துக்குப் புறப்பாய் இரண்டுகாதம்வழிக் கப்பாற்கொண்டுபோய் அத்திசையிலுள்ள காவலாளிகளுக்கு இவனுடைய சேதியைத்தெரிவித்து இவன் இத்திசைநோக்கிவாராமல் சாக்ரதையாய் பாருங்களென்றுஞ் சொல்லி, துற்பன்னியனைமருட்டி

த்தூரத்திவிட்டு அரசனிடத்தில்வந்துவணங்கிச் செய்திபை யறிவித்துவிட்டார்கள்.

அப்பால் துற்பன்னியனுனவன் நெருப்பு எவ்விடத்திருந்த போதும் அதன்குணத்தைக்காட்டுந் தன்மைபோல இராஜனது காவலாளிகளால் தன்னைத்துரத்தியபின்னர் அவ்வனமெல்லாஞ் சுற்றிக்கொண்டு தொலைதூரஞ் செல்லும்போது மிகுதியும்பசியுண்டாகியதால் அவ்வனத்திலுள்ள காய்கனிகிழங்குகளைப்பறித்துத்தின்றும் இவ்வனத்திலெங்கேனும் பிள்ளைகளகப்படுமோவென்னுமெண்ணத்தோடும் அலைந்துதிரிகிறபோது, ஒருநாள்வனத்துள் மலைபடிவாரத்தில்தபசிகளாகிய பெரியோர்களிருக்கும்பன்னசாலையினிடம்போய்நிற்கையில் அம்முநிவர்களதுபிள்ளைகளிற்சிலர்கூடி பூசைக்குப்பத்திரபுட்பங்களைக்கொண்டுவரும்படிபோகையில் அப்பிள்ளைகளில் ஒருவனைக்கெட்டிபாய் மற்கட்டாகப்பிடித்துக்கட்டிக்கொண்டுபோய் அவ்வனத்திலேயிருக்குங் குளத்தில் அழுத்திமிதித்துக்கொல்ல உடனே அச்சிறுவனுடன்கூடிவந்தபிள்ளைகளியாவருங் கண்டுபயந்து கோவென்றலறி அபயமிட்டுக்கொண்டோடிப்போய் தங்களுடைய ஆசிரமஞ்சேர்ந்து இறந்துவிட்ட சிறுவனது தந்தையாகிய உச்சிரவாகு முநிவரிடத்திற்சொல்ல அதுகேட்டமுநிவர் திடுக்கிட்டெழுந்து குளக்கரைக்கோடிவந்து பார்க்கையில் குழந்தை சேற்றிலமுந்தி யுயிர்மாய்த்திருப்பதைக்கண்டு பெருந்துன்பங்கொண்டு அடங்காக்கோபத்துடனே அங்கிருந்ததுற்பன்னியனைப்பார்த்து அடாசண்டாளா நீகிஞ்சித்தேனும்யோசியாமல் என்பிள்ளையை அநியாயமாய்க்கொன்றபடியால் நீபெருந்துன்பத்துக்காளாகி அலகையாகக்கடவையென்று சாபங்கொடுக்க அதுகேட்ட துற்பன்னியன் மனங்கலங்கி தைரியமுமிழந்து அச்சமுற்றவனுப் தான்முன்செய்திருந்த கொலைகள் இவனைச்சூழ்ந்துவாதிக்க அதனுல்யாதுந்தோற்றுமல் வெறிகொண்டவன்போல் அக்காட்டில் வாழுங் கரடி புலி சிங்கம் காட்டெருமைகளுக்கொப்பாய் அவைகளோடுஞ்சேர்ந்து சஞ்சரித்து இரைமுதலியவும் ஜலபானமுங் கிடைக்காமல் அலைந்து திரிகிறபோது ஒருநாள் அவ்வனத்திற் சண்டமாருதம் போன்ற ஓர் சூறுவளிக்காற்றும் அதனேடுமழையுமுண்டாகிஊழிக்காலம் போல்மோத அதனுல் மரங்கள் முதலியவைகளும் மான்மரைமுதலிய விலங்கினங்களும் பெருங்காற்றி லகப்பட்ட சருகுபோற் கீழ்மேமோதிவிழுந்து மழைவெள்ளத்தில் உருட்டிக்கொண்டுவரு

கையில் துற்பன்னியனானவன் எவ்வகையுமில்லாமல் வெள்ளத்தி
லுருட்டிவரும்விருட்சங்களையும் கற்பாறைகளையும்பற்றித் துன்
பமடைந்து கரசரணாதிகள் விலவிலத்தும் தேகங்குளிர்ந்தும்பசி
ப்பிணியால் மெலிந்தும் நாற்காற்பாய்ச்சற்போல் தவழ்ந்துகொ
ண்டுவருகையில் அவனது பார்வைக்குமுன் அவ்வனத்திற் பர்வ
தாகாரம்போல் மும்மதங்கொண்ட யானையானது இறந்துகிடப்
பதைக்கண்டு சந்தோஷங்கொண்டு அதனருகில்வந்து அதன்வா
யினிடத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கையில் அந்தயானையின
துவாயானது கிழிபட்டிருந்தமையால் அது இவன் கண்ணுக்கு
ஓர்மலைக்குகையைப்போற் றோன்றியதைக்கண்டு குளிர்வாடை
யைச்சகியாதவனாய் அவ்வழியாற்பிரவேசித்து வயிற்றில்நான்கு
புறமும்போய் முட்டிப்பார்த்து மறுபடியும் வெளியில்வருவதற்
குவழிதெரியாமல் தன்பல்லினாலே யானையினது குடல்களைக்கடி
த்தும் என்புகளைநொறுக்கியும்தோலைக்கடித்தும் ஒருபக்கத்தை
ப்பிறிக்கொண்டு வெளியில்வந்து பசிபொறுக்கமாட்டாமல்அந்த
யானையினது வயிற்றிலிருந்து வழியும் நிணமுதலிய மாமிசங்க
ளைத்தின்கையில் அவை இவனுக்கு மெத்தவுஞ்சுவையாக விருந்
தமையால் அதனடியிலே உட்கார்ந்துகொண்டு நாய்நரிமிருகங்க
ளுக்கொப்பாய் தனதுகைகளாலும் வாயினாலும்பற்றி மாமிசத்
தைப்பிடுங்கித்தின்று சந்தோஷித்துக்கொண்டிருக்கும்போது ம
ழையானது மேன்மேலும் யானையின் துதிக்கையினின்று சொரி
வதுபோல ஜலம்கொட்டுந்தன்மையாலும் சண்டமாருதமும் வி
சேஷித்ததனைக் கலந்தமையாலும் வெள்ளமானது ஆகாயத்திற்
கும்பூமிக்குமொன்றா யிரைச்சலிட்டுவந்து யானையையுந்துற்பன்
னியனையுமுருட்டிக்கொண்டுபோய்ச் சமுத்திரத்திற்சேர்க்க அப்
போதுக்கடலில் அலைகள்விசேஷித்தெழுந்து ஆரவாரத்தோடு
மோதுந்தன்மையால் அன்னபானாதிகளுக்கு மயலாய் வெய்யிலு
ங்காற்றிலும் மழையிலும் நெருக்குண்டிருந்த துற்பன்னியன் அ
லைகளிற்சிக்கி மீளாதவனாய் உயிர்மாய்ந்தொழிந்தான். கேளுங்க
ள் முனிவர்களே! இவ்வுலகின்கண் ஓங்கும் மானவர்களுள் அவர
வர்கள்செய்த நல்வினைதீவினையின்படி அவர்களுக்குஇகத்திற்று
னே மூன்றுவருடம் மூன்றுமாதம் மூன்றுபட்சம், அல்லது மூன
றுவாரத்திற்குள்ளாகிலும் சுகதுக்கங்கள் சம்பவிக்குமென்னுஞ்
சுருதிவாக்கியத்திற் சொல்லியபடிதப்பாமல் ஒருபொய்யேனுஞ்
சொல்லாத பசுமானென்கிற செட்டிக்குப் பிள்ளையாகப் பிறந்த
துற்பன்னியன்செய்த கொடுமையால் பசிப்பிணியாலும் சிசுஹ

த்தியினுலுங் காடுமலைவனம் வனந்தரமெல்லாந்திரிந்தும் முனிவ ராற்சாபசேர்ந்து காற்றினுலு மழையினுலும் மெலிந்தும்மிருகத் தோடொப்பாய் மாமிசாதிகளைப்புசித்தும் வெள்ளத்தாற் சமுத்திரத்திற் சேர்க்கப்பட்டிறந்தவன் அலகைவடிவாய் வனங்களில் நூறுயிரங்கோடி கற்பகாலம்வரையில் ஓரிடத்திலுந் தங்காமற் சுழன்றுதிரிந்து பொ கைமலைச்சாரலில் வருகிறபோது ஒருநாள் அகஸ்தியமகாமுனிவர் அங்குள்ள ஓர் பொய்கையில் ஸ்நானஞ்செய்து ஜபதபநியமநிஷ்டைகளை முடித்துக்கொண் டிருக்கையி லவரைககண்ட அலகைவடிவாகிய துற்பன்னியன் பசியின் கொடுமையாற்கொன்று தின்னவேண்டுமெனக்கருதி மகாவுக்ரத்தோடு மவர்மீதிற் பாய்ந்தெடுக்க மேவையில் அகஸ்தியர் கண் விழித்து ஏறிட்டுப்பார்க்க அம்மகாமுனிவரது பார்வையானது இவன்பேரிற்பட்டவுடன் அவனைப்பற்றியிருந்த கொடுமையிற் கிஞ்சித்து விலகிநின்றது அது எப்படியிருந்ததெனில் உலகின்கண்மானவர்களைப்புணர்ந்த பாபங்களெல்லாம் பரிபூரணமாய் உணர்ந்த ஞானிகளது விளிபட ஓடுமென்னும்வாக்கியம்போல் அ கன்றமாத்திரத்தில் துற்பன்னியனுக்கறிவுதோன்றி நற்குணத்துடனே அகஸ்தியமாமுனிவரைப் பிரதட்சணஞ்செய்து சாஷ்டாங்கமாய்ப் பணிந்தெழுந்துநின்று துதித்தான்.

அப்போது அகஸ்தியர் ஞானதிருஷ்டியினுற்பார்த்து அவனது ஜன்மாநுபவங்களையுங்கன்மாநுபவங்களையுமறிந்து அவன் துன்பத்தை நிவாத்தி செய்யவேண்டுமென்றுகருணைசுரந்து தன்னுடைய சிடர்களிலே சுதிக்கணனென்பவனை யழைத்து அப்பா சுதிக்கணு நீ இந்தப்பாவியைக்கூட்டிக்கொண்டுபோய்க்கந்தமாதனகிரிச்சாரலில்யோங்குஞ் சேதுமத்தியில்சமுத்திரதீர்த்தில் ஸ்ரீ ராமநாதனுக்கு முன்பாகவிளங்குஞ் அக்கினிதீர்த்தத்தில் சங்கற்பவிதியின்படிமூழ்கி, பின்னர் அத்தீர்த்தத்தையள்ளி அபிமந்திரித்து இவன்தலையிற்புரோட்சித்து அப்பாலிவனையுஞ் சங்கற்பவிதியின்படிமுழ்கச்செய்துவாவெனக்கட்டளையிட அதுபோற்சுதிக்கணனும்அலகையாயிருக்கும்துற்பன்னியனையழைத்துக்கொண்டுபோய் கந்தமாதநபர்வதத்தைச்சேர்ந்து அங்ஙனம்விளங்கு

னென்ற அக்கினிதீர்த்தத்திற்குப்போய் முன்பு தனதுகுருஸ்சுவாமிகள் விடையளித்தவண்ணம் அத்தீர்த்தத்தில்சங்கற்பவிதியின்படியே ஸ்நானஞ்செய்து பின்னர தீர்த்தத்தைக் கையினுலள்ளி அபிமந்திரித்து துற்பன்னியனது சிரத்திற்புரோட்சித்து, அதன்பிறகு அவனையும் சங்கற்பவிதியின்படி மூழ்கச்செய்து, இராமமந்திரத்தை ஜெபிக்கும்போது துற்பன்னியன்பேய்வடிவமாறி தேவசொரூபம்பெற்று ஞானதையனைச்சந்தோஷமடைந்து மறுபடியும் அத்தீர்த்தத்தில் சங்கற்பவிதியின்படிமூழ்க, அக்கணமே தெய்வலோகத்திலிருந்து விமானம்வர, அந்தவிமானத்திலேறி அரம்பாஸ்திரீகள் நடிக்கவும், மேளவாத்தியங்கள் முழங்கவும், துற்பன்னியன் ஆடகலோகஞ்சேர்ந்து, ஆதிசேடனாலும் அளவிடற்கரிய ஆனந்தவாழ்வை யநுபவித்திருந்தான் பின்புஅகஸ்தியமகாமுநிவரது சீடனாகிய சுதீக்கணன் அவணின்றும்பிரயாணப்பட்டு பொதிகையைச்சேர்ந்து அகஸ்தியரைக்கண்டுநமஸ்கரித்து. நடந்தகாரியங்களைச்சொல்ல, அவருங்கேட்டு சந்தோஷமடைந்தா ராதலால் அத்தன்மையாகிய மகிமைப்பெற்ற அக்கினிதீர்த்தத்திலே யாவரொருவர் தீர்த்தமாடினாலும் அவ்விடமிருந்து தானதருமங்களைச்செய்தாலும் பிதுர்க்களுக்குப் பிண்டமளித்தாலும் இரணியசிராத்தஞ்செய்தாலும் அநேக அக்கினிஹோத்யாகாதி கிர்த்தியங்கள்செய்த பலனுண்டாகிப் புண்ணியலோகத்தை யடைவார்களென்று சூதமாமுநிவர்சொல்ல, அதுகேட்ட நைமிசாரண்யர் அடக்கப்படாத ஆச்சரியமுஞ் சந்தோஷமுமடைந்து சுவாமீ இதுவரையில் யாங்கள் கேட்டகதைகளைப்பார்க்கினும் இதுமெத்தவும் விசேஷக்களிப்பைத்தந்தமையால் இன்னம் அக்கந்தமானத்தில்விளங்கு மகிமைகளைத் தேவரீர்கிருபைசெய்யவேண்டுமென்றுகேட்க முநிவர் முகமலர்ச்சியோடு மன்னவரைநோக்கி, ஓ முநிவர்களே! சக்கரதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு அதன்பெருமையை சொல்லுகிறோம் கேளுங்களென்று சொலலத்தொடங்கினர்.

## அக்கினி தீர்த்தம்.

## முற்றிற்று.

———.

கச-வது.

## முனிதீர்த்தமாகிய

# சக்கர தீர்த்தம்.

கேளுங்கள் முனிவர்களே, இவ்வுலகின்கண்பண்டொருகால த்தில் வேதாகமசாஸ்திரப்பயிற்சியினும் அணிமாவாதியஷ்டசித் திகளினும் இயம நியமாதி யோகங்களினும்வல்ல தபோதனராய் விளங்கும் அகிற் புத்தரென்னுமோர்முனிவர் தாம் அகண்டபரி பூரணசச்சிதானந்த சின்மயமாய்விளங்குஞ் சைதந்யத்தைத்தரி சிக்க ஆவலுற்றவராகி அப்பொருளைநாடி நிஷ்டைசெய்யும்போ து, தமக்கு அசுரர்களாலும் மற்றஜெந்துக்களாலும் யாதாமொ ரு இடர்சம்பவியாமலும் ஒருவேளைசம்பவித்தால் உடனே அவ் விடர்செய்த ஜெந்துக்களைச் சம்மாரஞ்செய்யும்படியாய் அநேக மகிமையும் வரங்களும்பெற்ற சக்கரத்தைப் பெற்றுக்கொண்டு கந்தமாதனச்சாரலில் ஒருதடாகமுண்டுபண்ணி அத்தடாகக்க ரையில் சக்கரத்தைநிறுத்தித்தாமும் அக்கரையிலிருந்து தவஞ் செய்துகொண்டிருக்கும்போது யாதாமொரு இடர்நேருமாயின் உடனே அவ்விடர்செய்தவர்களைச் சக்கரமானது சங்காரஞ்செ யது முனிவராலேற்படுத்திய தீர்த்தத்தில்மூழ்கித் தடாகக்கரையி ல் காவல்செய்துக்கொண்டிருக்குந்தன்மையால் அந்தத்தீர்த்தத் திற்கு முனிதீர்த்தமென்றும், சக்கரதீர்த்தமென்றும்பெயர்வாய் ந்த அத்தீர்த்தத்தில் அநேககற்பகோடிகாலமாய்ப் பற்றியிருந்த பிரம்மஹத்திதோஷங்களும் பூதவேதாள பைசாசங்களும் கூன் குருடுசெவிடு முதலிய குற்றங்களும், அநேககோடிபாவங்களும் நிவர்த்திசெய்து விளங்கிக்கொண்டிருக்கும். அத்தீர்த்தமானது ஒருகாலத்தில் சவிதாவென்னும் பெயர்கொண்ட சூரியனுக்கு அ ற்றுப்போன இரண்டுகரங்களையும் பழயபடி வளரும்படிசெய்த மகிமைபொருந்தியதென்று சூதமகாமுனிவர்சொல்ல, அதைக்கே ட்ட நைமிசாரண்யர் ஆச்சரியமடைந்து முனிவரைநோக்கி, சுவா மீ! சவிதாவென்னுஞ் சூரியனுக்கு என்னகாரணத்தாற் கரங்கள ற்றனவோ அதனை அடியேங்களுக்குத் தெரியும்படியாய்த் திரு வுளம்பற்றவேண்டுமென்றுகேட்கச் சூதமுனிவர்சொல்லுவார்.

கேளுங்கள் நைமிசாரண்யரே? முன்னொருகாலத்திலே உம்பர்களுக்கிறைவனுகிய தேவேந்திரன் முதலிய யாவரும் இராட்சதர்களால் பெருந்துன்பத்தையடைந்துசகிக்கப்படாதவர்களாயும் பொன்னுலகத்தில் வாசஞ்செய்ய அச்சமுற்றவர்களாகியும் யாவருமொன்ருய்க் கூடித்திரண்டு பிரமலோகம்போய்ச்சேர்ந்து பிரமனைக்கண்டுவணங்கித் துதித்து சுவாமீ நாங்கள் அசுரர்களால் துன்பமடைந்து எங்குமிருப்பதற்கிடமின்றி வீணேமடிந்துபோகும்படி காலம்நேரிட்டதால் அத்துன்பம் நீங்கும்படியாக வோருபாயஞ்சொல்லி யெங்களை யீடேற்றவேண்டுமென்றுசொல்ல அதுகேட்ட பிரமதேவன் இந்திராதிதேவர்களுக்கு அபயாஸ்தங்கொடுத்துக்கூறுவார். வாருங்கள்தேவர்களே, அசுரர்களாலுண்டாகிய இந்த உபத்திரவம் நீங்கவேண்டுமாயின் சந்திரஜடாதரமூர்த்தியாய் விளங்கும்படியாகிய ஸ்ரீகைலாசபதியைக்குறித்து ஓர்யாகஞ்செய்தீர்களானல் அப்போது உங்கள்மீதில் அவருக்கநுக்ரஹமுண்டாகிஇவ்விடுக்கணைத்தவிர்ப்பார் நீங்களும் சுகமாய்வாழலாமென்றுசொல்ல, அதற்கு இந்திரன் பிரமதேவனைநோக்கி, சுவாமீ நாங்களவ்வாறு யாகஞ்செய்யத் தொடங்கினுல் உடனே இராட்சதர்களறிந்து உக்ரத்தோடும்வந்துகவிந்து யாகத்தைப் பின்னப்படுத்திவிடுவார்களே, அதற்கென்ன செய்வோமென்றுகூற, அதைக்கேட்ட பிரமன் நாலாவிதமும்யோசித்து, வாருங்தேவர்களே, நீங்கள்செய்யும் யாகத்தை விக்கினமின்றி நிறைவேற்றுதற்கு பூலோகத்திலே சேதுமத்தியில்விளங்குங் கந்தமாதனகிரிச்சாரலில் சேர்ந்து அரக்கர் நாசப்படும்படியாய் மஹாசுரமென்னும் யாகத்தை ஆரம்பித்துச் செய்வீர்களாகில் அவ்விடத்திற்கு அரக்கர்கள்வருவதற்குபயப்படுவார்கள். ஏனெனில், அகிற்புத்தரென்னுமுனிவர் அவ்விடத்தில் தபஞ்செய்யவேண்டித் தனக்கோரிடமும் வாராமலிருக்கச் சுதரிசனரைக்குறித்துத்தவஞ்செய்து சக்கரத்தைப்பெறறுக்கொண்டு தாம் அதைதனக்குக்காவலாகவைத்துக்கொண்டு தவஞ்செய்து வருகின்றமையால் நீங்களவ்விடம்போயிருந்து யாகஞ்செய்தால் நிறைவேறுமென்றுசொல்ல, அதுகேட்ட தேவேந்திரன் சுவாமி அந்தச்சக்கரத்திற்கு அவ்வளவுவலிமையானதென்ன அதற்குப்பிரமன், ஓ தேவராஜனே மகாவிஷ்ணுவால்முனிவனுக்குக்கொடுத்திருப்பதால் அவ்விடத்தில்வந்த இராட்சதர்கள்முதலிய துஷ்டர்களைவதஞ்செய்யுந் தன்மையுண்டாயிருக்கின்றபடியால் நீங்களவ்விட

ம்போய் நடத்துங்களென்று கூறியதைக்கேட்ட இந்திரன் முத லிய யாவரும் மகாசந்தோஷத்தையடைந்து பிரமதேவனைவண ங்கி விடைபெற்று யாவருங் கந்தமாதனத்தில்வந்துசேர்ந்து அகி ற்புத்தரென்னு மஹாருஷியைக்கண்டு நமஸ்கரித்து அநேகமாகத் துதித்து அவருடைய பன்னசாலைக்குச் சமீபமாய் யாகசாலை ஓமகுண்டம் யாகஸ்தம்பமுதலியயாவுமேற்படுத்தி தங்களுடை ய சத்துருக்களாகிய இராக்கதர் நாசமடையவேண்டி மஹேசுர மென்னும் யாகத்தை வேதோக்தப்படிதொடங்கி இந்திரனை யா காதிபதியாக இருத்தி ரித்துவேசாள் போதர் அநுபோதர் உங் காதர் பிரஷாதர் அத்வரிமுதலானவர்களோடும் வியாழபகவான் இந்திரன்குமாரனாகிய சயந்தன் விசுவாமித்திரன் எட்டாம்வசு குபேரன் அக்கினி எமன் வருணன் வாயு சத்தியமகாரிஷி பராச ரர் அசுவினிதேவதைகள் சந்திரன் புதன் அஷ்டவக்கிரன் சண் முகன் ஆகிய பதினாறுபேர்களும் நேமுகமாயிருந்துயாகத்துக்கு சாட்சி தேவதையாக மகாவிஷ்ணுவை வைத்துக்கொண்டு யாக த்தைத்தொடங்கி மந்திரவித்தாய் நடப்பித்துவருகிறபோது அ க்குண்டத்தினின்றும் பன்னிரண்டுகோடி சூரியர்கள் உதயமா னதுபோல் மாஹேசுரனென்னுஞ் சுயம்பிரகாசமாய்வந்துவிளங் கியது அவிர்ப்பாகங்களைப் பானம்பண்ணி எழும்பித்தேஜசுகள் ஜொலிக்கும்படிதோன்றிப் பூரணாகுதி கொடுக்கும்போது புரோ டாசசேடத்தை அந்தயாகத்துக் குரித்தாகிய ரித்வேசாள்முதலி யவர்களுக்கு பாகஞ்செய்து எவ்வெவர்களுக்கு எந்தெந்தபாகத் தைக் கொடுக்கவேண்டுமோ அவ்விதிப்படி அத்துவரியாயிருந்து யாகத்தாலே விளங்கப்பட்ட அஷ்டவக்ரரானவர் அவரவர்களுக் குக்கொடுக்கும்போது மகா உக்ரத்தோடும் பிரகாசத்தோடும் பார்ப்பதற்குப் பயங்கரமாயும் அநேக தேஜசுகளோடும் விளங் கும்படியாகிய பிராச்சித்தரமென்னப்பட்ட பாகத்தை உருவாய் கையிற்கொடுக்கப்படாதென்று யோசித்தும் சவிதாவென்னப்ப ட்ட சூரியபகவான் பிரம்மசொரூபமாய் விளங்கப்பட்டவரான படியினால் அவராலே யதனைத் தாங்கமுடியுமென்று யோசித்து அப்பிராச்சித்ரமென்னும் பங்கையெடுத்து சூரியபகவான் கையி ற்கொடுக்க அப்போது சவிதாவென்னுஞ் சூரியன் பக்தி விநயத் தோடும் அஞ்சலிசெய்து பின்பு இரண்டுகரங்களினாலும் வாங்கி யவுடனே அந்த பிராச்சித்ரத்தினுடைய தேஜசினுக்ரமானதுகா

லாதீதமாயும் கொரேமாயும் விளங்கினபடியால் அதைச் சவிதா யோசியாமல் அவரவர்கள்பாகத்தை ஓமகுண்டத்தடியிலிருந்து புசிக்கயத்தனிக்கையில், உடனே அச்சூரியனது கரங்களிரண்டு மற்றுவிழும்படியாகச்செய்து மகா உக்ரத்தோடும் அப்பிராச்சித்ரமானது அவர்வாயிற்குதித்தது, அப்போதுசவிதாவென்னுஞ் சூரியபகவானனவர் மிகவுந்துன்பமடைந்து கோபத்துடனே இந்திரன் முதலிய தேவர்களைப்பார்த்துக்கூறுவார். ஓதேவர்களே நீங்களியாவரும் பார்த்திருக்கும்படியாய் என்னிருகரங்களும் அற்றுவிழுந்தமையால் யாவருங்கூடி எனக்குக்கரங்களுண்டாகும் படிச்செய்யாவிடில் இந்தயாகத்தை அழித்துப் போடுவேனென்று மிகவுங்கோபத்தோடுங் கூறியதைக்கேட்ட தேவர்கள் இதற்கென்னசெய்வோமென்றுயோசித்து யாதுந் தோன்றாதவர்களாய் பிரமித்து மயங்கினார்கள் அக்காலையில் அந்தயாகத்தினிடமாயெழுந்தருளியிருக்கும் அஷ்டவக்ர மகாரிஷியானவர் கலக்கமுற்றிருக்குந் தேவர்களுக்குத் தேறுதல்சொல்லி ஓ தேவர்களே, நான் சந்திரஜடாதாமூர்த்தியாகிய பரமேசுவரனைநோக்கி அநேகதவங்களும் சாந்திராயண முதலிய விரதங்களும் தீர்த்தயாத்திரைகளுஞ் செய்திருக்கின்றேனாதலால் அக்காலையில்எனதுதவப்பெருமையினாலே அழியாவரங்களைப்பெற்றும் பின்னுந்தவத்திலிருக்கும்போது கோடாநுகோடி பிரம்மாக்கள் பிறந்துயிறந்திருந்தும் அவர்களுக்கெல்லாம்பெரியவனாகிய உலகேசனென்னும் பிரமனது படைப்புக்குரியகாலத்தில் அன்னவன் சிருஷ்டிக்குள்ளகப்பட்ட சாமளாபுரமென்னும் பட்டணத்திலே பிரம்மகுலத்திலே யவதரித்த அரியானென்றொரு பிராமணன் வேதாகமங்களையுணர்ந்து யாவரும் உத்தமனெனச்சொல்லும் பெருமைபூண்டிருக்கையில் ஒருநாள்மஹாருஷிகளாகிய தபோதனர்களைக்கண்டுதெரிசிக்க வேண்டுமென்னுமாவலோடுந்தெண்டகாரண்யத்தை நோக்கிவரும்போது அவ்வனத்தில்வாழும் மான்மரைபன்றிமுதலிய மிருகங்களை வேட்டைமார்க்கத்திற் பிடித்து ஜீவித்துவரும் வேடர்கள்வேட்டையாடிக்கொண்டு வருகையில் ஒருமிருகத்தைக்கண்டு அதன்மீது குறிவைத்து வில்லினிடமாகக் கூர்பொருந்திய ஓர்வாளியைச் சந்தித்து கர்ணபரியந்தமிழுத்துப் பிரயோகிக்கும்போது அவ்வில்லினிடமாயிருந்து விடுபட்ட பிறைமுகக்கணையானது ரீங்கார வொளியோடும் அதிவேகமாய்வந்துவனத்திலெதிர்ப்பட்டு வரும்படியாகிய அரியானென்னும் பிராமணனது

இரண்டுகால்களேயுந் துணித்துப் பின்புறம் வடுருவியோடிப் போகையில் அப்போது பிராமணன் கடவுளைநினைத்து ஆசிவமே இப்படியும்வந்து நேருமோவென்று திடீலென்று மண்மேற்சாய்ந்து பிராணபாதைபோடுங் கூக்குரலிட்டு அழுதான்.

அவ்வாறு கதறுகிறகாலையில் அவ்வனத்துள் தவஞ்செய்து கொண்டிருக்கும் பெரியோர்கள் அவ்வோசையைக்கேட்டு ஏதென்றுவந்து பார்க்குமிடத்து இந்த அரியானென்னும் வேதியன் காலறுப்புண்டு கிடப்பதைப்பார்த்து அவனுக்குத்தேறுதலைசொல்லி தங்களிடமாகவிருந்த கமண்டலத்திருக்குஞ் சலத்தைமறையவன்மீது புரோட்சித்ததனால் அம்மறையவனுக்குண்டாகிய வலியையுந் துன்பத்தையும்நீக்கித் திடமுண்டாகும்படியாய்ச்செய்து கூறுவார்கள். பிராமணா, நீ ஒன்றுக்கு மஞ்சவேண்டாம் உனக்குப்பழையபடி காலுண்டாகும்படி நாங்களோருபாயஞ்சொல்லுகின்றோம் அதுயாதெனில் இந்தப்பூவுலகத்திலே தட்சிணபாகத்திலோங்குஞ் சேதுவின்மத்தியில் கந்தமானதபருவதச்சார்பில் சக்கரதீர்த்தமென்றுவழங்கும் முநிதீர்த்தமென்னுமோர் தடாகமுண்டு அத்தடாகத்தில் நீ பிரயாசை யெடுத்துக்கொண்டு போய் மூழ்குவையேயாகில் உன்னிரண்டுகாலும் பழையபடி உருக்கொள்வதன்றியும் கிருதார்த்தனுவாய் ஆதலால் விரைவிற்போகக்கடவையெனக்கூற அம்மொழி கேட்டவேதியன் மெத்தவுஞ் சந்தோஷமடைந்துமுநிவர்களைப்பணிந்து அன்னவர்களது ஆசிர்வாதமுங்கைக்கொண்டு அவனின்றும் நாற்காற்பாய்ச்சலாய்தவழ்ந்துகொண்டேபோய்த் தக்கவர்களாற்புகழுங் கந்தமாதன பருவதத்தைக்கண்டுதரிசித்து அம்மலைச்சார்பிலோங்கும் சக்கரதீர்த்தக்கரையிற்சேர்ந்து அத்தீர்த்தத்திலே மறைவிதியின்படி தீர்த்தமாடிக்கரையேறினவுடனே பழையபடிதனதிரண்டுகால்களும்வளர்ந்து பொன்போற்றேகமிருக்கக்கண்டு மகா சந்தோஷங்கொண்டு ஸ்ரீராமநாதனைப்பணிந்து மிகக்காதலோடும்தண்டகாரண்யத்தைநோக்கி வாயுவினுங்கொடிய வேகமாய்வந்து சேர்ந்து முநிவரவர்கள்வசிக்கும் பன்னசாலைக்குப்போய்த் தனக்குபசாரணை செய்தனுப்பிய தபோதனர்களைக்கண்டு திரிகரண சுத்தியோடும் அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்கனுய்ப்பணிந்தெழுந்து நமஸ்கரித்து தான்போய்வந்த காரியங்களைச்சொல்லித்துதித்து நிற்கையில் அதுகண்ட ருஷிகணங்கள் அரியானென்னுமறையவ

ன்மீது மெத்தவுஞ் சந்தோஷமடைந்து ஆசீர்வாதமும் வேண்டி யவரங்களுங்கொடுத்து சகஜீவியாய் உன்பதிக்குப்போய்வருவா யென்றனுப்ப அவற்றையேற்ற வேதியன் பிரயாணப்பட்டுதனது பதியாகிய சாமளாபுரம்வந்து சேர்ந்தான்.

ஆதலால் இந்தச்சூரிய பகவானையு மித்தீர்த்தத்தில் மூழ்கும்படியாய் நீங்களியாவரும் வாக்களித்துதீர்த்தமாடச்செய்தால் உடனே அவருக்கற்றுவிழுந்த இரண்டுகரங்களும்பழையபடி உண்டாகுமென்று அஷ்டவக்ரமஹாருஷிசொல்ல அவ்வார்த்தையை அங்குள்ளருஷிகணங்களும் இந்திராதிதேவர்களுங் கேட்டு சந்தோஷப்பட்டு அதுபோலவே சவிதாவென்னும் சூரியபகவானை அத்தடாகத்தில் மூழ்கும்படியாய் தேவர்கள்முதலிய ருஷிகணங்கள்கூற அவ்வாறே அச்சூரியன் சக்கரப்பவித்தியின்படி தடாகத்தில் தீர்த்தமாட உடனே அவரதிரண்டுகரங்களும் முன்போல்வளர்ந்து ஆயிரத்தெட்டு மாற்றுள்ள பசும்பொன்னைப்போற்சொலிக்க அதுகண்ட சகலதேவர்களும் முனிவர்களும் சந்தோஷமடைந்து மஹேசுரமென்னும் யாகத்தைப் பூரணகுதிசெய்து கொண்டு தெய்வலோகங் குடிபுகுந்திருக்கையில் அன்னவர் சத்துருக்களாகிய அரக்கர்கள் நாசமடைந்தார்களாதலால் இத்தகையமகிமைதங்கிய சக்கரதீர்த்தத்தினுடைய பெருமை யாவராற்சொலலி முடியுமென்று சூதமகாமுனிவர் சொல்லியருள, அதுகேட்ட நைமிசாரண்யர் மெத்தவுமானந்தங்கொண்டு முனிவரை வணங்கி சுவாமீ தேவரீர் இன்னும் அக்கந்தமாதனத்திலுள்ள மகிமைகளை அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்றுவினவ, அதுகேட்ட சூதமுனிவர் மனமகிழ்ச்சியுடன் அம்முனிவரைநோக்கி, ஓ முனிவர்களே, இன்னுஞ் சிவதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு அதன்பெருமையைச் சொல்லுகிறோம் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினர்.

## முனிதீர்த்தமாகிய சக்கரதீர்த்தம்.

முற்றிற்று.

---

கடு-வது.

# சிவ தீர்த்தம்.



கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளே, தேவர்கள்முதலிய மூவருக்கும் மற்றையாவருக்கும் பந்தபாசத்தைப்போக்கிப் பண்ணுதற்கரிய பிரம்மானந்தபாசத்தை தரத்தகுங் கந்தமானச்சாரிபில் கருதுவதற்கரிய அண்டாண்ட பிரம்மாண்ட பகிரண்டங்களினேங்கும் நால்வகையோனி எழுவகைத்தோற்றம் எண்பத்துநான்கு நூறுயிரஞ் ஜீவபேதங்களுக்குற்ற வினைப்பகுதியால்வருங் கலிப்பிணியாதி பவப்பிணியையும் பற்றறக்களைந்து தினைத்துணையேனும் நாடவொட்டாமலோட்டி, அகண்டபரிபூரண நிலயத்தை நாட்டவல்ல சிவதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு. அத்தீர்த்தத்திலே முன்னமோர்காலத்தில் ஞமலியின்மீதாரோகணித்துலாவும் வயிரவமூர்த்திக்குப்பிடித்த மிகக்கொடிய பிரம்மஹத்திவிமோசனமாயிருப்பதோடும் அத்தீர்த்தமானது சந்திரஜடாதரமூர்த்தியாகிய ஸ்ரீகைலாசபதியானவர் கந்தமாதனபருவதச்சாரிபில் தன்னைப்பூசித்துவந்த பொதிகைமுனியென்னும் அகஸ்தியருக்குங் கௌதமருக்கும் இஷ்டசித்திகணிறைவேறும்படியாய்த்தமது சூலாயுதத்தினுல் அத்தீர்த்தத்தை யுண்டாக்கிக் கொடுத்தமையால் அதற்கு சிவதீர்த்தமென்று மஹாருஷிகளாலே பெயருண்டாகிவிளங்குகின்றதென்று சூதமுனிவர்சொல்ல, அதைகேட்ட நைமிசாரண்யர்கள் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, சுவாமீ! நீலகண்டனுகிய பரமேசுவரனுல் நிருமிக்கப்பட்ட தீர்த்தத்திலே வயிரவமூர்த்திக்கு பிரம்மஹத்தி நீங்கியதென்றுரைப்பதால்ருத்ராம்சையோடுங்கூடிய வயிரவருக்கு பிரம்மஹத்தி எவ்விதமாய் வந்தணுகியதோ அதனை தேவரீர் திருவுளம்பற்ற வேண்டுமென்றுவினவ சூதமாமுனிவர் சொல்லுவார்.

வாருங்கள்மஹாருஷிகளே பண்டொருகாலத்திலேபாற்கடற்றுயின்றோனுகிய, மகாவிஷ்ணுவும், பதுமத்தனுகிய பிரமனும் ஒருவருக்கொருவர் இந்திராதிதேவர்கள் முதலியயாவருமறியும்படியாய் பிரமனுனவன் வைகுந்தவாசகனுகிய மகாவிஷ்ணுவைப்பார்த்து ஓவிஷ்ணுவே! இவ்வண்ட சராசரங்களையெல்லாம் நிரு

மித்து அவற்றில்ஹங்கு மெழுவகைத்தோற்றத்திற்கும் இரட்சிப்புசெய்யும்பொருட்டு உன்னையும் யான் சிருஷ்டித்திருப்பதால் எனதுபடைப்புக்குட்பட்ட நீ அதுபோல் நடத்திவருகிறாய்,அங்ஙனமிருக்க இப்போது நீ கிஞ்சித்தேனும்யோசியாமல் பெரியவனென்று எவ்வாறுசொல்லலாம், அந்தோ சகல புவனத்தையும் படைத்த என்னையன்றி வேறுதெய்வமும் உளதோ ஆதலால் நீ கொண்டமதியை விட்டுவிடுவாய் என்று ஓதியதைக்கேட்ட ஜனார்த்தனன் அடா பிரமனே! இந்த அண்டபிண்ட சராசரங்களையெல்லாம் நீயே நிருமித்ததென்றும் உன்னாலே சகலவுலகமும்விளங்கப்படுவதென்றும் உன்னையன்றி வேறுசிருஷ்டிக்க வல்லவரில்லையென்றும் சொல்லுகிறாயன்றோ பளா பளா கெட்டிக்காரன் உன்னுடைய அவலமதிக்கு நானென்சொல்வேன் அடாபிரமனே இந்தச்சகல புவனங்களையுஞ் சிருஷ்டிக்குந் தொழிலாளியாயேற்படும்பொருட்டு உன்னை என்னுடைய உந்திக்கமலத்தில்ஜனிப்பிக்கச்செய்ததுமன்றியில் சகலவுலகங்களையும் எனது கர்ப்பத்தில்வைத்துப் பாதுகாத்து ஏகசக்ராதிபதியாயிருக்கு மென்னையுணராமல் நீசொன்னவார்த்தையைப்பொறுத்தகாரணமியாதெனில் அந்தோ! எனது பிள்ளையாதலால் மன்னித்தேன் மன்னித்தேனென்றுகூறி ஒருவர்க்கொருவர் பின்னும் வாதமிட்டுக்கொண்டிருக்கிறபோது ஸ்ரீகைலாசபதியாகிய உமாமஹேசனு லுண்டாக்கப்பட்ட இருக்காதி நான்குவேதங்களும் இவர்கள் முன்வந்துநின்று ஓ அரிபிரமர்களே! கேளுங்கள் யாதெனில் வீணாக எனுங்கட்கு இந்த துர்ப்புத்தியும் இறுமாப்பும் உண்டாயிற்று சரியல்லவே மகாமேன்மையுற்ற குணமாகவும் அன்பர்களுடைய செவிக்கமிர்தமாகவும் அஞ்ஞானவிருளையகற்ற வெழுந்த அரிய பிரகாசமாகவும் சகல கலைகளுக்கும் பொருண்முடிவாகவும்மோனகுணாதீதமாகவும் உலகின்கண் ஒருவரால் அளப்பரியதாகவும் நான்குவேதங்களும் கோடாநுகோடி யுகங்கள்வரையிற்சொல்லிமுடியாதாகவும் இருக்கிற நிச்சயார்த்தத்தை உங்களிரண்டுபேருக்கும் நாங்கள் சொல்லுகின்றோம்.

அஃதெப்படியென்றால் எங்களில் ஒருவேதவாக்யப் பிரமாணத்தை கோடாகோடி பங்குசெய்து அவற்றி லொருபங்கெவ்வளவோ அவ்வளவுபொருளுக்குச் சமமான மாணுக்கராகிய அஞ்ஞான பிராந்தாளுக்கு ஆசாரியார் உபதேசஞ் செய்வார். அப்

படி அணுப்பிரமாணமாகியபொருளை நிச்சயார்த்தமாய்லட்சணு விர்த்தியிலேவைத்தயூகித்த அஞ்ஞானபிராந்தாள்ராகத்வேஷா திகளைவிட்டுவிட்டு சுயம்பிரகாசத்தை யறிவார்களாயின் நாங்களே பிரசித்தகுருவாய் வந்திருந்து சொல்லுகிற வாக்கியங்களை நீங்கள் யூகமாயறிந்துக் கொள்ளவேண்டும்.

அது எப்படியென்றால் மூன்றாம்பிறைச் சந்திரனைச் சடையிற்றரித்தவராகியும் விருஷபத்துவசமுடையவராகியுமோங்கும் பரமேசுவரனுடைய பாததாமரையி லணிந்திருக்கப்பட்ட பாதுகையானது சகலதேவர்கள் முடியிலும் உங்கள் முடியிலும் எங்கள்முடியிலும் இருக்கின்றபடியால் நீங்களிரண்டுபேரும் உலகமெல்லாம் சிருஷ்டிக்கிறேனென்றும் இரட்சிக்கிறனென்றும்சொல்லிக்கொள்வதெவ்விதம் சரியல்லவே மேலும் சர்வலோகசரண்யனாகவுந் ஸ்தாணுவாகவும் பரம்பரனாகவுஞ் சம்புவாகவும் ஒப்புவமையில்லாதவனாகவும் சுயம்பிரகாசமாகவும் வேண்டுதல் வேண்டாமையிலாதனாகவும் ஸ்ரீகைலாச பதியாகவும் உங்களுக்குமெங்களுக்குங் காரணவஸ்துவாகவும் பார்வதியை வாமபாகத்திலுடையவனாகவும் ஒருவராலுங்காணப்படாதவனாகவும் மலரின் மணத்தைப்போன்றவனாகவும் எங்களாற்றுதிக்கப்பட்ட ஒருவனே சகலகாரணவஸ்துவாயிருக்க அவனைமறந்து நீங்களிரண்டு பேருமே இப்படி வாதம்பண்ணும்படியாகிய அஞ்ஞானங் குடிகொண்டால் மற்றையாவரைத்தான்விட்டது.

அன்றியும் முன்னந்திரிபுரசம்மாரஞ் செய்யப்போம்போது அந்தப் பரமசிவமானது மஹாமேருவை வில்லாய்வளைத்துவாசுகியை நாணாகப்பூட்டியதை நீங்கள்பார்க்கவில்லையோ அதைதெரியாமற் போனபோதிலும் மகாவிஷ்ணுவாகிய நீயே அவ்வில்லுக்கு அம்பாகிய ஈசுவரனுடையகையிலே விளங்கவில்லையோ அப்போது பிரமதேவனாகிய நீ இரதசாரதியாகவிருந்தபோது அப்பரமசிவத்தினுடைய பாதாரவிந்தம் உமது புயத்திற்படவில்லையோ அவையிருக்கட்டும், ஐயா மகாவிஷ்ணுவே? உமதுகாத்தில் விளங்குஞ்சக்கரத்தை உமக்கு யார்கொடுத்தது, எங்களை யாருண்டுபண்ணியது இப்போது எங்களை உம்மிடத்திலிருக்கும்படி செய்தவர்யாவர் அதையாவது அறிந்துகொள்ளும் இஃதெல்லாமும் முன்னொருகாரணத்தினாலே அந்தபகவான் தாருகாவனத்து

முனிவர்களது பக்தியைச்சோதிக்கப்போம்பொழுது மோகினி யுருவங்கொண்டு அப்பெருமான்பின் தொடர்ந்தவர்யாவர் இத் தன்மையாவுமறிந்திருந்தும் நான் அதிகாரியென்றுசொல்லலாமா இதுவல்லாமலும் பாற்கடலைக் கடையுங்கால் ஆதிசேடனாலுண் டாகிய விஷாக்கினியினால் சுவேதவர்னமாகிய வுமதுதேகம் கன் னங்கறேலென்றுகறுத்துவிடும்படியாய் விடம்மண்டிவருகிறபோ து அவ்விடத்தையெடுத்து உட்கொண்டு சகலதேவர்களையு மிர ட்சித்து நீலகண்டனென்று காரணப்பெயரெய்தியவர் யாவர் ஐயோ சகலலோகங்களையும் இரட்சிக்கும்படியாய் நின்னையும் ப டைக்கும்படியாய்ப் பிரமனையும், சங்காரத்துக்குருத்திரனையும் அமைத்துச் சூத்திரப்பாவையைப்போல் உங்களை ஆட்டிக்கொ ண்டிருக்கும் வஸ்துவையோசியாது வீணேஏனிங்ஙனம் இறுமா ப்புக்கொண்டலைகின்றீர்கள் அரிபிரமர்களேயென்று வேதங்கள் கன்னத்திலறைந்ததுபோற்கேட்க, அப்போது அரிபிரமர்கள் ந கைசெய்து அஞ்ஞானத்தால் தங்களைக்கெட்டதென்றுணராமல் வெகுளியோடும்வேதங்களைப்பார்த்துச்சொல்லுவார்கள். ஓமறை களே, நீங்கள்சொன்னதுசரிதான்.

ஆயினும் அப்பரமசிவன் மயானத்திலே குடியிருப்பதன்றி யும் பூதவேதாள பைசாச கணங்களோடு கூத்தாடியும், என்பக ளையும் எருக்கம் பூவையு மாலையாக வணிந்தும், பசுமைநிறங் கொண்ட பெண்களை இடையிலும் தலையிலுஞ் சுமந்தும், மண் சுமந்து அடியுண்டும், இரந்துண்டும் திரியப்பட்டவனை எங்க ளோடு ஒருவனுக்கூட்டினது நன்மையல்லவே, மேலும் அவன் உங்களுக்கு என்ன நன்மைசெய்தான் நாங்களென்ன கொடுமை செய்தோம் யாதுமில்லாமலிருக்க நீங்களேன் இப்படி பொய்வா ர்த்தைசொல்ல ஏற்பட்டீர்களென்று பிரமனும் மகாவிஷ்ணுவுங் கூறியதைக்கேட்ட வேதங்களானவை, அவர்களது வார்த்தைக் கு பதிலொன்றுஞ்சொல்லாமல் இதுவென்ன விபரீதத்துக் கிட மோதெரியவில்லையென்றுநினைந்து மவுனமாயிருக்க, மறுபடியும் அரிபிரமர்கள் பழையபடி வாதமிட்டுக்கொண்டிருக்க, அப்போ து நான்குவேதத்தினது முடியினின்றும் ஓர்சுயம்பிரகாசமாகிய ஜோதியுண்டாகிவானத்தையளாவிநின்று அரிபிரமர்களைநோக்கி அண்டங்களெல்லா மதிரத்தக்கதாய் ஓ அரிபிரமாதிகளே! உங் களைப்போலும் அவிவேகிகளுண்டோ? ஏனெனில், வேதவாக் கியங்களைக்கடந்து விபரீதபுத்தியினாலே பழையபடி வாதமிடுகி

ன்றீர் முன்னொருகாலத்தில் கல்லாலின் கீழலிலினிதுவீற்றிருந்து சனகாதி தபோதனர்களுக்கு அரிய ஞானபோதனைசெய்ததும், மார்க்கண்டேயரைப் பற்றவந்தமறலியாகிய எமனையுதைத்ததும், கரும்பைவில்லாகக்கொண்டு கடிமணமுலாவு மலர்ப்பகழியால் ககனவாசிகளாகிய வுங்களையு மற்ற சராசரங்களையுஞ் ஜெயங்கொண்டுலாவிய காமனென்னு மன்மதனை நெற்றிக்கண்ணால் நீறுபடச்செய்ததும், முப்புராதிகளை நகைசெய்தெரித்ததும், கங்கையைச்சடையிற் றரித்ததும், கைலாசகிரியை வேருடன் கெல்லியெடுக்கவந்த இராவணனைக் கால்விரலினாற் கடிந்திருத்தியதும், சதுர்வேதங்களை யுண்டாக்கினதும், சுடலையில் வாழ்ந்துகொண்டிருப்பதும், என்புகளைமாலையைப்போற்றரித்திருப்பதும் எருக்கமாலையை யணிந்திருப்பதும் நீங்கள்தானே அப்பரமசிவம் நடத்து மிக்கோலங்களெல்லாம் உங்களுக்கேச்சாயிருக்கின்ற படியால் நீங்களிறந்தகாலையிற் சேருமிட மின்னதென்பதாய்ப் புலப்படவில்லையோ, அப்படியுங்களுக்குத் தோன்றாமற் போனபோதினும் புவனத்திலோங்குஞ் சகலவுயிர்களும் சைதந்யத்திலொடுங்குங்காலத்தில் மிஞ்சியது பேய்ப்படைகளல்லவோ, மேலும் உங்களுடைய பாதாதிகேசபரியந்தம் விளங்கிக்கொண்டிருப்பது என்பல்லவோ, அவ்வெலும்பல்லாமல் சரீரமுண்டாயிருக்கின்றதோ ஐயோ மகாவிஷ்ணுவே நீர் எடுத்த தசாவதாரங்களில் மச்சாவதாரத்தின் எலும்பும் கூர்மாவதாரத்தின் ஓடும் வராகாவதாரத்தின் கோடும் நரசிம்மாவதாரத்தின் நகமும் யாவரணிந்திருப்பது, அவைதெரியாதோ, இவையன்றியும் அப்பரமசிவத்தினுடைய வாமபாகத்தில் வீற்றிருக்கும் பார்வதியல்லவோ உம்மிடத்தில் இலட்சுமியாகவும் பிரமனிடத்திற் சரஸ்வதியாகவும் உருத்திரனிடத்தில் உருத்ரியாகவும் விளங்குவது இதுவல்லாமலும் பூமியாதிபாகவும் நாதவிந்தாகவும் ஏகவுருவாயுமிருக்கப்பட்ட வஸ்துவிலே பிரமாண்டங்களையெல்லாங்காட்டி ஒடுக்கப்படுத்திவருவது உங்களுக்குத் தெரியவில்லையோ, அந்தோ இராகத்வேஷத்தால் மதிகெட்டுழலுகின்றீர்கள் இனியேனும் அம்மதியை அகலவிடுத்து ஏகமனதாயிருங்கள். இஃதன்றியும் ஆணாகவும் பெண்ணாகவும் அலியாகவும் வாசாமகோசபரமாகவும் ரூபியாகவும் அரூபியாகவும் வேதாகமங்களுக் களவுபடாத அற்புதசின்மயஜோதியாய்விளங்கும் பரம்பரனென்றறியுங்கள், மேலும் அவ்வஸ்துவினிடமேயோங்குந் திரிகுணத்தில் இராட்சதகுணத்தா

ற் பிரமனையும் சத்துவகுணத்தால் உன்னையும் தாமதகுணத்தா
ல் உருத்திரனையும் நிருமித்துத் தான் நிர்மலனாய் நடித்துக்கொ
ண்டிருக்குமாதலால் அவ்வஸ்துவினது விளையாட் டொழிந்தால்
யாவுமகன்றதென்றறிக, இஃதன்றியும் அவ்வஸ்துவை ஆணுரு
வமென்று சிந்தித்தாற் பெண்ணுருவாம், பெண்ணுருவமென்று
சிந்தித்தால் ஆணுருவாம் அவ்வாறேயெங்குஞ் சந்திர சடாதரமூர்
த்தியாகிய உமாநாதனை அடியார்க்கெளியனை நாமும் நீங்களும்
நான்குவேதங்களும் இந்திராதி முப்பத்துமுக்கோடி தேவர்களு
ம் நாற்பத்தெண்ணாயிரம் ருஷிகளும் தும்புரு நாரதாதி சப்தரி
ஷிகளுமஷ்டவசுக்களும் கின்னரகிம்புருட கருடகாந்தர்வ சித்த
வித்யாதர உரகராகாயவாசிகளும் போகபூமியரும் சிவகணங்க
ளும் நாட்களுங்கோட்களும் வணங்கப்பட்டவஸ்து ஒருவனிரு
க்க அவனைத்தோத்திரஞ்செய்து வணங்காமல் நீங்கள் இப்படி
அமர்புரிவது சரியல்ல வாதலால் இனியாகிலும் உங்கள்மனத்தி
லுண்டாகிய சந்தேகத்தையும் ஆண்மையையும் விட்டுவிட்டு உ
ங்களிருப்பிடம் போய்ச்சேருங்களென்று அநேகமகிமைபொருந்
திய அசரீரியுரைத்ததைக் கேளாமற் பின்னும் விஷ்ணுவும் பிரம
னும் நீபெரியவன் நான்பெரியவனென்று அண்டங்கள் செவிடு
படும்படியாய் உத்தண்ட கெம்பீரத்துடனே தர்க்கமிட்டுக்கொ
ண்டிருந்தது எப்படியிருந்ததென்னில் சென்மாந்தரங்களி லவர
வர்கள்செய்த பிழைகளையெல்லாம் பொறுத்து நல்வினைக்குத்த
க்க நன்மையையும் பதவியையும், தீவினைக்குத்தக்க தீமையையு
ம் நரகத்தையும்கொடுத்து யோகஞான வழிகளிலே நிறப்படச்
செய்து உண்மைபோதங்களை யறிவித்துந் தெளிவில்லாத அஞ்
ஞானிகளொருக்காலுந் தெளியமாட்டார்களென்பதுபோல வை
குந்தவாசனாகிய விஷ்ணுவும் மரைமலர்த்தேவாகிய பிரமனும் த
மது அஞ்ஞான நீங்காதவர்களாய் தாங்கள்பற்றியதே பற்றாகவி
ருக்கையில் உடனே அவ்விடத்திலிருந்து ஓராயிரங்கோடி சூரி
யப்பிரகாசம்போல ஆகாசம் பூமியெல்லாம் நிறைந்து பத்துத்தி
சையும்பரவி எங்கணுஞ்சோதிமயமாய் ஒருவெளித்தோற்றமாக
அத்தோற்றத்தைக்கண்டபிரமன் இதென்னகாரணத்தால் உண்
டாயிற்றோவென்றுதிடுக்கிட்டுப் பார்ப்போமென்றெண்ணங்கொ
ண்டிருக்கையில், பிரமனது மனக்கலக்கமானது அந்தச்சோதியி
ற்கலந்து அவனுடைய முகமும் அக்கினிசொரூபமாகி அந்தஅக்
கினிக்குள்ளே நீலகிரிபோல ஒருபுருடனிருக்கக்கண்டு, உடனே

வெகுளிமேற்கொண்டு, அஞ்ஞானத்திலாழ்ந்து மகாவிஷ்ணுவை நோக்கி, ஓ விஷ்ணுவே, உம்முடைய அகந்தையினாலே என்னோடு வீண்வாதுகூறினதால் இந்த அக்கினியிலே எரிந்துபற்பமாய்ப்போகும்படி நேரிட்டதென்று எவ்வளவுந் தோற்றுமலும் மனவாக்குக்காயங்களினாலே எண்ணப்படாதவனாயிருக்கும் பரமசிவன் விஷ்ணுவினுடனேகலந்து கற்பூரதீபம்போற்காண்பிப்பதை அறியாதவனாய் அகங்கரித்துப்பேச உடனே அவ்வக்கினி சொரூபமான பருவதத்தின் மத்யிலேநின்ற பரமசிவத்திற்குக்கோபமுண்டாகி காளவயிரவாவென்றோர் சப்தமுண்டாகிச் சூலகபாலத்துடனேயும் சிங்கப்பல்லும்கோரமீசைகளும்சிவந்தசடைகளுமாகக் காளவயிரவனெழுந்து அண்டங்களெல்லாம் நடுங்கும்படியாய் வாயினிடத்தும் மூக்கினிடத்தும் கண்களிடத்தும அக்கினிப்பொறிகள் குபீர்குபீரென்று சிந்தத்தக்கதாய் தாவித்திடீரென்றுகுதித்தான். அப்படிகுதித்த காளவயிரவனைப்பார்த்து பரமேசுவரன்கூறுவார், ஓ காளவயிரவா, நீ இந்தப்பிரமனை ஐபஞ்செய்துவரக்கடவையென்றுசொல்ல, உடனே காளவயிரவனும் கோபாவேசங்கொண்டவனாய் பிரமனைவந் தெதிர்த்துப்போராடி ஒருவர்க்கொருவர் தங்கள்கரத்தினிடமாயிருந்த ஆயுதங்களால நெடுநாள்வரையிற் போராடிக்கொண்டிருக்கிறபோது காளவயிரவர் கடுங்கோபங்கொண்டு விசுவசொரூபத்தோடுமெங்கும் வைரவசொரூபமாய் சூலகபாலங்கையிற்கொண்டு நிற்பதைப்பிரமன் கண்டுபயந்து நடுநடுங்கி ஓடிப்போகஎண்ணங்கொண்டு இடம்பார்க்கும்போது பார்த்தவிடமெல்லாம் வைரவசொரூபமாய் தோற்றுகிறதினாலேபின்னும்பயந்து ஆகாயமார்க்கத்திலெழும்பியோடயத்தனிக்கையி லதுகண்ட வைரவர் மகாகோபங்கொண்டு அவன்சிரத்தில் நடுமையாகவிருப்பதை இரத்தவெள்ளம் பெருகும்படியாய் தனது கைநகத்தாற்கிள்ளிவிட அதனாலே பிரமதேவனுடைய பிராணனொழிந்து பூமியின்மேற் சாய்ந்தான்.

அப்போது அதை மகாவிஷ்ணுவானவன்கண்டு திடுக்கிட்டு இதுவெல்லாம் பரமசிவத்தின் செயலால் நடந்ததென்றறிந்து தனது அஞ்ஞானத்தைநீக்கி அச்சத்தோடுப் பரமசிவத்தைததுதிக்க, உடனே ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவன் வெள்விடையின் மீது பார்வதிசமேதராய் ககனத்திலெழுந்தருளிவந்துபூமியிலிருக்கும் பிரமதேவனை எழுப்பும்படியாய்க்கருணைகூர்ந்துபிரமனைப்

பார்த்தபோது உடனே பிரமன் உயிர்பெற்றெழுந்து பரசிவனை த்தோத்திரஞ்செய்து அவரதுபாததாமரையைச் சிரமேற்சூட்டி ஆனந்தக்கூத்தாடினன். இவ்வாறுவயிரமூர்த்தியினதுகரத்தால் வதஞ்செய்யப்பட்டு பரமசிவத்தினுடைய அருளால்மறுபடியுமு யிர்பெற்று தனது அஞ்ஞானநீங்கித்தோத்திரஞ்செய்தமையால் இப்படிகொடுமையான தண்டனைசெய்கிறதே நியாயமென்றும் இவ்வாறல்லாமல் என்போலியர்களுக்கு வேதசாஸ்திரபுராணங் களை ஓதுவதிற் பிரயோசனமில்லையென்றும பிரமனுனவன்கூறி உமாகேசனைப் பலவாறுய்த் தோத்திரஞ்செய்கையில் அப்போ துவிடையூர்தியாகியபெருமான் புன்சிரிப்போடும் பிரமனையும் ம காவிஷ்ணுவையும் பார்த்துச்சொல்லுகின்றார், வாருங்கள் அரிபி ரமர்களே! நீங்களிருவரும் வேதங்களாற்கூறப்பட்ட மொழியை யுங்கேளாமல் அதிக்கிரமித்து நடந்தமையால் துன்பத்துக்குள் ளாய்நின்றீர் இனிமேல் அச்சமுறுநீர்களென்று அபயஸ்தங்கொ டுத்துப் பின்புவைரவரைப்பார்த்து சந்தோஷத்தை யடைந்தவ ராகியும் ஒ வைரவா இந்தப்பிரமனுடையசிரத்தைக்கிள்ளி அ ச்சிரம் உனதுகரத்திலே ஒட்டிக்கொண் டிருக்கின்றமையாலும் அது இனியுன்னை மிகுந்த இம்சைபடுத்துமாதலாலும். அந்தத் தோஷநீங்கும்படியாய் ஒருபாயஞ் சொலலுகின்றோம். அதுயா தெனில், இந்தப்பிரமகபாலத்தைக் கையிலேயேந்திஉலகின்கண் ஒருவருடம்வரையில் ஐயமெடுத்துண்டுதிரிந்து வருடமான பிற கு பூலோகத்திலுண்டான தீர்த்தமெல்லாமாடிப் பிறகு காசிக் குச்சென்று கங்கையில்தீர்த்தமாடினுல் உன்னைப்பற்றிய பிரம்ம ஹத்தியில் நான்கிலோர்பாகம்விலகும மற்றமூன்றுபாகமும்வில கும்படி யவணின்றும் பிரயாணப்பட்டு தென்றிசையிற் சேதும த்தியிலோங்கும் கந்தமாதனகிரிச்சார்பில் நமது ஆலயத்துக்கு முனபாக நம்மாலுண்டாகிய சிவதீர்த்தத்தில்மூழ்கினுல் உடனே அந்தப்பிரம்மஹத்தியுன்னைவிட்டுநீங்கிப்போம் இதறகுச்சந்தே கமில்லை. ஆதலால் பயப்படாமல் நாம்சொல்லியபடிசெய்யக்கட வையென்று பரமேசுவரன் திருவாய்மலர்ந்தருளி அரிபிரமாதி தேவர்கள்துதிக்கும்படியாய் கைலாசகிரிக்கெழுந்தருளினுர்.

அப்பாற பிரமதேவனுடைய சிரங்கிள்ளப்பட்டு மறுபடியும் பரமசிவனுல் உயிர்பெற்ற அந்தஸ்தானத்துக்குப்பிரமாபுரமென் னும் பெயர்விளங்கச்செய்து அவ்வாறு வழங்கிவருகின்றபடியா

னும் அவ்விடமிருந்தவைரவர் பிரமகபாலத்தைக்கையிலேந்தி அவணின்றும் பிரயாணப்பட்டுச் சகலலோகங்களிலும் பிரவேசித்துப் பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு திரிகிறபோது பிரம்மஹத்தியும் அவர்பின்னே தொடர்ந்துதிரியப் பரமசிவத்தின் கட்டளைப்படி ஒருவருடமானபிறகு அதன்மீது பூவுலகத்திலுள்ள தீர்த்தமியாவுமாடிப்பின்னர் காசிக்குச்சென்று கங்கையிற் றீர்த்தமாடும்போது நிலகண்டமூர்த்தியின் கட்டளைப்படி பிரம்மஹத்தியில் நான்கிலோர்பாகமகன்று மற்றைய மூன்றுபாகம் வைரவரைப்பற்றி வாதிக்கும்போது வைரவரும் பயந்து நடுங்கி அதிசாக்கரதையோடும் காசியைவிட்டுப் பிரயாணப்பட்டுத் தென்றிசையிலோங்குங் கந்தமாதனபருவதச்சாரலில் சிவதீர்த்தக் கரையில்வந்துசேர்ந்து அத்தீர்த்தத்தில் மூழ்கியவுடனே வைரவரைப்பற்றிய பிரம்மஹத்தியாவும் நீங்கினபடியால் தனதுகரத்திலிருந்த சூலகபாலத்துடனே ஸ்ரீகைலாசபதியைத்தோத்திரஞ்செய்ய பரமேசுவரனும் விருஷபவாகனமீது பார்வதிசமேதராய் எழுந்து வைரவமூர்த்திக்குப் பிரசன்னமாய்ச்சொல்லுவார். வாராய் காளவைரவனே, உன்னைப்பற்றியிருந்த பிரம்மஹத்திநீங்கிவிட்டபடியினாலே நீகாசிக்குப்போய் அந்த திவ்யக்ஷேத்திரத்திற்றானே இந்தப்பிரமகபாலத்தை ஒருபக்கம ஸ்தாபனஞ் செய்துவிடுவாயென்று விடைபளித்துப் பரமசிவன்கைலாசத்துக்கெழுந்தருளினர். அதன்பின் காளவைரவர் மகாசந்தோஷத்துடனே கந்தமாதனகிரியினின்றும் நீங்கிக் காசிபட்டணம்போய்ச்சேர்ந்து சந்திரஜடாதரமூர்த்தியினது ஆக்ஞையின்வண்ணந்தன்னிடமிருந்த பிரமகபாலத்தை அங்ஙனமோரிடத்தில் ஸ்தாபனஞ்செய்துவிட்டு ஒரு தடாகமுமுண்டுபண்ணிப் பின் அவ்விடத்துக்கு பிரமகபாலமென்றும் பிரமகபாலதீர்த்தமென்றும் நாமகரணஞ்செய்து தானும் அவ்விடத்திற்றானே வாசஞ்செய்துகொண்டிருந்தாராதலால் அந்தக்காசிக்ஷேத்திரத்திலே ஒங்கும் பிரமகபாலதீர்த்தத்தில் யாவரேனுந் தத்தம்பிதுர்களுக்குப் பிண்டமளிப்பார்களாகில் அவரைப்பற்றிய பாபங்களியாவும்விலகுவதோடும் இகபரசாதனத்துக்கு மேதுவாவார்களென்றும் அப்பால் இந்தக்கந்தமாதன பருவதத்திலே விளங்குஞ் சங்கதீர்த்தமானது அனேககோடி பிரம்மஹததிகளை யெல்லாம் விமோசனஞ் செய்து மிகமகிமையோடு மிருக்கின்றதென்றும் சூதமகாமுனிவர்சொல்ல அதுகேட்ட நைமிசாரண்யர் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து

சுவாமீ! இன்னுமப்பருவதச் சாரலிலோங்கும் புண்ணியதீர்த்த மகிமைகளை தேவரீர் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்றவின வச் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினார்

சிவ தீர்த்தம்.

முற்றிற்று

---

கசு-வது,

## சங்க தீர்த்தம்.

---

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே, வேதாகமங்களால் விளங்கப்பட்ட சேதுவின்மத்தியிலே இலகுங் கந்தமாதனகிரிச்சாரலில் பொன்னுலகவாசிகளாகியதேவர்களாலு மற்றை மூவர்களாலுஞ் சாற்றுதற்கரிய சங்கமாமுனி யென்னும் ஓர்முனிவர் தபஞ்செய்துகொண்டிருக்கிறபோது அத்தபோதனரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தமாதலால் அதற்குச் சங்கதீர்த்தமென்று பெயர்வழங்குவதோடும் அத்தீர்த்தத்தில் யாவர்மூழ்கினாலும் அவர்கள் மாதாபிதா குருதெய்வங்களை நிந்தனைசெய்த தோஷமும் செய்நன்றிமறந்ததோஷமும் பஞ்சமாபாதகங்களுந் தொலைந்து புனிதராவார்கள். அதெப்படியெனில்முன்னொருகாலத்தில் வேதகுலத்திலுற்பவித்து வசநாபனென்று சொல்லப்பட்ட ஓர்பூசுரன் குணசீலனாகவும் மாதுர்பிதுர்க்களினிடத்தில் அத்யந்தபிரீதியுள்ளவனாகவும் பிரம்மக்கியான முடையவனாகவும் யோகவானாகவும் தர்மசொரூபனாகவுமிருக்கு மவ்வேதியன் பிரமசர்யம் கிருதஸ்தம் வானப்பிரஸ்தம் இவைகளிலே ஒழுக்கமாய்நடந்து அநேககாலம்நிருவிகற்பசமாதியிலே அசைவறவிருந்துவிட்டான் அவ்வாறிருக்கும்போது அவனுடைய சரீரத்திலேபுற்றுவளர்ந்து மூடிக்கொண்டு அப்புற்றிலே அநேக புற்பூடுகள்முளைத்து பறவைகளுக்கிருப்பிடமாய் அப்பறவைகளின் எச்சத்தினின்றுதங்கிய வித்துக்களாலே அநேக விருட்சசாதிகளுண்டாய் வளர்ந்து ஆகாசத்தையளாவிக்கொண் டிருக்கையில் அவற்றி

ன் வேர்களில் மூடப்பட்ட புற்றுக்குள்ளே யோகத்திலிருக்கும் வசனுபமுனியிருந்தது எப்படியிருந்ததெனில், பலாமரத்தின் வேரினின்றும் பூண்டாகிப் பின்னர் பிஞ்சாய்க்காயாய் பழமாய்க்கனிந்திருப்பதுபோல சரியை கிரியை யோகங்களினின்றும் பருவங்கடந்து கனிந்த ஞானப்பழமாய் மதியமிர்தமுண்டு சுகித்திருந்தார் அப்படியிருக்கும் வசனுபனென்னுமுனிவர் தன்னுடையசரீரத்திலே புற்பூடுமுதலிய விருட்சங்க ளுண்டாயிருந்தும் தேகாபிமானமற்றுத் தன்னைமறந்து சச்சிதானந்த மயமாய் விளங்கிக்கொண்டிருப்பதை ஆடகலோகத்திறைவனுகிய தேவராஜனறிந்து சப்தமேகங்களையும் வருவித்து, ஓ முகில்களங்காள் பூலோகத்திற் றவஞ்செய்துகொண்டிருக்கும் வசனுபனுடைய தவத்தை நாமறியவேண்டியிருப்பதால் நீங்கள்போய் உங்களுடையவலிவு கொண்டவரையில் அகோரதாரையாய் மழை வருஷியுங்களென்று சொல்லியனுப்ப, அதுபோல் அந்த சப்தமேகங்களும் மகாகம்பீரத்துடனே ஆகாசவீதியெங்கு நிறைந்து இடைதெரியாமல் மறைத்துக் கருங்கடலுடைந்ததுபோல் அண்ட கடாகங்களும் வெடிக்கும்படியாய்ச் சத்தாடம்பரஞ்செய்து அடிக்கடி மின்னலுங் கெற்சிதமும் அடைவிடாமற் செய்துகொண்டு இராப்பகலாய் கன்மாரிபோற் சிந்தும்போதும் புற்றுக்குள்ளே யிருக்கிற வசனுபனுக்கு எவ்வளவுந்தோற்றமல் யுத்தரங்கத்தில் அத்திரங்களைச் சரமாரியாய் வருஷித்தபோதினும் அவைகளைத்தாங்குகிற சுத்தவீரனுக் கொப்பாகவும், தேவேந்திரனு லேவப்பட்ட ஆவர்த்தமென்னுஞ் சோனைமாரிக்குகிஞ்சித்தேனு மஞ்சாமல்தேவேந்திரனேதன்னைப் புட்பங்களா லர்ச்சிப்பதுபோலும் நீரிடி நெருப்பிடி முதலிய மேகங்களின் கெற்சிதமுய் மின்னலும் அன்னவன் செய்யுந்தோத்திரம்போற் கருதியவராய்வசநாபமுனிவர் சமாதியேகத்திலசைவறவிருப்பதை இந்திரன்கண்டு ஆச்சரியமடைந்து மகாமேருவைப்போ லசைவில்லாதிருக்கும் வசநாபனதுசரீரத்தை அசையும்படியாயும் கிட்டை நீக்கும் படியாயுஞ் செய்யவேண்டுமென அதிகபிரியங்கொண்டவனுய்வாயுபகவானை வருவித்துத்தனது கருத்தையுரைத்து எவ்விதமேனும் அம்முனிவரனது கிட்டை கலையச்செய்ய வேண்டுமென் றனுப்ப, அது போல்வாயுபகவானனவன் யுகாந்தகாலத்திலோங்கி எழுஞ்சண்டமாருதத்தினுங் கோடிபங்கு அதிகமாய் மேருமுதலிய அஷ்ட

குல பருவதங்களும் நடுங்கி கலத்துப் போகத்தக்கதாக மாரியோடுகலந்து புவனமுழுதுங் காடாந்தகாரத்தைப்போற் கிட்டிபடர்ந்து பேரிடியோடும் லோகத்திலுள்ள சமஸ்தஜீவராசிகளும் உயிரிழக்கும்படியாய் வருஷிப்பதோடுஞ் சண்டமாருதவேகத்தால் ஆகாசத்தையளாவித் தழைத்த விருட்சங்களை யெல்லாம் வேரோடுகல்லிக் கிளப்பி பூமியைக்காணுமல் கொக்கைப்போற் பறக்கும்படியாயும், பருவதங்களைக் கிளப்பிப் பொடித்துக்காற்றோடுகாற்றாய்சமுத்திரத்திற்கலந்து நீடிய ஆழியினது ஆழத்தை அடைத்துச்சேறுபடுத்தும்படியாயும், இடிகளின்கொடுமையால் லோகங்கள் பஸ்மீகரமாய்ப் போவதோடும்பாதாளலோகம்வரையில் பத்தல்பத்தலாய் வெடிக்கும்படியாயுஞ் செய்துவருங்கொடுமையால்வசநாபமுனிவர்மீது வளர்ந்தோங்கியவிருட்சங்களுமொழிந்து புற்றுமிடிந்து பதுமாசனத்தின் சந்நிதிமுன் வைத்திருந்த கமண்டலமும் தூள்பட்டு அல்லோலகல்லோலப் படுத்துவதை அம்முனிவரது புண்ணியபலனனது கூடித்திரண்டுதருமதேவதையாய் ஓர் எருமைக்கடாவைப்போற் சொரூபமெடுத்து அண்டமுகடுகளெல்லாம் பொடிப்படும்படியாத் தனது கொம்புகளையசைத்துவாலைச்சுழற்றி வீசுந்தன்மையால் மேகக்கூட்டங்கலைந்து நடுங்கி கதிமாறிவாலினிடமிருக்கும் உரோமங்களுக்குத்தைலமிட்டதுபோற் கலந்துபோகவும், இடிகளை வாலினுற்றட்டிச்சுளுந்தின்பொறிபோல் திசைகளிற் சிந்தும்படியாய்ச்செய்து, வசநாபமுனிவர்மீது ஓர் திவலையேனு மணுகவொட்டாமல் தனது வயிற்றின் கீழிருத்தி கர்ச்சித்து தருமதேவதையானவள் நிற்பதைக் கண்ட தேவேந்திரன் ஆச்சரியமடைந்து இவன்தவத்தையழிக்க நம்மால் முடியாதென்று நாணமுற்றவனாய் மழைபொழியாமலிருக்கும்படியாய் மேகங்களுக் குத்தரவுசெய்ய, அதுபோல் மழைநின்றுபோனதைக் கண்ட பகடானது முனிவரைவிடுத்துப் பத்தடிதூரம் விலகிப்போம்போது, வெள்ளங்களினுற் பூமியைப்பிளந்து சேறுபட்டிருக்கும் வெடிப்புக்குள் எருமைக்கடாவாக விருக்குந் தருமதேவதையினது நாலுகாலுஞ்சிக்கிப் புதைந்து பெயர்ப்பதற்கு ஏதுவில்லாமலிருக்க, வசநாபனென்னு முனிவர் உடனே தற்செயலாய் நிட்டைநீங்கிக் கண்ணைவிழித்துப்பார்த்துஎங்கும் வெள்ளமயமாகவும் பூமிகள்வெடிப்புண்டும் விருட்சங்களும் அருகேயிருந்தபருவதங்களுமில்லாதுதிசாதிசையிற்போய்ப்படிந்

திருப்பதை முனிவர்கண்டு ஆச்சரியங்கொண்டு இஃதென்னகாரணம், நம்மீது ஒருதிவலையேனும் படக்காணோம், உலகம் முழுது மேலதாய்ப் புரண்டிருக்கின்றதேயென்று ஞானதிருஷ்டியாற்பார்க்கையில் தேவேந்திரனால்நடந்த தீமையென்றும் அதற்குத்தருமதேவதை யாதொரு இடருமுறாமல் தன்னைப் பாதுகாத்த தென்றுந்தெளிந்துசுற்றிப்பார்க்கையில், பசுவுருவங்கொண்டிருக்குந் தருமதேவதையைக் கண்டெழுந்து அதனருகே சென்று தருமதேவதையின்மீது சந்தோஷமடைந்து ஓ தருமதேவதையே! நீயென்னை இரட்சித்தபண்பால் நீடூழி வாழக்கடவையென்று சொல்லி, பின்பு சிலதூரத்திற்சாய்ந்திருக்குமோர் விருட்சத்தடியிற் போய்ச்சேர்ந்து பழையபடி தவம்புரிய மேவுகையில் கண்டதருமதேவதையானவள் மனம்வருந்தி நாம்செய்தநன்றியை யோசியாமலும் புதைபட்டிருக்கும் நம்மை வெளிப்படுத்தாமலும் போய்விட்டானெனக் கருதியும் நாம்செய்தகருமமென்றும் தன்னைத் தான்வெறுத்துக்கொண்டு அதிகபிரையாசையோடும் புதைபட்டிருந்தகால்களைப் பிடுங்கிக்கொண்டு மெதுவாய் தேகவாதையோடும் மனமெலிந்து நடக்குஞ் செய்கையைக்கண்ட முனிவர் திடுக்கிட்டெழுந்திருந்து தருமதேவதையினிடம்வந்து ஓ தருமதேவதையே பாவியாகிய நான் அஞ்ஞானத்தால் உனது கால் புதைபட்டிருப்பதை யறியாமற் போய்விட்டபடியால் எனது குற்றத்தைப் பொறுத்தாட்கொள்ளுவாயென்று பலவாறாகத்துதித்தும், அந்தோ நான் செய்தபாவத்துக் கென்சொல்லுவேன், உலகின்கண்யாரொருவர் உபகாரஞ்செய்கின்றார்களோ அவர்களுக்கு அபகாரஞ்செய்பவர்கள் பிரம்ம விஷ்ணுமுதலிய தேவர்களது காலவளவுவரையில் ரவுரவாதிநரகத்துள் ளழுந்திக் கரைகாணுதவர்களாய்த்துன்பப்படவருமே யென்றும்செய்நன்றிமறந்தவர்களுக்கும், வேதாந்த சாஸ்திரங்களை உபதேசஞ்செய்த குருவுக்கும் மாதா பிதாவுக்கும் தீக்கடன் நீர்க்கடன்முதலியகிரியைகளைச்செய்யாத பாவிகளுக்கும் உண்டாயிருக்கிறபாதகம்அவருடைய உயிரை மாய்த்துக்கொண்டாலொழிய வேறே அதற்கோர்பரிகாரங்களுஞ் சொல்லவில்லையே ஆதலால் நம்முடைய உயிரைமாய்த்துக்கொள்வதே நமக்குப் பரிகாரமென்று நினைந்து,அதிதீவிரமாய் அவணின்றுநீங்கி ஒருபருவதவுச்சியிற்போய் தலைகீழாய்ப்பூமியில்விழுந்து மரணமடைவோமென்றுபோகும்போது தருமதேவதையான மகிஷம்கண்டு, அக்கணமே தன்சொரூபத்தையெடுத்து வசாபனென்னு முனிவனுக்கு முன்பாகவந்துநின்

றுவாராய் வசநாபனென்னு முனிவனே நானே தருமதேவதை நீ யேன் இப்போது நீ நன்றிமறந்தமையால் இவ்வுயிரை வைக்கப்படாதென்று நினைந்து மடியப்போகின்றாய் வேண்டாம், உன்னையறியாமலவந்த அபசாரத்தை நீக்கிக்கொள்ளும்படியாய் நானே ருபாயஞ்சொல்லுகின்றேன். அதுயாதெனில், பரதகண்டத் தென்றிசையிற் சேதுமத்தியிலோங்கும் கந்தமானகிரிசார்பில் முன்னொருகாலத்தில் சங்கமாமுனி யென்பவராலுண்டாகிய சங்கதீர்த்தமென்று ஓர் தீர்த்தமிருக்கின்றது அத்தீர்த்தத்திலே நீபோய்மூழ்கி அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமநாதனைத் தெரிசனஞ்செய்து வருவையேயாகில் உனது பாவங்களெல்லாம் விமோசனமென்று தருமதேவதைசொல்ல அவ்வுரை கேட்ட வசநாபன் மகாசந்தோஷமடைந்து, நான்செய்த அபசாரங்களை யெண்ணாமல் இப்போது எனக்கு உபகாரஞ்செய்தனையேயென்று பணிந்து அநேக உபசார வார்த்தைசொல்ல, அதனைத்தருமதேவதைகேட்டு மகிழ்ச்சியடைந்து நான்யாருக்குந் தருணதருணங்களிலே உபகாரஞ்செய்வதே என் உண்மையாதலால் நான் கூறியவண்ணம் கந்தமாதனச்சார்பிலே விளங்குஞ் சங்கதீர்த்தத்திற்குப்போய் சங்கற்பவிதியின்றி மூழ்கிவாவெனச் சொல்ல அவ்வார்த்தையின்படியே வசநாபனென்னு முனிவன் அவணின்றும் பிரயாணப்பட்டு தென்றிசையிலோங்குங் கந்தமாதனகிரிச் சார்பிலேவிளங்குஞ் சங்கதீர்த்தத்தில்வந்து மூழ்கியவுடனே நன்றிமறந்தபாதக மவனைவிட்டகன்று அந்தக் கந்தமானபருவதத்திற்றானே அனந்தகோடிகாலந் தவஞ்செய்துகொண்டிருந்து மோட்சா சம்பிராச்சியமாகிய முத்திவீட்டைப் பெற்றார். ஆதலால் அத்தீர்த்தத்தினுடைய பெருமையை யாவராற் சொல்லிமுடியுமென்று சூதமாமுனிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யர் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, முனிவரைநோக்கி சுவாமீ! இன்னம் அவ்வுரைச்சார்பிலிருக்கும் தீர்த்தங்களின் மகிமையை அடியேங்களுக்குத் திருவுளம்பற்ற வேண்டுமென்று கேட்க, சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

## சங்கதீர்த்தம்.

முற்றிற்று

---

## கஎ-வது

## கங்கை யமுனை கயா என்னும்

# மூத்தீர்த்தம்.



கேளுங்கள் முனிவர்களே முன்னொருகாலத்திலே பிரம்மகுலத்தில் உற்பவித்து இரயுக்குவனென்று பெயர்படைத்த வொருமுடவன் ஒற்றைமாடுகட்டிய வண்டியில் ஏறிச்சஞ்சாரஞ்செய்துகொண்டிருப்பவன், கந்தமாதன பருவதச்சார்பிலே தவஞ்செய்துகொண்டு தனது அஞ்ஞானத்தைநீக்கி நிர்மலனாய்லோகத்திலுள்ள சகலதீர்த்தங்களினுமாட எண்ணமுற்றவனாயினுந் தன்னால் நடந்துபோவதற்குச் சத்தியில்லாமையால் தானிருந்த கந்தமாதனத் திற்றானே பஞ்சாக்கினிமத்தியில் நின்று அன்னபானாதிக ளில்லாமல் சருகு ஜலபட்சணங்கள்செய்து நிட்டைசெய்து வருபவனுக்கு தேகத்தில் வறட்சிகொண்டு, எந்நேரமுஞ்சோரிந்து கொண்டே யிருக்குந்தன்மையால் இரத்தம்பெருகி வருவதை நகத்தினாலெடுத்துத் தெறித்தும் மனத்தை வேறுபடுத்தாமல் பிரமசொரூபத்தினின்றும் அகலாமல் தவஞ்செய்து வருபவன், கங்கை யமுனை கயா இம்மூன்றுநதிகளிலுா தீர்த்தமாட எண்ணங்கொண்டவனாய் தன்னிடத்திலிருக்குஞ் சிறியவண்டியானது நதிகளிலும் காடுமலைவனம் வனாந்தரங்களிலும் போகமாட்டாதே என்செய்வோம் அம்மூன்றுநதிகளையும் இவ்விடத்திற்றானே வருவித்துக்கொள்ள வேண்டுமென்று சுத்தசத்துவத்திலிருந்து தவஞ்செய்து சின்மயமானந்தசொரூபத்தையடைந்து ஒரு மந்திரத்தை ஜபித்து கங்கை யமுனை கயா என்னு மூன்று தீர்த்தங்களையும் மனத்திற் சிந்தித்தவுடனே அம்மூன்றுநதிகளும் பூமியைப்பிளந்து பாதாளலோக மார்க்கமாக கந்தமாதனகிரிச் சார்பிலே விளங்குமோர் பூஞ்சோலையிற் கீட்டிசையைநோக்கிக்கண்களைமூடித் தவஞ்செய்துகொண்டிருக்கும் இரயுக்குவனென்னு முனிவனதுதேகமெல்லாங் குளிரும்படியாய் அலைகளைவீசிச் சிதறி ஆடம்பரஞ்செய்து சொல்லும் வாருமையா முனிசிகாமணியே நாங்கள்மூவரும் உமது தவப்பெருமையாற் பிரயாணப்பட்டு வந்தோமாதலால் இனி உமது சித்தத்தின்படி நிறைவேற்றிக் கொள்ளுமென்று சொல்ல அப்போது இரயுக்குவமுனிவன் கண்களை

விழித்துப்பார்த்து நதிகளைக்கண்டு சந்தோஷமடைந்து நனிகா தலோடும் அம்மூன்றுநதிகளுக்கும் அர்க்கியபாத்தியசோடசோ பசாரங்களுஞ் செய்து மந்திரவித்தாய் மகா நிவேதனங்களுங் கொடுத்து அவற்றில் மூழ்கியெழுந்திருந்து சந்தியாவந்தன நிய மநிட்டைகளியாவு முடித்துக் கங்கை யமுனை கயை என்னுமூன் று நதிகளையுந் தோத்திரஞ்செய்கையில் அம் மூன்றுநதிகளுஞ் சந்தோஷத்தையடைந்து இரயுக்குவனை நோக்கி ஓ முனிவனே உமக்குவேண்டிய காரியமென்னவென்று கேட்க அதுகேட்டமு னிவன் ஓ தாய்மார்களே நீங்கள் மூவரும் இவ்விடம்வாசஞ்செ ய்திருந்து என்னைப்போன்ற பாவிகளுக்கு உங்களுடைய பரிசம் பட்டமாத்திரத்தில் அவர்களைப் பற்றியிருந்த கர்மமியாவுமகன் று புனிதராகும்படியாகிய வரந்தரவேண்டுந் தாய்மார்களே யெ ன்றுவினவ அதுகேட்ட மூன்றுநதிகளும் இரயுக்குவமுனிவன் தவப்பெருமைக்கு அஞ்சித் தடுக்காதவர்களாய்ச் சந்தோஷம டைந்து ஓ முனிசிகாமணியே உமது கருத்தின்படி நாங்கள்மூவ ரும் இவ்விடத்திலிருந்து எங்களிடத்தில் எவ்விதமாகிய பாவி கள்வந்து தீர்த்தமாடியபோதும் அவர்கள் கருமமகன்று புண்ணி யராக விளங்கக்கடவரென்று வாக்களித்து பின்பு மாறுடவுரு வங் கொண்டுவந்த மூன்றுபெண்களும் நதிகளில் மூழ்கி மறைந் தார்கள்.

அதுமுதல் அம்மூன்றுநதியினும் வந்து தீர்த்தமாடுகிறவர் களுக்கு அஞ்ஞானமுதலிய கருமங்களகன்று பிறவிநோய்க் கெ ட்டாதவர்களாய் சைதன்யத்திற் கலப்பார்களாதலால் செப்புத ற்கரிய இரயுக்குவமகாமுனிவன்து தபோமகிமையால் மூன்றுநதி களையும் வருவித்து திரிகாலமும் அவற்றில் தீர்த்தமாடிச் செய் விதியாவு முடித்துத் தவஞ்செய்துகொண்டு வருகிறபோது சுந்த னென்னும் ஓர் வேந்தனுடைய புத்திரனாகிய சானசுருதியென்ப வன் மன்னுயிர்களைத் தன்னுயிர்போற் பாவித்துப் பாதுகாத்து வருவதோடுங் குடிகளிடத்தில் ஆறிலொருகடமை வாங்கி நீதிவு மூவாது இராச்சியபரிபாலனஞ் செய்துவருபவன் கந்தமாதனச் சார்பில் விளங்கும் கங்கை யமுனை கயை என்னும் மூன்றுநதிக ளிலுந் தீர்த்தமாடி தனது அஞ்ஞானத்தையகற்றி மெய்ஞ்ஞான த்தைப்பெற்று பிரமசொரூபத்தை யடைந்தான. அது எப்படி யெனில் இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருக்குஞ் சான சுருதியென்பவன் மகா தருமநீதியோடும் சகல சீவர்களுக்கு மா

தாவாய்த் தன்னுடைய ராச்சியத்தில் அன்னசத்திரங்களமைத்து பிரம்மக்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நான்கு வருணத்தவர்களுக்கும் கைத்தல் புளித்தல் கார்த்தல் உவர்த்தல் துவர்த்தல் தித்தித்தலென்னும் அறுசுவையோடுங் கூடிய பதார்த்தங்களோடும் அன்னதானஞ் செய்துவருவதோடுந் தன்னுடையதேசமுழுமையும் சிவாலய விஷ்ணுவாலயங்களில் பிரம்மோற்சவநித்யோத்ஸவங்களும் நடாத்தியும் பூசுரர்களால் யாகாதியெக்கியங்களும் வேதபாராயணங்களுஞ்செய்து நாடோறும் வேள்விச்சாலையிலிருந்து மறைவிதியிற்கூறிய தருமங்களில் ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு அறுசமயத்தார்க்குண்டி சிறைச்சோறுஐயம் தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப்பிணஞ் சுடுதல்சுண்ணம், நோய்மருந்து, வண்ணான், நாவிதன், கண்ணாடி, காதோலை, பெண்போகம், தலைக்கெண்ணை, கண்மருந்து, பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், விலைகொடுத் துயிர்காத்தலென்னு முப்பத்திரண்டு தருமங்களையும் வழுவற நடாத்திவருகிறபோது தனது செங்கோலுக்குட்பட்ட தேசமுழுமையும் நான்கு வருணத்தவர்களும் தத்தம் வீட்டில் அடுப்புமூட்டிப் பன்னிருவருடகாலமாகியும் அவரவர்களுக்கு யாதுங்குறைவின்றி அன்னதானஞ் செய்துவருகையில் அவ்வரசனால் நடாத்திவருந் தருமமானது மூன்றுலோகத்திலும் மேம்பாடுகொண்டு எங்கும் வேந்தனது பெருமையைக் கொண்டாடும்படியாகிய புகழ்ச்சியைப் பூலோகவாசிகளும தெய்வலோகத்தில் வசிக்கும் தேவேந்திராதி பெரியோர்களும் முனிவர்களும் ஆகாசவாணியும்பூமிதேவியும்கண்டு அரசன்மீது சந்தோஷ மடைந்திருக்கும் நாளையில் சானசுருதியென்னும் தேவந்தனுடைய நகரத்தை ஆடகலோகவாசிகளாகிய தேவர்களும்தேடுதற்கரிய முனிவரர் சித்தர்களும் கருடகாந்தர்வ சித்தவித்தியாதரர்களும் பார்க்கவேண்டிஆவல்கொண்டவர்களாய் அன்னப்பட்சியைப்போ லுருவங்கொண்டு மண்டலத்துள்ளமன்னர்களினது மகுடமுடிகளை இடறத்தக்க வீரகண்டாமணிதரித்த கால்களையுடைய சானசுருதிவேந்தன் வாழும்பட்டணத்தின் பூங்காவனங்களிலோங்குந் தாமரைத்தடாகங்களில் வந்திறங்கி அவற்றிற் புட்பித்திருக்கு மலர்த்தாதுகளை யருந்தி விளையாடிப் பகற்காலத்தைப் போக்கி அன்றிராப்போதுவந்த காலையில் அப்பட்டணத்தை யாளுஞ் சானசுருதியென்னும் வேந்தன் வசந்தகாலமானதாலும்பூர்ணோதயம

ய சந்திரன் பிரகாசமாயிருப்பதாலும் தான் பூங்கா வனத்தில் ஆகாயத்தையளாவி யோங்கும் மங்கள வாசமாதலிற் பண்ணுதற் கரிய சந்திரகாந்தமணிமேடையில் தனது பட்டத்துத் தேவியோ டுஞ்சேர்ந்து பேசிக்கொண்டிருக்கையில் அப்பூங்காவனத்தில் அன்னவுருவங்கொண்டு வந்திருக்கும் ஆடகலோக வாசிகளாகிய தேவர்கள் தமதுலோகத்தைச் சேரவேண்டி அப்பூங்காவனத் தடாகத்தினின்றும் நீங்கிக் ககனமார்க்கத்தி லெழும்பும்போது, வேந்தனைக்கண்ட சிலபட்சிகள் தமது கூட்டத்துக்குத் தலைமையாகவிருக்கும் இராஜபட்சியை நோக்கி, ஓ அரசே இவ்வேந்தன் தயாளுவாதலால் இவனைச்சந்தித்துப் போவதே சுகுணமென்றுரைக்க, அவ்வார்த்தையைக்கேட்ட ராஜபட்சியாகிய இந்திரன் மன்னனுக்கு அனுக்கிரகஞ்செய்ய மனத்தில் நினைத்துப்பின்னுந் தன்னினங்களாகிய அன்னங்களைப்பார்த்துக் கூறுகின்றது ஓ அன்னங்களே என்னவார்த்தை சொன்னீர்கள், இவ்வேந்தன்என்ன நற்குணத்தையுடையவன், என்ன தவஞ் செய்தான், எந்தப் பெரியோர்களுக்கு உபகாரஞ்செய்தான், தான்மறுபிறப்பிற் சுகத்தையடையவேண்டிச் செய்யுந் தருமமேயன்றி மோட்சாம்பிராச்சியத்தை விரும்பவில்லையே ஆதலால் இத்தன்மைவாய்ந்தவனை யாம் எவ்வாறு சந்திப்பது உணராமச் சொல்லுகின்றீர்களேயென்று இராஜபட்சி கூறியதன்றியும் பின்னுஞ்சொல்லும், ஓ இனங்களே பூலோகத்திற்பிறந்து அஞ்ஞான நிவர்த்திசெய்து மனவாக்குக் கெட்டாத சுயஞ்சோதியாய் விளங்குஞ்ஜகதீசனது பாதநிழலிற் குடிபுகவும் சிதாகாசத்தைக் கலக்கவும் எண்ணங்கொண்ட ஓர்புண்ணியபுருஷன் இவ்வுலகின் கண்ணோங்கும் பரதகண்ட தட்சணபாகத்தில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சேதுமத்தியிற் கந்தமாதனகிரிச்சாரலில் தவஞ்செய்துகொண்டிருக்கும் புண்ணியனை நம்போலியர் சந்திக்கலாம்.

அப்படி அவனைப்பிரயாசைகொண்டு சந்தித்தபோதினும் பெயருண்டாம் அன்றியும் அவன் எவ்விதமானவனெனில் இரண்டுகால்களுமில்லாத முடவன் இரயுக்குவனென்னும் பெயர்படைத்தவன் முடவனாக விருந்தும் கங்கை யமுனை சுபை என்னு மூன்றுநதிகளையுந் தனது தவப்பேற்றால் தானிருக்குங் கந்தமாதனகிரிச்சாரலில் வருவித்து அவற்றில்தீர்த்தமாடி அவைகளை அங்கிருந்து இன்றும்வந்து அத்தீர்த்தத்தில் மூழ்குபவர்களுக்கு

இட்ட சித்தியாகும்படியுங் கேட்டுக்கொண்ட சாது அன்னோனது தவத்திலே பதினாயிரத்திலோர்பங்கு மிவன் செய்தறியானே ஆதலால் இவனை யாம் சந்திக்கவேண்டிய தில்லையென்று சொல்லி அசட்டைசெய்து யாவுமொருங்குசேர்ந்து தெய்வலோகம் போய்ச் சேர்ந்து தத்தம் சொரூபத்தையெடுத்து அவரவர்கள் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள்,

பின்னர் இவ்விதமாய் அந்த அன்னப்புட்கள் கூறிச்சென்ற வார்த்தையைக்கேட்டிருந்த சானசுருதிராஜன் வியாகுலங்கொண்டு சோர்ந்து துக்கக்கடலுள் மூழ்கிப் பெருமூச்செறிந்துயோசித்து இவ்வன்னப்பட்சிகள் சொல்லிய இரயுக்குவமாமுனியை நாம்போய்க்கண்டு சரணாகதியடைந்து அவராலே நாம் கதிபெற வேண்டுமல்லது இவ்விதமாய் நாம்செய்யுங் கருமங்களால் யாதும் பிரயோசனமில்லை அந்தோ ஆகாயத்தில் உலாவும் பறவையினங்களுக்கு முதன்மைபூண்ட அன்னங்கள் சொல்லிச்சென்ற வார்த்தையே சரியாம் ஏனெனில், நாமிதுபரியந்தஞ் செய்ததானத்தில் என்ன தேடிக்கொண்டோம் ஒன்றுமில்லை யாதலால், மேலோர்களைக்கண்டு சேவைசெய்து அவாளுடைய அநுக்ரகத்தைப்பெற்று அநித்யசரீரத்தை யெடுக்காமல் மோட்சசாம்ராச்சியத்தை யடையவேண்டுமென்று இராப்பொழுதெல்லாம்யோசித்திருந்தவனாய், அருணோதயமானவுடனே எழுந்து, காலைக்கடன்முதலிய நியமநிட்டைகளை முடித்து தேவேந்திரனது இரதசாரதியாகிய மாதலிக்கிணையாகி தனது தேர்ப்பாகனை அழைத்துக்கூறுவான். வாராய் எனது வலவனே நீநமது ரதத்திலேறி தட்சிணபாகத்திலோங்குங் கந்தமாதனகிரிச் சார்புக்குப்போய் அவன் விளங்கும் வனங்களிலேனுஞ் சோலைகளிலேனும் திரிநேத்திரதாரியாகிய பரமசிவத்தை இதயகமலத்தி லிருத்தித் தவஞ்செய்துகொண்டிருக்கும் இரண்டு கால்களுமில்லாத முடவராகிய ஓர் முனிதர் அவ்விடமிருப்பதும் இல்லாததுங்கண்டு, அப்படியிருப்பாராயின் அவரைக்கண்டு வணங்கி வார்த்தையாடி அவரது பெயரையுந் தெரிந்துகொண்டு அதிவிரைவிலிவ்விடம்வந்து சேருவாயென்று வேந்தன் கட்டளை யிட்டதைக்கேட்ட தேர்ப்பாகன் அவ்வாறே இரதாரூடனாய்ப் பட்டணத்தைவிட்டுப் பிரயாணப்பட்டு காடு மலை வனம் வனாந்தரம் கானாறுமுதலிய நதிகளும் பதிகளுந் திவ்யக்ஷேத்திரங்களுங் கடந்து சேது மத்தியிலோங்குங் கந்தமாதனகிரிச் சாரற்சேர்ந்து அவ்விடத்திலுள்ள

வனங்களிலும் பூங்காவனங்களிலும் காவுகளிலும் மலைநுழைவு களிலும் தடாகக்கரைகளிலும் அரசன் சொல்லிய அடையாள ப்படி ஒருவரையுங் காணாமல் துன்பமடைந்து திரிந்து பார்த்து க்கொண்டு வருகிறபோது, அங்ஙனமோர்வண்டியி லுட்கார்ந்து கொண்டு தீர்த்தமாடவேண்டிப் பிரயாணப்பட்டுவருகிற இரயுக் குவரென்னு முனிவரைக்கண்ட சாரதியானவன் சந்தோஷமடை ந்து இரதத்தைவிட்டுக் கீழேயிறங்கி மகா பக்திவிநயத்தோடும் முநிவரை அஷ்டாங்கபஞ்சாங்க திரியாங்கமாய்ப் பணிந்தெழுந் து, இருகரங்களேயுஞ் சிரமேற்கூப்பி அஞ்சலியஸ்தனாய்ப் பல வாறுகத்துதித்து சுவாமீ! தேவரீரைத் தரிசித்தபோதே நடை யேனைப்பற்றிய கர்மமியாவுமகன்றன, ஆதலால் தேவர்சித்தங்க னிந்து நுமது நாமகரணத்தைப் புலப்படுத்தவேண்டுமென்றுகே ட்க, அப்போது முநிவரர் வலவனைப்பார்த்து, அப்பாஎனதுபெ யர் இரயுக்குவனென்று சொல்லுவார்களென்று புன்சிரிப்புட னே சொல்ல அவ்வார்த்தையைச் சாரதியானவன்கேட்டு, சுவா மீ மெத்தவுங்களிப்படைந்தேன், அடியேன் போய்வருகிறேனெ ன்று விடைபெற்று, இரதமேறி அவணின்றும் பிரயாணப்பட்டு வாயுவேகத்திலும் கொடியவேகமாய்த் தேரைநடாத்திப் பட்ட ணம்வந்துசேர்ந்து, தனது இராஜனைக்கண்டு வணங்கித் தான் போய்வந்த சங்கதிகளியாவு மாதியோடந்தமாய்த்தெரிவிக்க, அ தைக்கேட்ட வேந்தன் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, முநிவ ரைக்கண்டு தரிசித்து கதிபெறவேண்டுமென்னுங் காதல்கொண் டவனாய் இராச்சியமுதலிய பண்டி பண்டாரங்களை யெல்லாம் வெறுத்து, அம்முநிவருக்கு காணிக்கையாக காமதேனுவுக்கொ ப்பாகிய ஆயிரம்பசுக்களும் ஒருபாரந்தங்கமும் நவரத்தினகசித மாகிய ஓர்தேரும் திட்டப்படுத்திக்கொண்டு இராச்சிய முதலிய யாவும் மந்திரிகள்வசப் படுத்திவிட்டு முநிவருக்குக் கொண்டு போகுங் காணிக்கைவஸ்துக்கள் முன்னேநடத்தி இராப்பகலா ய் காடு மலை முதலிய யாவுங்கடந்து சேதுமத்தியிலோங்குங் க ந்தமாதனகிரிச்சார்பில் கங்கை யமுனை கயை என்னு மூன்றுநதி களும் விளங்குந் தீர்த்தக்கரையில் தவஞ் செய்துகொண்டிருக் கும் முநிவரைக்கண்டு, இரதத்தைவிட்டிழிந்து தான்கொண்டுவ ந்த காணிக்கைகளை முநிவரர் முன்னிருத்தி அந்தரங்கபக்தியோ டுஞ் சாஷ்டாங்கமாய்ப்பணிந்து எழுந்து கைகட்டி யெதிர்நின்று பலவாறுகத் துதித்து சுவாமீ அடியேன் கொண்டுவந்த காணிக்

லைகள் அற்பமாயினுந் தேவரீர் திருவுளங்கனிந்து ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும் அடியேனையு மாட்கொள்ள வேண்டுமென்றும் பக்திவிநயத்தோடுகூறிப் பணிந்துநிற்கும் பார்த்திபனைக் கண்ட முனிவர் அகமகிழ்ந்து முகமலர்ந்து ஜகபதியைப்பார்த்து வாருமையா வேந்தே இந்த அற்பமாகிய பதார்த்தத்தையெங்குத்தேடினுய், நித்யமல்லவே அநித்தியமாயிற்றே மேலும் நாம் கனகக்கடலுட் டோய்ந்திருக்கின்றோம் அக்கடலில் ஓர் திவலைக்கு மிணையில்லாதவினை விரும்பினுற் றுன்பந்தருமாதலால்யான் வேண்டேனென்று கூறியதைக்கேட்ட வேந்தன் சுவாமீ தேவரீர் காபேனுக்கு கடாக்ஷிக்கும் நித்தியாநந்தவஸ்துவுக்கு அனுவிற் கோடிபங்கிலோர் பங்குக்கு மிணையில்லாதாயினும் எளியேன்தந்தவையை ஒப்புக்கொண்டு இரட்சிக்கவேண்டுமென்று வணங்கித்துதிக்க அப்போது இரயுக்குவர் மனமகிழ்ந்து வேந்தன்கொண்டுவந்த காணிக்கைகளை அவனெழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமநாதக் கடவுளுக்கு அர்ப்பிதஞ்செய்தவராய் வேந்தனைநோக்கி, ஓவேந்தே உலகின்கண் யாரொருவர் இல்லறதர்மத்தி லிருக்கும்போது பாவபுண்ணியமென்று சொல்லப்பட்ட இரண்டையும் நினையாமற் பரிசுத்தமாகிய மனத்தோடும் இருக்கின்றவர்களே புண்ணியராவர் மேலும் ஞானமோட்சத்தையும் பெறுவார்கள்.

ஆதலால்நீ அவ்விரண்டு காரியத்திலு மிச்சையுடையவனுகவிருந்தும் நம்மைவந்தடுத்தமையால் இக்கந்தமாதனத்திலே விளங்கும் கங்கை யமுனை கயை என்னு மூன்றுதீர்த்தங்களிலும்மூழ்கி வினைபகன்று நிர்மலவஸ்துவை யடைவாயென்று சொல்லி, வேந்தனுக்கு ஏகாக்ஷரத்தை உபதேசித்தருளினர். உடனே சானசுருதி வேந்தன் மகாசந்தோஷத்தோடும் கங்கை யமுனை கயையென்று சொல்லப்பட்ட மூன்றுநதிகளிலுந் தீர்த்தமாடி, அஞ்ஞானத்தைப்போக்கி, பிரபஞ்சவாழ்க்கையைச் சொற்பனம்போற் கண்டுதெளிந்தவனுய் நேமநிஷ்டையை முடித்துக்கொண்டு, தன்குருவா யெழுந்தருளியிருக்கும் இரயுக்குவமாமுனியை வணங்கித் தோத்திரஞ் செய்து அவருடன் தானுமிருந்து அவர் கட்டளைபின்படி மௌன மந்திரத்தைத் தியானஞ் செய்து ஒருவராலு மடையப்படாத ஞானசாமாத்தி லழுந்தி பேரின்பத்தை யடைந்து கந்தமா தனத்திற்றானே வாசஞ்செய்துகொண்டிருந்து, பிரமசொரூபத்தை யடைந்தாராதலால் இத்தன்மையாகிய மகிமையைப்பெற்ற கங்கை யமுனை கயை

என்று மூன்று தீர்த்தத்துக்குச் சமீபமாய்க் கோடிதீர்த்தமிருக்கின்றது அத்தீர்த்தத்தினது பெருமையைச் சொல்லுகிறேன்கேளுங்களென்று சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

முத்தீர்த்தம்.

முற்றிற்று,

---

## க௯-வது

# கோடிதீர்த்தம்.

கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே ! இவ்வுலகின்கண் ஓங்கும் இப்புண்ணியதீர்த்தமானது சிறப்போங்கிய கோசலதேசத்தை அரசாட்சிசெய்துவந்ததசரத மகாராஜகுமாரனுகியஸ்ரீராமசந்திரமூர்த்தியினது கரத்தினிடமாக விளங்குங் கோதண்டமென்னும் விற்கோடியால் உண்டாகிய தீர்த்தமாதலால் கோடிதீர்த்தமென்று விளங்குகின்றது. இதுபுவன சராசரத்திலுள்ள புண்ணியராதி சகலருக்கும் உற்ற ஆகாம்மியசஞ்சித பிராரத்வ வினைகளைப்போக்கிச் சகலலோகங்களும் புகழும்படியாய் இஷ்டகாமியங்களையும் மோட்சகாமியங்களையுங்கொடுத்துமகிமையோடுளது. அத்தீர்த்தமெவ்வண்ண முண்டாயிற்றெனில், மிதிலாபுரிக்கிறைவனுகிய ஜனகமகாராஜனுக்கு புத்திரியாகவாய்ந்த ஜானகியை இலங்கைவேந்தன் வஞ்சித்தெடுத்துக்கொண்டுபோய்ச் சிறையிட்டிருந்தகாலை அப்பாதகனுதி யாக்கப்பூடுகளை, பாறுகோடி கிரணம்போலோங்கும் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியானவர் பற்றறக்காய்ந்து பஸ்மீகரப்படுத்தி அவணின்றுஞ் சீதா பிராட்டியுடன் கந்தமாதனகிரிச்சாரிபில் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து அச்சிவபெருமானுக்கு அபிஷேகஞ்செய்யவேண்டிப் புநிதமாகிய தீர்த்தத்தின் பொருட்டுத் தன்னுற் பிரதிஷ்டை செய்திருந்த இராமலிங்கத்துச்கருகில் தனது கரத்தில் விளங்குங் கோதண்டமென்னும் வில்லை பூமியிலிறுத்திபகீரதிபென்னுங் கங்கையை அவண் வரும்படியாகத் தியானித்தனர் ஊன்றிய தனது வில்க்

கோடியை எடுத்தமாத்திரத்தில் அவ்வழியினின்றும் கங்கை யானவள் பாதாளவாஹினியாய்ப் புறப்பட்டுத் திவ்யவாசத்தோடும் வந்து பிரவேசித்தபோது அதைக்கண்ட இராமமூர்த்தி மெத்தவுஞ் சந்தோஷமடைந்து உடனே இராமலிங்கத்துக்கபிஷேகஞ் செய்து, அக்கடவுளால் அநேக வரங்களைப்பெற்று அங்குள்ள தீர்த்தமியாவற்றிலுந் தனது தேவிமுதலிய யாவரோடுஞ் சேர்ந்துமூழ்கிச்சகலவானரவீரரோடுஞ் சேனைகளோடும் பிரயாணப்பட்டு அயோத்தியா பட்டணம்போய்ச்சேர்ந்துபட்டாபிஷேகஞ் செய்துகொண்டு, தேவியோடுங்கூடி இராஜரீகஞ்செய்துவந்தார் ஆதலால் அந்தராமமூர்த்தியினது விற்கோடியையூன்றி யுண்டாகியதீர்த்தமானது சொர்க்க மத்ய பாதாளமென்னு மூன்றுலோகங்களும் புகழத்தக்கதாய் தீர்த்தமாடினவர்களது பிறவித்துன்பத்தைநீக்கி முத்திவீட்டைத்தரும் இத்தீர்த்தத்தில் மூழ்கிய பின்வேறேதீர்த்தத்தில் மூழ்குவார்களாகில்அவர்களுக்குயாதும் பிரயோசனமிராதென்றுசொல்ல அதுகேட்டநைமிசாரண்யர்கள் ஆச்சரியமடைந்து, சூதமுநிவரைப்பார்த்து சுவாமிதேவரீர்வியாசபகவானுடைய வாக்கியத்தின்படி பதினென் புராணங்களையுமறிந்து எங்களைப்போன்றவர்களுக்குப் போதித்துவருவதில் தீர்த்தமகிமையென்றும் மூர்த்திமகிமையென்றும் தலமகிமையென்றுஞ்சொல்லிய இம்மூன்றில் ஒன்றுக்கொன்று மேன்மையாய்ச் சொல்லிவந்து இப்போதுசொல்லிய இக்கோடிதீர்த்தத்தில்மூழ்கியவர்கள்பிறகு வேறேதீர்த்தமாடினால் ஒருபிரயோசனத்தையுமடைய மாட்டார்களென்று சொல்லிய தெவ்வாறெனக்கேட்க, அப்போது சூதர் முநிவரைப்பார்த்து நைமிசாரண்யர்களே நீவிரிப்போது கேட்ட சங்கையானது நற்சங்கையாகிஇருப்பதால் அதைப்பற்றியான்மெத்தவுஞ் சந்தோஷமடைந்தேன்ஏனெனில் ஆதியில் எனக்கும் இச்சங்கை உண்டாயிருந்து அச்சங்கையை நான் நாரதமகாமுநியால் அறிந்து உங்களுக்குச் சொல்லப்போகின்றதால் ஞாபகசுத்தியோடுங் கேட்கக்கடவீர்களென்று கூறிப் பின்னுஞ்சொல்லுவார்.

கேளுங்கள் முநிவர்களே? இப்போது யான்சொல்லப்போகின்ற கோடிதீர்த்தந்தவிர மற்றதீர்த்தங்களெல்லாம் ஒவ்வொரு மகிமைகளைப்பெற்று இஷ்டகாமியங்களை அவரவர்கள் கருதியபடிகொடுப்பதோடும் மோக்ஷசாம்பிராச்சியத்துக்கும்ஏதுசெய்

பலைவகளாகவிருக்கினும் இக்கோடிதீர்த்தமாத்திரஞ்சுயம்புவாய் பகிரதிபான கங்காபவானியானவள் தானே பிரத்யக்ஷமாய்ப்பா தாளவழியாய்வந்து குடிகொண்டிருப்பதனாலே இந்தத்தீர்த்தம் அகண்டபரிபூரணசச்சிதானந்தசொரூபமாய்விளங்குகின்றஆகா சத்தின் அண்ட முகட்டினின்றுமிறங்கி மகாமேருவிற் பிரவேசி த்துப்பரமசிவத்தினதுசடாடவியிற் குடிகொண்டிருந்தது தம்பி கான்குபிரியாய்ப்பிழக்குவடக்கு மேற்குத்திசையிலேமூன்றுவகை நாமங்களுடன்சமுத்திரத்திலே விழுவதோடுதென்பாகத்திலே பிரவேசித்த கங்கையானவள் பாகீரதியென்னும் பெயருண்டய தாய்க் காசிக்ஷேத்திரத்திலே மோக்ஷத்துக்கேதுவாய் விளங்கிக் கொண்டிருந்த பாகீரதியை பாதாளவழியாய் ஸ்ரீராம மூர்த்தியா னவர்வருவித்து அத்தீர்த்தத்தை மறுபடியுஞ் சிவத்தினதுசிரத் திற்குடிகொண் டிருக்கும்படியாய்ச் செய்வித்ததோடும் தனது கோதண்டமாகிய வில்லும் தன்னுடைய அஸ்தங்களும் அவற் றிற் சந்திக்கும்படியாய்ச் செய்த பண்பால் அக்கோடிதீர்த்தத்தி லேதீர்த்தமாடிய ஜீவாத்மாக்களுக்குச்சித்தமாய் மோட்சசாம்பி ராச்சியங்கிடைப்பதோடும்அன்னவர் பூமியிலிருக்குமளவும்இஷ் டகாமியங்களையுந் தாவல்லதாதலால் இத்தீர்த்தத்தில் மூழ்கிய பின் வேறேதீர்த்தத்தில் மூழ்கப்படாதென உரைக்கலாயிற்று, மேலும் இப்பெருமைபொருந்திய தீர்த்தந்தவிர மற்றையதீர்த் தங்களாவெனில் தீர்த்தமாடியவர்களுக்கு அநேகஜென்ம சுகி ர்தபல விசேடபுண்யானுந்த போகபாக்கியங்களைத் தரும்பொரு ட்டு ஜென்மங்களை உண்டாக்குமாதலால் மோட்சத்தை விரும்பி னபேர்கள் மறுபடியுந் தாழ்வடையவிரும்பார்கள் அங்ஙனவிரு ம்பி கோடிதீர்த்தத்தில் மூழ்கிமறுபடியும் வேறே தீர்த்தத்தில் மூழ்கினாற் பிறவிநோயை யநுபவித்தே தீரவேண்டும். ஆதலால் இதையுணர்ந்த ராமமூர்த்தியானவர் முன்புமற்றைய தீர்த்தங்க ளிலெல்லா மூழ்கிமுடிவிற் கோடிதீர்த்தத்தில் மூழ்கி அயோத்தி யாபட்டணம் போய்ச்சேர்ந்தார். கேட்டீர்களோ மஹாருஷிகளே மேலும் பூலோகத்திலே வசிப்பவர்கள் அவரவர்கள் கர்மாநுவப் படி யாத்திரைசெய்யப் பட்டபேர்கள் எத்தலத்திலாவது எந்த தீர்த்தத்தைக் காணுகின்றார்களோ அவற்றில் உடனேஸ்நானஞ் செய்துவணங்கித் துதித்துவரவேண்டும். அவ்வாறு வருகிறபேர் கள் இக்கோடிதீர்த்தத்திற் முழுகிவிட்டால் பிறகு அத்தலத்தி லே வேறேயொருதீர்த்தங்களினும் மூழ்கப்படாது. ஆயினும்அவ

ரவர்கள் காலதேசவர்த்தமானங்களைக் குறித்தும் நல்வினை தீவி னையைக்குறித்தும் பிதுர்சிரார்த்த தேவபூஜாவிதிகளைக் குறித்தும் அவ்வவ்விடத்திலே விளங்குகின்ற தீர்த்தங்களிலே மூழ்கிக் கிரியைகளை நடப்பித்துப் பொழுதுபோக்கிக் கொண்டிருந்தா லும் அவரவர்களுடைய ஆயுள் முடிவிலேயாவது இந்தக்கோ டிதீர்த்தத்தைத் தத்தம் ஆத்மாவுகளுக்கு ஸ்நான பானமாக வேண்டியதாய் இத்தீர்த்தத்தைக் கமண்டலங்களிலே கொண்டு போய் பத்திரப்படுத்தி வைத்திருப்பார்கள். ஏனெனில், அந்த பாகீரதியானவள் சதாகாலமும் ஸ்ரீராமலிங்கத்தினுடைய சந்நி தானத்திலே குடிகொண்டிருப்பதாலும் எப்போது மப்பெருமா னுடைய சடாடவியில் விளங்குவதாலும் காசிமகா க்ஷேத்திரத் தில்விளங்கும் பாகீரதியினுடைய பிரவாகத்தை பூலோகவாசினி யாய்ப் புண்ணியபுருஷாளெடுத்துவந்து ராமநாதனுக்கு அபி ஷேகம்பண்ணினால் மகத்துவமிருப்பதினாலே நரஜன்மங்களாய்ப் பிறந்தவர்கள் அதைக்கொண்டுவந்து ஸ்ரீராமநாதனுக் கர்ப்பிதஞ் செய்கிற கங்கையைப்பார்க்கிலும் சுயம்புவாயிருக்கின்ற கோடி தீர்த்தமானது அநேககோடி விசேடமென்றறிந்து அதை எடுத் கொண்டுபோய் வைத்திருப்பார்கள் மேலும் அந்த பாகீரதியான வள் ஆத்மலாபத்துக் குடையவளாயிருப்பதால் அதினின்றுமதுங் கியகோடிதீர்த்தத்தின் பெருமையை அளரிடப்போவோமேலும் பண்டொருகாலத்தில் யாதவகுலத்தி லுற்பவித்த ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியானவர் தனது அம்மானாகிய கம்ஸனைக்கொன்ற தோஷ ந்தீரவேண்டியதாய் இக்கோடிதீர்த்தத்தில்தீர்த்தமாடினாரென்று சூதமுனிவர் சொல்லியதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் சூதமுனி யைநோக்கி, சுவாமீ கிருஷ்ணபகவானானவர் யாதுகாரணத்தால் அம்மானைக்கொன்றார் அப்படிக்கொன்றாலும் அவருக்குதோஷ முண்டென்று விதித்தவர்யாவர் யாவருடைய வாக்கியத்தைக் கேட்டு இக்காரியத்திற் பிரவேசித்தார். இவைகளையெல்லாந் தே வரீர் அடியேங்க ளறிந்துகொள்ளும் படியாய்த் திருவாய் மலர்ந் தருள வேண்டுமென்று கேட்க சூதமாமுனிவர் சொல்லத்தொட ங்கினார்.

கேளுங்கள் மஹருஷிகளே வடமதுராபுரியென்னும் நகரத் தைஅரசாட்சிசெய்துவந்த சூரசேனமகாராஜாவின் குமாரனாகிய வசுதேவனுக்குஉரோகிணி தேவியென்றுந்தேவகிதேவியென்றும் இரண்டுபெண்களை மணம்புரிந்து வசுதேவனோடு இரதத்திலே

ற்றி ஊர்க்கோலங்காட்டு நிமித்தம் மைத்துனனுகிய கஞ்சன் சாரதியாக வமைத்து இரகத்தை நடாத்தி வீதிப்பிரதட்சணமாய் வருகையில், அப்போது ஆகாயத்தினின்றும், ஓ கஞ்சமகாராசனே, இவ்விருவர்கள் வயிற்றிற்பிறக்கும் பிள்ளைகளால் உனக்கு மரணமுண்டாமென்று அசரீரிகூற, அவ்வாய்மையைக்கேட்ட நாள் முதற் கஞ்சன் மெத்தவுந் துக்கசாகரத்துளாழ்ந்தி, பின்னர் ரோகிணிதேவி தேவகிதேவி வசுதேவன் இம்மூவரையும் வதஞ்செய்யவேண்டுமென்று நினைத்து ஆரவாரஞ்செய்து வருகையில் வசுதேவனுனவன் அக்கொள்கையைக்கண்டு கஞ்சனுக்கு அநேகவித உபசாரவார்த்தைகளைச் சொல்லி அவ்வெண்ணத்தைத் தடுத்து, அப்பா மைத்துனு, உனக்கு இவர்கள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளால் மரணம் நேரிடுமென்று எண்ணமிருப்பதால் அப்படிப்பிறக்கும் பிள்ளைகளை வையாமல் உடனே கொன்றுவிடென்று கூறியதைக்கேட்ட கஞ்சனும் அதுபோல் சம்மதித்து அம்மூவரையும் சிறைச்சாலையிலடைத்து காவலமைத்து, அவர்கள் வயிற்றிற் பிள்ளை பிறந்தவுடனே யெடுத்துவரச்சொல்லி தனது மந்திரவாளால் இரண்டு துண்டாய் வீசி மகிழ்ந்திருப்பான் இவ்வாறு ஆறு பிள்ளைகளையுங் கொன்றுவிட்டதனுல், பிறந்து பிறந்து வாளுக்கிரையாகுந் தனது குழந்தைகளினது சோபத்தால் மெலிந்திருக்கும் வசுதேவனுடைய மனக்கவலையை அகற்றவேண்டியும் பூபாரந்தீர்க்கவேண்டியும் ஸ்ரீ வைகுந்தவாசராகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் ஆதிசேடன் முதலிய தேவர்களும் வைகுந்தத்தைவிட்டுப் புறப்பட்டு அவர்கள் வயிற்றிற் செனிக்கவேண்டி யோசித்து தேவகிதேவி வயிற்றில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும் ரோகிணிவயிற்றில் ஆதிசேடனும் வந்தவதரித்தது மன்றி தனது கலையில் ஒன்றையெழுப்பி ஆயர்பாடியில் நந்தன் கோபன் மனையில் அவன் பத்தினியாகிய யசோதை யம்மன் வயிற்றில் துர்க்கி என்னும் பெண்ணுருவாய்ப் பிறக்கச்செய்து தான் பிறந்தவுடனே வசுதேவனுக்குச் சொற்பனமூலமாய் ரோகிணிவயிற்றிற் பிறந்த பிள்ளையையும் தேவகி வயிற்றிற் பிறந்தபிள்ளையையு மெடுத்துக்கொண்டுபோய் நந்தகோபனுடைய வீட்டில் அச்சமயம் யசோதையம்மையின் பெண் குழந்தையைப் பிரசவித்துப் பிறந்த குழந்தை யின்னதென்று தெரியாமற் சோபித் திருப்பார்களாதலால் அச்சமயத்தில் இவ்விரண்டு குழந்தைகளையும் அவளிடத்தில் விட்டு விட்டு அங்ஙனம் பிறந்திருக்கும் பெண்குழந்தையை யெடுத்துவந்து இங்கே

சேர்க்குமளவும் காவலாளிகள் முதலிய பதியிலுள்ளோர் யாவரும் மூர்ச்சித்திருப்பார்களாதலால் அதுபோற் செய்யக்கடவையென்று நாராயணமூர்த்தி சொல்லியவுடன் வசுவேன் விழித்துப் பார்த்து பிள்ளைபிறந்து பேசாமலிருப்பது கண்டு கடவுள் கட்டளை யிட்டதுபோல் சகல ஜீவர்களு முறங்கியிருக்க அத்தருணத்திற் குழந்தைகளையேந்தி ஆயர்பாடியில் நந்தன்மனையில் யசோதை பெண் குழந்தையைப்பெற்று ஒன்றுந் தோன்றாமல் சோபித்திருப்பது கண்டு தெய்வச்செயலென்று சந்தோஷங்கொண்டு தான் கொண்டுபோன பிள்ளைகளை அவளிடத்தில் விட்டு அங்குள்ள பெண்குழந்தையாகிய துர்க்கியையும் மற்றுமோர் பிள்ளையையு மெடுத்துவந்து தேவகிதேவி உரோகிணி தேவி யிவர்களிடத்தில் விட்டபிறகு யாவருக்குந் தெளிவுண்டாகிப் பொழுது விடிந்தவுடனே இங்குள்ள இரண்டு குழந்தைகளும் அழக்கேட்ட கஞ்சன் பிள்ளைகளைக்கொண்டு வரும்படியாய் காவலாளிகளுக் கறிக்கையிட அவர்களு மதுபோல் அப்பிள்ளைகளைக்கொண்டுபோய்க் கஞ்சனிடங்கொடுக்க அவன் கிஞ்சித்தேனு மஞ்சாமல் அப்பிள்ளைகளைக் கொண்டுபோய் ஓர் பாறையினிடமாக நின்று பிள்ளைகளை உயரவெறிந்து வாளையோங்கும்போது ஒருபிள்ளை மாயையாய் மறையவும் மற்றொரு பெண்ணாகிய துர்க்கியானவள் அஷ்டபுஜத்தோடெ மூவிலைவேற் சூலத்தோடும் அந்தரவீதியில் நின்று அடா மூடனாகிய கஞ்சனே உன்னைக்கொல்லுவதற்கு இரண்டு பிள்ளைகள் வளருகின்றார்க ளாதலால் சாக்கிரதையா யிரடா மடிந்துபோவாயென்று கூறி அந்தரமார்க்கத்தில் மறைந்தாள்.

அவ்வாறு துர்க்கியானவள் சொல்லிமறைந்த நாள்முதல் கஞ்சனானவன் நெடுங்கவலையுற்று ஆயர்பாடியில் வளர்கின்ற பிள்ளைகளைக் கொல்லவேண்டு மென்னுங் கருத்துடையவனாய் எதிர்பார்த்திருக்கையில், ஆயர்பாடியில் நந்தகோபன் வீட்டில் வளரும் பிள்ளைகளில் பெரியபிள்ளைக்கு பலராமனென்றும் இளைய பிள்ளைக்குக் கிருஷ்ணனென்றும் நாமகரணஞ்செய்து வளர்ந்து வருகிறபோது, கஞ்சனானவன் பூதனை முதலிய ராக்ஷதர்களுக்கு அநேக தந்திரங்களைச்சொல்லிக் கொன்றுவரும்படியாக வனுப்பிவைத்தும் அவர்களால் முடியாமல் கிருஷ்ணன் கையினால் படிந்தபின், ஆயர்கள் அச்சமுற்று அப்பிள்ளைகளையெடுத்துக்கொண்டு, கோகுல பிருந்தாவனத்திற் போயிருக்கும்போது ஆயர்களால் இந்திரனுக்குச்செய்யும் பிரார்த்தனை

வைத்தபடித்து கோவர்த்தனத்துக்குச் செய்யச்சொல்லி அப்படியவர்களாற்செய்தபூசையையுந் தானேதேவதையாகவிருந்து ஒப்புக்கொண்டு, தேவேந்திரனாற்பெய்வித்தசோனைமாரியை.கோவர்த்தனகிரியைக் குடையாகவெடுத்துப்பிடித்து ஏழுநாள்வரையில் ஆனிரைகளைக்காத்து, கோபிஸ்திரீகளுடனே கூடிவிளையாடியும், அவர்கள் வஸ்திரங்களையபகரித்தும், அவர்கள் வீட்டிலுள்ளவெண்ணெய் தயிர்பால் முதலியவைகளைத் திருடியுண்டும், அனேகந்திருவிளையாட்டாகிய லீலாவிநோதங்களைச்செய்தும், காளிங்கனை கர்வபங்கப்படுத்தியு மிருக்கும்போது, கஞ்சனானவன்பலராமனையுங் கிருஷ்ணமூர்த்தியையுந் தன்பட்டணத்தில்வரவழைத்து சூதுமார்க்கமாய்க்கொல்ல வேண்டுமென எண்ணங்கொண்டவனாய் அக்ரூரனென்னு மொருவனை பலராமகிருஷ்ணரிடந் தூதனுப்பி அழைத்துக்கொண்டுவரும்படியாய்ச்சொல்ல, அவனும் அவணின்றும் பிரயாணப்பட்டு கோகுலபிருந்தாவனத்திலிருக்கும் பலராம கிருஷ்ணரைக்கண்டு பலபலவாய்த்துதித்து கஞ்சன்சொல்லியனுப்பியதைக்கூறி அழைக்கக் சம்மதித்தவர்களாய் பலராமகிருஷ்ணரிருவரும் இராஜபேட்டியைக்காணும் உடுமானங்களோடும் பிரயாணப்பட்டு மதுராபுரிவந்துசேர்ந்து அப்பட்டணத்தைப்பலராமனுங் கிருஷ்ணமூர்த்தியுங்கோபாலர்களுடனே சுற்றிப்பார்த்துக்கொண்டு வேடிக்கையாய் வருகிறபோது, ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அழகையும் நடைபுடைபாவனைகளையும் அப்பட்டணத்திலுள்ள பெண்கள்கண்டு மயக்கத்தையடையும்படியாயும் வெகுகோலாகல சம்பிரமத்துடனே சிங்கக்குட்டிகளைப்போல் வருகிறபோது, கஞ்சனானவன் அனேக மல்லஜெட்டிகளையும் இரதகெஜதுரகபதாதிகளையும் அணியணியாய்விடுத்து வருபவர்களைக் கொல்லும்படியாய் உத்தரவுசெய்தனுப்ப, அதுபோலவர்களும் வந்தெதிர்த்து கோரமாகியசமர்விளைக்க, அதுகண்ட பலராமகிருஷ்ணரிருவருங்கோபித்தயுகாந்தகாலருத்திரரைப்போற் சீறி யெதிர்த்த படைவீரர்களையும்பாழ்படநூறி, ஜயாவென்று சிங்கநாதஞ்செய்து, கஞ்சனிருக்குங்கொலுமண்டபம்நோக்கி வருகிறபோது, கஞ்சன்கண்டு, குவலயாபீடமென்னும்யானைக்கு மதங்களூட்டிக் கொல்லும்படியாகிய சைகைகளைச்சொல்லிவிடுக்க, அந்தயானையைக்கிருஷ்ணபகவான்கண்டு வெகுண்டு இருதுண்டாகச்செய்து, அதன் தந்தங்களை

ப்பிடுங்கி கையிற்பிடித்துக்கொண்டு கிருஷ்ணபகவானுனவர் கஞ்சனிருக்கும்படிபாகிய சப்பிரமஞ்சத் தடியிற்போய் கஞ்சனது இரண்டுகாலையுல் பற்றித்தூக்கிக் கரகரவென்று சுழற்றி நிலத்திலேயறைந்து தன்கரத்திலிருந்த யானைக்கொம்பினாலே தலைமண்டை சிதறும்படியாக வடித்துக்கொன்று பின்னுமவனுக்குத் துணையாயெழுந்த சூரர்களையும் சேனைசைந்யங்களையும் நாசப்படச்செய்து சர்வசங்கார மூர்த்தியைப்போற் கர்ச்சித்து அட்டகாசஞ்செய்து யாவருமுடிந்தபின்னர் தமது தந்தையாகிய ரோகிணிதேவி தேவகிதேவியையும் சிறைச்சாலையினின்றும் நீக்கி அவர்களுக்கு அநேக உபகாரஞ்செய்து, வடமதுராபுரியை கஞ்சன்தாதையாகிய உக்ரசேனனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்துவைத்து, சத்யபாமை முதலிய கோபிஸ்திரீகளுடனுங் கோபாலர்களுடனும் ஆயர்பாடியினும் மதுராபுரிலுமாகவிருந்து அநேகலீலாவிநோதங்களை நடப்பித்துகொண்டிருந்தார்.

கேட்டீர்களோ முனிவர்களே! இங்ஙனமிவ்வாறிருக்க, தேவலோகத்திலிருந்து பிரமதேவன் புதல்வனுகிய நாரதமகாமுனிவர் கிருஷ்ணபகவானிடத்துக்கு வருகையில், அன்னவர் வரவைக்கண்டு கிருஷ்ணமூர்த்தியானவர் நாரதருக்கு வேண்டிய உபசாரணைகளைச்செய்து, ஐயா நாரதமகாமுனிவே! யான் தங்களைக்காணும்படியாய் எண்ணியிருந்தவண்ணந் தேவரீரே இவ்வடமெழுந்தருளினமையால் என்மனத்திலுள்ளகவலையை நிவர்த்திசெய்யவேண்டுவதென்னவெனில், என்னுடைய அம்மானுகிய கஞ்சனைக்கொன்றதோஷம் எனக்குண்டாயிருப்பதனாலே அதுதீரவேண்டியதற்கு ஒரு பகரிகாரஞ் சொல்லவேண்டுமென்றுகேட்க, அவ்வார்த்தையைக்கேட்ட நாரதபகவான் முகமலர்ந்து வாருஞ்சுவாமீ! வேதவேதாந்தமூர்த்தியே! ஆதிபராபரவஸ்துவாகியும் அகிலாண்டகோடிபிர்ம்காண்டநாயகராகியும், ஆதிமத்தியாந்தரகிதராகியும், சின்மயானந்தசொரூபமாகியும், ஆண்பெண் அலியாகியும் சகலஜீவான்மாக்களினுங்கலந்துநின்றதாகியும்என்போன்றவுழைகளுக்கெட்டாதவஸ்துவாகியும்இருக்குந் தேவரீருக்குபாபமேதுபுண்ணியமேது அடியேனுடைய மனதைச்சோதிக்கவோ இப்படிக் கேட்டகாரியம்சுவாமீ! என்றுநாதர்சொல்லஅதற்குஸ்ரீகிருஷ்ணபகவான் கூறுவார் ஐயா நாரதமகாமுனிவரே! நாம் நாயோனியினிற்பிறந்துநானுவிதசுகதுக்கங்களையடைவதனாலேயான்கேட்ட

காரியம் உண்மைதானென்று ஸ்ரீகிருஷ்ணபகவான்சொல்ல அத
ற்கு நாரதர்சொல்லுவார், வாருமையா பகவானே! தேவரீர் வின
வியவண்ணம் உமதுமாமனாகிய கஞ்சனைக்கொன்றதோஷம் நீங்க
வேண்டுமாயின் தென்றிசையிற் சேதுமத்தியிலோங்கும் கந்த
மாதனகிரிச்சார்பில் இதற்குமுன் தேவரீரெடுத்திருந்த ஸ்ரீரா
மாவதாரத்தில் இராமலிங்கப்பிரதிஷ்டைசெய்து பகீரதியான
கங்கையைப் பாதாளமாகினியாய் வரவழைத்து சிவபெருமானுக்
கபிஷேகஞ் செய்துவைத்த கோடிதீர்த்தமென்று ஒரு தீர்த்த
மிருக்கின்றது. அந்தத்தீர்த்தத்திலே இராமனாய்ப்பிறந்திட ராவ
ணனைக் கொன்றபோது சம்பவித்த தோஷந்தீரவேண்டி அதிற்
றீர்த்தமாடி அது பரிகாரமானதால் இப்போது இந்தக் கிருஷ்
ணாவதாரத்திலே கஞ்சனைக்கொன்றதோஷம் தீரும்படியாய் அந்
தக்கோடி தீர்த்தத்திலே போய் மூழ்கினால் தோஷவிமோசன
மாகுமென்று நாரதர் சொல்லி ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில்
விடைபெற்றுக்கொண்டு பிர்ம்மலோகத்தையடைந்தார். பின்பு
கிருஷ்ணமூர்த்தியும் நாரதர் வாக்கியப்படியே தமையனான பல
ராமனுடனும் இரதகஜதுரகபதாதிகளுடனும் பிரயாணப்பட்டு
சேதுவைச்சேர்ந்து, அதன் மத்தியிலோங்கும் கந்தமாதனகிரிச்
சார்பிலுள்ள தீர்த்தங்களிலெல்லாம் வேதவிதிப்படி மூழ்கிப்
பின்னர் கோடிதீர்த்தத்தில் மூழ்கி அநேதான தருமங்களைச்
செய்து, ஸ்ரீராமநாதனை வணங்கி விடைபெற்று வடமதுராபுரி
வந்துசேர்ந்து சுகமாயிருந்தார்கள் ஆதலால் இத்தகைய மகிமை
தங்கிய தீர்த்தத்துக்குச் சமீபமாய் சாத்தியாமிர்த தீர்த்தமென்
றொரு தீர்த்தமுண்டு. அதன் பெருமையோ அளவுபடுத்திச்
சொல்ல ஆதிசேடனுக்குமரிதாமென்று சூதமுனிவுரைத்ததைக்
கேட்ட நைமிசாரண்யர்கள் முனிவரைப்பணிந்து சுவாமி தேவரீர்
திருவுளங்கனிந்து அடியேங்களுக்கு அத்தீர்த்தத்தின் பெரு
மையைச் சொல்லவேண்டுமென்று பணிந்துநின்ற முனிவர்களுக்
கிரங்கிச் சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

## கோடி தீர்த்தம்.

முற்றிற்று,

---

## ககூ-வது

# சாத்தியாமிர்த தீர்த்தம்.

கேளுங்கள் முனிவர்களே ? தட்சிணபாகத்திற் சேதுமத்தி யிலோங்கும் கந்தமாதனகிரிச் சார்பில்விளங்குஞ்சாத்தியாமிர்த தீர்த்தமென்றோர் தீர்த்த முண்டு அத்தீர்த்தத்தில் மூழ்கினவர்க ளது பாவமனைத்தும் பருதிமுன் பனிபோல் விலகிப் போவதன் றியும் இகத்தில் அவர்கள்நினைத்த காரியங்க ளெல்லாங்கைகூடி யாகாதிக்கிரியைகள் செய்தபலனைக்கொடுத்து, பரத்துக்கேது வாகிய ஞானோதயத்தையுங் கொடுக்கும் ஆதலால், அந்த தீர்த் தத்திலே புரூரவச்சக்ரவர்த்தி யென்பவன் தீர்த்தமாடி தனக் குத் தும்புருமுனிவராற் கொடுக்கப்பட்ட பாபத்னத நிவர்த்தி செய்து கொண்டு தெய்வலோகக் கணிகையருள் ஒருத்தியாகிய ஊர்வசியென்பவக்கூடிச் சுகபோகங்களை யநுபவித்துக் கொண் டிருந்தானென்று சூதமாமுனிவர்சொல்லினர். அதுகேட்டனைமி சாரண்யர்கள் முனிவரைநோக்கிசுவாமி! புரூரவச்சக்ரவத்தி என் பவனுக்கு தும்புருமுனிவராற்சாபம்வந்த காரணமும்தெய்வலோ கக்கண்ணிகைமாதாகிய ஊர்வசி என்பவள் பூலோகராஜனைச்சே ர்ந்தவிதமுந் தேவரீர் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கே ட்க அப்போது சூதமுனிவர்சொல்லுவார். வாருங்கள்ருஷிகளே முன்னொருகாலத்தில் புரூரவனென்னுஞ் சக்ரவர்த்தியானவன் மகாகுபேரசம்பத்தோடும் ரூபலாவண்ய சவுந்தரியத்தோடும்ஒப் பொருவரில்லாதபராக்ரமத்தோடும் மகாமண்டலேசுவரனுய்கோ லோச்சி இனிது வீற்றிருக்குநாளையில் தெய்வலோகத்தில்இந்தி ரன் சபையில்நடிக்கும் ஊர்வசி யென்பவள் தேவர்களிலொருவ னுகிய மித்திராவருண னென்பவனை இகழ்ந்து பேசினளென்று அவளுக்குப் பூலோகமாந்தரைப் புணரும்படி சாபம் நேரிட்ட தால் அச்சாபத்தைய நுபவித்து நிவர்த்திசெய்யக்கருதி தன்பத் தையடைந்து தெய்வலோகத்தினின்றும் நீங்கிய பூ[illegible]ல் புரூரவச்சக்கரவர்த்தி யரசாட்சிசெய்துவரும் பட்டண[illegible]ரு கிலிருக்கும் ஓர் சிங்காரவனமென்னும் உத்யாவனத்திற்சேர்ந்து சுரலபதாளவமுவின்றிவீணுகானம் பண்ணிக்கொண்டிருந்தாள் அவ்வாறு ஊர்வசியானவள் வீணையைமீட்டி வர்சிக்கின்ற சுங்கு

ணங்களினாலே அவ்வனத்திற்பட்ட மரங்களெல்லாந்தளிர்த்தும் பூத்தும் காய்த்தும் பழுத்துக்கனிந்தும் அவற்றினின்றுந் தேன் கள்சிந்தி யாறுபோற்பெருகவும் கரடி புலி சிங்கங் காட்டானை முதலிய மிருகங்களெல்லாம் அவைகளது வீராவேசத்தை விடுத்து உறங்கிச் சுகானந்தத்தைக் கலந்திருக்கவும் பறவைச் சாதிகளெல்லாந் தொனிசெய்யாமல் ஓசையின்வழியிற் செவியைச்செலுத்தி பிரமித்திருக்கவும், ஊர்வனஜெந்துக்களும் பாம்புகள்முதலியயாவும் இன்னிசையை நாடித் தன்னிச்சையை விடுத்துப் பொன்னூசப்போலும் படங்களைவிரித்துச் சென்னியைச் சாய்த்தாடவும், தாபராதிகளாகிய பாறைகண்முதலிய வெல்லாம் நீராயுருகி ஓடும்படியாய் வாசித்துக் கொண்டிருக்குஞ் சமயத்தில் அப்பட்டணத்தை யாளப்பட்ட புரூரவனென்னுஞ் சக்ரவர்த்தியானவன் தனித்து வேட்டையாடக்கருதி தனது கையில் வில்லும் வேலுங்கொண்டு குதிரையேறி வேட்டையாடி, மீண்டும் அச்சிங்காரவனத்துட் பிரவேசித்து, அவ்வனம் சிருட்டிகர்த்தாவின் தேவியாகிய சரஸ்வதியைப்போலும் இந்திரன்தேவியாகிய இந்திராணியைப்போலுஞ் சுந்தரமமைந்து இலகாநின்ற சித்திரப்பாவையைப்போன்ற ஊர்வசியைக்கண்டு ஒன்றுந்தோற்றுதவனாய்த் திக்பிரமைகொண்டு தனது புத்தியினாற் பிறகுபெண்ணென்றறிந்து, அப்பூவையை நாடிய கண்கள் அரைக்கண்களாகச் சோர்ந்தும் நாவானது வறண்டும் உரைகுளறியும் அனங்கன் கணைவலியை ஆற்றமாட்டாதவனாய் மோகக்கடலுட் டோய்ந்து முன்பின் யோசியாமல் ஊர்வசியினதருகிற்சேர்ந்து கூறுவான் ஓ பஞ்சரத்தினின்றிலகும் அஞ்சுகம்போற் கொஞ்சங்கிளியாகிய வஞ்சியர்நாயகமே! உனக்குத் தஞ்சம்தஞ்சம் இந்துகோடி கிரணம்போன்ற முகாரவிந்தத்தையுடைய இளங்குயிலே கந்தர்ப்பன்கணையால்வருந்திச் சிந்தையுழலும் என்னை இந்தவேளையிற் சுந்தமூலாவும் உனது கனதனங்களைக் கொடுத்து நிந்தையாளனாகிய செடியேன்மகனைநாணச்செய்யுங் கருணைசெய்வாய் நாயகமேன்றுகூறிய நாதிபன்மேற் றானுங் காதல் கொண்டவளாய்க் கூறுவாள்.

வாராய் லோகாதிபனே! நான் ஆடகலோகத் திறைவனாகிய அமிராணிகேள்வனென்னுந் தேவராஜன்சபையில் நடிக்கும்அப்ஸரஸ்திரீகளில் ஒருத்திஎன்பெயர் ஊர்வசியென்றுசொல்லுவார்கள்; நீபூலோகத்தில் உற்பவித்தராஜன்மமா யிருப்பதாலும்என்

மீது மோகங்கொண்டதாலும் என்கருத்தின்படி நடப்பதாய்பர வசஞ்செய்து கொடுப்பையேயாகில் உன்னைச் சேருவேன் இல்லா விடிற்சேரேன் அதுயாதெனிற் நான் இப்புவியின்கண் உன்னோடு கூடிச் சுகித்திருக்க வேண்டுமாயின் இந்தலோகத்துள்ள பசுவின் நெய் சர்க்கரை வாழை பலா மா முதலிய கனிவகைகள் தவிர மற்ற வஸ்துக்களைப் புசியேன், ஆதலால் நீ எனக்கு மூன்று காரியங்களுக்கு உறுதி வார்த்தை செய்துகொடுத்தால் உன்னுடன் கூடிவாழ்வேன் இல்லாவிடில் என்னிருபபிடம்போய்ச் சேருவே னென்றாள் அதுகேட்ட புரூரவேந்தன் வாரும் பெண்ணே ஊர்வசியே! நீ யாதுகேட்டபோதிலும் அவ்வாறு பரவசஞ் செய்து தருவேனாதலால் உன் கருத்திலுள்ளதை வெளியிடுவாயென்று சொல்ல, அப்போது ஊர்வசியானவள் புரூரவனைப் பார்த்து ஓ வேந்தரே நான் இவ்வுலகின்கண் இருக்குமளவும் இரண்டு ஆட்டுக்கடாக்கள்வளர்த்துவர எண்ணங்கொண்டிருக்கின்றேன் அப்படிவளர்த்து வருகையில் அதையாரும் அபகரித்துக்கொண்டு போகாமற் காத்துவரவேண்டும் இதன்றியும் நீ எந்தக்காலத்திலும்என் கண்ணுக்குமுன் வஸ்திரஹீனனாய்வந்து நிற்கப்படாது இதன்றியும் உனது உச்சிட்டத்தை நானருந்தும்படியாய் செய்யத்தகாது இம்மூன்று காரியந்தான் என் மனத்திலிருப்பதாத லால் என்னசொல்லுகிறாயென்று கேட்க, அதற்கு வேந்தன் சம்மதித்துப் பரவசஞ்செய்து கொடுத்தவனாய் ஊர்வசியை அழைத்துக்கொண்டு பட்டணம்வந்துசேர்ந்து தனதுமந்திரியை அழைத்து முத்திரைமோதிரத்தைக் கொடுத்து மநுநீதிதவறாமல்இராஜரீகஞ்செய்து வரும்படியாய்க் கட்டளையிட்டுப் பின்னர் தனது பட்டணத்துக் கருகிலிருக்குஞ் சரஸ்வதி நதிக்கரையிலோங்குஞ் சிங்காரவனத்தில் ஓர் சிலவறையமைத்து, அச்சிலவறையில் ஊர்வசியோடும்போய்ச்சேர்ந்து மகா உற்சாகத்தோடும் மோகக்கடலுண்மூழ்கி இரதிகேளிகை நடாத்தியாதுங் குறையின்றி வாழ்ந்துவருகின்றபோது ஆடகலோகப்பெண்ணாகியஊர்வசியானவள் தனதுமணாளன்மீது நெடுங்காதல் கொண்டவளாய் தெய்வலோகவாழ்க்கையைமறந்து பூலோகமங்கையர்கட்கொப்பாய் மனமகிழ்வோடும்அணங்கனும் நாணித்தலைகுனியும்படியாய் இஷ்டபோகங்களையநுபவித்து வருகின்றபோது உம்பருலகிலுள்ள தேவர்களியாவரும்ஊர்வசியைப் பிரிந்திருக்குந்தன்மையால்விரகத்தணி

களாய் வருத்தமுற்று இவளை எவ்விதமேனும் இங்கு வருவித்துக்கொள்ள வேண்டுமென்று யோசித்தவர்களாய் அங்குள்ள காந்தருவர்களில் விசுவாசுவென்னுமொருவனையழைத்து ஓ விசுவாசுவே! பூலோகத்தில் புரூரவச்சக்கரவர்த்தியினிடமிருக்கும் ஊர்வசியினிடம் நீ சென்று அவளை எவ்விதமேனும் இங்குஅழைத்துவரக் கடவையென்று சொல்ல அவ்வாய்மையைக்கேட்ட காந்தருவன் ஐயாதேவர்களே! உங்கள் கருத்தின்படியே பூலோகத்துக்குப்போய் புரூரவவேந்தனிடமிருக்கும் ஊர்வசியை இமைகொட்டுவதற்கு முன்னமே இவண்கொண்டு வந்து சேர்ப்பேனென்று விருது கூறியவனாய் அவணின்றும் புவியில் ஓங்கும் சரஸ்வதி நதிக்கரையில் வந்துசேர்ந்து சிங்காரவனமென்னுந் தயித்ராவனத்திலே அமைத்திருக்கும் பளிங்குமாமணி மேடையிற் புரூரவவேந்தனோடும் படுத்துக்கொண்டிருக்கும் ஊர்வசியினது ஆட்டுக்கடாக்களிரண்டில் ஒன்றை இராத்திரி நடுச்சாம வேளையில் தூக்கிக்கொண்டு அந்தரமார்க்கமா யெழும்பும்போது அக்கடாவானது பயந்து கூச்சலிடுகையில் அவ்வோசையைக்கேட்ட ஊர்வசியானவள் விழித்துப்பார்த்து தனது கடாவைக் காணாமையால் ஐயோ கடாவை யாரோ பற்றிக்கொண்டு போய்விட்டார்களே என் செய்வேனென்று கோவென் றலறும்போது அச்சந்தடியைக்கேட்ட புரூரவேந்தன் விழித்துத் திடுக்கிட்டெழுந்து அருகே பிரலாபித்துக்கொண்டிருக்குந் தனது சகியாகிய ஊர்வசியைக் கேட்கு முன்னமே மறுபடியும் அந்த காந்தருவனாகிய விசுவாசு என்பவன் பூமியிலிறங்கி மற்றுமோர் கடாவையும் பிடித்துக் கக்கவும் இரைச்சலிட அதைக்கேட்ட ஊர்வசியானவள் அந்தோ யான் திக்கற்றவளா யிருப்பதால் இரண்டையும் பிடித்துக்கொண்டு போய்விட்டார்களே யென்று மனம் பதைபதைத்து திடீரென்று மண்மேற்சாய்ந்து சோபமடைந்தாள்.

அப்போது புரூரவச்சக்கரவர்த்தியானவன் மிகக்கோபத்துடனே அங்கிலாமணி மேடையின் பக்கலில் ஓர் அறையில் வைத்திருந்த தனது உடைவாளையுங் கேடத்தையு மெடுத்துக் கொண்டு உக்கிராவேசங் கொண்டு யாதுந்தோன்றாம லோடிவரும் போது தனது இடையிற் றரித்திருந்த வஸ்திரமானது நழுவிப் புமியில் விழுந்ததை யறியாதவனாய் நிர்வாணத்தோடும் ஆட்

டுக்கடாவைக் கவர்ந்து கொண்டுபோகுங் கள்ளனாடாவென்று அதட்டிக்கொண்டே யோடும்போது மிகவும் அந்தகாரமாகிய இருண்மூடி யிருப்பதால் அவ்வேளையில் வேந்தன் தனித்தோடுகின்றானே யென்று ஊர்வசியும் பின்றொடர்ந்தோட, அதுகண்ட விசுவாசு என்னுங் காந்தருவன் ஓர் ஒளியையுண்டாக்கி அவ்வொளியினால் இருட்கூட்டத்தை நீக்கிப் பிரகாசத்தைக் கொடுக்கச்செய்தான் அவ்வாறு வெளிச்சமுண்டானபடியால் முன்னோடுகின்ற இராஜனுடைய நக்கினரூபத்தைக்கண்ட ஊர்வசியானவள் நாணமுற்றுத் தலைகுனிந்து நின்றுவிட அப்போது காந்தருவன் ஆட்டுக்கடா விரண்டையுங் கொண்டு தேவலோகம் போய்ச் சேர்ந்தான். அப்படி சேர்ந்தவுடனே அவனாலுண்டாகிய வொளியும் மறைந்து பழையபடி இருண் மூடினமையால் வேந்தனுக்கு ஆட்டுக்கடாவைக் கொண்டுபோனவன் புலப்படாமலும் வழியுந்தோன்றாமலும் அலைந்துகொண்டிருக்கையில் ஊர்வசியானவள் அரசன் வாய்மை தப்பிப்போய்விட்டதே இனி நமக்கு இங்கென்ன வேலையென்று வெறுத்தவளாய் தெய்வலோகத்தை நோக்கிப் போய்விட்டாள். அச்சமயத்தில் வேந்தனானவன் தன்னாற் கூடியமட்டும் ஆட்டுக்கடாவைக் களவுசெய்துக்கொண்டுபோன திருடனைத்தேடியுங் காணாதவனாய்த் திரும்பி இருளைத் துணைவாகக்கொண்டு தனதுபள்ளியறைக்கு வந்துசேர்ந்து மஞ்சனத்திமீதிலகும் அம்சதூளிகாசயனத்தில் ஆடகலோகப்பெண்ணாகிய ஊர்வசியைக்காணாமல் பின்னும் அங்குள்ள மாடகூடங்களிலும் பூஞ்சோலைகளினும் நதிக்கரையினும் அன்றிராமுழுதும் தான் நிர்வாணனாகவே தேடிக்கொண்டு திரிகிறபோது, சூரியன் உதயமானான். அவ்வாறு சூரியனுதயமான பிறகு தான் நக்கினரூபமாக விருக்கிறோமென்றும் தோன்றாமல் நனிசோகங் கொண்டு சரசியைப் பிரிந்ததுயரத்தாற் காமமதிகரித்தவனாய் ஊர் நாடு தேசமுதலிய வனங்களிலுங்குகைகளிலும் தேடித்திரிகிறபோது ஒருநாள் குருக்ஷேத்திரத்தில் ஓங்கும் பூஞ்சோலையில் வயங்குந் தாமரையோடையில் அநேகந்தோழிகளுடனே ஊர்வசியானவள் வந்து மஞ்சனமாடிக்கொண்டிருக்க, அவளைக்கண்ட புரூரவச்சக்கரவர்த்தியானவன் ஓடோடியும்வந்து அடிமானே இதுபரியந்தம் நீ என்னைப்பிரிந்து எங்கேபோனாயென்று கேட்க அப்போது ஊர்வசியானவள் புரூரவன் நிர்வாணமாய்நிற்பதுகண்டு நாணமுற்றவளாய், உடனே ஒருதிவ்யவஸ்திரத்தையெடுத்துவேந்தன்மீது

போர்க்க அப்போது புரூரவன் வெட்கமுற்று, தான்கொண்டிருந்த மயக்கமியாவுந்தெளிந்து, அவளாற்போர்க்கப்பட்ட வஸ்திரத்தை யுடுத்திக்கொண்டுகூறுவான். ஓபொன்போலிலகும்பூவையே! பவளத்தைபழித்திலகும். நினதுகனிவாயும், கிள்ளையைப்பழிக்குமொழியும், குயிலினோசையைப்போன்றகுரலும், அன்னப்பேடொத்த நடையுங்கொண்டு இலகும் என்னுருயிர்த் துணையான நீ என்னைத்தனிவிடுத்தேனுகில் என்செய்வேன், எவ்வாறுய்வேன் யானொருகுற்றமுஞ் செய்தறியேனேயென்று மிகுந்த துயரத்தோடும் பரதவித்தோதும் வேந்தன் வாய்மையைக்கேட்ட ஊர்வசியானவள் கூறுவாள்.

வாருமையாவேந்தே! ஏன் வீண்வார்த்தைபேசுகின்றீர் உமதுவாக்குப் பிசகிவிட்டதனுலே யான்வந்துவிட்டேன். ஆதலால் இனிமேல் உமக்குநமக்கும் என்னவார்த்தையிருக்கின்றதுபோம்போமென்று சொன்னுள். அப்போது இவர்களிருவரும்வாதித்துக்கொண்டிருப்பதைத் தோழிகளறிந்து, இஃதென்னகாரணமென்று அவர்கள் தலைவியாகிய ஊர்வசியைக்கேட்க, அதற்கு ஊர்வசியானவள் நடந்தவர்த்தமானங்களையெல்லாந் தோழிமார்களுக் யாதியோடந்தமாயோத, அவைகளைக்கேட்ட பாங்கிகள் மிகவும் மனதிரக்கமுற்றுச் சொல்லுவார்கள் வாராயம்மா ஊர்வசியே! இவ்வேந்தனும் நீயும் அறுபதுவருடமாய்க் கூடியிருக்கும்போது அவர்உனக்கு யாதொருகுற்றமுஞ் செய்யவில்லையே இராக்காலத்தில்நேர்ந்த துன்பத்துக்கென்னசெய்யலாம்மேலும் அவர் உனதுபரிசத்தை நீங்கிச்சகியாதவராய் இடையிலிருந்த வஸ்திரம் நழுவியுந்தோன்றுமல் தன்னைத்தான்மறந்து நிர்வாணமாய் ஆயத்தப்பட்டுவந்தவர் இதுவரையினு மக்கோலத்துடனே திரிந்துழலுகின்றூரல்லாமல் வேறல்லவே ஆதலால் இதன்றியும் வேறேதேனுங் குற்றமிழைத்திருப்பரோ அப்படியிருக்க அவரை நீ எப்படி வஞ்சித்துவரலாம் வந்தும் உன்னைநினைந்துருகி ஊரெங்குமலைந்து தெய்வாதீனத்தால் இங்குனைக்கண்டுந் தடைசொல்வதுதருமமல்லவே மகாபாதகமாச்சுதே ஆனதால் இனியாகிலும் இந்தராஜனை அங்கீகரிக்கவேண்டுமென்று அநேக உபசாரவார்த்தையோடுஞ் சொல்ல அதைக்கேட்ட ஊர்வசியானவள், புன்சிரிப்புக்கொண்டுமனமிரங்கினவளாய் புரூரவனைநோக்கிக்கூறுவாள் வாரும்நாயகா நான் இப்போது உம்மால் கர்ப்பமாயிருப்பதால் அதற்குப்பத்துதிங்களும் பூரணமாகியபிறகு நீரிவ்விடம்வந்தால்

குழந்தையைப்பெற்று உமக்கேகொடுத்து உமது மனோபீஷ்டப் படி ஒருநாளேனு மும்மைச்சேருகிறேன். நீர் ஒன்றுக்கும் யோசிக்கவேண்டாம் ஆதலால், உமது இராச்சியத்துக்குப் போய்ச் சிங்காசனத்திலினிது வீற்றிருந்து செங்கோனடாத்துமென்று சொல்லி, அநேகஉண்மைவார்த்தைகளோடும் உபசாரணைசெய்து இராஜனுக்குச் செலவுதந்தாள் அதுகண்டவேந்தன் மகாசந்தோஷத்தையடைந்து அவணின்றும் நீங்கித் தனது பட்டணம் போய்ச்சேர்ந்து இராஜரீகஞ்செய்திருக்கையில் ஒடையில்நீர்த்தமாடிக்கொண்டிருந்த ஊர்வசிமுதலியயாவரும்அந்தக்குருக்ஷேத்திரப் பூங்காவனத்துக்குந் தெய்வலோகத்துக்கும்வாசஞ்செய்துகொண்டிருக்கும்போது ஊர்வசிக்குப் பத்துத்திங்களும் நிறைந்ததுகண்ட புரூரவவேந்தன் பட்டணத்திலிருந்து பிரயாணப்பட்டு குருக்ஷேத்திரம்வந்துசேர்கையில் அப்போது ஊர்வசியானவள் பிரசவவேதனையுற்று ஆயுதாவென்னுமோர் ஆண்குழந்தையைப்பெற்று இராஜனிடங்கொடுத்து பிறகு தன்மனதுக்கு ரம்மியமாகிய நாளிலே ஓர்நாள் புரூரவவேந்தனேடு கூடிச்சுக லீலைகளை நடாத்திக்கொண்டிருக்கையில், மறுபடியும் ஊர்வசியானவள் ஐந்துபிள்ளைகளைக்கர்ப்பமுற்று அன்றிராத்திரிப்போதுநித்திரைதெளிந்தெழுந்திருந்தபோது, இராஜனனவன் இவளினிநம்மைவிட்டுப் பிரிந்துபோய் விடுவாளென்று நினைத்துகொடுந்துன்பத்திலாழ்ந்திருப்பதை ஊர்வசிகண்டு, வாரும்வேந்தனேநீரிப்படி துன்பப்படுநிமித்தம் நான்பூலோகத்தில் வாசஞ்செய்துகொண்டிருந்தால் தெய்வலோகத்தார் மிகவுஞ் சின்னஞ் சொல்லுவாராதலால், எங்களுடைய லோகத்துக்கு உமக்கு வரும்படியாகியதிறமிருந்தால் எப்போதும் வரப்போகவிருக்கலாம் அவ்வாறுநீர்தவஞ்செய்யவில்லையே ஆதலால் உமக்குநான் அத்திறம்உண்டாகும்படியாய் ஓர் உபாயஞ்சொல்லுகிறேன் அதுயாதெனில், என்னைப்பயந்த தந்தையானவர் மிகவுஞ் ஜீவகாருண்யமுடையராதலாலும் அவரைச்சிந்தித்து தபஞ்செய்தால்அப்போது அவருக்குக் கருணைசுரந்து தும்புராதிகளுடனே உனக்குதெரிசனந்தந்துயானும்மைச்சேரும்படியானமார்க்கஞ் சொல்லுவார், பின் நீரும்நானும் கூடியிருக்கலாமென்று ஊர்வசியானவள் வேந்தனுக்குரைத்துத் தெய்வலோகத்தை நோக்கிப் போய்விட்டாள். அப்போதுபுரூரவச் சக்ரவர்த்தியானவன் மகாகளிப்புடையவனுய்தனது புத்திரனை யெடுத்துக்கொண்டு பட்டணம்போய்ச்சேர்ந்து குழந்

தையை அந்தப்புரத்திலிருக்குந் தேவிமார்களிடமனுப்பிப் பாது காத்துவரும்படி திட்டஞ்செய்து பின்பு ஊர்வசி தனக்குரைத்த வண்ணம் அன்னவள் தந்தை முதலிய தும்புருவைக்குறித்து அநேகவித நோன்புகளும் நிட்டைகளும் மேலோர்கள் சொல்லிய வாக்கியப்படி உபாசனை செய்தான்.

அப்படிச் செய்துவருங்காலை, தும்புராதியோர்கள் இவன் தவத்திற் கிரங்கினவர்களாய் தெரிசனந்தந்து, ஓ அரசே உனக்குவேண்டிய வரமென்னவென்று கேட்க, அதற்கு வேந்தனவர்களைப்பணிந்து, சுவாமீ எளியேன் உங்களுடைய லோகத்துக்கு வரப்போகவிருக்கும்படியாயும் ஊர்வசி என்னும் நடனப்பெண்ணை யான்சேர்ந்து சுகிக்கும்படியாயும் கட்டளையிடவேண்டுமென்று கேட்க, அதற்குத் தும்புராதியோர் கூறுவார்கள் வாரும் வேந்தனே நீர் யாங்கள் வசிக்கும் பொன்னுலகத்துக்குப் போகவும் வரவும் ஊர்வசியென்னும் பெண்ணைச்சேரவும் எண்ணமிருக்குமாயின், யாகாதிகிர்த்தியங்களைச் செய்தால் அப்போது தேவர்களுக்கு மனமகிழ்ச்சியுண்டாகி நீர் நினைத்த காரியங்களைக் கைகூடச்செய்வார்கள். ஆதலால் அக்காரியம் நிறைவேற வேண்டும்பொருட்டு நீர் இந்த அக்கினித்தாலியைக்கொண்டு சாஸ்திர விதிப்படி மூன்றுகூறாய் அக்கினியையெடுத்து யாகஞ்செய்வீராயின் உமது கருத்தின்படி உம்பருலகம் போகவும் வரவும் ஊர்வசியானவள் எப்போதும் உம்மைவிட்டு நீங்காமலிருக்கவும் சித்தியாகுமென்றுசொல்லி, அக்கினித்தாலியையுங்கொடுத்தபின்பு தும்புராதிகள் ஆடகலோகம்போய்ச் சேர்ந்தார்கள். பின்பு வேந்தனும் அவ்வக்கினித்தாலியை வாங்கிக்கொண்டு வனத்தூடேவருகிறபோது தன்மனத்தில் அந்தோ நாம் ஊர்வசியைவிட்டுப்பிரிந்து சகிக்கப்படாத துன்பத்தோடும் மறுபடியும் அவளைச்சேரும் விதத்திற்குத் தவஞ்செய்தும் இவ்வக்கினித்தாலியை யடைந்ததினால் என்னபிரயோசனம், ஐயோ இதனாலே நீ எடுத்துயாகஞ்செய்தால் தெய்வலோகத்திற்குப் போக்குவரவா யிருக்கலாமென்றும் ஊர்வசியைச் சேரலாமென்றும் தும்புராதிகள்சொன்னது வீணேயாகிவிட்டது. மேலும் நாம பட்டபாடெல்லாம் இதற்குத்தானோவென்று நினைந்து அத்தாலியைக்காட்டில் எறிந்துவிட்டுத் தன்னுடைய பட்டணம்வந்து சேர்ந்தான் இவ்வாறு வந்துசேர்ந்த புரூரவன் அன்றிராத்திரியெல்லாம் நித்திரையில்லாதவனாய் நாம் ஊர்வசியின் துயரத்தால் தவஞ்செய்து தும்பு

ராதிகளிடத்திற்பெற்ற தாலியை அவள்கழுத்திற் கட்டியிருந்த தாலியென்றன்னுமல் அசட்டைசெய்து வனத்திலெறிந்தது நல்லதல்லவே என்றுயோசித்தவனுய் எப்போது சூரியனுதிப்பானே வென்று விழித்துக்கொண்டேயிருந்து, அருணேதயமானவுடனே எழுந்து குதிரையின்மீதேறி அவ்வனத்துக்குப்போய்த் தாலியைபெறிந்தவிடமெங்குந் தேடிக்காணுமல் வருத்தத்தோடும் வனத்தை உய்த்துநோக்கி, அங்குள்ளவிருட்சங்களை குறிக்கொள்கையில், நேற்றையதினமிருந்த விருட்சங்களுக் கதிகமாய் இன்று ஓர் அரசமரமும் வன்னிமரமும் இருக்கின்றதினுலே நாம் எறிந்துவிட்ட அக்கினித்தாலித்தானே இந்த இரண்டுவிருட்சமாகி யிருக்கின்றதெனச் சிந்தித்து, பிறகு இந்தமரங்களால் அக்கினியுண்டாக்கி யாகஞ்செய்வோமென்று திடங்கொண்டு பட்டணம்வந்துசேர்ந்து பூசுராளையும் பெரியோர்களையும்வருவித்து வேதவிதிப்படி அவ்வரசமரத்திலும் வன்னிமரத்திலும் அக்கினித்தாலியையுண்டுபண்ணி அதை இருபத்துநான்கு அங்குலப்பிரமாணஞ்செய்து அதில் மூன்றுகூறுய் அக்கினியுண்டாக்கி அந்த அக்கினியினுலே அளவில்லாத யாகாதிகிர்த்தியங்களைச்செய்தான். அப்படி மேன்மைபொருந்திய யாகங்களைச்செய்யும்போது ஆடகலோகவாசிகளாகிய அமரர்களியாவரும் பிரசன்னமாய் யாககுண்டத்தினிடஞ்சேர, அவர்களைக்கண்ட புரூரவன்பணிந்து பலவாருகத்தோத்திரம் செய்யும்போது தேவர்கள் அவன் தோத்திரத்திற்கு மகிழ்ந்து ஓப் வேந்தனே உனக்கென்னவரம் வேண்டுமென்றுகேட்க அதற்குப்புரூரவன் சுவாமிகளே எளியேனுகிய யான் உங்களுடைய லோகத்துக்கு வரப்போகவும் அப்ஸரஸ்த்ரீகளி லொருத்தியாகிய ஊர்வசியென்பவள் என்னுடன் கூடி இருக்கவும் வரவேண்டுமென்றுவினவ அதற்கு தேவர்கள் சம்மதித்து உன்மனம்போல் நடக்கக்கடவையென்றுவிடைதந்த தன்றியும் அவ்வேந்தனைத்தமது லோகத்துக்குக்கூடவே அழைத்துக்கொண்டுபோய், பொன்னுலகமெங்கும் புகழச்செய்து, பின்னர் உனது பட்டணத்துக்குப்போய் வருவாயென்று செலவு தந்தனுப்ப அவ்வாறு நடவாதவனுய் புரூரவவேந்தன் ஊர்வசியிருக்குமிடம் போய் அவளைக்கண்டு அவளுடன் சுகித்து தனதுகாதல் தணியும்படியாய் மனமகிழ்ச்சி யோடுந் தெய்வலோகத்திற்றனே வாசஞ் செய்து கொண்டு தடையற்ற போகத்தோடும் வாழ்ந்திருந்தான், அப்படி யிருக்குங் காலையில் தெய்வலோகத்திலே தேவேந்திரனுடைய சபையிலே அரம்பை மேனகைதிலோர்த்தமை முதலிய நாட்டியப் பெண்களெல்

லார் தனித்தனியாய் நாட்டியஞ்செய்து பின்பு ஊர்வசியும்மேனகையும் நின்று நடிக்கையில், பார்த்திருந்த தும்புருநாரதாதிகருடகாந்தர்வ சித்தவித்யாதர்களோடும் புரூரவனும் பார்த்துக்கொண்டிருக்கையில் ஊர்வசியானவள் பரதசாஸ்திரவிதிப்படி நாட்டியஞ்செய்துவரும்போது புரூரவவேந்தன் இமைகொட்டாதுபார்த்திருப்பதுகண்ட ஊர்வசிக்கு லயபேதப்பட்டுப் போனதனாலே அவர்கள் நாடகசாலைக்கு ஆசிரியாராகவிளங்குந் தும்புரு வானவர் கோபங்கொண்டு, இப்புரூரகவேந்தனாலன்றோ பேதப்பட்டதென்றுநினைந்து, கடுங்கோபத்தோடும் இந்தப்புரூரவ வேந்தனும் ஊர்வசியுஞ்சேராம லிருக்கக்கடவதென்று சாபமிட்டார். அதைக்கேட்ட புரூரவன்திடுக்கிட்டுப் பயந்து தேவராஜனே நானிந்தஊர்வசியைச்சேர வேண்டுமென்று எத்தனையோபிரயாசைகளடைந்து யாகாதிகளுந் தானதருமங்களுஞ்செய்து புண்ணியத்தையடைந்து அவளுடைய போகபாக்கியங்களை யநுபவித்துக்கொண்டு இருந்தஎனக்கு இத்தன்மைபொருந்திய சாபம்நேரிட்டால் என்செய்வேன் எவ்வாறுய்வேன், ஆதலால்தேவரீர்இச்சாபத்தை விமோசனமாகும்படியாய்ச் செய்யவேண்டுமென்று பணிந்துநிற்க அப்போது இந்திரன்கண்டு சிந்தைமகிழ்ந்து சொல்லுவான்.

வாரும் புரூரவவேந்தனே இப்போது உனக்கு நேரிட்ட சாபந்தீரவேண்டுமானால் பூலோகத்திலோங்கும் பரதகண்டத்தில் தட்சிணபாகத்தில் ஸ்ரீராமமூர்த்தியார் கட்டப்பட்ட சேதுவின் மத்தியில் வயங்குங்கந்தமாதன கிரிச்சார்பில் ஸ்ரீராமலிங்கத்துக்குதட்சிண பாரிசத்திலே சாத்தியாமிர்தநீர்த்தமென்று ஓர்தீர்த்தமிருக்கின்றது அத்தீர்த்தத்தை நாடிச்சென்று சங்கற்ப விதியின்படி அதில்மூழ்கிப் பின்பு ஸ்ரீராமநாதனை தெரிசனஞ் செய்தால் இச்சாபவிமோசன மாவதன்றியும் ஊர்வசியையுங் கூடிச்சுகித்திருப்பாயென்று தேவேந்திரன்சொல்ல அவ்வார்த்தையைப்புரூரவராஜன் கேட்டுமெத்தவுஞ் சந்தோஷித்துஉடனேபூலோகத்திலிறங்கித் தனதுபட்டணஞ் சேர்ந்து இரதகஜதுரகபதாதிகளுடனே பிரயாணப்பட்டுப்போய்ச் சேதுமத்தியிற் கந்தமாதனச் சார்பில் விளங்குஞ்சாத்தியாமிர்தத் தீர்த்தத்தில் நாற்பத்தஞ்சுநாள்வரையிலிருந்து வேதவிதியின்படி தீர்த்தமாடி ஸ்ரீராமநாதனைதெரிசனஞ்செய்துகொண்டிருக்கிறபோது ஆகாயத்தினின்றும் ஓ புரூரவேந்தனே! நீபக்திவிசுவாசத்தோடும் இந்தசாத்தியமா

மிர்த தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஸ்ரீராமநாதனை தெரிசித்த பெருமையால் உனது சாப விமோசனமாகிவிட்டதென்று அசரீரி யோத அவ்வசரீரியைக் கேட்டவேந்தன் சந்தோஷமடைந்து ஸ்ரீராமநாதனைப பணிந்து விடைபெற்று அவணின்றும் நீங்கித் தேவலோகம்போய் ஊர்வசியைக்கலந்து சுகித்துவாழ்வதோடும் பூலோகத்திற்றனது இராச்சியத்தையும் அரசாட்சிசெய்து கொண்டிருந்தான். ஆதலால் இத்தன்மைவாய்ந்த சாத்தியாமிர்த தீர்த்தத்தினருகே சர்வதீர்த்தமென்றோர்புண்யதீர்த்த மிருக்கின்றது. அதன்பெருமையும்அளவிடப்படாதென்று சூதமுநிவர்சொல்லஅது கேட்ட நைமிசாரண்யர்கள் சுவாமீ! தேவரீர் அடியேங்களுக்கு அத்தீர்த்தத்தின் பெருமையைத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்றுகேட்க முநிவர்சொல்லத்தொடங்கினர்.

சாத்தியாமிர்ததீர்த்தம்.

முற்றிற்று

---

உ0-வது,

## சர்வதீர்த்தம்.

கேளுங்கள் முநிவர்களே விண்ணுநிஜந்தாகவும், அல்லவாகவும், விமலமாகவும், விளங்குஞ் ஜகதீசனது அருளாலுற்றஇவ் வுலகின்கண் ஓங்கும் நான்குவருணத்துள் வேதகுலத்தில்பிறவிக்குருடனாகவும், மறையோதும்நாலாயிரத்துநானூற்றுநாற்பத்தெட்டுலிகளுக்கும்நண்பனாகவும், நரைதிரை மூப்புக்குரியகேவலத் தோடுஞ்ஜனித்து சுதரிசநனென்னும் பெயர்வாய்ந்த ஓர்பிராமணன்இருந்தான். அவன் இப்புவியின்கணுள்ள தீர்த்தங்களிலெல் லாம்ஸ்நாஞ் செய்யவேண்டுமென்னும் விருப்புற்றவனாய்எப்போதுஞ் சிந்தித்துக்கொண் டிருப்பதோடுந் திரிகாலமும் மனதிலே ஸ்ரீராமநாதனைத்துதித்துப் பிரார்த்தனைசெய்தும் சிவனடியார் களுக்குத் தளர்வின்றி அன்னமளித்தும் கந்த மாதனத்திலே அநேகநாள்வரையில் வெய்யில் மழைமுதலிய யாவுக்கும் அஞ்

சாமற் பஞ்சாக்னியிடையினின்று தவஞ்செய்யலாயினன் அது
கண்ட ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவன் கருணைசாந்து மான்ம
ழுசதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திர சந்திரஜடாதாரியாய் பா
ர்வதியாரோடும் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்
ணாயிரம் ரிஷிகள் தும்புரு நாரதாதிகின்னரகிம்புருட கருடகாந்
தர்வ சித்தவித்யாதராரகராகாயவாசிகள் போசபூமியர் முதலி
யவர்களும் புடைசூழ, வெள்ளிடையின் மீதெழுந்தருளித்தவஞ்
செய்யும் பிராமணனுக்கு முன்னின்று, வாரும்பிள்ளாய் சுதரிச
நனே, நீ நம்மை எதிட்டுப்பாரென்று சுவாமியானவர் திருவாய்
மலர்ந்தருள, அப்போது அம்மறையவனுக்கு ஞானோதயமாகி
ஓர் ஜோதியைப்போற்றேன்ற, உடனே கண்ணைவிழித்துக் கட
வுளைத்தரிசித்து ஆனந்தபரவசனாய் இருகரங்களையுஞ் சென்னி
மேற்கூப்பிக் கும்பிட்டுக் குதித்துக் கூத்தாடிப் பாடிப்பணிந்து,
பரமசிவத்தினது பதாம்புயங்களுக்கு அஷ்டாங்க பஞ்சாங்க தி
ரியாங்கனுய்ப்பணிந்து எழுந்து, திரிகரணசுத்தியோடு, சங்கரா,
சம்போ, ஜகதீசா, சர்வலோகசரண்யா, தாணுவே, மங்கைபோர்
பாகா, அடியார்க்கெளியையாகிய ஆதியே அநாதரக்ஷகா, அர
வாபரணா, சந்திரஜடாதரா, சர்வஜனபரிபாலனா பார்வதிசமேதா
திரிபுராந்தகா சின்மயானந்தசொரூபா, கருணாகரா, கடாக்ஷவீ
ண்யா, தமியேனைப்பட்ட தாயுந்தந்தையுமாய் எழுந்தருளி ஆட்
கொண்டதற்பரா என்று தோத்திரஞ்செய்யும்போது உமாமகே
சன் மனமகிழ்ந்து, உனக்கென்னவரம் வேண்டுமென்று கேட்க
அப்போது சுதரிசநன், மிகுபக்திவிநயத்தோடும், சுவாமி, அடி
யேன் நரைதிரை மூப்புகளினாலேயும், நோயினாலேயும் தளர்ந்
தது மன்றியில், பிறவிக்குருடனாயும் நடப்பதற் கேதுவில்லாதவ
னாயும் இருக்கும் எளியேனுக்கு, சகலதீர்த்தங்களையுமாடவேண்
டுமென்னும் அபேட்சையைக்கொண்டு தேவரீரை நோக்கித்தவ
ஞ்செய்தவெனக்குத் திருவருள் சுரந்தமையால் எளியேன் கருத்
தின்படித் தீர்த்தமாட அருள்செய்ய வேண்டுமென்று கேட்க,
கைலாசபதியாகிய சாம்பவமூர்த்தியும் மனமகிழ்ந்து, வாராய்
பிராமணோத்தமா ஸ்ரீராமனால் உண்டாக்கப்பட்ட சேதுமத்திபி
லோங்கும் இக்கந்தமாதனத்திற்றானே சகலதீர்த்தங்களையும் வர
வழைக்கிறோம் அதிற் றீர்த்தமாடுகிறாயாவென்று கேட்க, அதற்
குவேதியன், சுவாமீ! மெத்தவும் பாக்கியமென்று ஆனந்தபரவச
னாய்த் தோத்திரஞ்செய்ய உடனே பரமசிவம் கிருபைகூர்ந்து

அண்டசராசரங்களிலுள்ள சிவஸ்தல விஷ்ணுஸ்தல முதலிய திவ்யக்ஷேத்திரங்களையும் திவ்யதீர்த்தங்களையும் திவ்யநதிகளையும் கந்தமாதனத்தில் தனக்கு முன்வரும்படி நினைத்தமாத்திரத்தில் யாவும் பாதாளவாகினியாய் பிரயாணப்பட்டுவந்து சேர்ந்தன.

அவ்வாறு வந்த பிரவாகங்களையெல்லாம் ஒன்றாய்ச்சேர்ந்து நிற்கும்படியா யமைக்கத் தமது வெள்விடைக்கு உத்தரவுசெய்ய உடனே விருஷபவாகனமும் தனது முன்னங்காற் குளம்புகளினாலே பூமியைக்கல்லிப் பெரியதடாகம்போற் செய்துநிற்க அதுகண்ட நீலகண்டன் சுதரிசநனைப்பார்த்து ஓ வேதியனே, நீ இத்தீர்த்தத்தில் மூழ்கக்கடவையென்று கூற, அப்போது மறையவன் திரிகரணசுத்திபோடும் அந்தச் சர்வதீர்த்தத்தைப் பிரதட்சணஞ்செய்து வேதவிதிப்படி அதில்மூழ்கி எழுந்திருந்த மாத்திரத்தில் நரை திரை மூப்பு முதலியயாவும் நீங்கி தேகமனது பசும்பொன்னைப்போற் பிரகாசிக்கவும் உலகினர்கள் மன்மதனோ மகாவிஷ்ணுவோ மான்மழுதரித்தோன் மதலையாகிய மயில்வீரனோவென்று மதிக்கத்தக்கதாய் உருவங்கொண்டு கரைமீதுவந்து சேர்ந்து விபூதி உருத்திராக்ஷந்தரித்துப் பரமசிவனை சகஸ்ரநாமங்களும் தோத்திரஞ்செய்ய அப்போது சாம்பவமூர்த்தியானவர் சொல்லுவார்.

வாராய் சுதரிசனனே! நாம் உனக்காக இந்த லோகாலோகங்களிலுண்டான சர்வதீர்த்தங்களையும் ஒன்றாய் இவண்வருவித்தமையால் இத்தீர்த்தத்துக்கு இன்றுமுதல் சர்வதீர்த்தமென்றும் மாதைதீர்த்தமென்றும் பெயர்விளங்குவதோடும் இதனையாரொருவர் தரிசித்தாலும், மூழ்கினாலும் அருந்தினாலும் அவர்களுக்கு இகத்தில் போகபாக்கியங்களும் பரத்தில் மோட்சமுங் கைவல்யமாம் இஃதன்றியும் அனந்தகோடி பாவங்களைச் செய்தவராயினும் இத்தீர்த்தத்தின் பரிசம்பட்டமாத்திரத்தில் அப்பாவங்களெல்லாம் பாறுமுன் பனிபோல்விலகி நிருதார்த்தராவார்களென்று பரமசிவனானவர் வரமளித்தபோது சுதரிசநனது தேகமானது இளஞ்சூரியனைப்போ லிருப்பது கண்ட தேவர்கள்முதலிய யாவரும் திக்பிரமைகொண்டு, இவ்வேதியன் முன்னிருந்தவனன்று இவன் யாரோ தெரியவில்லையென்று எண்ணத் தக்கதாயும் அல்லது இத் தீர்த்தத்தின் பெருமையே இவ்வகை யுற்றதோவென்று எண்ணத்தக்க

தாயும் மகிமைபொருந்திய தீர்த்தத்தையும் மறையவனையுங்கண்ணிமையாற் பார்த்து ஆச்சரியமடைந்திருக்கையில் அவ்வேளையிற் சந்திரஜடாதாரமூர்த்தியாகிய உமாமகேசன் சுதரிசநனைநோக்கி ஓ பிராமணோத்தமா நீ சதாகாலமும் இத்தீர்த்தத்திற்றானே மூழ்கிநம்மை பூசித்துக்கொண்டு வந்தால் முத்திவீடாகியநமது பதியைச் சேருவாயென்றுவிடையளித்துச் சகல தேவர்களோடும் சிவகணங்களோடுங் கைலாசத்துக் கெழுந்தருளினார். அப்பால் சுதரிசநனானவன் அந்தக்கந்தமாதனத்திலே வாசஞ்செய்துகொண்டு திரிகாலமும்சர்வதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து அங்ஙனமெழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமநாதனைப் பணிந்துவருகிறபோது ஸ்ரீகைலாசபதியினதருளால் பெறுதற்கரிய அகண்ட பரிபூரண சச்சிதானந்த சைதன்ய சொரூபத்தைக் கலந்தானாதலால் அதுமுதல் உலகின்கண்ணுள்ள நரைதிரை மூப்புக்குரியவர்கள் முதலிய பஞ்சமா பாதகராயிருந்தபோதினும் அந்தச் சர்வதீர்த்தத்தைத் தரிசித்தாலும் அதிற்றீர்த்தமாடினாலும் அந்நீரை யருந்தினாலும் அவர்களுடைய பாவங்களெல்லாமகன்று அநேகயாகாதிகிருத்தியங்கள்செய்தபலனைப்பெற்று வாலைப்பருவராய்மேலான புண்ணியலோகத்தைப் பெறுவார்கள். மேலும் இவ்வளவு மகிமைபொருந்திய தீர்த்தத்தினோடுந் தனுஷ்கோடி என்னுமோர் புண்யதீர்த்தமிருக்கின்றது அதன்பெறுமையைக்கூறுவது ஆயிரநாவுடைய சேடனுக்கும் அரிதாமென்று சூதமுனிவர் சொல்லியதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் சுவாமீ தேவரீர் அடியேர்களுக்கு அத்தீர்த்தத்தின் பெருமையைத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்றுகேட்க சூதமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

## சர்வதீர்த்தம்.

முற்றிற்று,

---

வைத்துக்கொண்டு சாப்பிடாமல் தாங்கள் மாத்திரந் தனியாயி ருந்து அறுசுவைப்பதார்த்த அன்னங்களேனும் தாலம் தெங்கு முதலிய தருக்களினது மதுக்களேனும் அருந்துவர்களாயின், அன்னவர்களை கிருமிபூணமென்று சொல்லப்பட்ட நரகத்திற் றள்ளி புழுவோடே புழுவாய்ப்போகும்படி செய்தும் அந்நரகில் வாழப்பட்ட பெரும்புழுக்களை இவர்களை விழுங்கவும் துன்பப் படச்செய்வார்கள். இதுவுமல்லாமலும் லோகத்தில் பிராமணு ளுடைய சொத்துக்களையுந் தங்களோடொத்த அயலாருடைய சொத்துக்களையும் பலாக்ருதத்தினுலாவது சோரத்வத்தினுலா வது அபகரிப்பவர்களையும அபகரிப்பவர்களுக்கு உதவிசெய்ப வர்களையும் தாதுக்குருவென்று சொல்லப்பட்ட நரகத்திற்றள்ளி ஆலகாலவிடங்களை அவர்வாயில் ஊற்றுவதல்லாமலுந் தீயினும் விட்டிக்கருக்கி அந்நகரத்திற் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் வே தாளங்களினது பற்களுக்குப் பதமாய் நகட்டும்படிச் செய்வார் கள். இஃதன்றியும் புவியின்மீது புருடராய் ஜனித்தவர்கள் த னக்கு மேலான குலஸ்திரீகளையாகிலும் இச்சையில்லாத ஸ்திரீ களையாகிலும் தான் இச்சைகொண்டு பொருள்விரயத்தாலாவது இதர தந்திரங்களினுலாவது அவர்களது இச்சையுறும்படிச்செ ய்து புணர்ந்தாலும் அல்லது கீழ்மக்களைப் புணர்ந்தாலும் அத் தகைய பாவிகளையும் வைதவ்யஸ்திரீகளைச்சேரும் பாவிகளையும் காலதூதர்கள் கொண்டுபோய் இருப்புக்கம்பங்களை அக்கினியிற் காய்ச்சி அந்த ஸ்திரீபுருஷர்களை அந்தக்கம்பங்களைக்கட்டியணை த்து முத்தமிடும்படியாய்ச் செய்வார்கள். உலகத்தில் ஓர் புருட னுக்குப் பத்தினியாயமைந்த பெண்ணுனவள் தன் மணுளனை எதிர்த்து வாதுசெய்தும் அவன்சொல்லுக் கிணங்காதும் தீங்கு நினைத்தும் அடங்காமற்றிரியும் பெண்களைக் காலதூதர்கள் கொ ண்டுபோய்க் கற்பாறையின்மீது படுக்கவைத்துக் கருக்கரிவாளி னுல் அவர்கள் தேகத்திலுள்ள மாமிசங்களையெல்லாம் அரிந்து குப்பலாகச்சேர்த்துப் பந்துபோற்றிரட்டித்தீயிற்போடுவார்கள். இதல்லாமலும் புருஷர்கள் தமக்கு இணங்காதகர்ப்ப ஸ்த்ரீகளைத் தொந்தரவுசெய்து புணர்ந்து அதனுற் கர்ப்பத்திலுற்றசிசுக்களு க்கு நாசமுண்டாகும்படிச்செய்யும் பாவிகளையும் லோகத்தில் த னது இல்லறதர்மத்துக்குரிய புருஷனிருக்க பரபுருஷனையிச்சித் து அதனுலுண்டாகிகருவை அழிக்கும் நீலிகளாகியகொடும்பாவி களையும் பரபுருஷன் இச்சையால் தனதுமணுளனைக்கொன்றபா

விகளையும், புருஷன் அக்கினியைக்கடந்து தேர்திருவிழா முதலியவற்றிற்குப்போகும் பாவிகளையும் எமகிங்கிலியர்கள் பிடித்துக்கொண்டுபோய் ஆணைக்காலி விடறச்செய்தும் இருப்புத்தண்டங்களைக்கொண்டோங்கிப் பஞ்சபஞ்சாய் கையவடித்துக்குழப்பி மலத்தோடேசேர்த்துப் புழுக்கவைப்பார்கள். இதல்லாமலும் யானைமுதல் எறும்பீறாக அடங்கிய உயிர்களை வாதைப்படுத்தினாலும் வதஞ்செய்தாலும் அவ்வாறு செய்கையிற் பார்த்திருந்தாலும் அவர்களுக்கு உதவிசெய்தாலும் அன்னவர்களை யமபடாள் கெக்கரிகொட்டி இழுத்துக்கொண்டுபோய் விடந்தோய்ந்த கழுவிலேற்றித் தொந்தரவுசெய்வார்கள். இதல்லாமலும் உலகத்திற் புருஷர்களாயினும் ஸ்திரீகளாயினும் பிள்ளைகளாயினும் மானவமானமில்லாமல்கெட்டநடத்தைகளிற் பிரவேசித்தும்மது மாமிசாதிகளைப்புசித்தும் சூதாடியும் கொலைகளவுகள் செய்தும் மிருகங்களுக் கொப்பாகத் திரியப்பட்டபாவிகளை அவர்களதுபிராணாந்த காலத்தில் காலதூதர்கள் பிடித்துக்கொண்டுபோய்மலமூத்திரங் கோழை சீழ் இரத்தமுதலியவைகள் நிரம்பியிருக்குங் குழிகளிற்றள்ளி வாதைப்படுத்துவதோடும் பயங்கரமாகியபெருநரகங்களிலும் எமனுடைய கட்டளையின்படி விட்டுத் துன்பப்படுத்துவார்கள் இதன்றியும் வனங்களிற்சஞ்சரியாநின்ற மான்மரை முதலியவற்றையும் பறவைக்கூட்டங்களையும் வேட்டைமார்க்கத்தில் நாய்களையேவிக் கடிக்கச்செய்தும் கவண்கற்களாலும் அம்புகளாலும் உருண்டைவிற்களாலும் வதஞ்செய்தும்புசிக்கப்பட்ட பாவிகளைபகட்டின்மீதேறியுலவாநின்ற யமபடாளபிடித்துவந்து இருப்புத்தண்டங்களாலடித்து என்புகளைநொறுக்குவதன்றியுந் துருவத்திலேற்றியாட்டியும் கழுவிலேற்றியுஞ் செக்கிற்போட்டுத்திருப்பியும் உரலிற்போட்டிடித்தும் அம்மியிலிட்டரைத்தும் அவர்கள் உயிர்நீங்காம லிருக்கும்படியே தோலோடு தோலாகவுஞ் சதையோடு சதையாகவும் என்போடு என்பாகவும் கற்பகோடிகாலம்வரையில் இம்சைசெய்து வருவார்கள் மேலும் புருடர்களாய் நற்குலத்தி லுதித்தவர்கள் தமதுபத்தினிகளையாவது பரஸ்திரீகளையாவது தம்முடைய இந்திரியத்தை அருந்தும்படியாய்ச்செய்த பாவிகளைக் கொண்டுபோய் அவர்களுடைய காமநீரையே புசிக்கச்செய்து அநேககோடிகாலம் ரவுரவாதிநரகத்திலழுந்தியிருக்கும்படிச் செய்வார்கள் இதல்லாமலும்வையத்தின் மீதோங்குயவியாபாரிகளிடத்திற் பொருளைப்பெற்றுக்கொண்டு அதனைமறுபடியுமவர்களுக்குச் செலுத்தாமலும் அபலருடைய

இல்லங்களை அக்கினியினால் கொளுத்தியும் விடங்களையூட்டியும் உயிர்களை நாசமுறச்செய்த மகாகொடும்பாவிகளை யமதூதாள் வச்சிரக் கொள்கையென்று சொல்லப்பட்ட நரகத்திற்றள்ளினை பவடித்துக் கொடுந் துன்பத்தைச்செய்வார்கள் இன்னமும் சிவ சொத்துகளை மோசஞ்செய்தும் ஒருவரறியாமற் களவுசெய்துங் காலங்கழித்துலவும் பாவிகளைக் காலதூதர்கள் எப்போதுமீளா படாத காலசங்கடமென்னும்நரகமாகிய அக்கினிகுண்டத்திலே தள்ளிவாதைப்படுத்துவார்கள். ஆதலால் இவ்வாறு பாவங்களைச் செய்பவர்கள் அடையுந்துன்பங்களைச் செப்பவேண்டுமாயின்ரெ நெடுஞ்சொல்லும் ஓ முனிவர்களே! பஞ்சமா பாதகர்களாயினும் மாதாபிதாக்களுக்கு சிரார்த்த முதலியவைகளைச் செய்யாதவ ராயினும் குரு இஷ்டர் வேதசாஸ்திரங்களை யுணர்ந்தவர்களுக் குத் தீங்குசெய்பாதவராயினும் அப்பேர்க்கொத்தவர்கள் ஸ்ரீரா மதநுக்கோடியிலே தீர்த்தமாடுவாராயின் அவர்கள் ஒருகாலத்தி னும் மேற்கூறியநரகங்களைக் கண்ணினுலும்பார்க்கமாட்டார்கள் எமதண்டனைக்கும் ஆளாகார்கள். அத்தன்மைபொருந்திய மகி மையைப்பெற்றுவிளங்குந் தநுக்கோடியிலே மூழ்கின பேர்களு க்கு மேலான அறிவு பொருந்துவதோடுஞ் சாலோக சாமீப சா ரூப சாயுச்சியபதங்களு மெளிதாய்க்கிடைக்கும். அல்லாமலும் அன்னவர்களைப்பற்றிய வூழ்வினை யகலுவதோடும் அநேக வின் பங்களையும் பிராம்மணர்களுக்கு பாரம்பாரமாய் பசும்பொன் கொடுத்த பலனையும் ஆயிரங் கோதானஞ் செய்தபலனையும் கன் னிகாதானஞ் செய்த பலனையும் கொடுத்து அவர்கள் வச த்தி லுண்டாகிய பாதங்களைத் தூரத்தி இச்சையை சத்த சாகரத்துக் கப்புறம் விலகச்செய்து சுத்த நிர்மலராய் மனத் தைப் பிரகாசிக்கச்செய்து பரிசுத்தராக்கும் கேளுங்கள் முனி வர்களே இக்கடல் சூழ்ந்த உலகின்கண் கோதண்ட மென் னும் கொடிய வில்லையுடைய அதிவீர பராக்ரம சாலியாகிய ஸ்ரீராம-மூர்த்தியால் உண்டாக்கப்பட்ட தநுக் கோடியிலே தீர்த்த மாடிய பேர்களுக்கு இப்போது நாம் சொல்லிய வண்ணம் துன்பமனைத்தும் நீங்கி இன்பத்தை தருவதற்குச் சந்தேக மிராதென்று அக்கினியிலே வேகும் இரும்பையெடு த்து எனதுநாவின்மீது வைத்துக்கொண்டு சித்தமாய்ச் சொல் லுவேன் யான் சொல்லுமிதை உண்மையென்று நம்பாமல்யாவ ரேனுமிது வீண்வார்த்தையென்று நினைப்பார்களாயின் அவர் கள் சங்கரியமாய்பேயேஜெனித்து முதற்கிசைசத்தொழிலிற்பிரவே

சித்துப்பெருந்துன்பத்தை யடைவார்கள். உண்மையென்று நம்பியபேர்கள் அவர்களது கருமத்தையும்போக்கி நல்லபாக்கியங்களைப்பெற்று மோட்சவீட்டையு மடைவார்களாதலால் இந்த கையதநுக்கோடியாகிய புண்ணியார்த்தமிருக்க வேறே தீர்த்தத்தை நாடிப்போகின்ற பேதைகளைப்போல ஒரு பயித்தியக்காரருமில்லை அவர்களுடைய விவேகத்தை நாம் என்னசொல்லுவோம் முனிவர்களே அந்த தநுக்கோடிக்குப்போய் அப்புண்ணியதீர்த்தத்தைக் கையினால் தொடினும் கண்ணினாற் காண்கினும் அதனைப்புகழினும் மனதில் நினைப்பினும் அவர்கள் பூமியில்மீண்டும் ஜெனன மெடார்கள் நைமிசாரண்யரேயென்று, சூதமகாமுனிவர்சொல்ல அதைக்கேட்ட முனிவர்கள் மெத்தவுஞ் சந்தோஷமடைந்து, சூதமாமுனியை நோக்கி சுவாமீ தேவரீர் சொல்லிய சேதுவானது சமுத்திரசொரூபமா யிருக்கப்பட்ட புண்ணியதீர்த்தத்துக்கு தனுக்கோடி என்று பெயர் வந்தகாரணமியாது அதனைத்திருவாய் மலர்ந்தருள வேண்டுமெனக்கேட்க, சூதமுனிவர் சொல்லுவார் கேளுங்கள் மஹாருஷிகளே கோதண்ட மென்னும் வில்லைக் கரத்திலேந்தி யிலகாநின்ற ஸ்ரீராமமூர்த்தியானவர் பத்துசிரங்களையும் இருபதுகரங்களையுமுடைய இராவணனைச் சங்காரஞ்செய்து பன்னுதற்கரிய தசக்ரீவனென்னும் ராவணனாலே தரிக்கப்பட்டிருந்த கிரீடத்தை விபீஷணனுடைய சிரத்திற்றரித்து பட்டாபிஷேகஞ்செய்து இலங்கைக்கு அரசனாக்கிச் சமுத்திரத்திற் கட்டியிருக்குஞ் சேதுமார்க்கத்தில் சீதாதேவியோடுந் தனது தம்பியாகிய இலட்சுமணன் அனுமான், சுக்ரீவன்முதலிய வானவீரர்கள் யாவரும்புடைசூழ்ந் திறைஞ்சப் புட்பகவிமானத்திலேறிச் சந்திரசூரியரும் விலகிநிற்கும் படியாய் கருடகாந்தர்வசித்தவித்யாதரர்கள் போற்றச் சேதுவைக்கடந்து கந்தமாதனத்தி லிறங்கித் திருவிளையாடல் செய்ய வெண்ணி யிருக்கையில் ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதபத்மங்களை விபீஷணனானவன் பணிந்துகூறுவான் சுவாமீ வேதவேதாந்த மூர்த்தியே தேவரீரிப்போது இராவணாதி ராட்சதர்களைக் கண்டிக்கும்பொருட்டு வானராதி வீரர்களாற் செய்யப்பட்ட இச்சேதுவை இவ்வாறேயிருத்திச்சென்றால் இலங்கையில் உள்ள இராக்கதர்களியாவரும் இம்மார்க்கத்தில் எங்கும் போக்குவரவாயிருந்து உலகிலுள்ள ஜீவர்களை இம்சை செய்வார்களாதலால் இச்சேதுவாகிய அணையை பேதிக்கவேண்டுமென்றுசொல்ல, அப்போது ஸ்ரீராமமூர்த்தியானவர் அவ்வாய்மையைக்கேட்டு மெய்தானென்று சிந்

னித்து மனக்களிப்பினேடுந் தனதுகரத்தில் விளங்கும் கோதண் டமென்னும் வில்லினுலே நல்லசர்ப்பத்தை கருடன் தன் கால்ந கங்களினுற்ருக்கிக் கிழித்ததுபோலவும் முன்னர் இலங்கையில் இந்திரசித்துவினுல் விடப்பட்ட நாகபாசத்தை கருடபகவான் பொடிபடச் செய்ததுபோலவும் கிழித்துச் சேதுவாகிய திருவ ணையை உடைத்துப்போட்டார்.

அப்படி தநுவினுடைய கோடியினுல் உடைக்கப்பட்ட சே துவுக்கு தநுக்கோடியென்று ஓர்நாமம் விதிக்கபபட்டதென்று சூதமாமுனிவர் சொல்லிப் பின்னுங்கூறுவார். ஓ முனிவர்களே இந்தமகிமைபொருந்திய தநுக்கோடியைத் தரிசித்தபேர்கள் பி றவிச்சாகரத்துக் கரியவர்களாக விருப்பதோடும் அவர்கள் பெ றும்பேற்றை நம்மாற் சொல்லிமுடியாது மேலும் அத்தநுக்கோ டியி லிறந்தபேர்களுக்குப் பிறவிநோய் நீங்கிப் புண்ணியசரீரம் பெற்றுப் பொன்னுலகவாழ்க்கையை யடைந்து முடிவில் முத்தி வீட்டையும் பெறுவார்கள். இதன்றியும், அச்சேதுவிலே விர தாதிகள் தானதருமங்கள் முதலானவற்றை நடப்பித்துவைத்த புண்ணியர்கள் குறித்த அட்டயோகங்களும் அட்டசித்திகளும அட்டலட்சுமிகடாக்ஷங்களும் பெற்று மோட்சானந்தத்தையும் அநுபவிப்பார்கள் மேலும் ஸ்ரீராமமூர்த்தியானவர் தமது தநு க்கோடியினுற் கீறிக்காட்டிய குறிப்பானது பிரமலோகம் விஷ் ணுலோகம் சிவலோகமென்னும் மூன்றுலோகங்களுக்கு போகு மார்க்கமென் றறியுங்கள் உலகின்கண் ஆவலோடுஞ் செய்யப்ப ட்ட யாகாதி அக்கினிகோத்திரங்கள் தானதருமங்கள் மந்திரா திகள் விரதாதிகளிலே அநேககாலம் பழக்கஞ்செய்து அடையு ம் பலன்களையெல்லாம் மகாபாவிகளாயினும் இந்தத் தனுக்கோ டியானது பரிசம்பட்டால் ஓர் இமைப்போதிற் பெறுவார்கள் ஆ தலால் இதன்பெருமையை நாமென்ன சொல்லப் போகின்றேம் மேலும் கங்கை யமுனை சிந்து காவேரி கோதாவரி பம்மை சரஸ் வதி முதலிய நதிகளுக்கு நியமநிட்டையோடும் விரதத்தோடும் போய்வருவதற்கு எண்ணமுற்றவர்கள் இந்தத் தநுக்கோடியி லே ஓர்பொழுது தீர்த்தமாடிவிட்டால் அவைகளுக்குப் போக வேண்டியதில்லை அன்றியும் இஷ்டகாமியார்த்தங்களைத் தாத்த க்க இந்தத் தநுக்கோடியிலே மூழ்கினவர்களும் கண்ணினுற்க ண்டவர்களும், பின்னர் காசிக்குப்போய் இறக்கவேண்டுமென் கிற இச்சை கொள்ளவேண்டியதில்லை. இதல்லாமலும், உலகில்

வருங் கலிப்பிணியிற்சிக்கித் துன்பமடையுந் தரித்திரனானவன் இத்தனுக்கோடியிலே மூன்றுநாள் தீர்த்தமாடினால் அவனிடத்தில் அஷ்டலட்சுமிகள் வாசஞ்செய்வதோடும் அளகேசனை நிகர்த்தவனாயிருப்பான் யாதாமொருவன் அதில் வேதியர்களுக்குத் தன்னாலியன்ற மாத்திரந் தட்சணை தாம்பூலங்கொடுத்து மூழ்கத்திறமில்லாதவனாயினும் ஒருபோதேனுந் தன்கோரிக்கைகளை மனத்திலுத்தேசித்துக்கொண்டு அந்தராமதனுக்கோடியினால்மூழ்கினால் மறுபடியும் மூழ்குவதற்குள் அநேக பாக்கியங்களைப்பெற்று கோடிகோடி தானதருமங்களைச் செய்யுந் திறமுடையவனாய் விளங்குவான்.

ஆதலால் பன்னுதற்கரிய தனுக்கோடியிலே முப்பத்து முக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ருஷிகள் அஷ்டவசுக்கள் கருடகாந்தருவ சித்தவித்யாதராருரக ராகாயவாசிகள், போகபூமியர் நாட்கள் கோட்கள், கிவகணங்கள் புடைசூழும் படியாய்த் திரிமூர்த்திகளுந் தத்தந் தேவிமாரோடும் வாகனருடராய் விசயஞ்செய்து தனுக்கோடியிற் சேர்ந்து ரமணீயமாய் வீற்றிருந்து அச்சேதுவைப்பார்த்து கண்களித்திருப்பதால் அவ்விடஞ்சென்றயாவருந் திரும்பிவர மனமில்லாதவர்களாய் காசராதிகளை யசைக்காமலும் வாய்பேசாமலும் சித்திரப்பார்வை போற் பசிதாக முதலியவைகளும் எண்ணங்களுமற்று ஞானசொரூபத்தை யடைந்தவர்களுக் கொப்பாகிய பிரமானந்தகடலுட் டோய்ந்திருப்பார்கள் மேலும் உலகின்கண் ணுறைகுஞ் ஜீவர்களில் ஒருவருக்கொரு காசேனும் நல்காத உலுத்தனாயினும் அந்தத் தனுக்கோடியை தரிசிப்பானாயின் அவன்தனக்கு சத்ராதியானவன் தன்னையணுகி தன்னுயிரைத் தியாகமாய்க் கேட்டபோதினுங் கொடுக்கத்தக்கமனத்தினை யுண்டாக்குமாதலால் ஓ நைமிசாரண்யரே ஓதுதற்கரிய அதன்மகிமையை யாமென் சொல்லுவோம் மேலும் சகல ருஷீசுவரர்களுக்கும், தேவர்களுக்கும் முத்தியைத் தரத்தக்கதாயும், அணிமாவாதி அஷ்டாங்கயோகங்களையும், பரகாயபிரவேசங்களையும், இந்திராதி போகங்களையும், கேசாவதான வித்தைகளையெல்லாம் கொடுத்து அதனாற்சுகித்திருக்கின்றார்களே யன்றி வேறொரு விசேடத்தினால் அவர்களுக்குமகிமை கிடைத்ததல்ல, இவ்விராம தனுக்கோடியின்கரை

யிலே யாதாமொருவர் பிதுர்தர்ப்பணம் சிராத்தம் பிண்டமுத லியவைகள் கொடுப்பார்களாயின் அப்பிதுர்க்களுக்குயாதொரு சிந்தனையும் வேண்டியதில்லை மறுபடி மவனுலே வருடாந் தரங் களிற் கொடுக்கப்பட்ட பிண்டங்கள் அவர்களுக்கு மேலான க டைகக் காத்துக்கொண்டிருப்பதோடும் அதனுலே மோட்சசாம் பிராச்சியத்தை யடைந்து சின்மயானந்த சொரூபத்தைப் பெரு வார்கள்.

இவ்வாறு பெறுவதன்றியும் அக்குலத்தில் உண்டான இரு பத்தொருகோடி ஜென்மங்களிலுள்ள ஜனனமரண துக்கங்களு ம் இரவுராதாதி நரகங்களும் விட்டுநீங்கிப் புண்ணிய புருஷராய் அன்னவர் குலங்களியாவும் பவித்திர மடைந்து ஜன்மசாபல்ய மாய் மேலான புண்ணியலோகங்களையடைந்து எழுபத்தொரு கோடி சதுர்யுகம்வரையில் ஆனந்தாதி போகங்களைத் தடையற அநுபவித்துக் கொண்டிருந்து பேரின்பத்தைப் பெறுவார்கள் மேலும் அந்தத் தநுக்கோடிக்கரையிலே ஒருபிராமணனுக்கு ஒ ருவேளை அன்னங்கொடுத்தால் அப்படி கொடுத்தவனது சனன முதல் மரணபரியந்தம் பிரதிதினம் அன்னதானஞ் செய்துவந் தால் எவ்வளவுபலமோ அவ்வளவுபலனைப்பெற்று மேலான புண் யலோகத்தை யடைவான். இதன்றியும் அக்கரையில் னின்றும் வேதியர்களுக்கு யாதாமொருவன் பக்திவிநயத்தோடும் காய்கறி பதார்த்தங்களேனுங் கந்தமூலபலாதிகளேனுங் கொடுப்பானுயி ன், அவன்யாகாதி கிர்த்தியங்கள் செய்தபலனைப் பெறுவான். பி ன்னும் அதி ஆவலோடும் நல்லபுண்யகாலங்களிற் அச்சேதுவில் தீர்த்தமாடியவர்கள் அசுவமேதயாகம் பண்ணிய பலனைப்பெறு வார்கள் மேலும் அந்த தனுக்கோடியிலே மாசிமாத சங்கிரமத் தில் தீர்த்தமாடப் பெற்றவர்கள் பெறும் பலனைக் கூறுவதற்கு யான் பாத்திரனல்ல ஏனெனில் கும்பமதியி லோங்கும் புண்ணி யதிதி நட்சத்திரங்களிற் யாவரொருவர் அச்சேதுவின் தனுக் கோடியில் தீர்த்தமாடுகின்றார்களோ அவர்கள் பிராகை கங் கை முதலான தீர்த்தங்களாடின பலன்களை அடைவதோ டும் உன்னிய காரியங்க ளெல்லாங் கைகூடி சுவர்க்காதி போகங்களைப் பெறுவார்க ளென்று சுருதிவாக்கியப் பிர மாணங்களிலே சொல்லப்படு மாதலால் ஸ்ரீரகுநாதனுடை ய கரத்தில்விளங்குந் தனுவினுலே உண்டான தனுக்கோடியில் யாவரொருவர் கோபாவேசத்தோடுங் கூடியிருப்பவர்க ளாயி

னும், தீர்த்தமாடுவாராகில், நக்ஷத்திரலோகத்தை அடைவார்கள் அந்தத்தநுக்கோடியைக்கண்ணினாற்கண்டவர்கள் பிரம்மஹத்தி முதலிய பாதகங்களுக்குரியவர்களாயிருப்பினும் அதனைத்தரிசித்தபலனால் அப்பாதகங்களெல்லாம் அகன்று பரிசுத்தராவார்கள். இதன்றியும் சிவராத்திரி புண்யகாலத்தில் யாவரொருவர்நான்கு ஜாமமும்நித்திரைசெய்யாமல் விழித்திருந்து இந்திரியங்களையடக்கி இராகத் வேஷாதிகளின்றி ஸ்ரீராமசந்திரனாற் பூசிக்கப்பட்ட ஸ்ரீராமநாதனை அர்க்கியபாத்திய சோடசோப சாரங்களினாலே மனமகிழ்ச்சிசெய்து அருணோதயத்திலே அந்தத் தநுக்கோடியில் தீர்த்தமாடி தன்னுடைய நித்தியகருமங்களை விதிப்படிநடாத்தி மறுபடியும் ஸ்ரீராமநாதனுக்கு அபிஷேகாலங்கார நிவேதன முதலிய சோடசோபசாரங்களுஞ் செய்துதுதித்து அன்போடும் வணங்கிப் பணிந்து தன்னாலியன்றவளவில் அன்னதானம், கோதானம், பூதானம், சொர்னதானம், நெல், அரிசி, சர்க்கரை,கோதும்பை, திலம், நவதாந்யம், குடை, பாதரக்ஷை முதலானதும் நீர்மோர், விசிறி, சந்தனம், புட்பம் இவையாவும் திருப்தியடையும்படியாய்க் கொடுத்து பின்னர் தாம் பாரணைசெய்து அன்று பகற்போதும் நித்திரைசெய்யாமல் புண்ணியகதைகளைச் சிரவணித்துக்கொண்டிருந்து பொழுதுபோக்கிய பேர்களுடையபுண்ணியத்தையும் இன்பத்தையும் இராமநாதனே அறிந்துஞ் செய்துகொள்ள வேண்டுமேயன்றி இவ்வுலகின்கண் அவர்கள் பெருமையை வேறொருவராற் சொல்லிமுடியுமோ ஆதலால் இதுதன்மைபொருந்திய தநுக்கோடியில் என்ன வருத்தபபட்டாவது ஆத்மலாபம், வேண்டி மூழ்கியபேர்களுக்கு முத்திவீட்டைச்சித்தமாய்க்கொடுத்து சின்மயானந்த சொரூபமாக்கிவிடும்இதற்குச் சந்தேகமில்லை இதல்லாமலும் படைப்புக்குரிய பிரம்மதேவனும் பாலிப்புக்குரிய விஷ்ணுவுஞ் சங்காரத்திற்குரிய உருத்திரனும் சுருதி கர்த்தாக்களுஞ் சிரேஷ்டமாய் விதித்திருக்கும் வண்ணம் அர்த்தோதய மகோதய புண்ணிய காலங்களில் அழகு பொருந்திய அந்தத்தநுக்கோடியிலே தீர்த்தமாடினபேர்கள் மறுபடியும் பூமியில் தாய்வயிற்றினிடமாய் உதயமாகமாட்டார்கள்.

மேலும் வேதமந்திர விதிகளினாலே செய்யப்பட்ட யாகாதி பலன்களைக் கொடுப்பதன்றியும் சந்திர சூரியரை அரவந்தீண்டும்

காலமாகிய கிரணகாலங்களிலாவது ஆடிமாதம் சங்கிரம அமா வாசை பவுரணை காலங்களிலாவது தநுக்கோடியிலே மூழ்கின பேர்கள் அநேகபிரம்மஹத்தி செய்தவர்களாயினும் அவையாவும் விமோசனமாகி அவர்களடையும் பெருமையை இரண்டாயிரம் நாவைப்படைத்த ஆதிசேடனாலுஞ் சொல்லமுடியாததாய் விள ங்குவதோடும் அவர்களுக்கு ஆடையா பரணமுதலிய நவநிதிக ளும், இராஜபோகங்களும் உண்டாகி மேன்மை யுற்றிருப்பது மல்லாமல் நெடிய கடல்சூழ்ந்த பூமியிலுள்ள சகல தீர்த்தங்களு மாடிய புண்ணியபலன்கிடைக்கும இதற்குச் சந்தேகமில்லையாத லால் அன்னவர்கள் இப்புவின்க ணிருக்குமளவும் தம்மிஷ்டகா மியங்களை யநுபவித்து மறுமையிலே மோக்ஷசுகத்தையுஞ்சிர்த மாயநுபவிப்பார்கள், ஆதலால் இவ்வளவு மகிமை பொருந்திய சேதுவின் மத்தியிலோங்கும் கந்தமாதனகிரிச் சார்பிலே விளங் கிய இராமதநுக்கோடியிலே திரிமூர்த்திகளும் வாசஞ்செய்து கொண்டிருப்பார்களாயின் யாம் என்னசொலலுவோம்.

இந்தத் தநுக்கோடியிலே சாக்ஷாத்து ஈசுவர சொரூபமா கிய அசுவத்தாமா தீர்த்தமாடி வஞ்சனையாய் பஞ்சசிசுக்களைவத ஞ்செய்த பாபத்தைப் போக்கிக்கொண்டாரென்று சூதமகாமுனி வர்சொல்ல, அவ்வாய்மையைக்கேட்ட நைமிசாரண்ய ருஷிகள் முனிவரைப்பணிந்து சுவாமீ! அசுவத்தாமாவானவர் சிசுக்களை வதஞ்செய்பக் காரணமியாதோ அதனைத்திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்றுகேட்கச் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

## தநுக்கோடிதீர்த்தம்.

முற்றிற்று.

# அசுவத்தாமாச்சரித்திரம்.

கேளுங்கள்நைமிசாரண்ய வாசிகளாகியமுனிவர்களே! நெடியகடல்சூழ்ந்த இவ்வுலகில் மறைவிதியிற்கூறுஞ்சதுர்யுகங்களில் மூன்றாவது யுகமாகிய துவாபரயுகத்தில், சோமசூரியாக்கினி என்னுமுக்குலவேந்தருள் சந்திரகுல சிகாமணியாய்விளங்கும் பாண்டுமகாராஜன்புத்திரர்களாகிய பாண்டவர்களும், அவர்கள் தாயாதிகளாகிய துரியோதனாதிகளும் இராச்சியபாரத்தைக்குறித்து ஒருவருக்கொருவர் துவேஷமாய் பாரதயுத்தத்திற் காரம்பஞ்செய்திருந்திறத்தாரும் அநேகசேனா சயின்யங்களோடுகூடிக்குருக்ஷேத்திரத்தில் அமர்விளைத்தபோது அவ்வமரில்பத்தாநாட்சண்டையிலே பீஷ்மரும் பதினோந்தாநாட் சண்டையிலே துரோணரும் பதினேழாநாட்சண்டையிலே கர்னமகாராஜனு மடிந்த பிறகுபதினெட்டாநாள்சல்லியன்முதலியரதகஜதுரகபதாதிகளெல்லாமடிந்து துரியோதனனுடனே வீமசேனனெனவன் மற்போர்செய்யப் புகுந்து துரியோதனனுடைய தொடை முறியும்படியாய்க் கதையினலடித்துக்களத்தில் வீழும்படிசெய்து பாண்டவர்கள் தமது சேனைசயின்னியங்களுடனே பாடி விடுபோய்ச்சேர்ந்திருக்கையில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் சாத்தகியுடனேபஞ்சபாண்டவர்களை யழைத்துக்கொண்டு ஓர்வனத்தைநோக்கிப்போகையில் அவ்வனமெல்லாம் ஸ்ரீகிருஷ்ணபகவான் வருவதையறிந்துதளிர்த்தும், பூத்தும்,காய்த்தும், மகாசிங்காரத்தோடும்விளங்கவும் அவ்வனத்தில் வாசஞ்செய்யப்பட்ட பறவைசாதிகள் முதலியயாவும்தொழுதுநிற்கும்படியாய்க் கண்ணனாகியஸ்ரீகிருஷ்ணபகவான் சாத்தகி முதலியவர்களோடும் வேடிக்கை யார்த்தமாய் வனவேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கையில்: துரியோதனாதியரைச் சார்ந்த கிருபர், கிருதவன்மா, அசுவத்தாமா இம்மூவருங் கவுரவாதிகளது போர்க்களத்திலே தப்பியிருக்கின்றவராதலால் அவர்கள் அன்றிராத்திரிவேளையிற் கடுஞ்சினத்தோடும் அமர்க்களத்தில் தொடைமுறிந்து குற்றுயிரோடு கிடக்குந் துரியோதனனைக்கண்டு சகிக்கப்படாததுன்பங்கொண்டுநிற்கும்போது அரவுக்கொடியோனாகிய துரியன் அவர்களைக்கண்டு, தாயைக்கண்ட

சேய்போற்பாதவித்துக் கண்ணீராறும் பெருகும்படியாய்க்கதறி அசுவத்தாமாவைப்பார்த்து ஐயா ஆசிரியர் புத்திரராகிய அசுவத்தாமரே! என்செய்வேன் பிராணவேதனைக்குஆளானேனென்று கண்ணிருகுத்துச் சொல்லியதைக்கேட்ட அசுவத்தாமா மனம் பதைத்து துரியோதனனைநோக்கி ஐயாவேந்தே பாண்டவர்கள் வஞ்சகமாய் உமது உயிர்நிலையைக் கேட்டறிந்து இவ்வாறு உமக்குத்துன்பத்தைக் கொடுத்தமையால் இப்போதேனும் நீரெனக்குச்சேனாதிபதிபட்டங் கொடுத்தால் இக்கணத்திற்றானே பாண்டவர்களைந்துபேரையும் அவர்களுடைய இரதகஜ துரகபதாதிகளையும் பரிதி முன் பனிபோல் நாசப்படுத்தி வருவேன்.

அப்படியான் முடிக்காவிடில் யான்செய்த புண்ணியமனைத்தும் இழந்துவிடக் கடவேனென்றுகூறிய உறுதிவார்த்தையைக் கேட்ட அரவகேதனன் வஞ்சகத்தை யகற்றாதவனாய், கிருபாச்சாரியரைப்பார்த்து. ஐயா! நீரிந்தகுருகுமாரருக்குப்பட்டங்கட்டுமென்றுசொல்ல, அவரும் அதுபோல் நடத்த, பின்பு அசுவத்தாமா துரியவனிடம்விடைபெற்று, கிருபாச்சாரி கிருதவன்மா, அசுவத்தாமா இம்மூவரும் பாண்டவர்களிருக்கும் பாடிவீடுநோக்கி அருகேவருகிறபோது, அங்ஙனங் காவலாகவிருந்த சண்டகோவென்கிற பூதமானது வருபவர்களைக்கண்டு, ஆக்ரமித்துகோடைக்காலத்திடிபோல கர்ச்சித்து அண்டங்களெல்லாம்நடுங்கத் தக்கதாய்ஆரடாவருகிறவனென்று அதட்டியெழுந்தபோது அவ்வோசையைக்கேட்ட அசுவத்தாமாமுதலிய மூவரும், நடுநடுங்கி பயந்து நாவறண்டு மெய்சோர்ந்து யாதுக் தோற்றாதவர்களாய் அவணின்றும் ஓட்டமுநடையுமாயோடிவந்து ஓரிடத்திலிருந்துகொண்டு அசுவத்தாமரானவர் ஐயோ நாம்வீணே அரவக்கொடியோனிடத்தில்வீரவார்த்தைபேசிவந்தோமே என்செய்வோமென்றுபலவாறாகச்சிந்தித்து அவ்வனத்தைநோக்கி வருகிறபோது அவ்விடத்தில் ஓர்பூஞ்சோலையைக்கண்டு, அப்பூஞ்சோலையில் போய்ச்சேர்ந்து அங்குள்ள தடாகத்தில் மூவருந்தமதுகரசரணாதிகட்சுத்திசெய்து சந்தியாவந்தன முதலியவைகளை முடித்து நாவறட்சிதீரும்படியாய்த் தண்ணீரருந்தி அக்குளக்கரையிலிருக்கும் மோர் ஆலவிருட்சத்தடியிற்சேர்ந்து இருக்கிறபோதுபகற்காலங்களிற் சஞ்சரியாநின்றகாக்கைகள் யாவும் இரவுவந்தபோது அம்மரத்திற்றங்கியிருந்தமையால் அதுகண்ட அவைகளின் வைரிகளாகியகூகைகள் திரளாகக்கூடிநமது பகைவரைமுடிப்பதற்கு இது

தான்சமயமென்று அம்மரத்தைவந்து சுற்றிக்கொண்டு அதிலு ள்ளகாகங்களைக்கொத்திச் சின்னபின்னப்படுத்துகையில், அக் காகங்கள் இரவுகாலங்களிற் கண்தெரியாதிருக்குஞ் ஜெந்துக்க ளாதலால் பறந்து ஓடிப்போவதற்குஞ் சக்தியில்லாதவைகளாய் அக்கூகைகளினுற் சிரங்களறுந்துஞ் செட்டைகள் முறிந்தும் உ டற்பீறுண்டும் கால்கள் தரிந்துங் காலகதியைச்சிந்தித்தவைகளா ய்கதறி நிலத்தில்வீழ்கையில். அக்கொடுஞ் செய்கைகளைக்கண்டி ருந்த குருபுத்திரராகிய அசுவத்தாமாமுதலிய மூவரும் திக்பிர மைகொண்டு வெகுநேரம்வரையில் விழித்திருந்து நித்திரைவந் தமையினுற் கிருபாச்சாரியருங் கிருதவன்மாவுஞ் சற்றேகண்ணு றக்கங்கொண்டபோது, மரத்தின்மீதிருந்து விழும்படியாகியகா க்கைகளினது செட்டைகளையுஞ் சிரங்களையுங்கண்ட அசுவத் தாமா தனது மனத்திலோரெண்ணங்கொண்டு நித்திரைசெய்பவ ர்களை யெழுப்பிக்கூறுவார்.

ஐயா கிருபாச்சாரியரே! பார்த்தீரா, இக்கூகைகள் தங்களு க்கு வைரிகளாயிருக்குங் காக்கைகளை இராக்காலங்களில் வந்து வளைந்துச் சின்னபின்னமாய் எப்படிச்சங்காரஞ் செய்துவிட்ட தோ அதுபோல நாமும் நமது பகைவராகிய பாண்டவர்களது பாடிவீட்டில் இவ்விருட்டுவேளையிற்றானே பிரவேசித்துச் சகல ரையுங்கொன்று நிர்மூலப்படுத்திவருவோம் வாருங்களென்று அ ழைக்கையில், அதுகண்ட கிருபாச்சாரியரும், கிருதவன்மாவும் அசுவத்தாமாவைப்பார்த்துக்கூறுவார்கள், வாருமையா அசுவத் தாமரே தருமமேஜயமென்று படுத்து நித்திரைசெய்வோர்களை வஞ்சித்துக்கொல்லுகிறது தருமமல்லவே, சுத்தவீரராயுள்ளவர் கள் தங்களுடைய எதிரிகள் சயின்யத்தோடு மிருக்கையில்எதிர் த்துயுத்தஞ்செய்து வெற்றிபெறுவார்களேயன்றி நித்திரைவே ளையிற் கபடமாய் கொல்லமாட்டார்களே ஆதலால் நீர்சொல்லு கிறதுசரியல்லவென்றுசொல்ல, அதற்குக்குருபுத்திரர்கூறுவார். வாருங்கள் ரதிகாளே, நீங்கள் சொல்லுங்காரியம் நன்றாயிருக் கின்றது, பாண்டவர்கள் குருக்ஷேத்திரமாகிய யுத்தபூமியில் அ மர்புரிந்ததெல்லாம் ஞாயப்படிதானேபுரிந்தார்கள், அவர்கள்செ ய்ததெல்லாஞ்சூதென்றுதெரிந்திருந்தும் இப்படிச்சொல்லுவது சரியோ மேலும் எனதுதந்தையாகிய துரோணாச்சாரியாரை பா ண்டவர்கள் கபடமாய் நான் ஜீவித்திருக்கையிற்றானே யுத்தகள

த்திலிறந்தபோனானென்று தருமருடைய வாக்கினாலே சொல்லு
ம்படிக் கற்பனையேற்படுத்தி அவனைப்புத்ரசோகத்தால் மயங்கி
வில்லையெறிந்து நிராயுதராய் நிற்கும்போது அஸ்திரப்பிரயோக
ஞ்செய்யச்செய்து கொன்றுபோட்டது தருமந்தானோசொல்லு
ங்கள், இதல்லாமலும் பீஷ்மாச்சாரியரைப் பத்தாநாட்சண்டை
யிலே பாட்டனென்றுங் குருவென்றும்பாராமல் அர்ச்சுனன்மு
தலியயாவருமெதிர்த்து வளைத்துக்கொண்டுசிகண்டியினாலேகொ
ல்லும்படியாய்ச்செய்வித்ததும் ஞாயந்தானோ, பதினோலாநாட்ச
ண்டையிலே சயிந்தவனைக் கொல்லவேண்டி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி
யானவர் அஸ்தமனமாகும்போதுபோற் றோன்றுமித்தந்தனது
திகிரியைவிடுத்து மறைத்துவெளிப்படும் படியாய்ச்செய்து வில்
லெடுக்காம னிராயுதனையிநின்றவனை அர்ச்சுனனால் அஸ்திரப்பிர
யோகஞ்செய்யச்செய்து கொல்லுவித்ததும் ஞாயந்தானோ சொ
ல்லுங்கள் இவைகளும்போதாமல் நம்மிறைவனாகிய துரியோதன
னை ஏகாங்கியாகவிருக்கின்றானென்றும் யோசியாமல் கபடமாய்
ஸ்ரீகிருஷ்ணபகவானால் அவனுடைய உயிர்நிலையை சயிக்னைசெ
ய்துகாட்டக்கண்டு வீமனானவன் தொடையிரண்டும்முறியும்படி
யாய் அடித்துக்கிடத்திவிட்டது என்னஞாயம் ஆதலால்இக்கா
ரியங்களையெல்லாஞ் செவ்வையாயோசித்துப்பாராமல்கூறியவித
மெப்படியிருக்கின்றதென்று அசுவத்தாமாகேட்க, அதற்குக்கி
ருபாசாரியர்சொல்லுவார் ஐயா அசுவத்தாமரே! நீர்சொன்னகா
ரியங்களெல்லாம் உண்மையாயிருந்தபோதிலும், அவைகளெல்
லாம் ரணரங்கபூமியில் எதிரியின்முன்பாக நடத்திய காரியங்க
ளேயன்றி ஒன்றாவது எதிரிகளுக்குத்தெரியாதல் அவர்கள் நட
த்தவில்லையே நீர் இராக்காலத்திலே பாசறையிற்படுத்து நித்தி
ரைசெய்கின்றவர்களைக் கபடமாகக் கூகைகள் காக்கைகளை வஞ்
சித்து நாசப்படுத்தியதுபோல நடத்தவேண்டுமென்று எண்ணங்
கொள்ளுவது நன்மையல்லவே, அப்பால் உம்முடைய இஷ்டமெ
ன்று கிருபாச்சாரியர் சொல்லியதைக்கேட்ட அசுவத்தாமாகோ
பாவேசங்கொண்டவனாய் எழுந்திருந்து அங்குள்ளபொய்கையி
ல் ஸ்நானஞ்செய்துநியமநிஷ்டைகளைமுடித்துக்கொண்டு ஸ்ரீகை
லாசபதியாகிய உமாமகேசனைநோக்கித் தியானஞ்செய்து மிருத்
தியுஞ் ஜபமந்திரத்தை ஜெபிக்கையில், சந்திரஜடாதர மூர்த்தி
யினருளால் ஓ மந்திரவாள் ஆகாசவீதியிலிருந்திறங்கி அசுவத்
தாமாவினது கண்முன்தோன்ற, உடனே அவ்வாளைக்கரத்திலே

ந்திக்கொண்டவராய் பாண்டவரிருக்கும் பாசறையைநோக்கிநட க்கையில் கிருதவன்மனும் கிருபாசாரியரும் கண்டெழுந்திருந்து பின்தொடரும்போது அசுவத்தாமர் பாடிவீட்டின் வாயிலிற் போய்நின்று கிருதவன்மாவையும் கிருபாச்சாரியரையும் அவ்வா யிலிற்றானே நிறுத்திவிட்டு தனது கரத்திலொளிராநின்ற மந்திர வாளை வீசும்போது அப்பாடிவீட்டைக் காத்திருந்தபூதமானது கண்டு திடுக்கிட்டு அம்மந்திரவாளினுடைய வலிமையை யறிந்து மெய்நடுங்கிப்பயந்து ஓடிப்போய்விட்டது.

அதுகண்ட அசுவத்தாமர் பாசறைக்குட் பிரவேசித்து பா ண்டவர்களை நான்குபுறமும்பார்த்துத் தேடும்போது துஷ்டத் துய்மனும் பாஞ்சாலதேசத்தரசனும் படைவீரரும் நித்திரைசெ ய்திருக்க அவர்களைக்கண்ட அசுவத்தாமர் பாஞ்சாலதேசத்தர சனைக்காலினலெட்டியுதைத்தான் அப்படியுதைத்தவுடனே நித் திரையிலிருக்கும் பாஞ்சாலத்திறைவனுகிய துருபதராஜன் திடுக் கென்றலறியெழுந்து குருபுத்திரனைக்கண்டு ஆயுதத்தப்பமுன்ன மே அவனுடைய சிகையைப்பற்றியிழுத்து பூமியிற்றள்ளிதன்னி ண்டுகால்களினலும புரட்டிப்புரட்டியுதைதது தரையோடு த ரையாய்த்தேய்த்துவிடுகையில் அவனுககருகேபடுதது நித்திரை செய்துகொண்டிருந்த துஷ்டத்துய்மன் விழித்துத்தலையைத்தூ க்கிப்பார்த்துக் கிளம்பும்போது அசுவத்தாமா தனது கரத்தினி டமாயிருந்த வில்நாணை அவன்கழுத்தில்மாட்டி இறுக்கி துஷ்ட த்துய்மனை விழிபிதுங்குமபடியாய்ச்செய்து ஒள்ளியவாளினலே அவன்தலையை யறுத்தெறிந்து அட்டகாசஞ்செய்தவனுய்ப் பின் னும் அப்படைவீட்டுக்குப் பிரவேசிதது நித்திரைசெயது கொ ண்டிருக்கும் ரதிகரையெல்லாம் படுத்தபடுக்கையிற்றானே வாளி னல்தலைவேறு உடல்வேறுசெய்து பின்பு பாஞ்சாலியின் புத்திர ராகிய உதாமன்னியன் முதல் ஐவர்களையும் பாண்டவர்களென் றுநினைத்து மந்திரவாளினலே அவர்கள் தலையையறுத்து ஐந்து தலைகளையும் கையினற் றூக்கிப்பார்க்கிறபோது பாஞ்சாலியினி டம் ஐவருக்கும்பிறந்த பிள்ளைகள் வேற்றுமையில்லாமல் பாண் டவர்களைப்போலவே உருவமும் நிறமுமபொருந்தி யிருந்ததனு ல அசுவத்தாமருக்கு வேற்றுமைதோற்றுமல் பாண்டவர்களெ ன்றேநினைத்து இத்தலைகளைக்கொண்டுபோய் துரியனுக்குக்காட் டவேண்டுமென்று எண்ணங்கொண்டவனுய் அப்பாசறையைவி

ட்டு நீங்கிவருகையில் அசுவத்தாமராற் கலகப்பட்டுப்பயந்து ஓடி வருகின்ற படைகளை யெல்லாம் வாயில்காத்துக்கொண்டிருக்குங் கிருதவன்மனுங் கிருபாச்சாரியருங் கண்டுபிடித்துச் சிரங்களை உடைவாளினால்வெட்டியுருட்டிச் சர்வசங்காரமூர்த்தியைப்போற்சந்தோஷங்கொண்டிருக்க அவர்களுடனே அசுவத்தாமருங்கலந்து மூவருமாய் துரியோதனன் வீழ்ந்திருக்கும் யுத்தபூமியை நோக்கி நடக்கிறபோது நாம் நல்லகாரியம்யோசித்தோம் பாண்டவர்பூண்டு இன்றோடே அற்றதென்று மனக்களிப்போடும் பேசிப் படுகளத்தைச்சேர்ந்து அரவக்கொடியோனாகிய துரியோதனன் முன்னிலையில் அசுவத்தாமரானவர்உபபாண்டவர்களாகிய ஐவரது தலையையும்வைத்து ஐயா துரியோதன மகாராஜனே நான்சொல்லியவண்ணம் பகைமைமுடித்து இதோ ஐவருடையசிரங்களையுங்கொண்டுவந்தேன் பாருமென்றுசொல்ல அவ்வாய்மையைக்கேட்ட அரவக்கொடியோன் மனமகிழ்ச்சி யடைந்தவனாய் இராப்போதைப்போக்கி அருணோதயமானவுடனே மிக அபேட்சையோடும் ஐவர்சிரத்தையும் பார்க்கிறபோது உப பாண்டவாளென்றறிந்து அடாபாவிகாள் அந்தோ எள்ளுந்தண்ணியுமிறைப்பதற்குங்கூடப் பிள்ளைகளில்லாமற் செய்துவிட்டீர்களேயென்று மகாவிசனத்தோடே துரியோதனனானவன் மரணத்தையடைந்தான். அவ்வேதனையைக்கண்ட அசுவத்தாமர், கிருபாச்சாரியர் கிருதவன்மா இம்மூவரும் நாம் பட்டபாடெல்லாம் பாழாகிவிட்டதேயென்று பெருந்துன்பத்தை யடைந்தவர்களாய் வனத்தை நோக்கித்தவத்துக்குப்போய்விட்டார்கள் அப்படிப்போனவர்களில் அசுவத்தாமாவானவர் சிசுவதைபண்ணியிருப்பதனாலேமனதிலேபிரமையடைந்து துக்கசாகரத்துள்மூழ்கிதண்டகாரண்யத்திற்போகிறபோது அவ்வனத்திலே தவஞ்செய்துகொண்டிருந்த பெரியோர்கள் அசுவத்தாமாவைக்கண்டு அடாபாவி நீ சிசுவதை செய்த சண்டாளனாதலால் எங்கள்முகத்தில் விழிக்கவுங்கூடாதே தூரப்போவென்றுசொல்ல, அதுகேட்ட அசுவத்தாமர் அச்சமூற்று அவணின்றுநீங்கிக் காசிப்பட்டணத்தைச்சேர்ந்து அப்பட்டணத்துவீதியில் வருகிறபோது அங்குள்ள பெரியோர்பிராம்மணாளியாவரும் அசுவத்தாமாவைக்கண்டு அடாசண்டாளா உனக்கெதிர்ப்பட்ட நாங்கள் பாகீரதியில்மூழ்கித் தவஞ்செய்து இக்கொடும்பாவத்தைத் தொலைக்கவேண்டுமேயென்று பாதவித்துக் கங்கைக்குப்போய் மூழ்குவதையெல்லாம் அசுவத்தாமர்

கண்டு சகிக்கப்படாத துன்பத்தையடைந்தவராய் அப்பட்டண த்தில்வாசஞ்செய்து அதன்மருங்குள்ள வனத்திற் பன்னசாலை புதுக்கி அதில்வாசமாயிருக்கும்வியாசமஹாருஷியைக்கண்டுவண ங்கித்துதிக்கையில், வேதவியாசா அசுவத்தாமரைப்பார்த்துக்கூ றுவார், ஓ அசுவத்தாமனே! நீஇங்குவருவதற்குக்காரணமியாது அந்தோ இராக்காலத்திற் பாண்டவர்களில்லாத பாசறையில்நித் திரைசெய்துக்கொண்டிருந்த ரதிகரையெல்லாம் அநீதமாய்க் கொன்றதுமன்றியில் உபபாண்டவர்களாகியசிசுக்களையும்யோசி யாமற்கொன்றபாவியாதலால் உன்னோடுவார்த்தைபாடினாலும்,உ ன்னைக்கண்டாலும் அந்தத்தோஷமானது நம்போலியர்களுக்குஞ் சி த்தமாய்க்கிடைக்குமாதலால் நீ நமது ஆசிரமத்தைவிட்டு அகல ப்போவாயென்று கடுஞ்சினத்தோடுங் கூறியதைக்கேட்ட அசு வத்தாமர் மனந்திடுக்கிட்டுப்பயந்து உடம்பெல்லாம்வியர்த்து ஒ ன்றுந்தோற்றாதவராய் வேதவியாசரைப்பாாத்துச்சொல்லுவார், சுவாமீ! கொடும்பாவியாகிய யான் தேவரீருடைய ஆசிரமத்தை நாடிச் சரணாகதியடைந்தும் அங்கீகரியாமற் றள்ளிவிடின் என் னைக்கண்ட யாவரும்நிந்திப்பார்களே, பிறகுயானடையுங்கதியா து மேலும் தேவரீர் என்னை நீக்கிவிடுங்காலத்தில் சகலநீதிகளும் நீங்கிப்போம், பசுக்கள் தத்தம்கன்றுகளைத்தேடா, சமுத்திரமு ங்கட்டுக்குட்படாது, பறவைச்சாதிகளும் ஆகாயத்திற்சஞ்சரியா தே ஆனதால் சகலரும் நிந்திக்கும்படியாகிய இழிவைததராநின் றனைதுவினையைப்போக்கி ஆட்கொள்ளாமல் தேவரீரே இங்ஙன னம்கோபித்தால் பாதகனாகிய யான் என்செய்வேன், எவ்வாறு ய்வேனென்று யாதொரு பற்றுமில்லாதவனாய் அநேகவிதத்திற் றோத்திரஞ்செய்யும்போது வேதவியாசர்கருணைகூர்ந்துகூறுவார் வாரும் அசுவத்தாமரே! நீர்பிரம்மகுலத்திற்பிறந்தும் க்ஷத்திரிய தர்மவிர்த்தியிற் பிறவேசமாய் மநுநீதிபுரண்டுயோசியாமல்படை முகத்தையறியாத பாலர்களைப் பாண்டவர்களென்று எண்ணிப் பொறுமையின்றிச்செய்த சிசுஹத்தியானது உன்னைவிட்டுநீங்கமா ட்டாதாயினும், நிம்மைவணங்கி யாதுங்கதியில்லையென்று கூறி யதனாலே நாம் அருள்செய்யலாயிற்று, யாதெனில், நெடியகடல் சூழ்ந்த இவ்வுலகின்கண் ஓங்கும் பரதகண்ட தட்சிணபாகத்தில் கந்தமாதனகிரிச்சாரலில் சேதுரூபமாய் ராமதநுக்கோடி என்னு ம்பெயர் பூண்டிலங்குந் தீர்த்தத்தில் யாரொருவர் தீர்த்தமாடுகி ன்றார்களோ அவர்களை பூவுலகமெல்லாந் துதிக்கும்படியாகியதீ

ர்த்தியமைவதோடும் கொடும்பாதகங்களெல்லாம்விலகி மெத்த வும் புண்ணியசாலிகளாய்ச்செய்வதுமன்றியில் இராஜஙிதியாலு ற்ற துன்பங்களேயும் அஞ்ஞானத்தையும்போக்கி மனதைச்சொ ர்க்காதிபுண்ணியலோகத்தை அடையும் ஹேதுயாதோ அவற்றிற் சேர்த்து ஆனந்தத்தையும் சுயம்பிரகாசத்தை யறியும்படியான விவேகத்தையும் தேவர்கள் புகழும்படியான மேன்மையையும், சாந்திமுதலிய தவநெறியையுங்காட்டி மறுமாந்தாதிகளிறந்தா லும் இறவாமலிருக்கும்படியாகிய சிரஞ்சீவி பட்டத்தைக்கொடு த்து வெற்றியைப் பொருந்தச்செய்து மாதலால் அதன் மகிமை யை ஒருவராலுஞ் சொல்லமுடியாது.

அதெப்படியெனில், வாசாமகோசரமான சுயஞ்சொரூபமா ய் விளங்கிக்கொண்டிருப்பதால் யாவருக்கும் அரிதேயாம் ஆன படியினலே நீ அந்த ராமதநுக்கோடியிலே ஒருமாதகாலம்வரை யிற்போயிருந்து அதில் தீர்த்தமாடிவந்தால் நித்திரையிற் சிசுஹ த்திசெய்ததோஷம் உன்னைவிட்டு நீங்குமென்று வேதவியாசமக ரிஷியானவர்சொல்ல, அவ்வாய்மையைக்கேட்ட அசுவத்தாமர் சந்தோஷமடைந்து வேதவியாசரைவணங்கி விடைபெற்று அவ் விடமிருந்து நீங்கித் தென்றிசையைநோக்கிநடந்து சேதுவைச் சேர்ந்துதரிசித்து வியாசபகவான் கூறியவண்ணம் முப்பதுநாள் வரையில் தநுக்கோடியிற் சங்கற்பவிதியின்படி நியமநிட்டை யோடுந் தீர்த்தமாடி, ஸ்ரீராமச்சந்திரனுலே பூசித்து வணங்கப்ப ட்ட இராமலிங்கத்தை முப்பதுநாளுந் திரிகாலமும் பூசித்துவ ணங்கித்தோத்திரஞ்செய்து தனது இருகண்களினின்றும் ஆன ந்தபாஷபந் தாரைதாரையாய்ச்சிந்த உருகிக்கரைந்து சிவபெரு மானைப்பணிந்துநிற்கும்போது சிவபெருமானுகிய இராமநாதன் கருணைகூர்ந்து முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண் ணாயிரம்ரிஷிகள் சப்தரிஷிகள் அஷ்டவசுக்கள் கருடகாந்தருவ சித்தவித்யாதர ருரகாரகாயவாசிகள் போகபூமியர் நந்திதேவர் பிருங்கிமுதலிய சிவகணங்களெல்லாம் புடைசூழும்படியாய் உ மாமகேஸ்வரியோடும் வெள்விடையின்மீ தெழுந்தருளிக் ககனத் தின்கண் அசுவத்தாமாவுக்கு தரிசனமாகும்படியாய் ஆகாயவீ தியிலேஙிற்கிறபோது அசுவத்தாமர்கண்டு, பிரமாணந்தங்கொண் டு ஆனந்தகடலுட்டோய்ந்தவராய் உரைகுளறி, உடலம்வியர்க் கவும், மயிர்க்குச்செறியவும் சிரத்தின்மேற்றனதிருகரங்களையுஞ்

கூப்பித்தோத்திரஞ்செய்கையில் சந்திரஜடாதர மூர்த்தியாகிய பரமசிவன் திருவுளங்கனிந்து வாராய் அசுவத்தாமனே, நீ இராக்காலத்தில் நித்திரைசெய்துகொண்டிருந்த சிசுக்களை யோசியாமல் வதஞ்செய்த தோஷமானது இந்தராமதநுக்கோடியில்வியாசன் வாக்கியப்படிவந்து தீர்த்தமாடி நம்மைப் பூசித்துவந்தமையாற் பரிதிமுன் பனிபோலவிலகிப்போய்விட்டது இனி உன்னிடத்தில் யாதொரு பாதகமுமில்லை யாதலால், உனக்குவேண்டிய வரமியாதோ அதனைக்கேளென்றுசொல்ல, அப்போது அசுவத்தாமரும், சுவாமி, வேதவேதாந்தமூர்த்தியே அடியேன் தேவரீருடைய பாதபத்மங்களை எப்போது தரிசித்தேனோ அப்போதே எனது கருமங்களெல்லாம் விமோசனமானதன்றியில் சகலபாக்கியங்களையும் புண்ணியங்களையும்பெற்றுமுத்தியுங்கைகூடியதாயினும், சிறியேன் இனி இறவாமலுஞ்ஜெனனமெடாமலும் என்றுஞ் சிரஞ்சீவியாக இருக்கும்படியாயும் இடைவிடாமல் தேவரீருடைய பாதகமலங்களைப் பணிந்துகொண்டிருக்கும் படியாயும் அருள்செய்யவேண்டுமென்று அசுவத்தாமாகேட்க, அவ்வாறே சிவபெருமான் கட்டளையிட்டுக் கைலாசத்துக்கெழுந்தருளினார். அதுகண்ட அசுவத்தாமாபணிந்து அவ்விடம்விட்டுப்பிரயாணப்பட்டுச் சகல புண்ணியக்ஷேத்திரங்களையுந் தலங்களையுந் தரிசித்துக்கொண்டு வருகிறவழியில் அநேகம்பெரியோர்கள் பிராமணர்கள் யாவருங்கண்டுவணங்கி உபசரிக்க, அசுவத்தாமாவானவர் அநேக ருஷியாச்சிரமங்களுக்குச்சென்று அவர்களது ஆசிகளைப்பெற்று சுகசீவியாய் வாழ்ந்திருந்தாரென்று சூதமுனிவர்சொல்ல நைமிசாரண்யமுனிவர்கள் சந்தோஷமடைந்து முனிவரைநோக்கி சுவாமீ, இன்னும் அந்தத்தநுக்கோடியில் யாரார்வந்துதீர்த்தமாடிமுத்திபெற்றனரோ அவர்களைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுகேட்க, சூதமுனிவர் சந்தோஷங்கொண்டுசொல்லத்தொடங்கினார்.

அசுவத்தாமாசரித்திரம்

முற்றிற்று.

---

# தருமகுத்தச் சரித்திரம்.



கேளுங்கள் முனிவர்களே, நெடியகடல்சூழ்ந்த இவ்வுலகின்கண் ஓங்கும் முக்குலத்தரசருள் சந்திரகுலத்திலுற்பவித்த தருமகுத்தனென்று பெயர்வாய்ந்த ஓரரசன் நீதிவழுவாமற் குடிகளிடத்தில் ஆறிலோர்கடமைபெற்று மாதமும்மாரிபெய்துவரவும் மன்னர்கள்வணங்கிக் கப்பங்கட்டிவரவும், சிவாலய விஷ்ணுவாலயங்களுக்கு ஆறுகாலபூசைகளும், பிரம்மோற்சவ நித்யோற்சவங்களுங் குறையின்றி நடந்துவரவும்,யாகாதிகிர்த்தியங்கள்செய்து சதாகாலமும் தேவர்களுக்கவிர்ப்பாகங் கொடுத்துவரவும், மறைவிதியிற்புகலும் முப்பத்திரண்டறங்களையுங் குறைவின்றி நடாத்தி இரதகஜதுரகபதாதிகள் சூழும்படியாய் ஒன்றுக்கிளையாது, உக்கிரவீர கேசரியைப்போல அசையாமணிகட்டி அதியூகிகளாகிய மந்திரிகளோடும், ஏகசக்ராதிபதியாய் தனதுதேசத்தில் துற்செய்கைகளைக்கனவிலுங்கருதாமலிருக்கும்படியாய் அரசுபுரிந்து வரும்நாளில் ஓர்நாள் வனவேட்டையாடக் கருதி வேட்டையாடுங்கோலம்பூண்டு, குதிரையின்மீதேறிப் பதியைக் கடந்து வனத்தைநோக்கி வருகிறபோது, அவ்வனமானது சண்பகம், மந்தாரம், கோங்கு, புன்னை, தேவதாரி, பாரிஜாதம், அகில், சந்தனம், கூவிளம், ஆத்தி, பலா முதலிய விருட்சங்களாற் செறிந்து படர்ந்து தளிர்த்தும் பூத்தும் காய்த்தும் பழுத்தும் அவற்றினின்றும் பெருகி அருவிபோற் பாயாநின்ற தேன்களை வண்டுகள் அருந்தி, ரீங்காரஞ்செய்யவும், பட்சிகள் களகளவென்று சப்தித்துச் சந்தோஷமடைந்துலாவும் மான், மரை, கலை, கவரி, பன்றி, முட்பன்றி, கடம்பை, கரடி, புலி, செந்நாய், காட்டெருமை, யானை, சிங்கமுதலிய விலங்கினங்களுக்குத் தாயகம்போ லிலகாநின்ற வனத்தில் விலங்கினங்கள் ஒன்றுக்கொன்று விளையாடி, ஆரவாரஞ்செய்யு மோசையும், மயில்கள் முகிலினங்களைக்கண்டு சந்தோஷங்கொண்டு, தோகைகளைவிரித்து நடிக்கும்படியாகிய உன்னதங்களும், குயில்களினது இன்னோசையும், கண்டகவுதாரிகளின் ஓசையும தூக்கணான், புஞ்சிட்டுகள் பந்திபந்தியாய் மரங்களிலூசலாடி ஒலிசெய்யவும்அங்கங்குபன்னகசாலைகள்புதுக்கியவற்றிற்பெரியோர்கள்

தபசிகள் முநிசிரேஷ்டர்கள் ஓமகுண்டங்களேற்படுத்திவேள்வி செய்து வேதபுராணங்கள்செய்யும் மறைமுழக்கங்களும்புராண காலக்ஷேபங்களுங்கூடி வைபவத்துடனே விளங்கப்பட்டவனத்திலே தருமகுத்தன் வேட்டையாடி அநேகஞ்செந்துக்களை வதை செய்து திரியும்போது சூரியன்அஸ்தமிக்க அவ்வேளையில்தருமகுத்தராஜன் அவ்வனத்திலுள்ள ஓர் தடாகக்கரையிற் சேர்ந்து கரசரணாதிகளைச் சுத்திசெய்து சந்தியா வந்தன முதலிய நியம நிட்டைகளை முடித்துக்கொண்டு எங்கும்இருள் செறிந்தமையால்தனது பட்டணம்போய்ச் சேருவதற்குக் கூடாமையென் றறிந்தமையால் அங்குள்ள விருட்சங்களில் மிகப்பருத்தும் ஆகாயத்தையளாவியுயர்ந்துந் தளிர்த்து மிராநின்ற ஓர்விருட்சத்தைக் கண்டு, அதன்மீதேறி விசாலமாயிருக்கும்படியாகிய ஓர்கிளையில் உட்கார்ந்து, கனிவர்க்கங்களை யருந்திக்கொண்டிருக்கையில் ஓர் கரடியைச் சிங்கமானதுகண்டு மிக்க கோபத்தோடுகதனைக் கொல்லவேண்டுமென்னும் எண்ணங்கொண்டு துரத்திக்கொண்டுவரும்போது அக்கரடியானதுபயந்து நடுங்கி யேங்கியிளைத்துஓட்ட முநடையுமா யோடிவந்து தருமகுத்தனிருக்கும் விருக்ஷத்தைப் பற்றியேறி அங்குள்ளவேந்தனைக்கண்டு கூறுகின்றது. வாராய் மகாராஜனே! இவ்வனத்தில் எங்களுக்கெல்லாம் அரசனாயிருக்குஞ் சிங்கமானது என்னைக்கொன்று பட்சிக்கவேண்டித்துரத்தினமையால், யான் பிராணபீதிகொண்டு ஓடிவந்து இம்மரத்திலேறிக்கொண்டேன், அச்சிங்கமும் மரத்தடியில் வந்திருக்கின்றது என்னைக்கண்டு நீபயந்து நிலத்திற்குதிப்பாயாகில் சிங்கத்தினால் ஒருவேளை உனக்குத்துன்பம் நேரிடுமாதலால் இன்றிராப்பொழுது நாமிருவரும்இம்மரத்தின்மீதிருந்து காலத்தைப்போக்குவோமென்றுசொல்ல, அம்மொழியைக்கேட்ட வேந்தன் சந்தோஷமடைந்து அப்படியே யாகட்டுமென்று சம்மதப் பட்டிருக்கும்போது, வேந்தனுக்குக் கிஞ்சித்து நித்திரையுண்டாகி, திடுக்கென்றுவிழித்து தேகம் நடுக்குற்றமையால் அதனைக் கரடியானது அறிந்து அரசனைப்பார்த்து ஐயா அரசே! நீரிப்படி நித்திரைகொண்டு தப்பிவிழுந்துவிட்டால் மரத்தடியில் இருக்கின்ற சிங்கமானது உம்மைக்கொன்றுவிடும் ஆனபடியினால் என்மடியிலாவது படுத்துக்கொண்டு நித்திரைசெய்வீராகில் நான் அதிஜாக்கிரதையாய் நித்திரைசெய்யாமல்பாதுகாக்கின்றேன் பின்புஉடம

க்கு நித்திரைதெளிந்தால் நான் சற்றுநேரம் நித்திரை செய்கின்றேன் நீர் அதுவரையில் விழித்திருந்து என்னைக் காப்பாற்றுமென்றசொல்ல அதுகேட்ட வேந்தன் அப்படியே சம்மதித்தபடியால் கரடியானது இராஜனைத் தன்மடியிலே படுத்துக்கொள்ளச்சொல்லித் தனதுகரங்களாற் றடவிக்கொடுத்து அரசனை நித்திரைபண்ணும்படியாய்ச்செய்து தான் மகா ஜாக்ரதையோடும் விழித்துக்கொண்டிருந்து பாதுகாத்து வரும்போது கண்டசிங்கமானது கரடியைப்பார்த்துச் சொல்லுகின்றது, வாராய் கரடியே உனது அவலமதிக்கு யான் என்னசொல்லுவேன், ஐயோ என்னைப் போன்ற பராக்ரமர்களை யெல்லாம் வேட்டை யாடிக்கொன்று ஜெயங்கொண் டிருக்கும்படியாகிய வேந்தனை அறியாமல், பேதை மதியால் மடியின்மீது வளர்த்திக்கொண்டு காத்து வருகின்றாயே, அவன் நித்திரை விழித்தவுடனே, உன்னை வாளினால் வெட்டி எறிகப்போகின்றான், ஆதலால் அவனை நீ நம்புவது சரியல்ல, மேலும் எத்தனைநாள் நீ இம்மரத்தின்மீதிருந்த போதினும், யான் உன்னைக கொல்லாமல் விடப்போகிறதில்லை, உன்னுயிர் தப்பிதக்கொள்ள வேண்டுமாயின் உன்மடியில் படுத்து நித்திரை செய்யப்பட்டவேந்தனை கீழேதள்ளிவிட்டால் நான் எடுத்துக் கொண்டுபோய் விடுகிறேன் நீயும் உயிர்தப்பி வாழ்வாயென்று சிங்கமானது சொல்ல, அதைக்கேட்ட கரடியானது, சிக்கத்தைப்பார்த்து ஐயா எங்களிறைவனே நீர் காட்டில் வாசஞ்செய்யும் என்னைப்போன்ற விலங்கினங்களுக் கெல்லாம், அரசனாயிருந்தும், இதுபாவம், இது புண்ணியமென்று யோசியாமல், கொடுமைபாதகமாகிய வார்த்தையைப் புகன்றீரே இது நீதியோ ஐயோ நம்பினபேரைக் கொலைசெய்வது நலமல்லவே, இவ்வுரவாதிநரகத்துக் கேதுவாகுமே அப்படியே நரகப்பிராப்தியாவதன்றியிலும், அதது்னபமானது அநேகங்கோடியாகாதிகிர்த்தியங்கள்செய்தாலு மகலாதே ஆதலால் இவ்வனத்திலே சஞ்சரிக்கப்பட்ட பெரியோர்கள்சொல்லியவண்ணம், பிரம்மஹத்தி முதலிய பாவங்களையெல்லாம் போக்குவதற்குப் பரிகாரஞ்சொல்லி யிருக்கின்றார்கள், அடைக்கலம் புகுந்தவர்களை, அவலப்படுத்தியவர்கள், அடையுந் துன்பத்திற்கு மாத்திரம்பரிகாரஞ் சொல்லவில்லையே ஏனெனில், அவ்வாறு அவலப்படுத்திய பாதகமானது, மேருவுக்கும் பெரிதாய அளவுபடாத தாதலால் நீரதை வாயினாற் சொல்லுவதற்கு எப்படி உமது மனந்துணிந்ததோ அறியேன், ஆ கெடுமதியையுடைய மிருகராஜனே என்று

அதற்கு விடைகொடுத்திருக்கும்போது அச்சமயத்தில் தருமகுத்தனென்னும் ராஜன் நித்திரை நீங்கி எழுந்து, கரடியைப் பார்த்து, வாராய் என்மனதுக்கிசைந்த கரடியே இனி நீ என் மடியிற் படு என்று சொல்லி நித்திரை செய்யும்போது மரத்தடியிலிருந்த சிங்கமானது வேந்தனைப் பார்த்து வாராய் வேந்தே இக்கரடியை நீ காப்பாற்றுவதனாலே உனக்குண்டாகும் பயனென்ன, ஐயோ உலகாதிபனாக விருந்தும் காட்டிற் சஞ்சரியாநின்ற துஷ்ட மிருகங்களுக் கிடங்கொடுக்கலாமோ இப்போது அக்கரடிக்கு நித்திரைகலைந்தவுடனே உம்மைக்கொன்று பட்சிக்க போகின்றது இதை நீர் உண்மையாய் நம்பும் மேலும் நீர் எத்தனை நாள் இம்மரத்தின்மீதிருந்த போதிலும் உங்களிருவரையும் நான் கொன்று பட்சணஞ் செய்யாமல் விடப்போகிறதில்லை ஆதலால் நீ பிழைக்க வேண்டுமாயின் யான் சொல்லுவதைக்கேள்.

அது யாதெனில், இப்போது உமது மடியின்மீது நித்திரைசெய்யுங் கரடியைக் கீழேதள்ளி விட்டால் யான் அதைக் கொன்று பட்சணஞ் செய்து விட்டுப் போய்விடுகிறேன், பிறகு நீர் உமது பட்டணம் போய்ச்சேர்ந்து சுகஜீவியாய் வாழ்ந்துக் கொண்டிருக்கலா மென்று சொல்ல அதைக்கேட்ட தருமகுத்தன் மேல்வரும் வினையை நிதானித்து யோசியாமல் சிங்கத்தினது வார்த்தையைச் சரியென்றெண்ணித் தனது மடியிற் படுத்து நித்திரை செய்து கொண்டிருக்குங் குற்றமற்ற கரடியைப் பிடித்துக் கீழேதள்ள, கரடியானது திடுக்கென விழித்துக் கீழே விழுஞ் சமயத்தில், கால்களையும் கைகளையும் விரித்துப் பிராணபீதியோடும் முன்செய்த புண்ணியத்தால் நிலத்தில் வீழாமல், அம்மரத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக் கிளையிற்றொற்றிக் கொண்டு மனத்தைத் திடப்படுத்தி பின்பு தருமகுத்தனென்னும் அரசனைப் பார்த்து, புன்சிரிப்புக்கொண்டு அடா வேந்தனே! என்னமதி படைத்தாய், நம்பினபேரை நழுவவிடுவது ஞாயமல்லவே, நிருமூடர்களுஞ் செய்யாத வேலையல்லவோ செய்தாய் உபகாரஞ் செய்தவர்களுக்கு அபகாரஞ் செய்யலாமோ ஐயோ என்னைப்போன்ற புல்லறிவையுடைய விலங்கினங்களுக்கும் இந்த எண்ணமிராதே நீ நான்செய்த நன்றியை மறந்து என்னைச் சிங்கத்துக் கிரையாக்கி நீ உயிர்வாழ நினைத்தனையோ மடமையோ

ய்! உனக்கு நற்கதியுண்டாகுமோ, அடா பித்தனே நீ என்னை யாரென்று எண்ணியிருக்கின்றாய், நான் இருக்குமஹா ருஷியின் வர்க்கத்தில் உற்பவித்த சானகாட்டமுனி என்று என்னைச் சொல்லுவார்கள் ஆதலால், நினைத்தவடிவங் கொண்டு வனங்களிற் சஞ்சரிக்கும் வழக்கமாதலால், இன்று இக்கரடி உருவங் கொண்டு, இவ்வனத்தில் வருகிறபோது இச்சிங்கமானதுகண்டு என்னை துரத்திக்கொண்டு வந்தபடியால் இம்மரத்திலேறி உன்னைக் கண்டேன் நீ என்னை யோசியாது வஞ்சமனத்தால் நான் உனக்குச் செய்த நன்றியையு மறந்து எனனைச் சிங்கத்துக் கிரையாக்க நினைத்தனை நிருமூடனாகிய நீ தான் அப்படி செய்தபோதிலும் நெஞ்சத்திற் குடிகொண்டிருக்கும் நீலகண்டமூர்த்தியாகிய உமாமகேசரும் அப்படி செய்வாரோ, நன்றி யற்றவனே உலகுக்கெல்லாந் தாயகம்போல் ஜீவகாருண்யம் பொருந்தி மநுநீதி பிறழாது செங்கோ னடாத்திவரும் நராதிபனென்று நம்பி மடியிற்படுத்து நித்திரைசெய்து கொண்டிருந்த என்னைச் சிங்கத்துக் கிரையாய் வஞ்சித்துத் தள்ளியபடியால் நீ பயித்தியம் பிடித்துக் கேவலனாய் திரியக்கடவையென்று சாபங் கொடுத்து பின்னர் மரத்தடியிலிருக்குஞ் சிங்கத்தைப் பார்த்துக் கூறும் வாராய் சிங்கமே நீ உன்னுடைய கதியை அறியாமல் உன்னைக் கொன்று பட்சணஞ்செய்ய ஆவலோடுந் துரத்தி வந்தாயன்றோ அந்தோ நீ உன்னையாரென்றிருக்கின்றாய் அளகாபுரிக் கிறைவனாகிய குபேரனுடைய பரம்பரையில் உற்பவித்து பத்திரனென்னும் நாமம் பூண்டு உனது தேவியோடும் இமயகிரிச் சாரலிலே வசிங்குமோர் தடாகத்தில் ஜலக்கிரீடைசெய்து விளையாடிக்கொண்டிருக்கும்போது கவுதமமகருஷியானவர் வேள்விக்குரிய சமித்து தர்ப்பை முதலியவைகளைக் கொய்யும் பொருட்டு அவண் விஜயஞ்செய்ய அவரைக்கண்டவுடனே உன் தேவி நாணமுற்றவளாய்க் கரையேறி வஸ்திரமெடுத்துடுத்திக் கொள்ள அதுகாலையில், நீயும் அவ்வாறு நடவாமல் அசட்டை செய்து, நிருவாணனாய் நின்றபடியினாலே, அம்முனிவருக்குக் கோபம் பிறந்து உன்னை மிருகமாகப் போகும்படியாய்ச் சாபங்கொடுத்தபடியால் நீ இப்படிச் சிங்கமாகப் பிறந்து, என்னைப் போன்றவர்களைத் துரத்திக்கொண்டு திரிகின்றாயென்றுகரடியானது சொல்ல, அதைக்கேட்ட சிங்கமானது கரடியின் வாய்மையை உள்ளத்திலுன்னிப் பூர்வக்கியான முண்டாகி உடனே அச்சிங்கவுருவத்தினின்றும் மாறிப் பழையபடி பத்திரனென்னும் பெயரோடும், தேவரூபங்கொண்டு கரடியாகிய முனிவனைப் பார்த்துக் கூறுவான், ஐயா நான் தாங்கள் சொல்லியதுபோல், குபேரனுடைய மந்திரியாகவிருந்து மேருவின்சாரலில் எனது தேவி

யோடுஞ் சலக்கிரீடை செய்துகொண்டிருக்கையில் கவுதமருடை
சாபமெனக்குண்டாக அதனாற் பயந்து யான் அவரைவணங்கி
மோசனமியாதென்றுகேட்க அதற்கவர் திருவுளமிரங்கிச்
சொன்னது யாதெனில், அப்பா நீ சிங்கரூபமாய்க் காட்டிற் சஞ்
சரிக்கும்போது சானக்காட்டனென்பவர் காடியுருவங்கொண்டு
வனத்தில் வரும்போது நீ அவரைக்கண்டு துரத்திக்கொண்டுபோ
வாய் அப்போது அவராலே உனக்கிந்தச் சாபவிமோசன மாகு
மென்றுசொல்லியிருந்தமையால், அதுபோற் றங்களைத்தரிசித்த
எனக்கு எல்லாப்பாக்கியமுங் கிடைத்ததென்று காடி யுருவமா
யிருக்கும் இருடியை வணங்கி, அவரிடத்தில் விடைபெற்றுக்
கொண்டு அளகாபுரி பட்டணம்போய்ச் சேர்ந்தான்.

அப்பால் சானக்காட்டனென்னும் முனிவர் தனதிச்சையின்
படிவனத்தைநோக்கிச்செல்ல, அப்போது தருமகுத்தனென்பவ
ன்முனிவர் சாபத்தால் வெறிகொண்டு யாதுந்தோற்றாமல் பட்ட
ணத்தைநோக்கி வருகிறபோது, அங்குள்ள மந்திரிபிரதானிமுத
லியவர்கள்கண்டு பயந்து, மிகவுந் துன்பத்தையடைந்து தரும
குத்தனைப்பயந்த தகப்பனிடத்திற்சொல்ல அவ்வார்த்தையைக்
கேட்டஅவனும் துக்கசாகரத்துட்படிந்து அந்தோபெறுதற்கரிய
நம் ஒருபிள்ளைக்கும் இப்படிஈசன் விதித்தானே என்றுசகிக்கமா
ட்டாதவனாய் பெருங்கவலையோடும் மந்திரி முதலிய சில காரியக்
காரர்களுடனே குமாரனைக் கூட்டிக்கொண்டு சைமினி என்னும்
மஹாருஷியினிடத்திற்குப்போய் அவரைப்பணிந்து, ஆசிபெற்று
சுவாமீ! எனது தவப்புத்திரனாகிய இவனுக்கு அகஸ்மாத்தாய்ப்
பித்து பிடித்திருக்கவேண்டிய காரணம் யாதோ அதனைத் தேவ
ரீர் ஆய்ந்தறிந்தோதவேண்டுமென்று கேட்க, அப்போது சைமி
னியானவர் ஞான திருஷ்டியாற் பார்த்து நடந்த காரியங்
களையெல்லாம் படிப்படியாய்ச்சொல்ல, அவ்வார்த்தையைக்கே
ட்ட சகலரும் பெருந்துன்பத்தையடைந்து சுவாமீ! இது தீரும்
படியாய்த் தேவரீர் கடாட்சித்தருள வேண்டுமென்று பணிந்து
வினவிநிற்கையில் சயிமினிமுனியானவர் கருணைகூர்ந்து கூறுவார்.

வாருங்கள்காரியக்காரர்களே உங்கட்கிறைவனாகிய இவ்வர
சன்வனத்திற்குவேட்டையாடப்போனவிடத்தில் தேடிக்கொண்
டபித்துதீரவேண்டுமாயின்ஒரு அவுஷதஞ்சொல்லுகின்றேன்கே

ளுங்கள் அது யாதெனில், இவ்வுலகின்கண் ஓங்கும் பரதகண்ட
தட்சிணபாகத்தில் ஸ்ரீராமமூர்த்தியாற்கட்டப்பட்டசேதுவென்
னுந் தநுக்கோடியில் சங்கற்பவிதிப்படித் தீர்த்தமாடிய பேர்க
ளுக்கு சகலபாபங்களும் நிவர்த்தியாவதன்றியும் பூதப்பிரேதப
சாசடாகினி காளி கூளிகளால் வந்த துன்பமும் பிரம்மஹத்தி
சிசுஹத்தி முதலிய தோஷங்களும் நீங்கி நினைத்த காரியங்களெ
ல்லாங்கைகூடி பேரின்பமுங் கூடுமாதலால் அவ்விடத்திற்குஉன்
குமாரனைக் கூட்டிக்கொண்டுபோய் தீர்த்தமாடிஸ்ரீராமநாதனைப்
பணிவாயேல் இச்சாபவிமோசனமாமென்றும் சொல்ல, அவ்வு
ரையைக்கேட்ட தருமகுத்தன் தந்தைமுதலிய யாவரும்மெத்த
வுஞ் சந்தோஷ மடைந்து, மஹாருஷியை வணங்கி விடைபெற்று
தங்கள் பட்டணஞ் சேர்ந்து இரதகஜதுரக பதாதிகளோடும்
தருமகுத்தனை இரதத்திலேற்றி அவன் தந்தை முதலியவர்களு
ம் பிரயாணப்பட்டுக் காடு மலை வனம் வனாந்தரம் கானாறு நதி
கள் பதிகள் திவ்யக்ஷேத்திரங்க ளெல்லாங்கடந்து சேதுவைச்
சேர்ந்து தரிசித்து. அவணிலகுந்தநுக்கோடியில் தருமகுத்தனை
மூழ்கும்படியாகச் செய்தவளவில், அவனைப் பிடித்திருந்த பித்
தானது பருதிமுன் பனிபோல்விலகிக் கிருதார்த்தனாய் தனது
கையினால் வேண்டிய பிராமணர்களுக்குத் தான தருமங்கள்செ
ய்து மூன்றுநாள் வரையில் சங்கற்பவிதியின்படி மூழ்கி; மறை
விதியிற் கூறியவண்ணம் முப்பத்திரண்டறங்களையும் குறைவின்
றி நடாத்தி ஸ்ரீராமநாதனுக் கபிஷேகஞ் செய்து பூசித்து நிவே
தனங்காட்டித் தோத்திரஞ்செய்து அக்கடவுளிடத்தில் விடை
பெற்று சேனைசைன்யங்கள் சூழத்தக்கதாய் இரதமேறித்தனது
பட்டணம் வந்துசேர்ந்து சைமினிமஹாருஷியைக்கண்டு வணங்கி
னார்கள். அப்படிவணங்கிய இராஜனை முநிவர் ஆசீர்வதித்து, சக
ஜீவியாய் இராச்சியபாரஞ் செய்துவரக்கடவையென்று விடை
கொடுத்தனுப்ப, அவ்விடையையேற்ற வேந்தன் தன்னுடையஇ
ராச்சியத்தை அரசாண்டுவந்தான் கேட்டீரோ நைமிசாரண்யர்
களே! இப்படியாய் அந்த ராமதநுக்கோடியிலே உன்மத்த பிர
மைபயித்தியம் குமரகண்டமுசலகம் இவைகளெல்லாம்பஞ்சாய்
ப்பறந்துவிடும். ஆதலால்இந்தத்தநுக்கோடியையன்றிவேறேதீர்
த்தத்தைவிரும்புவது எப்படியாகுமெனில், பசுவின்பாலிருக்கஅ
தைக்குடியாமல் கள்ளிப்பாலைத் தேடிக் குடிக்கச்சென்றதுபோ
லாகும். இந்தத் தநுக்கோடியிலேஅன்புடனே தீர்த்தமாடியவர்
கள்சுயஞ்சோதிமயமான ஞானத்தையடைந்துமகாதேஜசுடனே

விளங்குவார்கள், இதன்றியும் இந்தத் தநுக்கோடியைச் சிந்தித்துக்கொண்டு வேறொரு தீர்த்தங்கள், நதிகள் குளங்கள் கூபங்கள் முதலியவைகளில் மூன்றுவிசை தநுக்கோடி சேதுவென்று சொல்லி பக்தி விநயத்தோடும், யாரொருவர் தீர்த்தமாடுகின்றார்களோ அவர்கள் தாமரைமலரில் வாசஞ்செய்யாநின்ற அயனைப்போன்ற வாழ்வும், ஆயுளும் இலட்சுமி கடாட்சமும் தவளமயமாய் அமுர்த சீதள கிரணங்களையுடைய சந்திரனை சடாபாரத்தில் தரித்திருக்கப்பட்ட பரமசிவனுடைய பாதாரவிந்தமும் கிடைத்து, ஆனந்த போகங்களை யடைவார்களென்று சுருதிவாக்கியப் பிரமாணங்களாலே சொல்லப்பட்டால், அந்த இராமதநுக்கோடியினுடைய மகிமையை யாராலே அளவிட்டுச் சொல்லக்கூடும், இத்தன்மை பொருந்திய தநுக்கோடியிலே பாராவசு என்று சொல்லப்பட்ட ஒருவன் தனது தந்தையைக் கொன்ற தோஷத்தை தநுக்கோடியில மூழ்கித் தீர்த்துக்கொண்டானென்று சூதமருஷியானவர் சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் முனிவரைப்பணிந்து சுவாமி! பாராவசு என்பவன் என்னகாரணத்தினால் தகப்பனைக் கொன்றான் எம்மரபிலே ஜனித்தவன் அவனுக்கு இம்மதி வந்தகாரணம் யாதோ அதனைத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று கேட்கச்சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

தருமகுத்தச்சரித்திரம்.

முற்றிற்று.

---

## பாராவசுச்சரித்திரம்.



கேளுங்கள்நைமிசாரண்யமுனிவர்களே நெடியகடல்சூழ்ந்த இவ்வுலகின்கண் உத்தரதேசத்திலே பிருகத்துய்மனென்னுமோரரசன் மகாமநுநீதியோடும்இராஜரீகஞ்செய்துவாத்தக்கவன்சதாகாலமும் பூமண்டலத்திலுள்ள திவ்யக்ஷேத்திரங்களிற்போய்யாகாதிகிர்த்தியங்களை இந்திராதிதேவர்கள் மனமகிழும்படியாய்ச் செய்து அனேககீர்த்திகளோடும்விளங்கப்பட்டவேந்தன்சிந்தையிலுன்னிய யாகங்களேதுவோ அதனை மறைவிதிப்படிநிறைவே

ற்றும் வல்லவனாகியும் பிரம்மகுலசிரேஷ்டனாகியும் சகல சாஸ்திரங்களையு முணர்ந்து விஞ்சை மந்திரத்தையே பாராயணஞ் செய்துவரத்தக்க சைப்பியனென்னும் பிராம்மணனுக்கு அருவாவசு என்றும் பராவசு என்றும் பெயரினையுடைய இரண்டு பிள்ளைகள் தகப்பனைப் பார்க்கிலும் எண்மணங் கதிகப்பட்ட வல்லவராய் மேன்மையடைந்து இராஜனால் நடத்தப்பட்ட யாகாதிகிர்த்தியங்களை அவ்விருவருமே யிருந்து வழுவின்றி நடத்தி வருங் காலையில் பிருகத்துய்மனென்னும் வேந்தன் காசிப்பட்டணத்தில் தீர்க்கசத்திரயாகஞ் செய்யக்கருதி, அருவாவசு பராவசு என்னு மிருவர்களாலும் அதற்கு வேண்டிய சாமக்கிரிகைகளை யறிந்து, அவ்வாறே சேகரஞ்செய்து அங்ஙனம் வரப்பட்ட முனிவர்களுக்கும் பெரியோர்களுக்கும் பன்னகசாலைகளைப்புதுக்கச்செய்து இராஜன் அருவாவசு, பராவசு என்பவர்களைப் பயந்த தந்தையரோடும் மந்திரி பிரதானி முதலிய சேனைசயினியங்களோடும் பிரயாணப்பட்டு அவ்விடம்போய்ச்சேர்ந்து விதியின்படி யாகசாலைமுதலிய யாவுமமைத்து இன்னம்உலகத்திலுள்ள பெரியோர்களை வருவிக்க விரும்பித் தூதர்களையனுப்பி கவுதமர், அத்திரி, காசிபர், நாரதர், பாராசரர், மார்க்கண்டர், புலத்தியர், பிருகு, வசிட்டர், சதானந்தர், வேதவியாசர், அகஸ்தியர், கபிலர், சவுமியர், சாபாலி, விசுவாமித்திரர் முதலிய பேரியோர்களை எல்லாரும்வருவித்து, அவரவர்களுக்கு அர்க்கியபாத்தியாதி சோடசோப சாரங்களுஞ்செய்து விடுதிகளி லெழுந்தருளப்பண்ணி, கந்த மூலபலாதிகளை அவர்கள் மனமகிழும்படி பிரதினமுங் கொடுத்துவரும்படிக் காரியக்காரர்களுக்கு திட்டப்படுத்தி, யாகத்தைக்கண்டு தரிசிக்க விருப்பங்கொண்டுவந்த இராஜராஜாக்களுக்கும் அவர்கள் மந்திரி பிரதானி முதலிய காரியக்காரர்கள் பந்துவர்க்கத் தவர்களுக்குந் தக்கவிடுதிகள் விடுத்து, அவர்களுக்கு அறுசுவை யுண்டியும் தாம்பூலமும் மனமகிழும்படியாய் நடத்திவரத் திட்டப்படுத்தி, பிருகத்துய்மனென்னும் ராஜன் அருவாவசு பராவசுவென்னும் இருவர்களால்சுபமுகூர்த்த வேளையில் யாகத்தை ஆரம்பஞ்செய்து நடத்தி வருங்காலையில், அவர்கள் செய்துவருங் கிரமங்களையும் மந்திரசக்தி களையுங் கண்டவசிட்டர்முதலிய பெரியோர்களியாவரும் இவ்விரு சிறுவர்களுக்கு மிஞ்சியவல்லவர்க ளொருவருமில்லையென்று சிரக்கம்பஞ்செய்து புகழ்ந்து பெரும்பாலும் ஆச்சரியமடைந்து யாகம் நடந்தேறிவருவதைப்பார்த்துக்கொண்டிருக்கும்போது ஒருநாள் பராவசு என்பவன், கங்காநதிக்கரையிற் பன்னகசாலை புதுக்கிக்

கொண்டு அதில் வீற்றிருக்கும் தனது தாய்தந்தையர்களிடம் விடியுமுன் னெழுந்துபோய்க் கங்கையில் ஸ்நானஞ் செய்து சந்திராவந்தனமுதலிய நியமநிட்டைகளை முடித்துக்கொண்டு வருவோமென்று யோசித்துப் படுத்தவன் இராப்போதிற்றானே எழுந்து நித்திரை கலக்கத்துடனே தனது தந்தையாரிருக்கும் பன்னசாலையை நோக்கி வருகையில், அப்பன்னசாலையிலே பராசு என்பவன் தாதையாகிய ரயிப்பியனென்னும் பிராமணன், ஓர் புலித்தோலைச் சரீரந் தெரியாமற் போர்த்துக் கொண்டிருப்பதை பிள்ளையானவன் கண்டு இது வனமாகையால் நமது தாய் தந்தையரை அடித்துக்கொள்ளவன்றோ, இப்புலியானது வந்து காத்திருக்குதென்று யோசித்துச் செவ்வையாய் நிதானியாமல் தன் கரத்திலிருந்த தண்டத்தினால் மெல்லப் பதுங்கிப்போய்ப் புலியினது பிடரியிலே யோங்கியடித்தான் அப்படி யடித்தவுடனே புலித்தோலையணிந்திருந்த தகப்பனாகிய ரயிப்தயன், வாயினாலும் மூக்கினாலும் இரத்தங்களைக் கக்கிக்கொண்டுமரணத்தையடைந்தான். அதுகண்ட பராவசு அருகேபோய்ப் பார்க்கும்போது தகப்பனென்றறிந்து அடித்து மோதிக் கீழேவிழுந்து புரண்டு புரண்டழுது மூர்ச்சித்திருக்கையில் அவ்வோசையைக் கேட்ட அவன்றாயானவள் ஓடிவந்து தனது மணாளனுக்கு நேர்ந்த மரணத்தைக்கண்டு சகிக்கமாட்டாதவளாய் துன்பசாகரத்துள்ளழுந்திக் கதறிப் பரதவித்திருப்பதை இளையகுமாரனாகிய அருவாவசுவென்பவன் கேள்விப்பட்டு ஓடோடியும் பார்த்து பெருந்துயரத்தோடும் அழுதபின்பு மூவரும் மனதைத்தேற்றிக் கொண்டவர்களாய் தாதைக்குச் செய்யவேண்டிய கிரியையனைத்துஞ் செய்து சமாதியில்வைத்துத் திருஷ்டிகளைச் சாஸ்திர விதிப்படியே பரிகாரஞ் செய்து இராஜனுடைய யாகத்தைநிறைவேற்ற வேண்டி யிருப்பதனாலே தனது தம்பியைப்பார்த்துக் கூறுவான் வாராய் தம்பி அருவாவசு இப்போது வேந்தனது தீர்க்கசந்திரயாகந் துடங்கி நடந்துவருவதில் நமக்குச் சம்பவித்திருக்குந் தொல்லையோடும் யாகத்திற்பிரவேசிக்கப்படாது அப்படி பிரவேசியாமற் போனால் யாகத்துக்கும் பின்னம் நேரிடும் நீ தனியாக நடத்துவதற்கு உன்னாற் சக்கியிராதலால் தகப்பனை கொன்ற எனது தோஷத்தை நீ ஏற்றுக்கொண்டு அதுபரிகாரமாகும்படியாய் தவஞ்செய்து கொண்டிருந்தால், நான் வேந்தனுடைய யாகத்தை யாதொருகுறைவின்றி நிறைவேற்றுகின்றேன்,

ஒருவேளை இச்செய்தி அரசனுக்குத் தெரிந்து கேட்பானாகில், நீ கொன்றதாகச்சொல்லி விடுகின்றேன் உன்னைக்கேட்கில், நீயும் அப்படியே சொல்லிவிடுவாய், ஆதலால் இதுவே நல்ல யோசனை யென்று சொல்ல, தம்பியானவன் கேட்டு தேவரீர் சித்தம் போல நடந்துகொள்ளுகிறே னென்றுசொல்லத் தனதுஅன்னை யோடும் வனத்திற் றபஞ்செய்து கொண்டிருந்தான் அப்படி யிருக்கையில், பராவசு என்பவன் கங்கையில் ஸ்நானஞ் செய்து, ஜெபதப நியமங்கட்டைகளை முடித்து யாகசாலையிற் சேர்ந்து ஓமத்துக்குறிய தொழிலிற் பிரவேசித்திருக்கும்போது., இக்காரியங்களைக் கேள்வியுற்றவர்கள், இராஜனைப் பார்த்து, சுவாமீ இச்சிறுவன் தனது தகப்பனைக் கொன்று, பிரம்மஹத்தியுடையவனாய் இருக்கின்றமையால் இவனை இந்த யாகத்திலே வைக்கப்படாது இந்தக்ஷணமே இவனின்று நீங்குவது உத்தமமென்று சொல்ல அம்மொழியைக்கேட்ட வேந்தன், இதென்ன காரணமென்று சிந்தித்துப் பராவசுவும் இராஜனை நோக்கி ஐயா மகாராஜனே எனது தந்தையை நான் கொல்லவில்லை தம்பிகொன்றமையால், அந்ததோஷம் நீங்கும்படி தவத்திலிருக்கின்றானென்று சொல்ல அதைக்கேட்ட வேந்தன் இதனைத் திர விசாரிக்க வேண்டுமென்று வேவுகாரர்களாலே அருவாவசு வென்பவனைக் கூட்டி வரச்செய்து நடந்த சவிஸ்தாரமியாதென்று கேட்க அப்போது அருவாவசுவும் ஐயா மகாராஜனே எனது தந்தையைத் தெரியாமையினால் எனது தமையன் கொன்று விட்டபடியால், நான் அப்பழியை ஏற்றுக்கொண்டு தபஞ்செய்கிறேனென்று சொல்ல, அதைக்கேட்ட வேந்தன் பராவசுவைக்குற்ற முடையவனென்று நிதானித்து யாகசாலையைவிட்டு நீங்கும்படியாய்த்துறக்கொண்ட காலையில், அதைக்கண்ட யாவரும் நிந்தித்துப்பராவசுவை வெறுத்துக்கொள்ள, அப்போது அருவாவசு வென்பவன் மெத்தவுங் கிலேசமடைந்து இராஜனிடத்தில் தனக்கு விடை கேட்கும்போது, இராஜன் அருவாசுவை நோக்கி அப்பா உனது தந்தையைக் கொன்றபழி உன் தமயனைச் சார்ந்ததேயன்றி, உனக்கு யாதுந்தோஷமில்லை போய்வாவென்று சொல்ல அந்தக்கேட்ட இருவரும் யாகசாலையைவிட்டு நீங்குவதற்குள் பராவசு என்பவனுக்கு பிரம்மஹத்தியானது தொடா, அதைக்கண்ட அவன் தம்பியானவன், அவனை விடாமல் கெட்டியாய்ப் பிடித்திழுத்துக் கொண்டு வனத்திலிருக்குந் தாயினிடத்திற் கொண்டுபோய் விடுத்து அவனுக்குப் பற்றிய பிரம்மஹத்தி நீங்கும்படியாய் சூரிய பகவானைக் குறித்து தவஞ்

செய்கையில், சூரியபகவானும் கருணை கூர்ந்து இந்திராதி தே வதைகளுடனே அருவாவசு என்பவனுக்குப் பிரத்தியட்ச மாய் தரிசனந்தந்து, வாராய் அருவாவசுவே நீ உனது தமையன் செய்த பிழையைப்பொறுத்து அவன்பொருட்டு நீ இழைத்த தபத்துக்குச் சந்தோஷமடைந்தோ மாதலால், உனக்கு வேண் டிய வரத்தைப் பெற்றுக்கொள்ளுவா யென்றுசொல்ல, அவ்வா ய்மையைக்கேட்ட அருவாவசுவென்பவன் மெத்தவுஞ் சந்தோ ஷமடைந்து, சுவாமீ! சிறியேனைப்பயந்த தந்தையானவர், உயிர் பெற்று எழுந்திருக்கும்படியாயும், அன்னவரைக்கொலைசெய்த எனது தமையனைப்பற்றிய பிரம்மஹத்தி நீங்கிப் புநிதனாகும்படி யாயும் கருணைசெய்ய வேண்டுமென்று சரங்கூப்பித்தோத்திரஞ் செய்து நிற்கும் அருவாவசுவென்பவனைச் செஞ்சுடர்க்கிரணனா கிய சூரியபகவானும் இந்திரன்முதலிய தேவர்களுங்கண்டு கூறு வார்கள்.

வாரும்பிள்ளாய்அருவாவசுவே! நீ எங்களைக்கோரிக்கேட்ட வரமானது மெத்தவும் ஆச்சரியத்தைக் கொடுக்கின்றது ஏனெ னில் உலகின்கண் இறந்தவர்கள் அநேகநாளைக்குப்பிறகு உயிர் பெற்றுவரவும் கொலைசெய்தவன் ஒருவனிருக்க மற்றொருவன் தவஞ்செய்து கொலைஞனது பிரம்மஹத்தியைப் போக்கும்படி யாய்க் கேட்பதும் வேடிக்கையாக விருக்கின்ற தாதலால் ஓசிறு வனே நீ எத்தனை தவஞ்செய்த போதினும் அவனைப்பிடித்தபிரம் மஹத்தியானது நீங்கப் போகிறதில்லையென்று சூரியபகவான் முதலிய தேவர்களியாவருஞ்சொல்ல, அதைக்கேட்ட அருவா வசு சகிக்கப்படாத துன்பத்தி லாழ்ந்தவனாய் தேவர்களைப்பார் த்து மறுபடியுங் கூறுவான் சுவாமி சிறியேன் எனது அன்னை படுந்துயரத்தையும் அண்ணன்படுந் துயரத்தையுங்கண்டு உயிர் கொண்டிருப்பதால் தோற்றமில்லை யாதலால், எவ்வகையேனு மருள்செய்யவேண்டுமென் றுமிகப்பரிதாபம்படுகையில்அதுகண் டதேவர்கள் கிருபைகூர்ந்து அச்சிறுவனைநோக்கி நீ மிகவுந்துன் பம்படுகின்றமையால் இப்புவியின்கண்ணேஉக்குத்தென்றிசையிற் கந்தமாதனகிரிச்சார்பில் சேதுபந்தனத்தில் இராமதநுக்கோடி யென்றோர்புண்யதீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்திலேஉனது தாயையுந்தமையனையும் அழைத்துக்கொண்டுபோய்நாற்பத்தை ந்துநாள்பரியந்தந் தீர்த்தமாடச்செய்து அங்குள ஸ்ரீராமநாதனை ப்பணிந்து பூசித்து இவண் வருவீர்களாயின் உங்கள் தந்தையும எழுந்திருப்பான் உனது தமையனைப்பற்றிய பிரம்மஹத்தியும்

நீங்குமென்றுசொல்லி சூரியபகவானாதி சகலதேவர்களும் விசும்பிடை மறைந்தார்கள். அதைக்கண்ட அருவாவசு என்பவன்மிகவுஞ் சந்தோஷக்கொண்டு தாங்களிருக்கும் பன்னசாலைக்குவந்து தாய்தமையனோடு நடந்த சவிஸ்தாரங்களைச்சொல்லி அவர்களைக்கூட்டிக்கொண்டு காசிபட்டணத்தைவிட்டு நீங்கிக் காடு, மலை வனம், வனாந்தரம், காறுமுதலிய நதிகளையும் பதிகளையுந் திவ்யக்ஷேத்திரங்களையும் விடுத்துநீங்கிக் கந்தமாதன கிரிச்சார்பிற் சேர்ந்து சேதுவைதெரிசனஞ்செய்து தேவர்கள் கூறியவண்ணம் ஸ்ரீராமதநுக்கோடியில் சங்கற்பவிதியின்படி நாற்பத்தைந்துநாள்வரையில் தீர்த்தமாடி இராமநாதனைப் பணிந்து வருகையில் உடனே அங்கோர் அசரீரிஉண்டாயிற்று அதுயாதெனில் ஓபராவசுவே உன்னைப்பற்றியிருந்த பிரம்மஹத்திதோஷம் நீங்கிக்கிருதார்த்தனுகிவிட்டாய் என்றுஒலித்த ஓசையைக்கேட்டு மூவருஞ் சந்தோஷத்துடனே அந்தராமதனுக்கோடியில் தங்கள்மனமானதுதிருப்தியடையுமளவுந் தீர்த்தமாடி அதைவணங்கி இராமநாதன்சந்நிதிவந்துபிரதக்ஷணஞ்செய்து இராமலிங்கத்தைத்தோத்திரம்பண்ணி அக்கடவுளிடத்தில் விடைபெற்றுமீண்டு அதிதீவிரமாய்க் காசிபட்டணம் வந்துசேர்ந்து தங்கள்தகப்பனை அடக்கஞ்செய்த சமாதிக்கருகாய்வருகிறபோது அகாலமரணமாயிறந்த அவர்களதுதாதைஉயிர்பெற்றுச் சமாதியினின்றுமெழுந்துபிள்ளைகளிரண்டுபேரையும் பெண்சாதியையுங்கண்டு ஆநந்தங்கொண்டு தழுவிமுத்தமிட்டுஅடங்காமகிழ்ச்சியோடும் நடந்த சவிஸ்தாரங்களை யெல்லாம் ஆதியோடந்தமாய் ஒருவர்க்கொருவர்பேசித் தமதுபட்டணம் வந்துசேர்ந்து, சுகஜீவிகளாய் வாழ்ந்திருந்தார்கள். ஆதலால், இத்தன்மையான மகிமைபொருந்திய தநுக்கோடியினதுபெருமையை ஒருவராலுஞ்சொல்லிமுடியாது, இதன்றியும் சுராபானமுதலியலாகிரிவஸ்துக்களை இச்சித்துஅதனுல் வந்தபாதகங்களெல்லாம் அந்ததநுக்கோடியைக்கண்டவுடனே புலியைக்கண்டமான்போலும்,இராஜாளியைக்கண்டகொக்கைப்போலும்,பருதியைக்கண்டபனியைப்போலும்விலகிப்போவதோடும்அத்தீர்த்தத்தைதரிசித்தாலும் அப்படிதரிசித்துவந்தவர்களை மற்றவர்கள் கண்டுதெரிசித்தாலும் அவர்களைப்புகழ்ந்தாலும், அச்சேதுவின் மகிமையை சொல்லிக்கொண்டிருந்தாலும் சொல்லிக்கொண்டிருப்பதைசிரவணஞ்செய்தாலும், அவர்கள் புண்ணியசாலிகளென்றுபெரியோர்களாற் சொல்லப்பட்டிருக்கின்றபடியால்

அந்ததநுக்கோடியிலேமுன்னொருகாலத்திலேஓர்நாயும்வானரமு ம்சினேகிதஞ் செய்திருந்து இந்ததநுக்கோடியில் தீர்த்தமாடிதி வ்யரூபத்தைப் பெற்றார்களென்று சூதமுனிவர் சொல்ல அவ்வா ய்மையைக் கேட்ட நைமிசாரண்ய முனிவர்கள் சூதமகாரிஷியை பணிந்து, சுவாமி தேவரீர் அடியேங்களுக்கு அவைகளின் பெரு மையைத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்கச் சூத முனிவர் சொல்லத்தொடங்குவாராயினர்.

பராவசுச்சரித்திரம்.

முற்றிற்று.

---

## கவிச்சம்புசரித்திரம்.



கேளுங்கள் முனிவர்களே! நெடிய கடல்சூழ்ந்த இவ்வுலகி ன் கண் நீர்வளம் நிலவளம் முதலிய நான்குவளமும் பொரு ந்தி இலகாநின்ற ஓர் பட்டணத்திற் கருகில் வழங்கும் வன த்தில் நெடுநாளாய் நேசித்து வராநின்ற ஓர் குரங்கும் நரியும் ஒன்றுக்கொன்று இணைபிரியாமல் நகமுஞ் சதையும் போல வும், பூவும் மணமும் போலவும், பொருந்தி விசுவாசித்து வருநாளில், ஓர்நாள் அப்பட்டணத்திற்குப் புறம்பாயிருக் குஞ் சுடலையிற் புதைத்திருந்த பிணத்தைப்பற்றி யிழுத்து வந்து, இன்று நமக்கு நல்ல விருந்தமுதென்று நனியின்பத்தோ டும், புசித்துக்கொண்டிருந்த நரியைக்கண்ட குரங்கானது, உய் த்து நோக்கிச் சிந்தித்துக் கூறுகின்றது. வாராய் எனது நற்று ணையாகிய நரியே! நீ என்னபாவஞ் செய்தனையோ அறியேன் அ ந்தோ, இந்த மயானத்திலிருக்கும், பிரேதங்களைப் பிடுங்கித் தி ன்பதே தொழிலா யுனக்கு லபித்திருக்கின்றது பற்றி யான்மெ த்தவுஞ் சஞ்சலப்படுகிறேனென்று கூறியதைக்கேட்ட சம்புவா னது சொல்லும் கேளாயெனது பிரியனாகிய குரங்கே ஐயோ என து கர்மாநுபவத்தை என்சொல்வேன் நண்பனே நான் முந்தி ஜன்மத்தில் வேதாகமங்களை யுணர்ந்தோங்கும் பிராம்மண குல த்திற் பிறந்து, தேவசன்மாவென்னும் பெயர்பூண்டு, குலவிதிப் படி வேதங்களை யுணர்ந்தும் வாழ்ந்து வருகிறபோது, பிராமண னுக்கு என்னிட மிருந்த ஒரு வஸ்துவை தருகிறேனென்று வா

க்குத்தத்தஞ்செய்து, பின்புதராமல் தப்பிவிட்டபடியால் அப்பாபத்தால் இப்படி சம்புவாய்ப்பிறந்து, தாணியின்மீது பிணங்களைப் பிடுங்கித்தின்னுஞ் சண்டாளத்தவம் லபித்தனவோதிப் பின்னும் கூறும் ஓ நேசனே உலகின்கண் ஓங்கும் மாந்தருள், எக்குலத்தனாயினும் எவ்வளவேனும் ஒருவனுக்குக் கொடுக்கிறேனென்று ஆசை வார்த்தைசொல்லிப் பின்னர் கொடாமற்போவானாயின் அவன் இவ்வாறே ஜனித்து என்போல் பிரேதங்களைப் பிடுங்கித்தின்று உழலவேண்டுவதுமன்றியில், பிறருக்கு கொடாமல் தேடிவைத்த அவன் பொருளும் நாசத்தையடைந்து கர்ப்போற் பத்தியில்லாமற் கெட்டதுபோல் அவன்செய்யும் புண்ணிய மனைத்தும் வியர்த்தப்படும். மேலும் ஓர்வேதப்பிராமணனுக்குச் சொன்ன வாக்கை யீடேற்றாமற் போனவர்களுடைய பாவமானது நூறு அசுவமேதயாகங்கள் செய்தபோதிலுந்தீராதென்று வேதங்களாற் சொல்லப்படுமாயின் எனது கர்மத்தை யெவ்வாறு நீக்கிக்கொள்ளுவேன், அந்தோ கொடும்பாவியாகிய நான்தான் இப்படி ஜனித்தபோதிலும் எனது நண்பனாகிய நீயுங் குரங்காகப்பிறந்து பருவதங்களிலும் பற்பல விருட்சங்களிலுந் தாவிக் காய் இலை பூ பிஞ்சுகளைக் கடித்துத்தின்று காலத்தைக் கழிக்கின்றனையே இதுவும் நீ செய்த கருமந்தானே என்றுகேட்க அதைக்கேட்ட குரங்கானது கூறும் வாராய் என் மனதுக்கிசைந்த, சம்புவே நான்முன் சென்மத்தில் நம் யார் மாபிற் பிறந்திருந்த விசுவநாதனென்னும் வேதியனுக்குப் புத்திரனாகப் பிறந்து வேதநாதனென்னும் பெயர்பூண்டு குலவித்தியாவு முணர்ந்து, கமலாலயத்தில் குருக்களாகவமர்ந்து, சிவபணி செய்துவருநாளில் தேவகண்மாவென்னும் பெயர் கொண்ட நீ என்னிடம் வந்து என்னை நேசித்து வருங்காலத்தில் ஓர் பிராமணன் வீட்டுக் கொல்லையிலிருந்த காய்கறி பதார்த்தங்களைக் கண்டு காதல்கொண்டு அந்தப் பிராமணனைக் கேளாமலும் அவனுக்குத் தெரியாமலுஞ் சோரத்தனமாய் அவன் கொல்லைச் சுவரேறிக் குதித்து அங்குள்ள பதார்த்தங்களை அபகரித்துக் கொண்டு வந்து சமைத்து பட்சித்த பாபத்தால் இவ்வாறு குரங்காகப் பிறந்து மலைகளிலுஞ் செடிகளிலுமேறிக் காய்கனிகளைத் தின்னும்படியாய்க் கஞ்சன் விதித்தானென்று கலுழ்ந்ததல்லாமலும் பின்னும் கூறும் கேளாய் நரியே இவ்வையத்தின்மீது இலங்கும் எவர்களாயினும் இருக்காதி வேதங்களுக்குரிய இருபிறப்பாளரு

டைய சொத்துக்களை அபகரித்தாள் இவ்வாறே ஜனித்துத்துன்பப்படவேண்டும், இதல்லாமலும், உலகத்தில் ஜீவர்களை இரட்சிக்கும்பொருட்டுத் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்குந் தேவர்களுக்கு நியமித்த சொத்துக்களைஅபகரித்துப் புசித்தால் அவர்களது குலமுழுவதுங்கெடுவதோடும் கும்பிபாகமெனச் சொல்லப்பட்ட நரகத்துக்கும் ஹேதுவாவார்கள்.

ஆதலால் சுகதுக்கங்களை அறிந்த தூயவராகிய பெரியோர்கள் ஒருவர்பேரிற் பொறுமையையுடையார், புறங்கூறார், பொருள்களைஅபகரியார்,பிராமணுளுக்குகுறைவுநினையார்,அவர்கள் குற்றமிழைத்தபோதிலும் பொறுப்பார் ஆதலால் நான்செய்த தீங்கினுல் இப்படி குரங்காகப் பிறந்து உழலுகின்றேன் என்செய்வேனென்று துக்கசாகரத்துட்டோய்ந்து ஒன்றுக்கொன்றுபேசிக்கொண்டுஇரை தண்ணீருண்டாலும் அதுவேசிந்தனையாயிருக்குங்காலையில், அம்மார்க்கத்தில் காவிகாம்பர ஜடாதாரியாய்விபூதிருத்திராக்ஷந்தரித்து தண்டு கமண்டலத்தோடும் பாதுகைதரித்து பரமசிவத்தைத் தியானஞ்செய்துகொண்டு வியாக்ராஜினத்தோடும் சிந்துதீபனென்று சொல்லும் அகஸ்தியமாமுனிவர்வரும்போது அவரைக்கண்ட இச்சம்புவுங் குரங்கும் எழுந்து ஓடோடியும்வந்து முனிவரது பாதகமலங்களிற் படிந்து நமஸ்காரஞ்செய்துஎழுந்துகைகளைக்கட்டி வாய்புதைத்துநின்றுசொல்லும்சுவாமிமுனிநாதரே! அடியேங்கள் கடைத்தேறும்படியாய்க் கிருபைசெய்து இரட்சிக்கவேண்டுமென்று மிகத் துன்பத்தோடுஞ் சொல்லித்தோத்திரஞ்செய்யும்போது சிந்துதீபரும் அவைகளின்மீது கருணைகூர்ந்து வாராய் கவிசம்புக்களே உங்களிருவர்களுடைய கர்மாநுபவங்களை யறிந்துகொண்டோம் யாதெனில், நீங்களிருவரும் வேதியர்களுக்குச் செய்த குற்றத்தால் நரியாகவுங் குரங்காகவுஞ் ஜனித்துக் காலத்தைக் கழிக்கின்றீர்கள். இப்போது உங்களுக்கு இந்த ஜன்மம் நீங்கிநற்சன்மம் பெறவேண்டுமாயின் நாமோருபாயஞ் சொல்லுகின்றோம். அது யாதெனில் இந்தபூலோகத்திலே தட்சிணபாகத்திலோங்குங் கந்தமாதனகிரிச் சாரலில் வழங்குஞ் சேதுவில் தநுக்கோடி என்று ஓர் புண்ணியதீர்த்தமிருக்கின்றது. அத்தீர்த்தம்மகா மகிமைபொருந்தியதாதலால் அதில் நீங்களிருவரும்போய்த் தீர்த்தமாயினுல் இச்சென்மம்நீங்குவதோடும் இதுவரையில் உங்களைப் பற்றியிருக்குஞ் சகலகருமங்களும் நாசப்பட்டுக் கிருதார்த்தராய் விடுவீர்கள், அஃதெப்

படியெனில் அந்த தநுக்கோடியிலே முன்னொருகாலத்தில்சுமதி என்னும் ஓர் பிராமணன் சுராபானஞ்செய்தும் வனசரஸ்த்ரீயைப்புணர்ந்தும், அவளுடன்கூடிஉணவுகொண்டும் தேடிய பாவங்களையெல்லாம் இந்த தநுக்கோடியிலே எளிதாய் நீர்த்துக்கொண்டான். அது எப்படியெனில் மராடதேசத்திலே எச்சுதேவனென்னும் ஓர் பிராமணன் ஹரிபூசை குருபூசையிலேமகாபக்தியுடையவனாகியும், வேதாகமங்களையுணர்ந்து அந்நெறியினின்றுந் தவறாமலிருக்குமவனுக்கு ஓர் புத்திரன் பிறந்துசுமதி என்று நாமம்பூண்டு வளர்ந்துவருபவன் அனங்காகமநூலைக்கற்று அதனாற் காமவெறிகொண்டுதனது தாய்தந்தையர்களைமதியாதவனாகியும் அவர்களது வார்த்தையைக் கேளாது மீறிநடப்பவனாகியும் துன்மார்க்கத்தன்மை பொருந்தி தன்னிச்சையாய்த் தாய் தந்தையர்களையுந் தானிருக்கும் பதியையும்விட்டு நீங்கி புற்கலமென்று சொல்லப்பட்ட தேசத்திற்போய்ச் சேர்ந்து பிராமண கருமங்களை யநுஷ்டியாமல் தன்னையொத்த இளைஞர்களோடும் ஸ்த்ரீ விஷயங்களில் ஆரம்பித்து மோகாந்தகாரனாய்த் திரிகிறபோது அம்மார்க்கத்தில் ஓர்நாள் வனத்தில் வேடிக்கையார்த்தமாய்ப் போகையில் அவ்விடத்தில் அதிரூபலாவண்யத்தோடுங்கூடியஓர் வேடுவஸ்திரீயைக்கண்டு காதல்கொண்டு அவளைச் சிநேகஞ்செய்து நாளுக்குநாள் அவள்மீது மையல்மீறி இருவரும் இணைபிரியாமல் இன்பலீலைகளை யநுபவித்துவருபவன் அவள் நிமித்தம் பொருள்வேண்டி களவுவிஷயத்திற்பிரவேசித்து அகப்பட்டவைகளைக்கொண்டுவந்து கொடுப்பதுவனத்தில் வேட்டையாடச் சென்று பறவை முதலியவைகளைப் பிடித்துக்கொன்று பக்ஷிப்பதும் தனது சாகியோடு ஒரேபாத்திரத்தில் உணவுகொள்வதும் மது முதலியலாகிரிவஸ்துக்களைஉண்டு வேடுவரோடுதானுமோர் வேடுவனாய்த்திரியுந்தொழிலை மேற்கொண்டுதிரிந்துபிராம்மணியத்தை மறந்தவனாய்த் திரிகிறபோது ஒருநாள் இச்சுமதி என்பவன்சில வேடுவருடன்சேர்ந்து அர்த்தராத்திரிப்போதில்அப்பட்டணத்திலுள்ளஓர் பிராமணன்வீட்டிற் கன்னமிட்டுப்புகுந்து அங்குள்ள பொருள்களைக் கொள்ளைகொண்டு அவ்வேதியனையுங் கொன்று அதிகசந்தோஷத்தோடும், சுருண்டுநெரித்த குழலும்செக்கர்வானம்போன்ற சிவந்த பற்களும் நீருண்ட மேகம்போன்ற தேகத்தையுமுடையதனது சாகியினது இல்லறத்திற்கு வருகிறபோது நீலநிறம்போன்ற தேகமும்; மூன்றாம்பிறையைப்போன்ற தந்தங்

சிவந்தமீசையும் கோரரூபமுடைய பிரம்மஹத்தியானது வந்து மறித்துக் கொண்டு அவனைப்போகவொட்டாமல் அநேக இம்சைகளை செய்கிறபோது சுமதி என்பவன் பிரமையடைந்து யாதுந் தோற்றாதவனாய்த் தன்னுடைய எண்ணங்களை மறந்து ஊர், நாடு தேசமுதலிய வனம் வனாந்தரங்களெல்லாந் திரிந்தலைந்து அகஸ்மாத்தாய்த் தாய் தந்தையர்வாழுந் தன்னுடைய சுதேசம் வந்து சேர்ந்து பெருந்துன்பத்தோடும் திரிகிறபோது அவன் தந்தையான பிராம்மணன் கண்டு தனது பிள்ளை யென்றறிந்து புத்திர வாஞ்சையினாலே மகிழ்வுகொண்டு நெருங்கி அவனுக்குற்ற வினைப்பகுதியைத் தெரிந்து அந்தோ அடா குழந்தாய் இவ்வினைக் கென்செய்வே னென்று துக்கசாகரத்துட் டோய்ந்தவனாய்ப் பின்னர் ஒருவாறு தேறி, இவனைப்பற்றிய பிரமையை எவ்விதத்தினாலாவது, நீக்க வேண்டுமென்னும் எண்ணங்கொண்ட சுமதியின் தந்தையினது கருத்தை யறிந்த பிரம்மஹத்தியானது கூறும் வாராய்ப் பிராம்மணா! நீ இவனைப்பிள்ளையென்னும பிரியத்தால் ஆதரவுசெய்யக் கருதுகின்றாய் அக்காரியஞ் செய்வது சரியல்ல ஏனெனில் மகா பாவியாகிய இவனைப் பார்க்கவும் படாது பிராமணனைக் கொலைசெய்த தோஷமானது இவனை விட்டு நீங்கத்தக்கதல்ல அதனறியும் இவன் பிராமண பீஜமாகவிருந்தும் கடைச்சாதியாகிய வேடிச்சியைச் சேர்ந்து மதுபான முதலிய லாகிரி வஸ்துக்களை யிச்சித்துக் களவுசெய்து காலத்தைக் கழித்துவருமிவனுடைய துர்நடத்தைகளை ஒருவராலுஞ் சொல்லி முடியாது மேலும் இவன் தாய்தந்தையர்களது வார்த்தையைக் கேளாமலும் அவர்களைப் போஷியாமலும், ஊரிற்கொள்ளையடித்து வேடுவபெண்ணினிடங் கொடுத்து அவளுடன் கூடிச் சுகித்திருக்கும் இக்கொடும்பாவியைச் சேர்த்து ஆதரவு செய்து வந்தால் இவனாலே உன்னையும் உனது குடும்பத்தையும் நாசப்படுத்துவேனாதலால் வீணே நாசந்தேடிக்கொள்ள வேண்டாம், யான் சொல்லுவதைச் செவ்வையாய்க் கவனித்துக்கடைத்தேறுவாயென்று கூறியதை பிராம்மணன் கேட்டு பளாபளா நன்றாயிருக்கின்றது, ஓ பிரம்மஹத்தியே! என்னவார்த்தை சொல்லினை உனக்குப் பயந்து யான் பெற்ற பிள்ளையை இழப்பேனோ இதோ உன்னை இமைப்போதிற் றூரத்தும் விதந்தேடுகிறேன் பாரென்று பிராம்மணன் சொல்ல அவ்வார்த்தையைக்கேட்ட பிரம்மஹத்தியானது உக்ரத்தோடும் பிராம்மணனை நோக்கி

அடா பித்தனே குலமுறை தப்பிநடந்த கொடும்பாதகனாகிய இவனைப் பிள்ளையென்று அபிமானித்துப் பெருந் துன்பத்தைத் தேடிக்கொண்டாய், இதோ பார்! என் பிரதாபத்தைக் காட்டுகிறேனென்று அவன் புதல்வனாகிய சுமதி என்பவனை திடீரென்று பூமியின்மீது மோதிவிழுந்து, என்புகள் நெக்கு விடும்படி முருக்கிக் கண்கள் பிதுங்கித் துன்பப் படும்படியாய் தாக்கியதை அவனைப்பயந்த தாய் தந்தையர்கள் கண்டு சகிக்கமாட்டாமல் இருவரும் அடித்து மோதிக் கீழேவிழுந்து, புரண்டுபுரண்டழுது சோபமுற்றிருக்கும்போது ஸ்ரீகைலாசபதியாகிய சாம்பமூர்த்தியைப்போல் துர்வாசமகாரிஷியானவர், விபூதிருத்ராட்சமாலிகாபரணராய் அவ்வீதிலெழுந்தருளக்கண்டு சோபமுற்றிருக்குஞ் சுமதியினது தாய் தந்தையர்கள் கண்டு திடீரென்றெழுந்தோடிவந்து, அவருடைய பாதபத்மங்களிற் பணிந்து நமஸ்காரஞ்செய்து அழைத்துவந்து தமது கிரகத்திலே தர்ப்பாசனமிட்டு ஆரோகணிக்கச்செய்து இருவருமெதிர் நின்று கைகட்டி வாய்புதைத்துத் தங்களுடைய புத்திரனது நடத்தைகளியாவுமெடுத்தோதி அவனைப்பற்றித் துன்புறுத்தும் பிரமஹத்தியை மாற்றும்படியாக மார்க்கத்தை அருளவேண்டுமென்று சரணாகதியடைந்து நிற்பவர்களைக்கண்ட துருவாச மஹாருஷியானவர் கூறுவார்.

கேளும் ஓய் பிராமணா! நீ இத்தன்மைபொருந்திய துன்மார்க்கனை விரும்பித் துனபுறுகின்றது நன்மையல்லவே, நன்மார்க்கனாயிருப்பானாயின், அவன் பொருட்டு இம்சையெடுத்துக் கொண்டபோதிலும் குற்றமில்லை என்று சொல்ல, அதைக்கேட்ட பிராமணன் துறுவாசரைப் பணிந்து சுவாமீ, அடியேன்நெடுநாள் பிள்ளையில்லாமல் தவஞ்செய்து பெற்ற இவன் ஒரு பிள்ளையன்றி, வேறு பிள்ளையில்லாமையாலும், எங்களுக்குப் பிறகு எள்ளுந் தண்ணீருமிறைக்கும்படியாயும் இவன் ஒருவனாலே குலநாசப்படாமல் விர்த்தியடையும்படியாயும், திருவுளங்கனியவேண்டுமென்று மிகத் துயரத்தோடும் வணங்கிக்கேட்கும் அவர்களது பரிதாபத்துக்கிரங்கி துருவாசமஹாருஷியானவர், வாரும் ஓய் பிராம்மணா மூப்புப் பருவத்தையுடைய நீ மெத்தவுந் துன்பப்படுகின்றபடியால், யாம் ஒருவார்த்தை சொல்லுகின்றோம், அது யாதெனில் உன் குமாரன் செய்திருக்குங் காரியங்களை யோசித்தால் இவன் செய்திருக்குங் கெட்டநடத்தைகளுக்குப் பரிகாரம் வேதவாக்கியங்களிலுஞ் சொல்லவில்லையாதலால் என் வாக்கியப்படி இப்பூவுலகின்கண் தட்சிண பாகத்திலோங்குங் கந்தமாதனகிரிச்சாரிபில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சே

துபந்தனத்தில் ஓங்குந்தநுக்கோடியில் உன்மகனைக் கூட்டிக் கொண்டுபோய் தீர்த்தமாடச் செய்வையேயாகில் அவனைப்பற்றி ய பிரமஹத்தியானது நீங்கிப்போம் அது எப்படியெனில் ஒரு காலத்தில் தருவிதனென்னும் ஓர்வேதியன் தனதுஅன்னையின் மோகத்துக்குட்பட்டு அதனாற் சம்பவித்ததோஷத்தை அந்த தநுக்கோடியில் தீர்த்தமாடி நிவர்த்திசெய்து கொண்டமையால் மகிமைபொருந்திய அப்புண்ணிய தீர்த்தத்துக்கு உன் புத்திரனைக் கூட்டிக்கொண்டுபோய் மூழ்கச்செய்வாயென்று மஹாருஷி சொல்ல அவ்வாய்மையைக்கேட்ட வசுதேவனென்னும் பிராமணன், சுவாமி! தேவரீர் திருவாய் மலர்ந்த தருவிதனென்பவன் யாருடைய புத்திரன் அவனுக்கென்ன காரணத்தினால் மாதாவைப்புணர மனமுண்டாயிற்று அவ்வாறு செய்தவனுக்கு இந்த புண்ணிய தீர்த்தத்தில் மூழ்கும்படியாய்ச் சொன்னவர் யவர் அவைகளை எல்லாம் அடியேனுக் கருள்செய்ய வேண்டுமென்று கேட்க துறுவாசர் கூறுவார். கேளும் ஓய் பிராமணா வைகைவள நாடென்று சொல்லப்பட்ட பாண்டிநாட்டில், பிரமகுலத்தினுற் பவித்து, இத்துமவாகனனென்னும் நாமகரணம்பெற்று, நான்குவேத ஆறுசாஸ்திரங்களையும் ஒதியுணர்ந்து வல்லவனாகிய ஓர் பிராமணன் அவனுடைய வாலிபபருவத்தில், பொன்போன்ற தேககாந்தியும் சந்திரபிம்பத்தைபோன்ற முகமும் தேவாமிர்தம் போன்ற இங்கிதவார்த்தையுமுடைய வாகினி என்னும் ஓர் வனிதையை மணந்து கூடிச்சுகித்து வாழுநாளில், அம்மங்கையானவள் அவளது பதினாறுவயதுக்குள் கர்ப்பமுற்று ஓர் ஆண்குழந்தையைப்பெற்று அக்குழந்தைக்குத் தருவிதனென்று பெயரிட்டு வளர்த்துவருநாளில் அவள் மணாளனாகிய இத்துமவாகனனென்பவன் மரணமடைந்தபடியால், வாகினி யென்பவள் மிகவுந் துன்பமடைந்து, குழந்தையுந் தாயுமாய்க் காலங்கழித்துவருகையில், அந்தநாட்டில் பன்னிரண்டுவருடம் வரையில் மழையில்லாமற் பஞ்சமுண்டாகிப் பாதவிக்கக் காலம் நேர்ந்தபடியால், மிகவும் பசிப்பிணியுற்றவர்களாய் மெத்தவும் மெலிந்து, இத்தேசத்தி லிருக்கப்படாதென எண்ணங்கொண்டு, அநேக பிரஜைகளுக்கு ஆதாரமாயும், தானியவகைகள் கூடியவரையில் கிடைக்கத்தக்கதாயு மிருக்குங் கோகரணமென்று சொல்லப்பட்ட பட்டணத்திற்குத் தன்பிள்ளையோடும் போய்ச்சேர்ந்து ஜீவித்துவரும்நாளில், பிள்ளையாகிய தருவிதனென்பவன் சமர்த்தனாயும், அதிரூபசவுந்தரனாயும், பற்பல பாஷைக யுணர்ந்து விட

யானந்தப் பருவமுற்றவனு யிருப்பதுகண்ட அவன் தாயாகிய வாகினி யென்பவள் தருணியாதலால் பிள்ளையின் சவுந்தரியத்தைக் கண்டு மோகங்கொண்டு, இச்சையை குறிப்புகளினுற் காட்ட, அதையறிந்த குமாரனும் தாயென்பதைமறந்து ஒருவருக்கொருவர் சிநேகஞ்செய்து, காமவின்பத்தை நுகர்ந்திருந்தார்கள், இப்படியிருக்குங் காலத்தில் இந்த துருவிதனைவன், பூர்வபுண்ணியவசத்தா லுண்டான நல்லறிவினுல் ஐயோ நான்தாயைப்புணர்ந்த பாவத்தை யெப்படி தொலைப்பேனென்று பரிதபித்து, அங்கே யொரு வனத்திலுள்ள முனிவர் கூட்டத்தை யடைந்து தன்வரலாற்றைச் சொல்லியவுடனே, அதைக்கேட்ட முனிவர்களெல்லாம், இந்தப்பாவியைக் கண்டாலும்பாவமென்று கண்களைமூடிக்கொண்டும், இந்தச்செய்தியைக் கேட்டாலும்பாவமென்று செவிகளை மூடிக்கொண்டு மிருந்தார்கள்.

இதைக்கண்ட துருவிதன் மெய்நடுங்கி, மெத்தவும் வியாத்தை யடைந்து, பின்னும் அம்முனிவர்களை வணங்கித் தோத்திரஞ்செய்து ஓ மாதவர்களே, வினைவலியால் தெரியாமல் நடத்திய என்னைச்சிறித் துரத்தினுல் வேறுகதியில்லையே அந்தோ! வீணே யான் கெட்டுப்போகின்றேன் என்செய்வேன் சாகரமானது ஜலதாரையில் வீழும் நீரைத் தள்ளாமல், அங்கிகரிக்குந்தன்மை போற் சண்டாளனுகிய என்னைக் கடைக்கணித்தாளாவிடில், தமியேன் எவ்வாறுய்வேனென்று துக்கசாகரத்துட் டோய்ந்து நிற்குந் துருவிதனை, அம்முனிவர்களுக்குள் ஒருவராகிய வேதவியாசர் நோக்கிப் புகலுவார்- அடா பாதகனே நீ உனது பாவத்தைப் போக்கவேண்டுமாயின், யான் சொல்லுவதைக்கேள், யாதெனில் தசரத மகாராஜன் புதல்வனுகிய ஸ்ரீராமமூர்த்தியால் உண்டாக்கப்பட்ட தநுக்கோடியென்னும் புண்ணிய தீர்த்தமானது லோகத்தில் வசிக்கும் மானவர்களிடத்து பஞ்சமாபாதகங்களையும், செய்நன்றி மறந்தபாதகங்களையும், குருநிந்தை செய்த பாதகங்களையும், சிநேகத்துரோகத்தால் வந்த பாதகங்களையும், பரஸ்த்ரீகமனத்தால் வந்த பாதகங்களையும், சிவாலய விஷ்ணுவாலயங்களுக்குரிய சொத்துக்களை யிச்சித்ததால் வந்த பாதகங்களையும், வேதப்பிராம்மணனுக்கு ஏதேனும் ஓர் வஸ்துவைத் தருகிறேனென்று சொல்லித் தராமல் வஞ்சித்ததனுல் வந்த பாதகங்களையும் தாயையும் சகோதரிகளையும்

இச்சித்துப் புணர்ந்ததனால்வந்த பாதகங்களையும், தமைய ன்பத்தினி குருபத்தினி சிநேகன்பத்தினி முதலியோர்களை இச் சித்ததால்வந்த சாதகங்களையும்போக்கிப் புநிதனாக்கிமுத்திவீட் டைத்தருமென்று, சுருதிவாக்கியங்களாற் சொல்லப்பட்டிருக் கின்றபடியால் யான்சொல்லும்வண்ணம், நீயும் உனதுதாயுமாக ச்சேதுவுக்குச்சென்று அவண்விளங்காநின்ற ஸ்ரீராமதநுக்கோடி என்னும் புண்ணியதீர்த்தத்தில்தீர்த்தமாடி' இராமலிங்கத்தைப் பணிந்து வருவீர்களாயின் உங்களைப்பற்றிய தோஷங்களனைத் தும் பருதிமுன்பனிபோல்விலகிக்கிருதார்த்தனாவாய், போய்வா க்கடவை என்று கூற, அவ்வாய்மையைக்கேட்ட துருவீதன், மெய்ப் புளகங்கொண்டு, ஸ்ரீவேத வியாசருடைய பாததாமரை யிற் பணிந்தெழுந்து, பலவாறாய்த் தோத்திரஞ்செய்து விடை பெற்றுமீண்டு மெத்தவுஞ் சந்தோஷங் கொண்டு, கோகரணம் வந்துசேர்ந்து தனது அன்னையாகிய வாகினியை கூட்டிக்கொ ண்டு, பட்டணத்தை விட்டுநீங்கிக் காடு, மலை, வனம், வனாந்தரம் கானாறு முதலியவைகளையும், பதிகளையும், தலங்களையும் திவ்ய க்ஷேத்திரங்களை யெல்லாங் கடந்து, கந்தமாதன பர்வதச்சார்பி லோங்குஞ்சேதுவைக்கண்டு, அங்ஙனமிலகுந் தநுக்கோடியைத் தெரிசித்துப்பின்பு உத்தராயன புண்ணியகாலத்திற் சூரியன்மக த்துவரும் அமாவாசை தினஞ் சூரியோதயவேளையிற் சங்கற்ப விதியின்படித் தாயும் பிள்ளையுமாய் தீர்த்தமாடி, இராமலிங்கத் தைப் பூசித்துபணிந்து அவ்வாறு முப்பதுநாள்வரையில் தீர்த்த மாடிவருகிறபோது, ஆகாயத்தின்கண் ஓதுருவீதனே, நீதாயை இச்சித்த தோஷம், நிவர்த்தி யாகிவிட்டது, புநிதனானாயென்று அசரீரியோத அவ்வாய்மையைக்கேட்ட இருவரும் மகாசந்தோ ஷத்தை படைந்து, ஸ்ரீராமநாதனைப் பணிந்து தோத்திரஞ் செ ய்து, விடைபெற்று மறுபடியும் வேதவியாசர் எழுந்தருளி யிரு க்கும் வனத்துக்கு வந்து, அம்முனிவருடைய பாதகமலங்களி ல் இருவரும் பணிந்து, தோத்திரஞ்செய்து, தநுக்கோடியிற் றீர்த்தமாடிவந்தோம் சுவாமி என்றோத அம்மொழியைக்கேட்ட வேதவியாசர் களிப்படைந்து கூறுவாராயினர்.

வாராய் துருவீதனென்னும் புநிதனே! நீ எனது வாய்மை யின்படி தாயும் பிள்ளையுமாய் தநுக்கோடியில் மூழ்கியபோதே உனது பாபமனைத்தும்பரிகாரமானதோடும், எமபோலியர்களைக் கண்ட புண்ணியத்தால் விசேஷகீர்த்தியும், அஷ்டஐசுவரியமும்

பெறுவாயாதலால், நீ உனது தேசம்போய்ச்சேர்ந்து மூதுணர்ந்தோர்களால் வேதாகமங்களையுணர்ந்து, வல்லவனும் உனதுகுலத்தில்விவாகஞ்செய்துகொண்டு, மறைவிதிபிறழாது,தருமங்களை நடத்தி ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவத்தையும், மகாவிஷ்ணுவையும் பூஜித்து, சுகஜீவியாய் வாழ்ந்து வரக்கடவை போய்வாவென்று விடைகொடுத்தனுப்ப, அவ்விடையை இருவரு மேற்றுப்பணிந்து அவ்விடத்தினின்றும் பிரயாணப்பட்டு தங்கள்தேசம்வந்துசேர்ந்து தன்குலத்திற் பெண்ணைவிசாரித்துக்கலியாண முடித்து மரபுநெறிதவறாமல் வேதசாஸ்திரங்களை விசாரணைசெய்து, அம்முறைப்படி நடந்து புத்ர மித்ர களத்ராதிகளுடனே வாழ்ந்துகொண்டிருக்கையில், துருவிதன் தாயானவள் பரமபதமடைந்தாள் அவ்வாறு அடைந்து சிலகாலத்தின்பிறகு துருவிதனும், மோட்சசாம்பிராச்சியத்தை யடைந்தானதலால், அத்தன்மையாகிய மகிமையுற்ற தநுக்கோடியிலே நீ உனது புதல்வனைக்கூட்டிக் கொண்டுபோய் தீர்த்தமாடி வருவாயென்று துருவாசமஹருஷியானவர் சொல்ல அந்தப்படியே எச்சுதேவன், தனதுபுத்திரனைக்கூட்டிக் கொண்டுபோய் சங்கற்பவிதியின்படி ஆறுமாதம்வரையிலிருந்து, அப்புண்ணிய தீர்த்தத்தில் மூழ்கிவருகிறபோது ஆகாயவீதியினின்று ஒருவாக்குப்பிறந்தது அது யாதெனில், ஓ எச்சுதேவனே உனது குமாரனைப் பற்றியிருந்த பிரம்மஹத்தியானது தென்றிசைநோக்கி யோடிப்போனதன்றியும், வேடுவஸ்த்ரீயைப் புணர்ந்த பாவமும் கொலை, களவு, கட்காமத்தால்வந்த பாவமும், இந்தப் புண்ணிய தீர்த்தத்திற் கரைந்தோடிவிட்டபடியால், மகா புநிதனானென்று அசரீரியோத, அம்மொழியைக்கேட்ட எச்சுதேவன் தனதுகுமாரனுடையமுகவிலாசத்தைக்கண்டு சந்தோஷங்கொண்டு, தநுக்கோடியையும், ஸ்ரீராமநாதனையும் புகழ்ந்துதோத்திரஞ்செய்து விடைபெற்றுத் தன்னுடையபட்டணம்வந்துசேர்ந்து, தனதுபுதல்வனுக்குவிவாகமகோற்சவஞ் செய்து வைத்துச் சுகஜீவியாய் வாழ்ந்திருந்தானதலால்; நீங்களிரண்டுபேருந் தநுக்கோடிலே போய்த் தீர்த்தமாடினால், உங்களுடைய பாபங்களும்விலகி, இச்சன்மமு மொழியுமென்று சிந்துதீபமகாமுனிவர் உரைத்துச்சொல்ல, அவ்வார்த்தையைக் கேட்ட நரியும் குரங்கும் மிகச்சந்தோஷத்தையடைந்து அவ்வனத்திலிருந்து பிரயாணப் பட்டு காடு, மலை, வனம், வனாந்தரங்க ளெல்லாங் கடந்து சேதுவிலேயங்குந் தநுக்கோடிக்கு வந்து சேர்ந்து மிக உச்சாகத் துடனே அத்தீர்த்

த்தில்விழுந்துமூழ்கி எழுந்திருக்கும்போது அவ்விரண்டுஞ்செய்த பாவங்களெல்லாம் நீங்கி மேன்மையடைந்து, தேவரூபங்களைப்பெற்று திவ்யசொரூபமாய் மகரகுண்டல கேயூரமணிமாலைகளோடும், விபூதி உருத்திராக்ஷமாலைகள் பிரகாசிக்கும்படியாய் ரம்பாஸ்திரீகள் சாமரையிரட்ட அநேக கோலாகல திவ்யரதங்களுடனே மகாமேருவைப்போற் பிரகாசிக்கப்பட்ட விமானமானது ஆகாசவீதியினின்றுமிறங்க தேவர்கள் மலர்மாரிசிந்த, அவ்விமானத்திலேறித் தெய்வலோகம்போய்ச்சேர்ந்து வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

கேட்டீர்களோ நைமிசாரண்யர்களே! நரியுங் குரங்கும்பெறுதற்கரிய புண்ணியத்தைப்பெற்று அனந்த போகங்களை அநுபவித்திருக்கும்படி நேரிட்டது யாது காரணமெனில், ஸ்ரீராமச்சந்திரனுடைய அஸ்தவிசேஷத்தினாலும் வரப்பிரசாதம் பெற்று விளங்குஞ்சைதன்யசொரூப ராமதனுக்கோடிமகிமையை ஆதிசேடனுக்கும் சொல்ல அரிதென்றால், மற்ற யாவராற் சொல்லக்கூடும்இதல்லாமலும்,அந்தத்தநுக்கோடியில்துராசாரனென்றொருவன் தீர்த்தமாடி மோக்ஷசாம்பிராச்சியத்தை யடைந்தானென்றுமுனிவர்சொல்ல,அவ்வார்த்தையைக்கேட்டநைமிசாரண்யமுனிவர்கள் முனிவரைப்பணிந்து சுவாமி! அவன் யாவன் அவனுக்கு என்னகாரணத்தால் வினைப்போகம் நேர்ந்தது, எவ்வாறித்தீர்த்தத்தில் வந்து மூழ்கினான். அந்த தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்கச் சூதமகாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

கவிசம்புச்சரித்திரம்

முற்றிற்று.

# துராசாரச்சரித்திரம்.



கேளுங்கள் முனிவர்களே! நெடியகடல்சூழ்ந்த இவ்வுலகின் கண் அலைகள் கொழித் தருவிபாய்ந்தொளிக்கும் நித்திலக்குன் றின்மேல் முனிவினங்கள் தவழ்ந்து விளையாடப்பட்ட வளம் பொருந்திய கவுதமிநதி தீரத்திலே துராசாரனென்னுமோர் பிராமணன் தனது குலாசாரவிதியைச் சொற்பனத்திலும் நினை யாதவனாய் என்றும் இழிவான காரியங்களிற் பிரவேசித்து விஷமுந் தீயுங் கலந்ததுபோல் தன்னோடொத்தவர்களின் நட் புக்கொண்டு, பிராமண சங்கற்பத்தை மறந்து தன்னுடன் சேர்ந்த நன்மார்க்கரையுந் துன்மார்க்கத்துக் கேதுவாக்குந் திறமுற்று உலாவுங்காரண மியாதெனில், நான்கு வேதங்களை யுமுணர்ந்த வேதாகம புராண சம்பன்ன வைதிகப் பிராமணனா யிருந்தாலும் பதிதனுடன் ஒருநாட் சாவகாசஞ் செய் தால் ஒருபங்கும் இரண்டுநாட் சாவகாசஞ் செய்தால் இரண்டு பங்கும், மூன்றுநாட் சாவகாசஞ் செய்தால் மூன்றுபங்கும், நா ன்குநாட் சாவகாசஞ்செய்தால்நான்கு பங்குமாகஇவன் புண்ணி யமனைத்தும் வியர்த்தப்பட்டுஅவனைப்போல இவனும் பதிதனாகி விடுவானென வேதங்கள் முறையிடுகின்றபடியால், அத்தன் மை பொருந்திய துர்நடத்தையும், துர்ச்சாவ காசமும், மிகு தியும் விளங்குவதனாலே அவனைஓர் வேதாளமானது பிடித்து கொண்டு அநேகநாள் வரையில் இராப்போதிலிருந்த விடத்தில் பகற்போதில்லாமலும், பகற்போதிலிருந்தவிடத்தில் இராப்போ தில்லாமலுஞ் செய்வதோடும் முட்களிற் கொண்டுபோய் விடுத் தும், கற்களிற் கொண்டுபோய் மோதியும், மலமூத்திரங்களை அ ருந்தச்செய்தும், தண்ணீர்கண்ட இடங்களிலெல்லாங் கொண்டு போய் அழுத்தியும், இப்படி நானாவித உபத்திரவஞ்செய்துவரு கிறபோது ஒருநாள் அவன் முற்செய்த புண்ணியபலத்தினால், அவனை வேதாளமானது தன்மீது ஏற்றிக்கொண்டு தென்றிசை யிற் சமுத்திரக்கரை யோரமாய் வருகிறபோது; ஸ்ரீராமமூர்த்தி யாற் புதுக்கப்பட்ட சேதுபந்தனத்திலோங்குந் தநுக்கோடியெ ன்னும் புண்ணியதீர்த்தத்தைக் கண்டு இதுவும் மற்றஜலங்களைப் போன்றதுதானென எண்ணி துராசாரனை அதில் தோய்த்து, ஒரு சாமபரியந்தம் அழுத்திக்கொண்டிருக்கும்போது அவ்வே

தாளத்துக்கு அகஸ்மாத்தாய் ஏதோவொரு துன்பமுண்டாகி, துராசாரனை விட்டு விட்டுக் கோவென்றலறிக் கூக்குரலிட்டுக் கொண்டு, திரும்பிப் பாராமல் ஓடிப்போய் விட்டது அவ்வாறு வேதாளம் ஓடினவுடனே துராசாரன் அப்புண்ணிய தீர்த்தத்தில் மூழ்கிய பெருமையினாலே அவனுடைய அஞ்ஞானங்களெல்லாமகன்று, தெளிவு பிறந்து அலைகளை யெறியாநின்ற கவுதமி நதி தீரத்திலிருந்த நாம், இப்போது சமுத்திரக்கரை யோரத்திலிருப்பதற்குக் காரணமியாதென்று யோசித்துக் கொண்டு நிற்கும்போது, மகா உத்தம குணத்தையுடைய யோகநிஷ்டாபரராகவும், சத்தியஞான பரிபூரணமாகவும், சகல வேதசாஸ்திர வாக்கிய குணசீலராகவும், விளங்கும் தத்தாத்ரேய ரென்பவர், வலம்புரிச்சங்கினங்களும், இடம்புரிச் சங்கினங்களுந் தவழ்ந்து விளையாடா நின்ற தனுக்கோடியில் தீர்த்தமாட வேண்டுமென்னு மெண்ணத்தோடும் அவண் வருகையில் இவரைக் கண்ட துராசாரன் பணிந்து துதித்து கைகட்டி வாய்புதைத்து நின்று கூறுவான் சுவாமீ அடியேன் கவுதமி நதிக்கரையோரத்தி லிருபபவன் அகஸ்மாத்தாய் இந்த சமுத்திரக் கரையிலிருப்பது எனக்கு ஒன்றுந் தோற்றுமையால், தேவரீர் அடிமை இவ்விடம் வந்த விதத்தை யருள்செய்ய வேண்டுமெனக் கேட்க, அவ்வார்த்தையைக்கேட்ட தத்தாத்ரேயர் கருணையோடும் துராசாரனை நோக்கி புகலுவார். ஓப் பிராமணா நீ பிரம்மகுலத்திற் பிறந்து இதுவரையிலும் பிரம்மக்யான மில்லாமல் இழிகுலத்தோரைச் சேர்ந்து திரிந்தபடியினாலே உன்னை யோர் வேதாளமானது பிடித்துக் கொண்டு நானாவித துன்பங்களுக் காளாக்கி, இந்த தனுக்கோடியினது மகிமையை அறியாமல், உன்னை இங்குக் கொண்டுவந்து, இப்புண்ணிய தீர்த்தத்தில் அழுத்துகிறபோது, இந்தத் தனுக்கோடியிலுள்ள வடவா முகாக்கினியானது வேதாளத்தைக் கொளுத்தித் துன்பப்படுத்திய படியினாலே, அவ்வேதாளம் பயந்து நன்மார்க்கத்தை யுணர்ந்து ஓடிப்போயினது ஆதலால இப்போது உன்னிடமிருந்த துன்பங்களை யெல்லாமகன்று, பரிசுத்தனாய் விளங்குகிற தல்லாமலும் உன்னைப்பற்றியிருந்த வேதாளமானது முந்திய ஜன்மத்தில் பிராம்மணனாக பிறந்திருக்கும் போது, சூரியன் கன்னியாராசியிற் பிரவேசிக்கச் சந்திரன் கலை குறைந்து வரும்பக்ஷம் மஹாலய பக்ஷமாதலால், அப்புண்ணிய காலத்தில் தன் மாதாப் பிதாக்களைக் குறித்தும் அவர்கள் சந்

தோஷிக்கும்படியாய் மஹாலயசிராத்தம், அக்கினி ஹோத்திரங்கள் செய்யாமலிருக்க மூடத்தன்மையினாலே அந்தப் பிதுர்தேவர்கள் அவனைவேதாளமாய்ப் போகக்கடவதென்று சாபங்கொடுக்க, அதுமுதல் அவன் நாச மடைந்து வேதாளமாகப்பிறந்து உலகின்கண் அலைந்து திரிகையில் உன்னை கண்டுபிடித்து பற்பல துன்பங்களைச் செய்து இந்தத் தநுக்கோடியில்வந்து மூழ்கின பலத்தினாலே, உன்னை இங்ஙனம் விட்டு தேவசொரூபம் பெற்று தெய்வலோகத்திலிருந்து வந்த புட்பக விமானத்திலேறி பரமபதம் போய்ச் சேர்ந்தானாதலால் இப்பூ மண்டலத்தின்கண் எவர்களாயினும் பிறந்திருந்தால் கன்னிமாதத்தில் மாதா பிதாக்களுக்கு எவ்விதமேனும் மஹாலயசிராத்தம் நடத்த வேண்டும். அப்படி நடவாத பாவிகள் இப்படியேநாசமடைந்து வேதாளமாகப் பிறந்து சந்திர சூரியர்களுள்ளளவும் அலைந்து துன்பப்படுவார்கள். அதற்குச் சந்தேகமிராது, அந்தக்கன்னி மாதத்தில் பிதுர்தேவர்களுக்குரித்தாய் உத்தமராகிய பிராம்மணர்களுக்கு போஜனஞ் செய்யும்படி கொடுக்கப்பட்ட புண்ணிய வான்கள்சொர்க்கலோகத்தை யடைவார்கள்.

அப்படிச் செய்யாதவர்கள் உன்னைப்பற்றி யலைந்துக்கொண்டிருந்த வேதாளமாய்ப்பிறந்து திரிவார்கள், இதெல்லாமனும் இந்த மஹாளயபட்ச சிராத்தங்களைக் கன்னிமாதமுதல் விருச்சிகமாதவரையினும் செய்யவேண்டிய நாளாய் விதித்திருப்பதனாலும் புரட்டாசிமாத அமரபக்ஷபிரதமைமுதல் அமாவாசை பரியந்தம்முக்கியதினங்களாய் விளங்கப்பட்டவிரதமையில். மஹாலயஞ்செய்தபேர்களை அக்கினிபகவான் முதலிய தேவர்களெல்லாஞ் சந்தோஷப்பட்டு தங்களுடையலோகத்தில் சுத்தசீலராய் விளங்கும்படிசெய்துகொள்ளுவார்கள். அப்படிச்செய்யாப்பாவிகளை அவர்கள் பாக்கியங்களை யெல்லாமழிந்து பிதுர்தேவதைகளாலே ஓர் கற்பகோடிகாலம்வரையில் மீளாத்துன்பத்துக் கேதுவாகும்படியாகிய சபத்தைகொடுப்பார்கள் அதில்இரண்டாவது மஹாலயத்தைப் பிதுர்தேவதைகள் சந்தோஷிக்கும்படியாய்நடத்திவைப்பார்களாயின் அவர்களை திரிநேத்திரதாரியாகிய சாம்பமூர்த்தி எழுந்தருளியிருக்கும் ஸ்ரீகைலாசகிரியிலே எப்போதும் விளங்கச்செய்வார்கள். இப்படிச்செய்யாதபேர்களை உமாமகேசனது ஆக்ஞைபின்வண்ணம் யமகிங்கியர்களாலே வாதைப்படச்செய்து நரகத்திற் கிடத்துவார்கள் மூன்றாந்திதியாகிய திரி

திகை தினத்தில் மஹாலயத்தை நடத்தி அதனால் பிதுர்தேவதைகள்மனமகிழ்ச்சியடைந்தால், அவர்கள்ஈசுவர கடாக்ஷம்பெற்று நவநிதிகளுடனே வாழ்ந்திருந்துமுடிவில் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன்என்னும்அம்மூவர்களுக்குரிய பதங்களையும்பெற்றுமூவாயிரம் வருடம் வரையில் சந்தோஷத்தோடேயிருப்பார்கள்.

அங்ஙனம்நடவாதவர்களுக்கு, அவர்களுடையமனமானது வெதும்பவும், கிடைத்திருந்த பாக்கியங்கள் நாசப்படவும், சாபங்கொடுப்பார்கள். நாலாந்திதியாகியசதுர்த்திதினம் மஹாலயஞ் செய்துபிராம்மணுளுடைய மனங்களிக்கும்படியாய்ச்செய்தவர்கள். கன்னமதம் கபாலமதம், பீஜமதமென்னும்மும்மதம்பொழியத்தக்க யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளினது அருளுக்கமுற்று, போகபாக்கியங்களையும் புத்திரமித்திர களத்ராதிகளோடும் வாழத்தக்க பெருமையையு மடைவதோடும், அவர்கள்மீது பிதுர்தேவதைகள், இருபதினுயிரங்கோடி கற்பகாலம் வரையும் மகிழ்ச்சியடைவார்கள். அவ்வாறு செய்யாதவர்கள், கண்டகோலாகலமென்று சொல்லும்நரகத்திற் கிடந்தலைவார்கள் ஐந்தாவது பஞ்சமியில் மஹாலயஞ்செய்தவர்கள், தங்கள்கிரகத்தில் மகாலட்சுமியானவள் சதா வாசஞ்செய்யவும், சகலபோக பாக்கியங்களை யெல்லாம்பெற்று, சந்திரசூரியருள்ளவரையிலும் கெடியகீர்த்திபெற்று, ஐம்பதினுயிரம் வருடம் வரையில் அவர்களுடைய சந்ததியார் குறைவின்றி வாழும்படியாய் பிதுர்தேவதைகள் வாக்களிப்பார்கள். அப்படிச் செய்யாதவர்கள் மூத்தாளென்னும் மூதேவியினது நட்புக்கொண்டு மனக்கலக்கத்தோடும் பெருந்துன்பத்தை யடைவார்கள். சஷ்டிதினத்தில் மஹாலயஞ்செய்தபேர்கள், ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவத்தினது நுதல்விழியின்றும் ஆறுபுலிங்கமாகவெழுந்த சண்முகக்கடவுளினது கிருபையினுல் அஷ்ட ஐசுவரியமும்பெற்று, முடிவில் அக்கடவுளினது பதத்தைபெற்று வாழ்வார்கள்

அவ்வாறு செய்யாதவர்கள், எரிகுடமியென்னும்நரகத்துக்காளாக விருப்பதோடும், அவர்களுக்கு உற்பவிக்கும் குழந்தைகளையாவும் சுப்பிரமணியக்கடவுள் நசிக்கச் செய்வதல்லாமலும், பூமியிற் பல துன்பங்களை யடைந்து, பிதுர்தேவதைகளாற்சாபங்கொடுக்கப்படுவார்கள். சப்தமியில்,மஹாலயஞ்செய்வோர்கள்

சூரியபகவானுடைய கிருபையினுற் போகபாக்கியங்களும், புத்திர மித்ர களத்ராதிகளும்பெருகி, சகலநோய்களு மணுகாமல் புஜபலபராக்ரமராயும் தருமபரிபாலனராயும் மேன்மையான பாக்கியங்களைப் படைத்துவாழ்வதோடும், பிதுர்தேவதைகள் எ... பதினாயிரம்வருடம் வரையில் திருப்தியடைவார்கள் அப்படிநடவாதவர்கள், க்ஷயரோகத்தையடைந்து அதனாலே தேகமிளைத்து மாளும்படியாய் பிதுர்தேவதைகளாலேசாபமுற்று இரவுரவாதி நரகங்களையடைவார்கள். அ டமியிற்செய்தவர்களுக்குஅஷ்டமூர்த்தியின் கிருபையினால் மிருத்துக்களடையாமல், புண்ணிய லோகமுதற் பதினான்கு லோகங்களிலுமுன்று பொருள்களையும் எளிதாகப்பெற்று வாழும்படியாய் ஆயிரம்வருடம்வரையில்அவர்களது பிதுர்தேவதைகள் சந்தோஷத்தை யடைவார்கள், அப்படி நடத்தாதவர்கள் கோழைமலமூத்திரமாகியதுன்பசாகரத்திலாழ்ந்து கறைபேறமாட்டாமல் நட்சத்திரங்களும், சந்திரனுமுள்ளவரையில், வைதரணியிலழுந்திநாசத்தையடைவார்கள்நவமி தினத்தில் நடத்தின பேர்களுக்கு மாயாசத்தியாகிய துர்க்கையின்கிருபையினால் குமரகண்டம், குருத்திரம், வேதாளமுதலிய பேய் க்ஷயரோகம், இப்பேர்க்கொத்த வினையாவுமணுகாமல் சுகஜீவர்களாயிருப்பதோடும், முப்பதினாயிர வருடம்வரையில்அவர்களுடைய பிதுர்தேவதைகள் சந்தோஷத்தையடைவார்கள்அப்படிசெய்யாதவர்கள், மேற்சொல்லிய நோய்களுக் குரியவர்களாகிநாசமடைவ தன்றியும், மீளாநரகங்களுக்கு ஏதுவாவார்கள் தசமியிற் செய்தபேர்களுக்கு சந்திரபகவானுடைய கிருபையினாலே அவர்கள் இட்ட பயிரெல்லாம விளைந்து, சகலதான்யங்களுமபிவிர்த்தியாய் லட்சுமிகடாக்ஷ முண்டாகும்படி ஆயிரவருடம் வரையில் அவர்கள் பிதுர்தேவதைகளின் சந்தோஷத்தையடைவார்கள். அப்படி நடத்திவைபாதவர்கள், தங்களுடைய தேஜசும் ஆயுசும் வேளாண்மையும், கீர்த்தியும், புகழும் நாசமாய்ப்போகுமபடியாய்ப் பிதுர்தேவதைகளாலே சாபம்நேர்ந்துஇரவுரவாதிநரகத்தையடைவார்கள். ஏகாதசிதினத்தில் மஹாலயஞ்செய்தபேர்கள் பரமேசுவரனுடைய கிருபையினால் அவர்களைப் பற்றிய பிரம்மஹத்தி தோஷங்களெல்லாம் நிவாரணமாகி அநேகம் யாகாதி கிர்த்தியங்கள்செய்த பலனைப்பெற்றுநூறாயிரம்வருடம் வரையில் தங்கள் பிதுர் தேவதைகளாற் சந்தோஷத்தையடைவார்கள் அவ்வண்ணமிலாதவர்கள் மேற்கூறிய பலன்களை

யாவுமிழந்து நரகமே கதியாகவிருப்பார்கள் துவாதசி தினத்திற் செய்தோர் மகாலட்சுமிசமேதரான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் கிருபையைப்பெற்று சதாகாலமும் சரஸ்வதியும் இலட்சுமியும் தாண்டவஞ் செய்யும்படியாயும், சகல ஜீவராசிகளுந்தங்களைவாழ்த்தும்படியாயும் சகல நோய்களும் நிவாரணமாய் பாக்கிய சம்பன்னராய் புத்திரமித்ர களத்ராதிகளுடனேயிருக்க பிதுர்தேவதைகளும்மனமகிழ்ச்சியடைந்து இலட்சம்வருடம்வரையில்ஆனந்தபோகங்களை அனுபவிப்பார்கள்.

அவ்வாறு அத்திதியிற்செய்யாதபேர்கள் பூதவேதாளபசாசகணங்களாலும், குமரகண்ட முதலிய வியாதிகளாலும், துன்பப்பட்டு நரகமே தங்களுக்கு சொந்தபூமியாகவிருந்து நலிவார்கள் திரயோதசி தினத்திற் செய்வாராயின், அவர்கள் ஸ்ரீவைகுண்டநாதன்புத்திரனாகிய பஞ்சபாணனுடைய அருளால்குங்கும கதம்ப களபகஸ்தூரிகளென்னும் வாசனைத் திரவியங்களோடும், அதி ரூபலாவண்யமுடைய அநேகம் ஸ்திரீகளோடும், மன்மதனைப்போல போகபாக்கியங்களை அனுபவிக்கும்படி பிதுர்தேவதைகள் கோரிச் சந்தோஷத்தையடைவார்கள், அவ்வாறு நடவாதவர்கள் உருக்குலைந்து புத்திரபாக்கியங்களுமற்றுதனகனகவஸ்துவாகனங்களுக்கும் அயலாகிநாசத்தையடைந்து, எத்தனை ஜென்மமெடுத்தபோதினும் ஈடேறாமல் நாசத்தை யடைவார்கள் சதுர்த்தசிதினம் செய்வாராயின் அவர்கள் ஸ்ரீபரமேசுவரனுடைய அருளினால் வேண்டியபாக்கியங்களை யெல்லாம் பெற்று ஞானேதயராய் பெறுதற்கரிய பேரின்பவீட்டைப்பெறுவார்கள்

அவ்வாறு செய்யாதவர்கள் அவர்கள் ஜென்மங்கடோறும் கொலை, களவு, கள், காமம், வஞ்சனை, சூது, பொய்முதலிய துர்க்காரியங்களுக்கெல்லாந் தலைமை பூண்டவர்களாய் நீசஸ்திரீகளைச் சேர்ந்து வேண்டாதபோகங்களை நுகர்ந்து ஆயிரம் யாகங்களைக்கெடுத்த தோஷத்துக்குரியவர்களாய் நூறுகோடி வருடந்தீராத சூறுவளியிலகப்பட்டும் அவர்கள்செய்த பாபங்களுக்குப் பரிகாரமில்லாமல் செய்யாமற்ஜெனித்த பாதகங்களும்உண்ணுமலுற்ற பழிகளும் அவர்களுக்கே யுண்டாகும்படியாய் பிதுர்க்களினுடைய சாபம் நேர்ந்து வாக்கினாலும் மனத்தினாலும் அளவுபடுத்தப்படாத நரகத்தை யடைவார்கள். அமாவாசையில்மஹா

லயஞ்செய்து பிராமணரும்பிதுர்தேவதைகளுஞ்சந்தோஷப்படு ம்படியாய் அன்னமிட்டுதட்சணை தாம்பூலங்கள் தளர்ச்சியில்லா மற்கொடுத்து மகிழ்வுறச்செய்தவர்கள் ஸ்ரீகைலாசபதியாகியசா ம்பவமூர்த்தியின் கருணைபெற்றுமகிழவதோடும் அவர்கள்பிதுர் க்கள் அடையமகிழ்வைச் சொல்லிமுடியாது. அதிலும்சமுத்திர தீரத்திலாயினும் நதிக்கரையி லாயினும் பருவதங்களி லாயினும் புண்யக்ஷேத்திரங்களி லாயினும்சென்று செய்வார்களாயின்அவ ர்களுடைய பிதுர்க்கள் மெத்தவுஞ் சந்தோஷத்தை யடைந்து பிரம்மஹத்தி முதலியபஞ்சமாபாதகங்களும் நிவாரணமாகி, யா காதிகிர்த்தியங்கள் எக்ஞங்கள் அளவுபடாத தானதருமங்கள் செய்தபலன் கிடைப்பதன்றியும் ஞானமும் கைகூடும். அப்படி அமாவாசையிற்செய்யாமல் மவுடீகமா யிருந்துவிட்டவர்கள்எவ ர்களோ அவர்களுடைய பிதுர்க்களியாவரும் பிரமலோகமடைந் திருந்தாலும் அவர்களை யாதொரு தயைதாட்சண்ய மில்லாமற் பிடித்துக்கொண்டுபோய் எமகிங்கிலியர்களாலே இரவுரவாதிநர கங்களிலே தள்ளுவதல்லாமலும் அவர் பரம்பரையிலுள்ள யா வருக்கும் பிள்ளைகளற்று நாசமடையவும், கொள்ளியற்றுப்போ கவும், கருக்களழியவும், நோய்கள் மேலிடவும் இரவுரவாதி நர கங்களும் வாய்க்கும். இதல்லாமலும் கன்னிமாத முழுவதும்நித் தியப்படியாய் பிதுர்க்களைக்குறித்து ஓர் பிராமணனுக்கு அரிசி காய்கறி பதார்த்தங்கள் கொடுத்தாலும் தேவதைகளுக்கு அபி ஷேக முதலிய நிவேதனங்கள் பிதுர்க்கள்பேராற் செய்தாலும் மஹேசுரபூஜை செய்தாலும் அவர் புத்ரமித்ர களத்திராதிகளு டனே வாழ்ந்து சுகிப்பார்

இதல்லாமலும், அந்தப்புரட்டாசி மாதங்களில் அமரபட்ச சப்தமி துவாதசிக்கு முன்னும் அஷ்டமி திரயோதசிக்குப் பின் னும் மூன்று பிராமணருக்கு அன்னங்கொடுத்தால் அவர்களுக் குப் பெரும்புண்ணியங்க ளுண்டாகி வாழ்ந்திருப்பார்கள். அவ் வாறுநடத்தும்மஹாலயங்களில் உலோபமில்லாமல் தன்னுடைய சக்திக்கிணங்கக் கொடுப்பதிலும் பால் பழம் சர்க்கரை வெல்லம் எள்ளு கோதும்பை பருப்பு முதலியவைகளைத் தளர்வில்லாமல் பிராமணருக்குக் கொடுக்கவேண்டும் அப்படி கொடுக்கும்பதார் த்தங்களில் தங்கள் மனமறிய எச்சிவனு மவைகளை இச்சியாம லிருப்பதாகப் பார்த்துக் கொடுத்துச் சாப்பிடும்படியாய்ச் செ

ய்த புண்ணியர்களே பிரம்மா விஷ்ணு ருத்திரனெனுந் திரிமூர்த்திகளும், சந்தோஷத்தையடைந்து வாழ்த்துவதோடுஞ்சொர்க்க மத்யபாதாளமென்னு மூன்றுலோகத்தவர்களுஞ்சந்தோஷத்தை யடைவார்கள். மேலும், அக்கன்னிகா மாதத்தில் தாய்தந்தையர் வழியி லுண்டானவர்களைக்குறித்துத் தங்களாலியன்றமாத்திரம் அன்னம் சட்சுவை பதார்த்தத்தோடுந் தட்சணை தாம்பூலங்கொடுத்து, அக்கினிஹோத்திரஞ்செய்து மஹாலயங் கொடுத்த பேர்களுக்கு உண்டாக்கத்தக்க புண்ணியத்தைச் சொல்லவேண்டுவதில்லை, மேலும்அம்மகாலயஞ்செய்வதற்கு மைந்தர்களிலாவிடின் தன்னுடைய பத்தாவைக்குறித்து அக்கைம் பெண்ணாக விருப்பவள் செய்யவேண்டும் அவ்வாறுசெய்தால் தட்சணை கொடுக்காமற் செய்யவேண்டும் மீறித்தெரியாமற் கொடுத்துவிடுவளாயின் அவள்செய்திருந்த தருமமனைத்தும் வியர்த்தப்பட்டு மரபுமொழிந்து பிரம்மஹத்தி தோஷங்களுண்டாகி, இரவுரவாதி நரகத்துக்கேதுவாம், அக்கன்னிமாத முழுவதும் செய்யவேண்டிய மஹாலயங்களைச் செய்யாமல், இருந்து விடுவாராயின் அவர்கள் முற்சொல்லிய கருமங்களுக்கு பாத்திரராவார்க ளென்பதைநிச்சயமாக எண்ணவேண்டும், செய்தவர்களுக்கோவெனில், அநேக சுகிர்தங்களும், மோச்சங்களும் கைவல்யமாம், ஆதலால் மாதாபிதாக்க ளிறந்ததிதிகளிலே அவசியஞ்செய்யவேண்டும், செய்யாமல், அசந்தர்ப்பம் நேரிடுமாயின், கடையாய்வரும்அமாவாசைத் தினமாவது நடத்திவைக் வேண்டும்.

அப்படியும் நடத்துவதற்கு ஏதுவற்ற தாரித்திரராகவிருந்தால்,வசிட்டாத்வித விசாரமுடைய பெரியோர்களான பிராமணர்களிடத்திலாவது, பொருளகேட்டுவாங்கிநடத்தலாம் அவர்கள் கொடாத பட்சத்தில், நல்லஸ்திதியையுடைய க்ஷத்திரியரிடத்திற் பொருளேற்று நடத்தலாம். அவர்களு மில்லையென்று சொல்லுவாராயின் வாணிபஞ் செய்யப்பட்ட வைசியரிடத்திற் பெற்றுநடத்தலாம், அன்னவருங்கொடாவிடில், மேழிச்செல்வத்துக்குரிய வேளாளரிடத்திற் பெற்று நடத்தலாம், இவ்வகையாரு வருமீயாமற் போவாராயின், மஹாலய சிராத்தத்தைக்குறித்து அன்றுநல்ல கோக்களுக்குத தன்னாலியன்றமாத்திரம் உணவுகள் கொடுக்கவேண்டும். அவ்வாறு மில்லாவிடில் கரடி, புலி, சிங்கம் காட்டானை முதலிய விளங்கினங்கள் சஞ்சரிக்கும்படியாகிய கா

ட்டகத்திற்குச்சென்று தன்மரபினுண்டாகிய பிதுர்தேவதைக ளையும் அதி தேவதைகளையும் நினைந்து, ஒ பிதுர் தேவதை ளே! பாவியேன், உங்களுக்கு இன்று மஹாலயங்கொடுப்பதற்கு ஏதுமில்லாதவனாகவும், ஏற்கப்போன விடங்களினும் கிடைப்ப தரிதாகவுமிருப்பதால், என்செய்வேன் எவ்வாறுய்வேனென்று தனது உண்மை விளங்கும்படியாய், இருகண்களினின்றும் தண் ணீர் தாரைதாரையாய் பெருக, இருகரங்களாலும் வயிற்றிலும் முகத்திலுமறைந்து துக்கசாகரத்துட் டோய்ந்துநின்றால், அப் பிதுர்தேவதைகள் யாவு மொருங்குகூடி நோக்கி, அந்தோ என் செய்வேனென்றால்இரக்கமுற்றுச் சந்தோஷங்களுண்டாகிஅநே கமாயிரங்கோடி பிராம்மணாள்மகிழும்படி மஹாலய சிரார்த்தஞ் செய்தசந்தோஷத்தையடைந்து அவனுக்குஅநேகம் வரங்களைக் கொடுத்துப்போவார்கள்.

அவ்வண்ணஞ் செய்யப்பட்ட மாதங்களிலே துன்பத்தைத் தராநின்ற சூதகமுதலிய இடையூறுகள் உண்டாயின் அன்றய தினம் நல்லதலங்களுக்குப்போய் அஷ்டமிக்குமளவும் அவணிரு ந்து வேதாகமங்களை யுணர்ந்த பிராம்மணாளுக்குபோஜனஞ்செய் துவைக்கவேண்டும், அவ்வாறு நடத்தாமற் கேவலமானவர்களுக் குச் செய்வித்தால் அதனாற் செய்விக்கப் பட்டவர்களுக்கு க்ஷீணமுண்டாகுமாதலால் அத்தினத்தில் பிதா பிரபிதா மகாப் பிரபிதா மாதா மகாமாதா, பிரபிதாமாதா இவ்வாறு பேர்களுக் கும் பிண்டங்கள்செய்து அதனோடு தருமபிண்டமுஞ் செய்ய வேண்டும். அதில் முன் சொன்ன ஆறுபேருக்கும் ஆறுபேர்க ளும் இரண்டு மரபுக்கு இரண்டுவிசுவதேவரும் ஒரு விஷ்ணுவு மாகிய ஒன்பது பேர்களுக்குஞ் ஷட்ரஸபோஜனஞ் செய்விக்க வேண்டும். அப்படிசெய்வதற்கில்லாதவர்கள் மாதாவின்கால்வழி க்கு ஒருவரும் பிதாவின் கால்வழிக்கு ஒருவரும் விசுவதேவரிரு வருக்கொருவரும் மகாவி ஷ்ணுவுக் கொருவரும் ஆகிய நாலுபே ர்களுக்காவது உணவுசெய்துவைக்கவேண்டும், இதுபோல்மஹா லயத்தை நிறைவேற்றுவானாயின் அவன் அநேகயாகாதி கிர்த்தி யங்கள் அக்கினிஹோத்திரங்கள் சாந்திராயண விரதமுதலிய தானதருமங்கள் தீர்த்தயாத்திரைகள் செய்தபலனோடும் பெரி யோர்களை தரிசித்தபலனும் வேதமந்திரபாராயணங்கள் இதிகா சமுதலிய புண்ணிய கதைகளைக்கேட்ட பலனும் பெற்றுபிரம்ம

லோகம் விஷ்ணுலோகமென்னும் இவ்விரண்டுலோகவாழ்வையும் பெறுவார்கள். மேலும் நித்தியகருமமாகிய இம்மஹாலயத்தில் இஷ்டகாமிய போகபாக்கியங்களைப் பெறும்படியாய் அவர்களுடைய பிதுர்தேவதைகள் ஆசிகூறுவதோடும் பூதப்பிரேத பசாசகணங்களியாவும் அப்புண்ணியரைக்கண்டாற் காதவழி விலகிப்போம், ஆதலால் இந்த மஹாலய சிரார்த்தவிதிகளை வசிஷ்டர் வாக்கியப்படி தசரதமகாராஜன் செய்து ஸ்ரீமந்நாராயணர் முதலிய நான்கு பிள்ளைகளைப்பெற்று அநேக மேன்மைகளையடைந்தார். நளச்சக்ரவர்த்தியும் தனது மங்கையாகிய தமயந்தி தேவியைநீங்கி, சகிக்கப்படாத துன்பத்தை யநுபவிக்கும்போதும் அயோத்தியாபட்டணத்திலே தான்சேவகாவிர்த்தி செய்துகொண்டு வருகிறபோதும் தான் செய்யவேண்டிய மஹாலய சிரார்த்தத்தைத்தவறும னடத்திவந்தபடியினலே மறுபடியுந்தனதுமங்கையைக்கூடி அநேகபோகபாக்கியங்களோடும் இராச்சியபரிபாலனஞ் செய்துவந்தான்.

இதல்லாமலும் அரிச்சந்திர மகாராஜனிடத்தில் விசுவாமித்திரனானவன் வஞ்சத்தினால் இராஜ்ஜியத்தைப் பறித்துக்கொண்டு அவன் பெண்டுபிள்ளையோடும் வனத்துக் கனுப்புகையில் அப்போது அவ்வேந்தன் மனைவியைக் காசிப்பட்டணத்தில்விலைப் படுத்தியும் தான் புலையனுக் கடிமைப்பட்டும், பிள்ளையைப் பறிகொடுத்தும் பற்பல துன்பங்களுக் குரியவனாகவிருந்த காலையில் மஹாலய சிரார்த்தங்களைத் தவறாமல் நடத்திவந்தபலனாற்பழையபடி இராச்சியத்தைப்பெற்று சுகித்துக்கொண்டிருந்தார், இஃதல்லாமலும் தசரதகுமாரனாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் தனது பத்தினியோடும் தம்பியாகிய இலட்சுமணனோடும் சித்திரகூட பருவதத்திலேயிருந்து பிதாவுக்குப் பதினான்குவருடமும்காலங்களிற்றவறாமல் மஹாலய சிரார்த்தங்களை நடத்திவந்ததனாலே இராவணனிராட்சதரை ஜெயங்கொண்டு சீதையின் சிறைவிடுத்து அயோத்தியா பட்டணம்வந்து சேர்ந்து பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு இராச்சியபரிபாலனஞ் செய்துவந்தார். அதன்றியும் குந்திமக்களாகிய ஐவர்களும் தமது பத்தினியாகிய துரௌபதையோடும் பன்னிரண்டுவருடம் வரையில் வனத்திற் றிரிந்தபோது மஹாலய சிரார்த்தங்களைத்தவறாமல் நடத்திவந்தமையினாலே அவர்கள் தாயாதிகளாகிய துரியோதனாதிகளை யெல்லாம்

முடித்து அஸ்தினபுரியை பட்டாபிஷேகஞ் செய்துகொண்டுவா ழ்ந்திருந்தார்கள். இதுவுமல்லாமல் கவுதமர் அத்திரி வசிஷ்டர் பாரத்வாசர் வேதவியாசர் பிருகு ஆங்கிரச அஷ்டவக்ரார்மிருகண் டேயர் காசிபர் முதலான இருடிகளும் முனிவர்களும் தபோதன ர்களும்இந்த மஹாலய சிரார்த்தங்களை விதித்தகாலங்களில்தத் தம் தேவிமார்களுடனே தவறாமல் நடத்திப் பிதுர்தேவதைகளி டத்தும் அதிதேவதைகளிடத்தும்பெற்றுக்கொண்டவரப்ரசாத மகிமைகளினாலே அணிமாவாதி அஷ்ட சித்திகளும் அஷ்டா ங்க யோகங்களும் பரகாயப் பிரவேசங்களும் ககனமார்க்கத்திற் செல்லுந்தன்மையும் பெற்று ஆனந்த போகங்களையடைந்துமோ ட்சசாம்பிராச்சியத்தை யடைந்திருக்கிறார்கள்.

இவ்வாறு ஜீவன்முத்தரானபேர்களும் மஹாலயசிரார்த்தங் களைத் தவறாமல் நடத்துவராயின் மற்றபேர்கள் எப்படி நடத்தி வைக்கவேண்டும், ஆதலால் மறைவிதியிலோதுங் கன்னிமாதங்க ளில் மஹாலயங் கொடாததனால் குச்சரதேசத்தில் வாழ்ந்துக் கொண்டிருந்த பரத்வாசனென்னும் பெயரினையுடைய பிராமண னது குமாரன் வேதநாதனென்பவன் வேதாளசொரூபங் கொ ண்டு இதுவரையினும் உன்னைப்பிடித்து துன்பப்படுத்திக் கொண் டிருந்து உன்னைவிட்டு நீங்கி அவன் மோட்சத்தை யடைந்தபடி யால், இப்போது உன்னுடைய துன்பம் நீங்கிவிட்டதன்றியும், உன்னைப் புனிதனாக்கியபடியால், நீ இதுமுதற் கன்னிமாதங்களி லே மஹாலயந்தவறாமல் செவ்வையாய் நடத்திக்கொண்டுவருவா யே அநேகசெல்வங்களையநுபவிப்பாய், இத்தன்மையுடையபூத வேதாளங்களும் உன்னை அணுகமாட்டாது. போய்வரக்கடவை யென்று தத்தாத்திரேயரும் துராசாரனுக்கு விடைகொடுத்துச் சென்றபிறகு, தான் தநுக்கோடியிலே தீர்த்தமாடி விபூதி, ருத் திராட்சந் தரித்துக்கொண்டு ஸ்ரீராமநாதனை வணங்கித் துதி த்து, தன்னுடைய பட்டணம்வந்துசேர்ந்து வாழ்ந்துக்கொண்டி ருந்தான்.

கேட்டீர்களோ நைமிசாரண்யர்களே ! பின்னர் தனது பட் டணத்திற்சேர்ந்து சுகித்திரானின்ற துராசாரன் தத்தாத்திரே யர் வாய்மையின்படி வேதப்பிராமணர் முதலிய பெரியோர்க ளுக்குத்தனது பிதுர்க்களைக்குறித்து, மஹாலய சிரார்த்தங்களை

த்தவறாமல்நடத்திவைத்து, அதனால்அநேக போகபாக்கியங்களை ப்பெற்று வாழ்ந்து, தநுக்கோடியிலே ஸ்நானஞ்செய்த பலத் தால் மோட்சவீட்டை யடைந்தான். ஆதலால், ஓ முனிவர்களே! இந்த தநுக்கோடியிலே மஹாலயஞ் செய்யாத பாபங்களையும், சூத்திராளுக்குச் சிவலிங்க பூசையால் வந்த பாபங்களையும், சிவ சொரூபத்தை விஷ்ணு சொரூபமாய்ச் செய்தவர்களுக்கு நேர்ந் த பாபத்தையும், தேவர்களையும், தேவப்பிராமணுள் முதலிய பெரியோர்களையும், தாய் தந்தையர்களையும், நிந்தனை செய்து, அதனாற் சம்பவித்த பாபங்களையும், தன் மாயினர்களுடைய சொத்துக்களை யபகரித்து ஜீவனஞ்செய்து, அதனாற் சம்பவித்த தோஷங்களையும், குருபத்தினி, தமயன்பத்தினிகளை இச்சித்த தினால் வந்த தோஷங்களையும் செய்நன்றி மறந்த தோஷங்களை யும் தான் ஏறிச்சவாறி செய்த குதிரையையும், தான் வாசித்த சாஸ்திரங்களையும், தேவரூபச்சிலைகளையும், தடாகங்களையும், த ருமாலயங்களையும், பிறருக்கு விற்பனை செய்தால்வந்த தோஷ ங்களையும், வேதசாஸ்திரப் பரிகாரங்களினுந் தீரப்படாத பாப ங்களெல்லாம், இந்த தநுக்கோடியை கண்டவுடனே, பஞ்சபஞ் சாய்ப் பறந்துபோய்விடுமாதலால் முனிவர்களே! அந்த ராமதநு க்கோடியிலே, இத்தன்மை பொருந்திய மகிமைகள், கோடாநு கோடியாய் விளங்கிக்கொண்டிருப்பதோடும், உலகின்கண்ணே ங்குஞ் சகல முனிவர்களும், சித்தர்களும், யோகீஸ்வரர் முதலிய தேவர்களுஞ் சக்ரவர்த்திகளும், மகாராஜாக்களும், பிரயாணப் பட்டுவந்து சேர்ந்து, தநுக்கோடியில் இடங்கிடைப்பதரிதாய், நெருங்கித் தீர்த்தமாடுவோர்களாயினும், யாம் அதன்பெருமை என்னென்று சொல்லப்போகிறோம் ஆதலால் அச்சேதுவுக் கரு காயோங்குங் கந்தமாதன சாரிபில் வழங்குஞ் சக்கரதீர்த்த முத லாக, இருபத்துநான்கு தீர்த்தம், தநுக்கோடிவரையில் மேன் மை பொருந்திய விளங்குவதோடும், அதற்கு மேற்பாலாகச் சே துவிலே பாலோடை என்று ஓர் புண்ணியதீர்த்தமிருக்கின்றதெ ன்று சூதமுனிவர் சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் முனிவரைப் பணிந்து, சுவாமி, தேவரீர் அத்தீர்த்தம் வந்த கார ணத்தை அடியேங்களுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டு மென்று வினவ, சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினார்

துராசாரச்சரித்திரம்

முற்றிற்று.

உ௨-வது,

# பாலோடைதீர்த்த சரித்திரம்.



கேளுங்கள் நைமிசாரண்ணிய வாசிகளாகிய முநிவர்களே, முன்னர் மகிஷாசுரனைச் சம்மாரஞ்செய்த தேவியானவள் குடிகொண்டிருந்த தேவிபட்டணத்துக்கு மேற்பாலாய் சேதுவில் புல்லாரண்யமென்றோர் வனமிருக்கின்றது, அவ்வாரண்யத்திலே ஸ்ரீராமமூர்த்தியானவர் தர்ப்பசயனஞ்செய்ததனாலே, அவ்விடத்தில் ஓர் ஆலயமும், புல்லக்கிராமமென்று ஓர் க்ஷேத்திரமும் விளங்கிக் கொண்டிருப்பதால் அந்த க்ஷேத்திரத்தில் க்ஷீரகுண்டமென்று சொல்லப்பட்ட பாலோடையென்னும் ஓர் புண்ணிய தீர்த்தம் உண்டு, அத்தீர்த்தத்தைக் கண்ணினாற் கண்டாலும், அத்தீர்த்தத்திலோர் திவலை, மானவர்கள்மீது பட்டாலும், அதனைப் புகழ்ந்து பேசினாலும், அன்னவர்களுக்கு அஞ்ஞானங்களெல்லாமகன்று, அவர்கள் கருதிய இஷ்டபோக பாக்கியங்களும் அனேக யாகாதிகிர்த்தியங்கள் செய்த பலனும் உண்டாமென்று சூதமாமுநிவர் சொல்ல அதைகேட்ட நைமிசாரண்ய முநிவர்கள் சந்தோஷமடைந்து, சுவாமி அப்பாலோடை என்னுந் தீர்த்தத்திற்கு என்னகாரணத்தால் அவ்வளவு மகிமையுண்டானதோ அதனைத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க சூதமுநிவர் கூறுவார்.

கேளுங்கள் முநிவர்களே, முற்காலத்திலே முற்கலனென்று சொல்லப்பட்ட ஓர் வேத முநிவருடைய அநுக்கிரகத்தினாலே விளங்கப்பட்டது, அதெப்படியெனில், வேதாகமசாஸ்திரங்களை யெல்லாங் கரைகண்டவராகியும், மகாதபத்தையுடையவராகியு மிருக்கும் முற்கலமுநிவர் தெக்ஷசமுத்திரக்கரையிற் புல்லாரண்யமென்று வழங்கும், க்ஷேத்திரத்திற்கு வந்து நிர்மலமான மனத்தையுடையவராய், மகாவிஷ்ணுவை நோக்கி அரிதாகிய தபமும் யாகமுஞ் செய்யும்போது ஸ்ரீவைகுண்டவாசகராகிய மகாவிஷ்ணுவானவர் சந்தோஷத்தை யடைந்து தேவர்களெல்லாம் புடைசூழ இலட்சுமி சமேதராய் கருடவாகனத்தி லெழுந்தருளி, முற்கலமகாமுநிவருக்குத் தியானந்தந்தார், அப்போது முற்கலமகாமுநிவர், ஸ்ரீவைகுந்தத்தைக் கண்டு கண் களித்து

மிகு பக்திவிநயத்தோடும் வேதவாக்கியங்களாலுஞ் சகஸ்ர நாமங்களாலுந் தோத்திரஞ்செய்து கைகொட்டி ஆனந்தக்கூத்தாடி அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்கராய், ஸ்ரீமந்நாராயண மூர்த்தியினது பாதகமலங்களிற் பணிந்து நமஸ்கரித்து கண்களினும், ஆனந்தபாஷ்பமானது தாரை தாரையாய்ச்சிந்த மகா உற்சாகத்துடனே ஸ்மரணைசெய்து நிற்கையில் மகாவிஷ்ணுவானவர் கிருபாநோக்கத்தோடும், முநிவரைநோக்கிக் கூறுவார். வாராய் முற்கல மகாரிஷியே! நீயும் நமமைவேண்டி அருமையாகியதபங்களையுஞ்செய்தமையால், யாம்சந்தோஷமடைந்து, உம்முடைய யாகத்தில் அவிர்ப்பாகம்பெறவேண்டி வந்தோமென்றுசொல்ல, அவ்வுரையைக்கேட்ட முற்கலமுநிவர், ஆனந்தசாகரத்துட் டோய்ந்தவராய்க் கூத்தாடி, அண்டசராசரங்களையெல்லாம் உண்ட அழகிய வாயினாலே அவிர்ப்பாக முண்ணவேண்டுமென்று சொன்ன வாக்கியத்தை நினைந்து நினைந்து, ஆநந்தத்தை யடைந்தவராய் அம்புராசி என்று சொல்லுந் திவ்யனாமங்களும் பதார்த்தங்களும், மகாவிஷ்ணு முதலிய தேவாதிகளெல்லாம் மகிழும்படியாய் பக்குவஞ்செய்தமர்ந்தி மறுபடியுந்தோத்திர வசனமாய், சுவாமிவேதவேதாந்த மூர்த்தியே! தேவரீருடைய அருளினுக்கால் எனது தேவியும் யானும் கிருதார்த்த ராகிவிட்டோம் நாங்கள் இப்புல்லாரண்ய க்ஷேத்திரத்தி லிருந்துசெய்த தபமும் ஈடேறியதால் மகாயோகிகளாகிய மார்க்கண்டேயர் பிரகலாதர் முதலிய சித்தபுருஷாள் பரமபாகவதாள் இவர்களுடைய இருதயமும் அடியேனுடைய யாகசாலையும் ஒத்திருக்கும்படியாய்த் திருவுளங்கொண்டு ஆட்கொள்ளவந்தது போதும் போதுமென்று பாரிஜாத சண்பக மந்தாரமுதலிய புட்பங்களினாலே அர்ச்சனைசெய்துபின்னர் சுகந்தமுலாவுஞ் சந்தன களபகஸ்தூரி முதலிய வாசனைத்திரவியங்களைக்கொண்டு பதாதிகேசபரியந்தம் மகாவிஷ்ணுவுக்குத்திமிர்ந்து யாகத்திற் குற்றமற்றதாய் விளங்கும் அவிர்ப்பாகமளித்து முற்கலமகாமுநிவர் உபசாரஞ்செய்ய அப்போது மகாவிஷ்ணுவானவர் மாவலிச்சக்ரவர்த்தியினிடம் மூன்றடிமண் கேட்டுத் தாரைபெற்ற கரங்களினாலே அவிர்ப்பாகத்தை வாரியுண்டு மகிழ்வடைந்தார்.

அவ்வாறு ஸ்ரீமந்நாராயணமூர்த்தி யானவர் முற்கலமுநிவர் நிமித்தம் அவிர்ப்பாகமுதலிய உணவுகளை யுட்கொள்ளுவதைச் சகலதேவர்களும் பெரியோர்களும்கண்டு ஆனந்தத்தை யடைந்

தார்கள். அப்போது மகாவிஷ்ணுவானவர் சகல அண்டபிண்ட சராசரங்களும் அவற்றிலடங்கிய உயிர்களும் திருப்தி யடையும் படியாய் உணவுகொண்டருளிச் சந்தோஷமடைந்து கூறுவார் வாராய் முற்கலமகாரிஷியே உமது விஷயத்தில் யாம் மிகவுந்திருப்தியடைந்தமையால் இனிஉமக்குவேண்டியதைக்கேளுமென்று சொல்ல, அப்போது முற்கலமுனிவர் ஜகந்நீசனை நோக்கி சுவாமி கல்லைப் பெண்ணாக்கிய தேவரீரது பதாம்புயங்கள் கடையேன் செய்த யாகசாலையை மிதித்ததே பெரும்பாக்கியமன்றோ, இன்னம் வேறேயான் என்ன விரும்பப்போகின்றேன் ஆயினும் இன்னம நாயேனுக்கு ஓர் ஆசையிருக்கின்றது அஃதியாதெனில்சூரியோதயமுதல் அஸ்தமிக்குமளவும் அஸ்தமனம் முதற் சூரியோதயமளவும் இடைவிடாமல் தேவரீரைக்குறித்து வேதங்களாற் கூறப்பட்ட க்ஷீரயாகம் பண்ணவேண்டுமென்று எளியேன் சிந்தையிலுத்தேசித்தவண்ணம் அதற்குத் தளர்வில்லாமற் பால் கொடுப்பதற்கும் பசுக்களும் அவைகளுக்குப் பாலுங்குறைவின்றிப் பெருகவேண்டியதாய் எண்ணமிருப்பதால் அவையீடேறச் செய்யவேண்டுமென்றுகேட்க, அதற்கு வைகுண்டநாதன் சந்தோஷத்தை யடைந்து தெய்வலோக விசுவகர்மனை வரும்படியாய்ச் சிந்தையில் நினைத்தார்.

அப்படி நினைத்தமாத்திரத்தில் உடனே விசுவகர்மன் அதை யறிந்து அக்கணமே தெய்வலோகத்தினின்றும் நீங்கிப் புல்லாரண்யம்வந்துசேர்ந்துஸ்ரீவைகுண்ட நாதனைக்கண்டுவணங்கினான். வணங்கின விசுவகர்மனைப் பார்த்து, விஷ்ணுவானவர், ஓவிசுவகர்மனே, இவன் பரிசுத்தமாயிருக்கும் படியாய்கற்களினாற்படிகள் பரப்பி, உன்னதமாயிருக்கததக்க ஓர் தடாகம் உண்டு பண்ணித் தருவாயென்று கட்டளையிட, அதுபோல் விசுவ கர்மனுந் தடாகத்தைக்கட்டிமுடித்தார். அதைப்பன்னகசயனன்கண்டுசந்தோஷங்கொண்டு, பொன்னுலகத்தில் வசிக்குஞ் சுரபி என்னும் பசுவை வரும்படியாய் நினைத்த மாத்திரத்தில், அச்சுரபியும் அது போல்வந்துசேர்ந்து மகாவிஷ்ணுவைக்கண்டு வணங்கி தோத்திரஞ்செய்கையில், விஷ்ணுவானவர்சுரபியைப்பார்த்துவாராய்சுரபியே, இப்புநிதராகியமுற்கல மஹாரிஷியானவர் க்ஷீரயாகஞ்செய்யக்கருதியதால், அந்தயாகம் நிறைவேறுமளவும் நீ அந்தி சந்தி இரண்டுவேளையினும், இத்தடாகத்தைப் பாலினாலேநிரப்பிவைக்

கக்கடவையென்று உத்தரவு கொடுக்க, அவ்வாறே சுரபியும், அத்தடாகம் நிறையும்படியாய்த் தனது மடிவிலே விளங்குகின்ற ஒர் முலையினலே பால் நிரம்பும்படியாய்ச் செய்ய, அதைக்கண்ட மகா விஷ்ணுவுஞ் சந்தோஷத்தை யடைந்து, இதுவுமென்னைக் குறித்துச் செய்கின்ற யாகமாகையால், எப்போதும் இம்முனிவரிடமிருந்து இத்தடாகத்தை நிரப்பிக்கொண்டிருக்க கடவையென்று கட்டளையிட்டு பின் முற்கல முனிவரை நோக்கிச் சொல்லுவார். வாராய் முற்கலனே, உமக்கு இந்தச் சுரபியானது எப்போதும் குறைவின்றிப் பால்கொடுத்து வரும்படியாயும், இத்தடாகம் நம்முடைய திருப்பாற்கடலுக்குச் சமானமாய் விளங்கிக் கொண்டிருக்கு மாதலால் இதுமுதல் இத்தடாகத்தில், தீர்த்தமாடும் பேர்களுக்கு அவர்களைப் பற்றிய அஞ்ஞானமியாவு மகன்று நமது லோகத்தைத் தருவதோடும் இதற்கு க்ஷீரகுண்டமென்றும், பாலோடை என்றும் பெயர் விளங்கிக் கொண்டிருக்கும்.

மேலும நீ இதில் ஓங்கும் பாலினலே நினைத்த யாகங்களை முடித்து, பின்னர் நம்முடன் வந்து கலந்திருக்கக் கடவை யென்று வாக்களித்து, தேவர்களோடும் மகாவிஷ்ணுவானவர் ஸ்ரீ வைகுந்தத்திற்கு எழுந்தருளினர். அதுமுதற்சுரபியானது விஷ்ணுவின் உத்திரவின்படி தளர்வில்லாமல் தடாகத்தைப் பாலால் நிரப்பிக் கொண்டிருக்க, முற்கலமுனியும் அப்புல்லாரண்ய க்ஷேத்திரத்திலே வாசஞ் செய்து கொண்டிருக்கையில், ஒருநாள் அவருடைய தேகத்தைப் பாம்பானது தனது சட்டையை மாற்றினதுபோல மாற்றி எறிந்து தனது தேவியுந்தானுமாய் விஷ்ணு சொரூபம் பெற்று ஸ்ரீவைகுண்டவாழ்வைச் சேர்ந்தார்.

கேட்டீர்களோ நைமிசாரண்யர்களே! இப்பேர்க்கொத்த மகிமை பொருந்திய பாலோடையின் பெருமையை யாவராற்சொல்லி முடியுமாதலால், அப்புண்ணிய தீர்த்தமாடினபேர்களுக்கு, அநேக புண்ணியங்கள், யாகாதி கிர்த்தியங்கள் செய்த பலன் கிடைப்பதோடும், ஸ்ரீமகா விஷ்ணுவினது பாத கமலங்களும் சொந்தமாம் ஆதலால் முன்னொருகாலத்தில் இந்தப்பாலோடையிற் கத்துருவென்று சொல்லப்பட்டவள் தீர்த்தமாடித் தனது பெருந் துன்பங்களைப் போக்கினளென்று சூதமாமுனிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள், சுவாமி, அக்கத்துருவெ

ன்பவள் யார் அவளுக்கு என்னவிதமாய்த் துன்பஞ் சம்பவித்தன அவைகளை யெல்லாம் அடியேங்களுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க சூதமுனிவர்கள் வினவியவைக்குச் சிந்தை மகிழ்ந்து கூறுவாராயினர்.

பாலோடைச்சரித்திரம்.

முற்றிற்று.

---

# கத்துருச்சரித்திரம்.



கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்காள் மறைவிதியிற் கூறும் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் கலியுகமென்னும் நான்கு யுகத்தில், முதல்யுகமாகிய கிரேதா யுகத்தில், சிருஷ்டி கர்த்தாவாய் விளங்கும் பிரமனுக்கு கத்துருவென்றும் வினதையென்றும் இரண்டு பெண்களுண்டு அப்பெண்களை காசிபமகாரிஷி என்பவருக்கு பாணிக்கிரகணஞ்செய்து கொடுத்திருந்ததில், மூத்தவளாகியகத்துரு என்பவள் வயற்றில் அனந்தன், வாசுகி, தக்ஷன் முதலிய அஷ்டமாநாகங்களும், இளையவளாகிய வினதை என்பவள் வயற்றில் கருடன், அருணன், கரடி, கிரி, கூகை, மான் முதலிய சத்துருக்களாகிய ஜெந்துக்களும் பிறந்து, பாதாள லோகத்திலும் பூலோகத்திலும் வாசஞ் செய்துக் கொண்டிருந்தன அப்படி யிருக்கையில் கத்துருவும் வினதையும் அந்தரங்கமாய் இல்லத்திலிருந்து வாழ்ந்து வருநாளில், ஒருநாளிரண்டுபேரும், மாலைப்போதில் வேடிக்கையார்த்தமாய் பூங்காவனத்திற்குப்போய் சுகந்தமுலாவும் மலர்களைப் பறித்து விளையாடிக்கொண்டிருக்கையில் தெய்வலோகத்தினின்றும் தேவராஜனுடைய உச்சைச் சிரவாவென்னும் புரவியானது அவ்வனத்துக்கு நேராய் அந்தர மார்க்கத்திற் பறந்து போகிற போது அதைக்கண்ட கத்துருவென்பவள் வினதையை நோக்கி, அடி தங்காய் அதோககனத்தின் கண் பறந்து போகுங் குதிரையின் வால் கறுப்போ வெள்ளையோ வென்று கேட்க, அதற்கு வினதையானவள் தன் தமக்கையை நோக்கி, அடி அக்

அக்கச்சி அப்புரவிக்குவால் சுத்தவெண்மையா யிருக்கிறதென்ருள், அதற்குக் கத்துருவாகிய மூத்தாள் அடிதங்காய் நீ சொல்லுவது அபத்தம், அதற்கு வால் கறுப்பென்ருள்.

இப்படி ஒருவர்க்கொருவர் தர்க்கஞ்செய்து பின்பு தங்களுக்குள் உண்மையைச் சொன்னவர்களுக்குப் பொய்சொன்னவர்கள், அடிமையாகிறதென்று சபதஞ் செய்துகொண்டவர்களாய்த் தங்கள் வீடுபோய்ச் சேர்ந்திருக்கையில், கத்துரு வென்பவள் தங்கைக்குத் தெரியாமல் இரகசியமாய் தனது பிள்ளைகளாகிய அனந்தன், வாசுகிஎன்னும் பாம்புகளைவருவித்து, தங்களிரண்டு பேருக்குள் நடந்திருக்கிற சபதவார்த்தையைத் தெரியப்படுத்தி அப்புரவியின்வாலை உங்களுடைய விஷத்தினுற் கறுப்பாகச் செய்துவைக்க வேண்டுமென்று தாயானவள் சொல்ல, அதைக்கேட்ட நாகங்கள் கோபித்து தாயைநோக்கி, ஓ! அம்மணி? நீ தேவஸ்திரீயாயிருந்து பொய்வார்த்தை சொன்னது தகுதியல்லவே என்றுமறுத்துச்சொல்ல உடனே இந்நாகங்களின் தாயாகியகத்துருவென்பவளுக்குக் கோபம் பிறந்து அவைகளைப் பார்த்து நீங்கள் என் பிள்ளைகளாயிருந்தும் என்வாக்கைப் பழுதுவரும்படியாய்ச் செய்ததனுலே நீங்களியாவரும் இதற்குநான்காவது யுகமாகிய கலியுகத்திற் பரிக்ஷித்து மகாராஜனுற் செய்யப்பட்ட சர்ப்பயாகத்தில் நாசப்படக் கடவீர்களெனறு சபித்தாள். அச்சாபத்தை ஏற்றவைகளிற் கார்க்கோடகனென்னும் பாம்பானது பயந்து தாயை நோக்கி, ஓ! அம்மணி? யான் உன்மனம்போற் செய்து வைக்கிறேனென்று சொல்ல அதைக்கேட்ட தாயானவள் அந்நாகத்தைநோக்கி நீ அவ்வாறு செய்வையேயாகில்அந்தயாகத்தினின்றும் நாசப்படாமல் உயிர் பெறக்கடவையென்று வாழ்த்தினள். அவ்வாழ்த்து தலைப்பெற்ற கார்க்கோடகனென்னுஞ் சர்ப்பமானது தெய்வலோகத்துக்குப் போய் அங்குள்ள புரவியைக்கண்டு சிநேகித்து, அதினுடைய வாலைத் தனது விஷத்தினுற் கறுப்பாகும்படிச் செய்து பிறகு அவணின்றும் மீண்டு தனது தாயாகிய கத்துருவென்பவளிடத்தில் வந்துசொல்லிச் சந்தோஷிக்கச்செய்து தனது இருப்பிடமாகிய பாதாளலோகம் போய்ச்சேர்ந்தது.

அப்பால் கத்துருவென்பவள் தனது தங்கையாகியவினதையை அழைத்து, வாராய் தங்கையே நாமிருவருஞ் செய்திருந்த சபதத்தின்படி தெய்வப்புரவியினுடைய வாலைப் பரிக்ஷிக்கவே

ண்டியிருப்பதால், அதனேடும் சிந்தாமணியையும், மகாலட்சுமி யையும் அயிராவதத்தையும், சந்திரனையும உச்சைச்சிரவா வெ ன்னும் அப்புரவியையும், தேவலோகத்துக்குப்போய்ப் பார்த்து வருவோ மென்று வினதையை அழைத்துக்கொண்டுக்ஷீராப்தியி னிடம்வந்து சேர்ந்து அங்கே உலாவிக்கொண்டிருந்த தெய்வப் புரவியைப் பார்க்கும்போது அதன்வால் கறுப்பா யிருக்கக்கண் டு,"வினதையை சபதத்தின்படி கத்துரு வென்பவள் அடிமைப் படுத்திக்கொள்ள, அதுபோல் அவளுஞ் சம்மதித்து அடிமைப் பணி செய்து வருகையில் அவள் புதல்வனுகிய கருடன் தயத்தி லிருந்தும் மீண்டு, மகா உத்தண்ட கெம்பீர சவுரிய பராக்கிரம த்துடனே சகலருங்கண்டுதுதிக்கும்படியாய் வருகையில், தனது சொரூபத்தை ஒடுக்கிக்கொண்டு தாயாகிய வினதையையும் பெ ரியதாயாகிய கத்துருவையுங்கண்டு வணங்கினன். அவ்வாறு வணங்கியபோது, கத்துருவென்பவள் மனதில் வினதை நமக்கு அடிமைத்தொழில் செய்வதால் அவளுடைய பிள்ளைகளும்நம க்கு அடிமைகளாகவேண்டு மல்லவோ வென்றுயோசித்தவளாய் கருடனைப்பார்த்துச் சொல்லுவாள், அடா கருடனே, நீ எனது பிள்ளைகளாகிய சர்ப்பங்களை உனது பிடரியிற் றாக்கிக்கொண்டு போய்ச் சகலலோகங்களையுங் காண்பித்து வருவாயென்றுசொ ல்ல, அதுகேட்ட கருடன் நமதுபெரிய தாய், தனதுபிள்ளைகளு க்கு உலகங்களைக் காட்டும்படியாய் விருப்பத்தோடுங் கூறியவா ர்த்தையென்று மனதில் வஞ்சகம் வையாமல், அவ்வாறே சர்ப் பங்களைஎல்லாந் தனதுபிடரியிற் றாக்கிக்கொண்டுபோய் சகல லோகங்களையுங் காண்பித்துக்கொண்டு வருகிறபோது, சூரிய மண்டலத்திற் சூரியனுடைய வெப்பத்தினுலே அந்நாகங்கள்சகி க்கமாட்டாமல் அவதிப்படுவதை கருடனுனவன் பார்த்து தேவ ராஜனைச் சிந்திக்க அஃதுணர்ந்த இந்திரன், சித்திரசேனனெ ன்னு மேகத்தையழைத்து மழை பெய்யும்படியாய்க் கட்டளை யிட, அதுபோல்மழைத்துளிகளை மேகமானதுபெய்துவர, அப் போது அந்நாகங்களுக்குத் தாபசோபங்க ளெல்லாந் தீர்ந்து பழையபடி கெம்பீரத்தை யடைந்து இருக்கையில், கருடன்சர் ப்பங்களைக் கொண்டுவந்து தனது பெரிய தாயாராகிய சத்துரு வென்பவளிடத்தில்விட, அவளும் தனது பிள்ளைகளைப் பார்த்து மகாசந்தோஷத்தை யடைந்தவளாய்ப் பின்னுஞ் சொல்லுவாள் தன், அடா கருடனே, நான் தேவலோக முதலியவுலகங்களைப் பார்

க்கவேண்டியிருப்பதினாலே உன்தாயாகிய வினதையின் பேரி லேறிக் கொள்ளுகிறேன், நீ இன்னொருவிசை சர்ப்பங்களை எடு த்து உன் தோளிற்போட்டுக்கொண்டு வருவாயென்றுசொல்ல, அதைக்கேட்ட கருடன் இதென்ன இவள் கிஞ்சித்தேனும் மிர க்கமில்லாமல் அடிமைத் திறம்போற் பேசுகின்றாள், இது யாது காரணமென்று தனதுதாயைக்கேட்க, அதற்கு அவள் தாயா கிய வினதையும் கருடனைப்பார்த்து, அப்பா புத்திரனே! நாங்க ளிரண்டுபேரும் தெய்வலோகப் புரவியாகிய உச்சைச்சிரவனெ ன்னும் புரவியானது ஆகாயத்தில் வரக்கண்டு அதன்வால் நான் வெண்மையென்று சொன்னேன், உனதுபெரிய தாய் கருமிற முடைய தென்றாள் அதன்மீது ஒருவர்க்கொருவர் தர்க்கங்கள் நேரிட்டுத் தோற்றவர்கள் செயித்தவர்களுக்கு அடிமைத்தொ ழில் செய்கிறதென்று சபதம் பண்ணி அப்புரவியைப் பரிக்ஷிக் கும்படியாய்ப் போய்ப்பார்த்தபோது கறுப்பாகவிருந்தமையால் தோல்வியடைந்த யான் அடிமைசெய்து வருகிறேனென்றுசொ ல்லி வியாகூலப்பட்டாள்.

அவ்வுரைக்கேட்டு கருடனுந் துன்பமடைந்து, கோபித்து நிற்பதைக்கண்ட வினதை கூறுவாள். வாராய் அப்பாபுத்திரனே இனி நாம் அழுது ஆவதென்ன ஆனபடியினால், நீ உனது பெ ரிய தாயாரையும், அவளுடைய பிள்ளைகளையும் நோக்கி ஒருவா ர்த்தை கேட்பாயாகஅது யாதெனில், நானும் எனதுதாயும்உங் களுக்கு அடிமைப்பட்டு பணிவிடை செய்து வருவதால், எங்க ளுக்கு ஓர்குறையுமில்லை, ஆயினும் இந்தச் சபத வார்த்தைக்கு எப்போது விமோசன காலமென்று நீயாய் கேட்பதுபோலக்கே ட்டு வருவாயென்று சொல்லியனுப்ப, அவ்வாறே கருடனுஞ்சம் மதித்து, கத்துருமுதலியசர்ப்பங்களை நோக்கி, ஓ அம்மணிஎன் தாயானவள் செய்தவாக்குவாதந் தப்பிவிட்டபடியால், நாங்கள் உங்களுக்கு அடிமைத்தொழில் செய்கின்றோம், இதற்கு விமோ சனம் எப்போதென்று கெருடன் கேட்க அதற்கு கத்துரு வா னவள் கருடனைப்பார்த்து அடாகருடனே! பாற்கடலிற் கடைந் தெடுத்த தேவாமிர்தத்தை நீ கொண்டுவந்து எனக்கும், என் பிள்ளைகளுக்குங் கொடுப்பாயாகில், அத்தினமேஇச்சபதம்நீங்கி எப்போதும்போல் வாழ்ந்திருக்கலாமென்றுசொல்ல, அவ்வார்த் தையைக்கேட்டகருடன், அப்படியேயாகட்டு மென்று, கத்துரு வினிடத்தில் விடைபெற்றுத் தன்தாயாகிய வினதையிடம்வந்து

கத்ருவினது அபிப்பிராயத்தைத்தெரிவித்து யான்போய்அமிர்தங்கொண்டுவந்து கொடுத்து, அடிமைதொழிலை நீக்குகிறேனென்று சொல்லித்தன்தாயாரிடத்தில், ஓ அம்மணி, நான் பெரிய தாயின் பிள்ளைகளாகிய விஷஜெந்துக்களை எடுத்துக்கொண்டு லோகா லோகங்க ளெல்லாம்போய்த் திரிந்து வந்தமையால், தேகமானது வருந்தி, மெத்தவும் பசியாயிருப்பதால், என்பசி யடங்கும்படியாய் உணவுஎங்கேயிருக்கின்றது சொல்லுவாயென்று கேட்க, அதற்கு வினதையானவள் கூறுவாள்.

அப்பா புத்திரனே! நீ போகும்படியாகிய வழியில் சமுத்திரக்கரைக்கருகிலிருக்கும் ஆரண்யத்தில், ஸ்திரீகளும், புருஷர்களுமாய்க்கூடி வாழ்ந்துக் கொண்டிருக்கும் பாபிகளாகிய வேடுவர்களில் ஒருபிராமணன் ஒருவேடிச்சியைகூடிச் சுகித்துக்கொண்டிருப்பதால்: அவ்வேதியன் பாதகனாயினும் பிரம தேஜசோடுங் கூடியவனாதலால், அவனை மாத்திரம் நீக்கி, மற்றவர்களையெல்லாங்கொன்று,உன் பசிநோயைத் தணிப்பாயென்று வினதையானவள்சொல்ல, அவ்வார்த்தையைக் கேட்ட கருடன் சந்தோஷத்தையடைந்து தாயினிடம் விடைபெற்று விசுவரூபங் கொண்டு மகா பராக்ரமத்துடனே ஆகாயவீதியிற் கிளம்பி வரும்போது அன்னைசொன்ன உரையின்படி அவ்வாரண்யத்திலே அநேகங்கோடானுகோடி ராட்சதாள் பெரியோர்களாகியதபோதனர்களை யெல்லாம் இம்சை செய்த தோஷத்தால் வேடுவராக ஜனித்து அக்கானகத்தில் வாசஞ்செய்து வருவதால் அவர்களைக் கண்ட கருடன் வடவா முகாக்கினியைப்போற் சீறி எழுந்து, தனது கால்களிலுள்ள கூர்மைபொருந்திய நகத்தினாலும் மூக்கினாலும் செட்டை களிலுந்தாக்கி மோதியும் பத்தல் பத்தலாய்ப் பிளந்தும், மூக்கினாற்கொத்தியும், செட்டைகளிலுள்ள காற்றினால்திசாதிசைகளிற்போய் விழச்செய்தும்கால்வேறு, கைவேறு உடல்வேறு, தலைவேறாகச்செய்தும் பிடித்து விழுங்குகிறபோது தனது அன்னை உரைத்த பிராமணனையும் அடையாளம் தெரியாமல் விழுங்கும்போது கருடனுடைய கண்டத்தில் அக்கினிச் சுவாலையாய் பிரம்மதேஜசு சொலித்தமையால், உடனே இதென்ன காரணமென்று பயந்து விழுங்கியதைக் கக்கிய மாத்திரத்தில் பிராம்மணன் உயிரோடிருந்தமையால் கருடனைக்கண்டு அச்சங்கொண்டு கெஞ்சிக்கூறுவான்,

ஐயா கருடனே நான் ஒரு வேடுவஸ்த்ரீயைச்சேர்ந்து வாழ்ந்திருந்தேனாதலால் இப்போது என்னை இரட்சித்ததுபோலஅவளையும் ரட்சிக்க வேண்டுமென்று பணிந்துகேட்க அப்போதுகருடன் கருணைகூர்ந்து அந்த பிராமணனைநோக்கி ஓய் பிராம்மணா நீ உனது பிராம்மணீகந்தப்பி எவ்வாறு நடந்தபோதினும் பிரம்மதேஜசுபொருந்தி யிருக்கின்றபடியால் நீயும் உனது ஸ்த்ரீயும் ஓடிப்போய் விடுங்களென்றுகூற, அவ்வுரையைக்கேட்ட பிராம்மணன் சந்தோஷத்தையடைந்து, அப்படியே தானும், தனது நேசியாகிய வேடிச்சியும் ஓடிப்போய் விட்டார்கள். அப்போது பிராமணனைக் கருடனானவன் தூக்கிக் கண்டம்வரையில் விழுங்கிக் கக்கினபடியால் தனக்கு சிரமுதற் கண்டம்வரையில், பிரம்மதேஜசுபொருந்தி தவளநிறமாய் வெளுத்தது, பின்பு அங்குள வேடர்களையெல்லாம், சங்காரஞ்செய்து பதினாயிரம், இருபதினாயிரம் முப்பதினாயிரமென்றும் அளவிறந்தபேர்களை யழித்துபட்சணம்பண்ணி அதாஹுதப்படுததி அக்கணமே அவணின்றுந் தனது தந்தையாகிய காசிபர் தபஞ்செய்துக் கொண்டிருக்கும் வனத்துக்குவந்துசேர்ந்து தாதையைக்கண்டு நமஸ்காரஞ்செய்து தங்களுக்குள் நடந்திருக்கும் வர்த்தமானங்களையும், இப்போது தான்வந்த காரியத்தையும் சொல்லியதல்லாமலும், தனது பசியின் பொருட்டு வழியில் வேடுவரைக்கொன்று தின்றதையும்புலப்படுத்தி இன்னம் எனது பசி தணியாதிருப்பதாற் பசிநோய் தணியும்படியாய் அநுக்கிரகஞ் செய்யவேண்டு மென்றுகேட்க, அப்போது காசிபர கருடன் கூறியதைக்கேட்டு மனமகிழ்ச்சி கொண்டு சொல்லுவார்.

அடாபுத்திரனே நீ போகும் மார்க்கத்திலே மகா விசாலம் பொருந்தியதாகவும் பார்ப்பதற்கு பயங்கரமாகவும், சமுத்திரத்தைப்போல விளம்பமென்னும் பெயருள்ள ஓர் தடாகமிருக்கின்றது அத்தடாகத்தில் விபாவசுவென்னுமோர் பிராம்மணன் தனது தம்பியாகிய சுப்பிரதீக னென்பவனோடு பொருள்விஷயத்தைப் பற்றி ஒருவர்க்கொருவர் விகாதம்நேரிட்டு அடித்துக்கொண்டும் கோபமடங்காமல் ஒருவரையொருவர் சபித்ததின்பேரில், அவர்களில் விபாவசுவென்னும் பெரியவன் மூன்றுயோசனை உயரமும் பத்துயோசனை நீளமுமாகிய முதலையாகவும் இளையவன் ஆறுயோசனை உயரமும், பன்னிரண்டுயோசனை நீளமுள்ளயானையாகவும் பிறந்து முதலையானது குளத்திலும் யானையானது வனத்தி

அமிருந்து, ஓர்நாள் ஜலம்அருந்தும்பொருட்டு, குளத்துக்குவந்த தம்பியாகியயானையை முதலையாகவிருக்குந் தமயன்முன் கொண்டிருந்த மாற்சரியத்தை விடாமல் ஜலத்துக்குவந்த யானையைப் பிடித்துவிடாமற் போராடிக்கொண் டிருக்கின்றபடியால் அவர்களையெடுத்து பட்சணஞ்செய்து உன்பசிநோயைத் தணிப்பாயென்று தந்தைசொல்ல, அதைக்கேட்ட கருடன் மகாசந்தோஷத்தையடைந்து தந்தையைவணங்கிவிடைபெற்று, ஆகாயவீதியில் எழும் மகா உச்சாமத்தோடும் வருகிறபோது விளம்பமென்னும் பொய்கையில் தனது தந்தை உரைத்தவண்ணம் யானையையும் முதலையும் ஒன்றுக்கொன்று இழுத்துக்கொண் டிருப்பதைக் கண்டு கருடனானவன் பூமியிற்றாழ்ந்து தனது இரண்டுகாலினாற் யானையையும் முதலையையு மிடுக்கித்தூக்கி மறுபடியும் ஆகாயவீதியிற்கிளம்பி அதைவைத்து பட்சணஞ்செய்வதற்கு இடங் கிடைக்காமற் றேடிக்கொண்டு வரும்படியாகிய மார்க்கத்தில் அநேகங்கிளைகளோடும் விழுதுகளோடுந் தளிர்த்து நூறுயோசனை உயரமும் நூற்றைம்பது யோசனை விஸ்தாரமுள்ள ஓர் ஆலவிருட்சமானது உரோகணியென்னும் நாமதேயத்துடன் வளர்ந்திருப்பதைக்கண்டு. இவ்விருட்சத்தின் மீதிறங்கி இதைப் பட்சணஞ்செய்வோமென் றெண்ணங்கொண்டவராய் மெதுவாய் அம்மரத்தின் மீது இறங்கும்போது, அம்மரத்தின் கிளைகள் கருடனையும் அவனாற் கொண்டுவரப்பட்ட வஸ்துக்களையுஞ்சுமக்கமாட்டாமல் முறிந்து நிலத்தினமேற் சாயும்போது அக்கிளைகளிலே வாலகில்யரென்னு முநீஸ்வரர்கள் தலைகீழாய் நின்றுநிட்டைசெய்து தேகாபிமானமற்றுத் தம்மை மறந்திருப்பதைக் கருடன்கண்டு, திடுக்கிட்டு அடடா இந்தகிளைகள் நிலத்தின்பேரில் விழுமாயின் அதிற்றொங்கும் முநிவர்களுக்கு அபாயம்வந்துசம்பவிக்குமேபிறகு என்செய்வோமென்று சிந்தித்து அக்கிளைகள் பூமியிற்சாயாமுன்னம் நூற்றைம்பதின்காத விஸ்தாரமுள்ள அதனைத்தனதுமூக்கினால் தூக்கிப்பின்பு யானையையும்முதலையையுந் தன்னிரண்டுகாலினாலு மேற்றிக்கொண்டுஆகாயவீதியிலெழும்பி வருகையில் அவன் தந்தையாகிய காசிபமகாரிஷியானவர் கண்டு அடாசுதனே நீ ஏந்திவரும் ஆலங்கிளையிலிருக்கும்முனிவர்களுக்கு அபாயம்வாராதபடி அதோ இருக்கும் இரண்டு பருவதங்களுக்குமத்தியிற் கொண்டுபோய் வையென்றுசொல்லஅவ்வார்த்தையைக்கேட்ட கருடன் அவ்வாறே கொண்டுபோய் மகாவிலாசம்

பொருந்திய அவ்விரண்டுபருவதங்களுக்கும் மத்தியில் தூக்குச் சட்டம்போட்டதுபோல வைத்துவிட்டு, அப்பர்வதத்தின்சிக ரத்தில் தான்கொண்டுவந்த பட்சணங்களை வைத்துக்கொண்டு, பூரணமாய்ப் புசித்து, பின்பு, அவனின்றுங்கிளம்பி, மகா உற்சா கத்தோடுஞ் சிறகுகளை வீசிக்கொண்டுவருகிறபோது, தெய்வ லோகத்தில் உற்பாதமான சில அவசகுனங்கள் காணப்பட்ட மையால் அதுகண்ட தேவராஜன், அஃதென்ன காரணமென்று சிந்தித்து வியாழபகவானையழைத்து ஐயா சுவாமிகளே! ஒருக் காலு மில்லாத இந்த அவசகுனங்கள் இன்று காணும் காரண மியாதென்று கேட்க அதற்கு வியாழபகவான் கூறுவார்.

கேளுமையா தேவராஜனே, முன்னமோர் காலத்திலே கா சிப மகாரிஷியானவர் யாகம்பண்ண வேண்டி. இந்திராதி தேவர் களையும் முனீசுவரர்களையும், இருடியர்களையும், காந்தர்வ கின்ன ரர்களை யெல்லாம் வரவழைத்து, யாகத்துக்குண்டான சாமான் களைக் கொண்டுவரும் படியாய். அவர்களைத் தனித்தனியே அனுப்பிவைக்கையில், அப்போது ஒரு அங்குஷ்டப் பிரமாண மாய் விளங்கப்பட்ட வாலகில்ய மகாரிஷிகள் அத்தேவர்களுட ன்கூடித் தாமும் சமுத்துகளொடித்துப் பெரிதான சுமையைக் கட்டித் தலையிலே வைத்துக்கொண்டு வருகிறபோது, அம்மார்க் கத்தில் ஓர் மாட்டின் குளம்படி பதிந்து, அதிற் ஜலம் நின்றிரு ப்பதனால், அதிலே வாலகில்லியர் இடறிவிழுந்து சுமையோர் புறஞ்சாயத் தாம் அக்குளம் படியில் நின்ற ஜலத்தில் அழுந்தி எழுந்திருக்கமாட்டாமல், தவித்துக்கொண்டிருப்பதை நீகண்டு நகைக்க, அப்போது அம்முனிவருக்கு கோபம்பிறந்து, இந்தயா கத்துக்குரிய காசிபருடைய பிள்ளைகளால் நீங்களெல்லாந் துன் பப்பட கடவீர்களென்று சபித்தார். அவ்வாறு சபித்ததுபோல காசிபர் வயிற்றிற்பிறந்திருந்த கருடனானவர். சத்துருவினதைநி மித்தம் இங்ஙனமிருக்குந் தேவாமிர்தத்தைக் கொண்டுபோவ தாய் வருகின்ற கருடனாலே உங்களுக்குத் துன்பமுண்டாக போகின்றபடியால், துற்குனங்கள் காணப்படுகின்ற தென்று சொல்ல, அவ்வார்த்தையைக்கேட்ட தேவராஜன் மகாபயமடை ந்து அக்கினிபகவான் முதலாகிய அஷ்டதிக்குப் பாலர்களையும் பார்த்து கூறுவான்.

ஓ தேவர்களே ! காசிபமகாரிஷியினுடைய பிள்ளையாகிய கருடனானவன், தேவாமிர்தத்தைக் கொண்டுபோக வருகின்றப டியினாலே நீங்கள் ஆயுதபாணிகளாய் நின்று அவனை இவ்விடம் வரவொட்டாமற்றாத்தி, ஜெயங்கொள்ளுவீர்களென்று சொல்ல, அவ்வாய்மையைக்கேட்ட தேவர்கள் அவரவர்களுக்குரிய சத்தி, கட்கம் தோமரம் பிண்டிபாலம், பாசம், அங்குசம், தண்டம் வில் வேல் முதலிய ஆயுதங்களை யெல்லாமெடுத்து மகா உக்ரத்தோடும், தேவாமிர்த மிருக்குமிடம்போய்ச் சேர்ந்து அதனைஎறும்பு மொய்த்துக் கொண்டவைபோல், அமிர்ததத்தைச் சுற்றிக்கொண்டு மகாஜாக்ரதையோடு மிருக்கையில், கருடனானவன் மகா உக்ரத்தோடும் வருகிற வேகததால் பர்வதங்கள் முதலிய வெல்லாந் தலை கீழாகச்சாய்ந்து திசாதிசைகளிற் போய்விழவும், நட்சத்திரங்களுதிரவும் லோகாலோகங்களெல்லாங் கிடுகிடென்று தத்தளிக்கவும், தெய்வலோகம் வந்து சேர்ந்தான். அவ்விதமாய் வந்த கருடனுடைய உருவததைக்கண்ட, இந்திராதி தேவர்களெல்லாஞ் சிந்தாகுலராய் எப்படியாமோ வென்று சிந்தித்து, அவரவர்கள் ஆயுதங்களோடும அமர்செய்ய யெதிர்த்தார்கள்

அப்படி யெதிர்த்த தேவர்களுடனே கருடனானவன், உக்கிரத்தோடுந் தனது செட்டைகளையுதறிக் கிளம்பிபாய்ந்து, கால்நகங்களினாலும், மூக்கினாலும் செட்டைகளினாலும் தேவர்கள் எறிந்த ஆயுதங்களைப்பொடித்து அவர்களையும காலவேறு, கை வேறு உடல்வேறு சிரம்வேறாகச் சின்னபின்னப்படுத்தி செட்டையில் உண்டாகிய காற்றினால் திசாதிசையிற்போய் விழும்படியாய்ச் செய்கிறபோது, ஈரேழுபதினான்குலோகத்திலுள்ள யாவரும், ஒருதட்டிலிருந்து, ஓர்தட்டில்மாற சொர்க்க மத்தியபாதாளமென்று மூன்றுலோகங்களுங் கீழ்மேளாய்ப்புரள, அஷ்டதிக்குகளுங் காற்றாடியைப்போற்பறக்கச் சிறகிலுள்ள காற்றின் விசையினால், அல்லோகல்லோலப் படுகிறபோது அதைக்கண்ட தேவர் தயிரியம்விடாமல் அவரவர்கள் விற்களைவளைத்து நாண் பூட்டி வில்லினிடமாய் அனேகங் கூர்மைபொருந்திய வாளிகளைக் கணக்குமிதமில்லாமற் றொடுத்து பாணவருஷம் பொழிகையில் வினதையின் குமாரனாகிய கருடபகவான்கண்டு அவர்கள் விடுத்தபாணங்களை யெல்லாம் தனது செட்டைகளா லடித்துப் பொடி பொடியாய்த் தரையிற் படியும்படிச்செய்து பின்னும் காற்றினால் பூமியிலே துளிபட

மெழும்பி, ஆகாயவீதியையுந் தேவர்களுடைய கண்களையும், சமுத்திர ஜலத்தையும், வறட்டிச் சேறுபடுத்தி, அஷ்ட கெஜங்களும் வாய்விட்டலறவும் அஷ்டமாநாகங்களும் விஷங்களைக்கக்கித் துன்புறவும், ஆதிசேடன் தோள் சாய்க்கவும், பயங்கரமாகிய போர்செய்யும்போது பன்னிரண்டுகோடி சூரியர்களும், இரண்டுகோடி அசுவினிதேவதைகளும், எட்டுகோடி வசுக்களும், பதினொருகோடி ருத்திரும்ஏகோபித்து ஒன்றாய்த்திரண்டுசமுத்திரம்போல் கருடபகவானை வந்துவளைத்து தங்கள் தங்கள் விற்களைவளைத்து, காளமுகிளென்னும், மேகத்தைப்போற் பாணமழை சொரிந்தார்கள்.

அப்படி பாணப்பிரயோகஞ்செய்யுந் தேவர்களைக் கண்ட கருடபகவானானவர், வீரபத்திரன், ஆயிரமுகங்கொண்டு தக்கனுடைய வேள்வியை தகர்க்கப் பிரவேசித்ததுபோல், அக்கினிபொறிகள் குபீர்குபீரென்று பறக்கும்படியாய் கர்ச்சித்து அட்டகாசஞ்செய்து, தாழ்ந்து நெருங்கும்போது, கருடபகவானுடைய கோபாக்கினிகளையுஞ் சிறகினால் ஓங்குங் காற்றையுந் தேவர்கள்கண்டுபயந்து எதிர்நிற்கமாட்டாதவர்களாய் சிங்கத்தைக் கண்ட யானைகளைப் போலும் சூரியனைக்கண்ட பனிக்கூட்டம் போலும், அவரவர்களுடைய சவுரிய பராக்ரமங்களெல்லா மொழிந்து, பலதிக்கிலுஞ்சிதறி ஓடிப்போகையில் அப்போதுகருடன் மகா உற்சாகத்தோடும் அங்குள்ள அமிர்தகலசத்தை எடுக்கும் பொருட்டு, நெருங்கியது எவ்வாறிருந்த தெனில் ஸ்ரீ வைகுந்தவாசனாகியமகாவிஷ்ணுவின் கரத்திலிருக்கும் சுதரிசனமென்னுந் திகிரியைப்போல், கோடிசூரியப்பிரகாசமாய் மகாஉக்ரத்தோடும் நெருங்கி அக்கலசத்தைக்கண்டு, அதில் காளகோடி விஷம்பொருந்திய சர்ப்பவுருவத்தோடு இரண்டு ராட்சதாள் அந்த அமிர்தத்தைப் புசித்துக்கொண்டிருப்பதைக் கண்டு, கருடபகவான் கோபங்கொண்டு தனது விசுவரூபத்தை யொடுக்கிச்சிறியஉருவமாய், சிறகுகளிரண்டையுங் கூட்டிக்கீழேதாழ்ந்து தன்னுடைய மூக்கினால் அந்த இரண்டு சற்பங்களையும் தூக்கிக் கால்நகத்தினால் ஊன்றிப்பிளந்து, அவைகளின் உயிரைவாங்கி அவ்விரண்டையும்புசித்து மகாபராக்கிரமத்தோடும் அக்கலசத்துக்குச்செய்திருந்த கவசங்களைஎல்லாம் வேறுவேறாக்கி கெம்பீரத்தோடும் அவ்வமிர்தகலசத்தை காலினா லிடுக்கித் தூக்கிக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பி வருகிறபோது திருப்பாற்கடலில் சயனஞ் செய்

துக்கொண்டிருக்கும் ஸ்ரீவைகுந்த வாசகராகிய மகாவிஷ்ணுவா னவரறிந்து தான்சயனித்துக் கொண்டிருந்த சயனத்தினின்றும் நீங்கி, கருடபகவானுக் கெதிரில் வந்துநின்று அவருடையவுருவ த்தையும் புஜபலபராக்ரமத்தையுங்கண்டு சந்தோஷங்கொண்டு உனக்குவேண்டிய வரத்தைக்கேள் தருகுரோமென்று சொல்ல அவ்வார்த்தையைக் கருடபகவான் கேட்டுச்சந்தோஷங் கொண் டவனுய் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைத்துதித்து கூறுவான்.

சுவாமி! தேவரீர்சதாகாலமும்அடியேன்பேரில் எழுந்தருளி வாசஞ்செய்துகொண்டிருக்க வேண்டுமென்று கேட்க, அதற்கு பகவான் திருவுளமகிழ்ந்து அப்படியே கொடுத்தோம்நீயும் நம க்கு அதுபோல் வாக்குத்தத்தஞ் செய்வாயென்றுகேட்க. அதற் குக் கருடபகவான் சுவாமியை அந்தக்கரண சுத்தியோடும் நோ க்கி, சுவாமி அடியேன்தேவரீரது பாதப்பணியினின்றும் அகலா துவாகனமாகவும் துவசமாகவும் இருப்பேனென்றுசொல்லமகா விஷ்ணுவானவர் மெத்தவுந் திருப்தியடைந்து பின்னுங் கருட னுக்கு அநேகவரப்பிரசாதங்களைக் கொடுத்துப்போய் வருவா யென்று விடைகொடுக்க அவ்விடையையேற்ற கருடன் ஸ்ரீ வை குந்தநாதனை வணங்கி அவணின்று ஆகாயவீதியிற்கிளம்பி, தே வாமிர்தத்தைக்கொண்டு போகும்போது முன்னங் கருடபகவா னல் அடிப்பட்டு மெலிந்து ஓடிப்போன தேவர்களால் அறிந்த தேவராஜன் மகாசினங்கொண்டு தனது வச்சிராயுதத்தோடும் கருடனைவந்துமறித்து, அடாதேவர்களுக்கென்று நியமித்துவை த்த அமிர்தத்தை நீகொண்டு போகவல்லனோ வென்றுஅதட்டிக் கெருடபகவான்மீது தனது வச்சிராயுதத்தைப் பிரயோகஞ்செ ய்தான் அதுகண்ட கருடன் தேவேந்திரனுற் பிரயோகஞ் செய் யப்பட்ட வச்சிராயுதத்தைத் தனது சிறகுகளினுற்றட்டிவிட்டுப் புன்சிரிப்போடுந் தேவேந்திரனைப் பார்த்துக் கூறுவான்.

ஓய் தேவராஜனே, நீ உனது வச்சிராயுதத்தை என்பேரிற் பிரயோகித்துப் பிரயோசன மில்லாமற்போய் விட்டதே வீணி லேன்பிரயாசைப்படுகிருயென்றுசிரித்துக்கூறி, அதிவேகத்தோ டுந்தனது இருப்பிடம் நோக்கிச்செல்ல, அதுகண்டவாசவன் மா ச்சரியத்தையடைந்து, இவன் மகாபராக்ரமனுதலால், இவனை

ஜெயிக்க முடியாதெனக் கருதியும் மறுபடியும் தனது வச்சிரா யுதத்திற்குவேண்டிய மந்திரசத்தியைக்கொடுத்து. அவனுடைய சிறகைவெட்டிச்சாய்த்து வரக்கடவையென்று பிரயோகித்தான் அப்படி பிரயோகித்த வச்சிராயுதமானது, மகாவுக்ரத்தோடும் திசா திசைகளெல்லாம் நடுங்கும்படியாய் ஜொலித்துக்கொண்டு வரும் வேகத்தைக்கண்ட கருடபகவான் புன்சிரிப்போடும் தனது செட்டையால் வச்சிராயுதத்தை வந்ததிசைதெரியாமற்போய் விழும்படியாய்த் தட்டிப்போட்டு அந்நேகிர்த்த தேவர்களெல் லாமறிய ஒரு வார்த்தைசொல்லுவான். ஓய் தேவராஜனே உன் னைப்போல் அநேகமாயிரம்இந்திரர்கள் வந்தெதிர்த்து, அவரவர் க்குரியவச்சிராயுதங்களையெல்லாம் பிரயோகஞ்செய்தாலும்ஒரு இமைப்போதில் அவைகளை பொடித்துக்காற்றிற் பறக்கச்செய் யும் வல்லபமெனக்குண்டாயிருப்பதால், நீயேன் வீணிற்பிரயா சையெடுத்துக்கொண்டு அவமானப்பட்டுப்போகின்றாய், அந்தோ உனது பதிக்குப்போய்ச் சேருவாயென்று சொல்ல, அவ்வார்த் தையைக்கேட்ட இந்திரன் கூறுவான்.

வாருமையா கருடபகவானே, நாங்கள் பிரயாசையடைந்து சம்பாதித்த அமிர்தத்தை நீ கொண்டுபோய் இதராளுக்குக் கொடுப்பாயாகில், அவர்கள் அதை உண்டு, நரை, மூப்புமுதலிய யாவும்நீங்கி, அதிகவலுவைப்பெற்று எங்களை மதியாமல் வந்தெ திர்த்து துன்பப்படுத்துவார்களன்றோ, அதனால் உனக்குவரும் பிரயோசனமென்ன இருக்கின்றது ஒன்றுமில்லையே. ஆதலால் நீ அதைக்கொண்டுபோகாமல் எங்களிடங்கொடுத்துப் போவாயெ ன்று சொல்ல, அதைக்கேட்ட உவணமூர்த்தியானவர் சந்தோ ஷங்கொண்டு உம்பர் நாதனைப்பார்த்துக் கூறுவார், வாருமையா தேவராஜனேஎனது தாய்மார்களிருவரும் ஒருவர்க்கொருவர்சப தவார்த்தைகள்பேசி அவ்வாறு நடந்துவருவதால்அவரைநீரவே ண்டி எனது பெரிய தாயாகிய கத்துருவென்பவள், தனது பிள் ளைகளாகிய அனந்தன், வாசுகி, தக்கன், சங்கன் குளிகன், பது மன், மகாபதுமன், கார்க்கோடகனென்னும் எட்டுப்பிள்ளைகளு க்கும் தேவாமிர்தத்தைக் கொண்டுவந்து கொடுத்தால், எங்கள் அடிமையை நீக்குகிறேனென்று கூறியிருப்பதால், அவை நீர வேண்டி யான் கொண்டு போவதற்கு நீ மெத்தவும் வருத்த ப்படுகின்றபடியால், நான் ஒருவார்த்தை சொல்லுகிறேன் கே ளும், அதுயாதெனில் லோகத்திற் சர்ப்பங்களுக்குரிய விஷக்

இனியைப்பற்றி எனக்குகிஞ்சித்து அச்சமுளதாதலால், அது இதுமுதல் தீரவேண்டி என்னைக்கண்ட சற்பங்களுக்கெல்லாம் வலுவழிந்து, விஷமுங்கெட்டு, நிர்ஜீவனாய்ப் போகும்படியாய்ஓர் வாந்தருவையாகில் அதைப்பெற்ற யான் எனது பெரியதாயின் உரைப்படி, இந்தஅமிர்தத்தைக் கொண்டுபோய் அவர்கள் முன் னிலையில் வைத்துவிடுகிறேன், நீ என்னுடன் மாயவுருவங்கொ ண்டுவந்திருந்து. அமிர்தத்தை அவர்கள் அருந்தாமுன்கொண்டு வந்து விடுவாயென்றுசொல்ல, அதைக்கேட்ட இமையவர் வேந் தன் சந்தோஷத்தையடைந்து ஐயா கருடபகவானே, நீகோரிய வண்ணம் வரமளித்தேன ஆதலால் இதுமுதல் உனக்கு சர்ப்பங் களால் யாதொரு துன்பமும் நேரிடாமல் சுகஜிவியாய் வாழுக்க டவையென்று கூறிப்பின்பு தான்வாயு சொரூபமாய் கருடபக வான் பின்செல்ல, உவணமூர்த்தியாகிய கருடபகவான் மகாஉற் சாகத்தோடும், ஆகாயவீதியிற்கிளம்பித்தனதுபெரியதாகிய சத் துருவினது அரண்மனைவந்து சேர்ந்து, பெரியதாயையும், அவ ளுடைய பிள்ளைகளையும்பார்த்து, ஓ அம்மணி! உனது வாக்கிய த்தின்படி இதோ தேவாமிர்தங்கொண்டுவந்தேனாதலால், ஒப்பு க்கொள்ளுவாயென்று தர்ப்பையைத்தரையிற் பரப்பி, அதன்மீ துதான் கொண்டுவந்த அமிர்தகலசத்தை வைத்தான். அப்படி வைத்த அமிர்தகலசத்தைக் கண்டகத்துருவும், அவள் பிள்ளைக ளுஞ்சந்தோஷத்தையடைந்து. கருடனைப்பார்த்துகூறுவார்கள்.

வாராயப்பா! நீ எங்கள் எண்ணத்தின்படியாய் மெத்தவும் பிரயாசையெடுத்துக்கொண்டு, பெறுதற்கரிய தேவாமிர்தத்தைக் கொண்டுவந்து கொடுத்தபடியால், இன்றுமுதல் நீயும், உனது தாயாகிய வினதையும், அடிமைப்பணிநீங்கி, உங்களிச்சையின்ப டிவாழ்ந்துகொண்டிருங்களென்று விடைகொடுத்தனுப்பிப் பின் கத்துருவானவள் தனது பிள்ளைகளாகிய சர்ப்பங்களை நோக்கி, அப்பா பிள்ளைகளே, உங்களுடைய கூட்டத்தார் எங்கெங்குஞ் சஞ்சரிக்கின்றார்களோ அவர்களையெல்லாம் வரவழைத்து யாவ ரும் இவ்வமிர்தத்தைப்பகுந்து புசியுங்களென்று சொல்ல. அவ் வாய்மையைக்கேட்ட நாங்கள் அவரவர்கள் பந்துக்களையும் புத் ரமித்ராகளத்திராதிகளை யெல்லாம் அழைத்துவரும்படியாய்ச் சொல்லும்போது கருடபகவான் அவர்களைப்பார்த்து ஓ சர்ப்ப ங்களே உங்களையும் உங்கள் தாயாரையும் இதுமுதல உங்கள் தாதையாகிய காசிபர் தனதுபணிவிடைக்கு விருமபாமல் வெறு

ந்து நீக்கக்கடவதென்று சபித்துவிட்டுத தானும்தனது தாயா கிய வினதையும் தமது இல்லம் போய்ச்சேர்ந்தார்கள்.

அக்காலையில் இவைகளையெல்லாம் வாயு உருவமாயிருந்து பார்த்துக்கொண்டிருந்த இந்திரன், இதுதான்சமயமென்றுஅவ் வமிர்தகலசத்தைமாயையால், ஒருவருமறியாம லெடுத்துக்கொ ண்டு அந்தர்த் தானமாகப் போய்விட்டான். அப்படியிருக்கும் போது, அவர்களைக்கூட்டிவரச்சென்றசர்ப்பம் பூலோகத்திலே புற்றுகளினிடத்திலும மரப்பொந்துகளினிடத்திலும் மலைகளிட த்திலும், குகைகளிடத்துஞ் சஞ்சாரஞ்செய்து கொண்டிருந்த சர்ப்பங்களையெல்லா மழைத்துக்கொண்டு வந்து தேவாமிர்தத் தைப்பார்க்கிறபோது காணாமையினால் எங்கும் தேடிப்பார்த்து மகாவியாகூலத்தை யடைந்து, அந்ததேவாமிர்தத்தைக்கொ ண்டுவந்து வைக்கும்போதும், அதைககவர்ந்துக்கொண்டுபோகு ம்போதும், அதனடியிற்பரப்பியிருந்த தருப்பையின்பேரிற்றுளி துளியாய்ச், சிந்திததிருப்பதைக்கண்டசர்ப்பங்கள் அதைஅடர் ந்து தம்தம நாக்குகளினாலே அவ்வமிர்தத்தை நக்குகிறபோது அத்தருப்பைப் புல்லினுடைய கருக்குகள் நாவுகளிற்றாக்கி, நா வுகள் இருபிளவாய் பிளந்துபோக, அதைக்கண்ட சர்ப்பங்க ளெல்லாம பயந்து, நடுநடுங்கி ஓடிப்போய் விட்டன ஆதலால் அதுமுதல் ஓ முநிவர்களே, உலகின்கண் உள்ள சற்பங்களுக்கு நாக்கு இருபிளவாக இருமபதோடும், அவ்வமிர்தம் தருப்பையி ன்மீது சிந்தினமையால் அத்தருப்பைக்கு புநிதமும், மகிமையும், உண்டானது, கருடனும தபஞ்செய்யப்போக, அதுகண்ட வின தையானவள், தனது பர்த்தாவாகிய காசிபரிடதது வந்துசேர, கத்துரு வென்பவளும், அதுபோலவே வந்தாள்.

அப்படி வந்தவர்களைக்கண்ட காசிபருக்கு அப்போது கத் துருவுக்கு கருடனால் நேர்ந்திருக்குஞ் சாபத்தினது தன்மையா ல்தேகமனைத்தும் அக்கினி சுவாலைபோற் கொதித்துப் பொங்கி ப்புழுக்கத்துடனே தனது மூத்த பாரியாளாகிய கததுருவைப் பார்த்து அடிபெண்ணே, நீயும் உனது தங்கையும், ஒருதாய்வயி ற்றிற்பிறந்தவர்களாக விருந்தும உடன்பிறந்தாளென்றும் இளை யாளென்றும கிஞ்சித்தேனும இரக்கமில்லாமல், அநீதமாய்பொ ய்வாாதத்தையொன்று ஏற்படுத்தி, உன்கொடுமைக்கு தக்கதாய்,

உன் வயற்றிற்பிறந்த பாம்புகளாலே அவ்வார்த்தையை நிறைவேறச்செய்து, வினதையை அடிமைகொண்டபடியால், மகாவஞ்சகியாகிய நீ என்கண்முன்வரவேண்டாம், போய்விடுவாயென்று கடிந்து கூறியதைக்கேட்ட கத்துருவானவள் பயந்து நடுங்கிக்கருத்தழிந்து, யாதுந்தோற்றாதவளாய் காசிபருடைய பாதகமலங்களில்வீழ்ந்து நமஸ்கரித்து, அநேகதோத்திரஞ்செய்து, அடியாள்செய்த பிழையைப் பொறுத்தாட்கொள்ள வேண்டுமென்றுவணங்க அதைக்கண்ட காசிபர்கத்துருவைப்பார்த்து, அடிபெண்ணே! நீ இளையாளை அடிமைக்தொழில் புரிவதோடும், இந்திராதி முதலிய யாவருக்கும், இம்சைகளைக்கொடுத்து, அநேகமுயிர்களை மடியும்படியாய்ச் செய்ததனாலே உனக்கும் பெருந்துன்பமாகிய இரவுரவாதி நரகங்கிடைக்குமாதலால், அத்துனபத்துக்குரிய உன்னுடன் நாம் கூடியிருக்கலாகாது இதல்லாமலும், இப்போது நீமெத்தவும் பரிதாபப்படுகின்றபடியால், உனக்கு வேறெசாபங்கொடாமல் மன்னித்தேன், என்கண்முன்வராமற் போய்விடுகிறதே உத்தமமென்று கூறினர்.

அதைக்கேட்ட இளையாளாகிய வினதைஎன்பவள், காசிபருடைய பாதகமலங்களிற் பணிந்துசுவாமி, என்னுயிர்த்துணையாகிய தேவரீர், அடியாட்களின்மீது இவ்வாறுகோபித்தால், பின்பு எங்களுக்கு கதியென்ன யிருக்கின்றது ஏதோ எனதுதமக்கை யானவள் தெரியாமையாற்செய்த குற்றத்தை, தேவரீர்,திருவுளமிரங்கி, பொறுத்தருளவேண்டுமென்றுபணிந்து, நிற்பதைக் கண்டகாசிபர்கருணைசுரந்து, மனக்களிப்போடும் வினதையைநோக்கி கூறுவார் வாராய்ப்பெண்ணே வினதாய், உன் தமக்கையாகிய கத்துருவானவள் உனக்குச்செய்த கொடுமையெல்லாம், பொறுத்தது மன்றியில் அவளைவேண்டி இவ்வளவு இரக்கப்படுகின்றமையால் அவளுக்கு இப்போதுநேர்ந்திருக்குந்தோஷம் யாவும் அகன்றாலன்றோ நம்முடன்சேர்ந்திருக்கலாமென்று சொல்ல அவ்வாய்மையைக்கேட்ட வினதையானவள், சுவாமி அவளைப்பற்றியிருக்குந் தோஷங்கள் தீரும்படியாய், தேவரீர்பரிகாரஞ் செய்யவேண்டுமென்று கேட்க அப்போது காசிபர் வாராய்ப்பெண்ணே வினதாய், உனது தமக்கையைப்பற்றிய தோஷங்கள் தீரவேண்டுமாயின், பூலோகத்திலோங்கும் பரதகண்டகந்தமாதனத்தில், பாலோடையென்று சொல்லப்பட்டஓர் புண்ணிய தீர்த்தமிருக்கின்றது, இப்புண்ணியதீர்த்தத்திற்கு போய்சங்க

ற்பவிதிப்படி கத்துருவானவள் தீர்த்தமாடுவாளாயின்,: அவள் செய்தகொடுமைகளெல்லாமகன்று இருதார்த்தையாவளென்று கூற அதைக்கேட்ட கத்துருவென்பவள் சந்தோஷமுற்றவளாய் பர்த்தாவினிடத்தில் விடைபெற்று அவ்வாறே போய்தீர்த்தமாடிவருகிறேனென்று பிரயாணப்படும்போது ஆகாயத்தினின்றும் ஓ கத்துருவே நீ உன்பிள்ளைகளாகிய சர்ப்பங்களோடுஞ்சென்று அப்பாலோடையில் தீர்த்தமாடினல் உன்னைப்பற்றியவினை நீங்குமென்று அசரீரிபோத அவ்வாய்மைமையைகேட்ட கத்துருவும் அதுபோல் தனதுபிள்ளைகளை அழைத்துக்கொண்டு புல்லாரண்யக்ஷேத்திரம்போய்ச்சேர்ந்து அவணுங்கும் பாலோடையில் தீர்த்தமாடி எழுந்திருக்கையில் மறுபடியும் ஆகாயத்தினின்றும் ஓ கத்துருவே நீயும்உனதுபிள்ளைகளும் இப்புண்ணியதீர்த்தத்தில்வந்து மூழ்கினமையால் உங்களுடையபாபங்களெல்லாம்நீங்கும் புநிதரானீர்களென்று, அசரீரிகூற அதைக்கேட்ட கத்துரு சந்தோஷமடைந்து, பிள்ளைகளோடும், அவ்விடமிருந்து பிரயாணப்பட்டுக் காசிபரிடம் வந்துசேர்ந்து, வினதையோடும், காசிபருக்குவேண்டிய திருப்பணிகளைச் செய்துகொண்டிருந்தாள் கேட்டீர்களோ நைமிசாரண்யமுநிவர்களே, இப்பேர்க்கொத்த மகிமைபொருந்திய பாலோடையின்பெருமையை யாவராற்சொல்லமுடியும். இதல்லாமலும் அச்சேதுவில் கவிதீர்த்தமென்றோர் புண்ணியதீர்த்த மிருக்கின்றதென்று சூதமுநிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் முநிவரைப்பணிந்து, சுவாமி! தேவரீர் அடியேங்களுக்கு அந்தக்கவிதீர்த்தத்தின் பெருமையைத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்கச் சூதமுநிவர்சொல்லத்தொடங்கினர்.

கத்துருச்சரித்திரம்.

முற்றிற்று.

---

உகூ-வது,

# கவிதீர்த்தச்சரித்திரம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே பரதகண்டதட்சிணபாகத்திலோங்கும் கந்தமாதனகிரிச்சார்பில் வானரங்களால் உண்டாக்கப்பட்ட கவிதீர்த்தமென்றோர் புண்ணியதீர்த்தமுண்டு அத்தீர்த்தமானது ஸ்ரீராமசந்திரனும் வானராதிகளும் இலங்கையில் இராவணாதிராட்சதர்களையெல்லாஞ் சங்காரஞ்செய்து விபீஷணனுக்குப் பட்டங்கட்டியபின்னர் சேதுமார்க்கமாய்க் கந்தமாதனத்துக்குவந்து இலிங்கப்பிரதிஷ்டை செய்து அவ்விலிங்கத்தின் முன்னிலையில் வானரங்களெல்லாங்கூடி ஓர்தடாகம் உண்டுபண்ணி அதற்கு வரப்பிரசாதங்கட்டளையிடவேண்டுமென்று ஸ்ரீராமமூர்த்தியைவணங்கித் தோத்திரஞ்செய்யும்போது, ராமச்சந்திரன் சந்தோஷங்கொண்டு சகலவானரங்களுடனும் சகலதேவர்களுடனும் சகலமுநீசுவரர்முதலியதபோதனர்களுடனும் அத்தடாகக்கரையில் வந்துசேர்ந்து கவிக்கூட்டங்களைப்பார்த்துக் கூறுவார் வாருங்கள்வானரங்களே, இந்தத்தீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்யப்பட்டபேர்களுக்கு கங்கையமுனைசரஸ்வதிமுதலிய புண்ணியதீர்த்தங்கள் ஆடினபலனும், நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணங்களை அறிந்தபலனும் பார்வதிசமேதனாகிய பரமசிவனையும் மகாவிஷ்ணுவையும் பிரமதேவனையும் பூசித்தபலனும் அநேகந்தபங்கள் சந்திராயணங்கள் விரதங்கள் ஹோமங்கள் யாகங்கள் எக்கியங்கள், புண்ணியபலனும் கிடைக்கக்கடவதென்று வரமளித்தவராய்த் தான்தனது தேவிமுதலியவர்களுடனே சங்கற்பவிதியின்படித் தீர்த்தமாடுகையில், சகலவானராதிகளும் பிரமதேவர்முதலியவர்களும் கருடகாந்தருவசித்தவித்தியாதர ருரகராகாயவாசிகள் போகபூமியர்சாரணர் அத்திருபிருகு கவுதமர்கண்ணுவர் கௌசிகர்வியாசர் பராசர் சனகர் நாரதர் முதலானயாவரும் அக்கவிதீர்த்தத்திற் சங்கற்பவிதியின்படிமூழ்கி சந்தியாவந்தனமுதலிய நியமநிஷ்டைகளை, முடித்துக்கொண்டு சகலருஞ்சந்தோஷத்துடனே ஸ்ரீராமமூர்த்தி மனமகிழும்படியாய் அத்தடாகத்துக்காசிர்வதித்தார்கள்.

இப்படி அநேக வரப்பிரசாதங்களை பெற்று விளங்கப்பட்ட அத்தீர்த்தத்தில் முழுகினபேர்களது எத்தன்மை பொருந்திய பாவங்களையுந்தொலைத்து மேலான புண்ணியத்தைத் தருவதோடும் இஷ்டபோகத்தை யநுபவித்து புத்திரமித்திர களத்திராதிகளுடனே வாழ்ந்துகொண்டிருந்து முடிவில் புண்ணியலோகத்தைப் பெறுவார்களாதலால், அப்பேர்க்கொத்த மகிமைபொருந்திய அக்கினி தீர்த்தத்திலே ஒருகாலத்தில் ஆடகலோகத்திலிருக்கும் அரம்பையானவள் விசுவாமித்திரருடைய சாபத்தினற் கல்லாயிருந்தவள் இக்கினிதீர்த்தத்தில் முழுகிய பெருமையினற் சாபவிமோசனமாகிப் பழையபடி தெய்வலோகத்தைச்சேர்ந்து சுகமாய் வாழ்ந்துவந்தாளென்று சூதமுநிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்ய முனிவர்கள் முனிவரைப்பார்த்து சுவாமி அந்த அரம்பைக்கு என்னகாரணத்தால் விசுவாமித்திரர் சாபங் கிடைத்ததும் பிறகு அவள் கனிதீர்த்தத்தில் மூழ்கும்படியாய் நேரிட்டதும் அடியேங்களுக்கு ஆதியோடந்தமாய்த் தெரியப்படுத்தவேண்டுமென்று வினவிப்பணிந்த முனிவர்கள்மேற் கிருபையுள்ளவராய் சொல்லத்தொடங்கினர்.

கேளுங்கள் நைமிசாரண்யர்களே, கௌசிகர்குலத்திற்காதியர் வயற்றிற்பிறந்த விசுவாமித்திரராஜனென்பவன் மகா புஜபல பராக்ரமசால்யாகவும் இரதகஜதுரகபதாதிகள் சூழும்படியாய் இராச்சியபரிபாலனஞ் செய்துக்கொண்டிருக்கிற நாளையில் ஒருநாள் சகலசைந்நியங்களுஞ் சூழும்படியாய் தனது பட்டணத்தைவிட்டுப் பிரயாணப் பட்டு தண்டகாரண்யத்துக்குப்போய் நானுவித மிருகங்களின்மீது வேட்டையாடிச் சூரியவெப்பத்தால்மெலிந்து தாபசோபத்தோடும் வருகிறபோது, அவ்வனத்திற் றபஞ்செய்துகொணடிருந்த அருந்ததிசமேதராகிய வசிஷ்டமகாரிஷியானவர்கண்டு, கோசிகராஜன்முதலிய சைந்நியங்களுக்கெல்லாம் தெய்வலோகத்துக் காமதேனுவை வருவித்து ஓர்கணப்போதில் அறுசுவையுண்டியும்கந்தபுட்பதாம்பூலாதிகளுங்கொடுத்துமனமகிழும்படியாய்ச் செய்கையில், அக்காமதேனுவினது பெருமையைக்கண்ட விசுவாமித்திரவேந்தன் அதன்மீது இச்சைகொண்டு வசிஷ்டரைநோக்கி இக்காமதேனுவை எனக்குநல்கவேண்டுமென்றுகேட்க, அதற்கு வசிஷ்டர் இராஜனைநோக்கி, ஓ வேந்தனே இதுதெய்வலோகத்துப் பசுவாதலால் இதைநாம் பூசிப்பதற்குப் பாத்திரமேயல்லாமல் ஒருவருக்குக் கொடுக்கப்

பாத்திரால்லவேயென்று சொல்ல, அதற்கு விசுவாமித்திரவேந்தன் அக்காமதேனுவின்மீது ஈனிகாதலுற்றவனாய்த் தனது படையிலுள்ளவர்களை அநேகரைவிடுத்து பலவத்காரமாய்ப்பிடித்து தனது தேசத்துக்குக் கொண்டுவரும்படியாய் கட்டளையிட, அதுபோல இராஜனால் ஏவப்பட்டபேர்கள் காமதேனுவைவளைந்து சுற்றிக்கொண்டு கால்மீறவொட்டாமல் நெருங்கிப்பிடிக்கும்போது, வசிஷ்டர்கண்டு வியாகுலத்தையடைந்து ஸ்ரீகைலாசபதியாகிய உமாமகேசனைச் சிந்திக்கையில், அக்கணமே பரமேசுவரன் பிநாகமென்னும் வில்லிற்சந்திக்கப்பட்ட பிரம்மாஸ்திரத்தையேவுகையில் அவ்வஸ்திரமானது மகா உக்ரத்தோடும் வெளிப்பட்டுவந்து காமதேனுவைச் சுற்றிவளைந்து பிடிப்பதற்கு மேவியபேர்களையெல்லாஞ் சர்வசங்காரஞ் செய்கிறபோது, அதைக்கண்ட கோசிகராஜன், இவ்வளவு துன்பமும் இந்த வசிஷ்டரைச்சுற்றிவளைத்துக்கொண்டு அநேக அஸ்திரசஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்து வசிஷ்டரையுங் காமதேனுவையுங் கைபிடியாய்ப்பிடிக்க வேண்டுமென்று அவர்செய்யும்போது வசிஷ்டர் நன்மைசெய்யப்போய் கன்மம்வந்து வாய்ந்ததேயென்று யோசித்தவராய் அவர்களி பிரயோகஞ்செய்யும் பாணங்களையெல்லாம் அதப்படுத்தும்படியாய்த் தன்னுடைய யோகதண்டத்தை எடுத்துத் தனக்கு முன்பாக நிறுத்திவிட்டு தான்நிஷ்டையிலிருக்கையில் அப்போது விசுவாமித்திரன் முதலிய ரதிகாளியாவருந் தங்கள் தங்கள் வில்லைவளைத்து நாண்பூட்டி சங்கோபசங்கமாய் அநேகம் அஸ்திரங்களைவாரி வாரிச் சேனைமாரிபோற்சிந்த, அவ்வஸ்திரங்களெல்லாம் வசிஷ்டர் நிறுத்திவைத்த யோகதண்டத்தைப் பிரதட்சிணஞ்செய்து நமஸ்கரித்து அத்தண்டத்தின்முன் அசைவற்று நிற்கின்றதேயன்றி அப்பாற்செல்ல வல்லமையற்றிருப்பதைக்கண்ட கோசிகராஜன் அந்தோ நமது வல்லபமும் நமதுசேனாசைந்யத்தின் திரமும் ஓர் பிராமண சன்னியாசிமுன் செல்லமாட்டாமற் போய்விட்டதேயென்று மிகவும் நாணமுற்றவனாய் கூறுவான் இந்த வசிஷ்டனாகிய பிராம்மணசன்னியாசியானவன் தனது ஒருகையினாலெடுத்து நிறுத்திவைத்த யோகதண்டினாலேநாம் தொடுத்த அஸ்திரங்களெல்லாம் நாசத்தையடையுமாயின் இனி நம்மால் அக்காமதேனுவைக் கைவசப்படுத்துவது அரிது ஆதலால் நாம் இந்தவசிஷ்டனைப்போல் தவஞ்செய்து வல்லவனானால் பின்பு காமதேனுவைக் கைவசபபடுத்திக் கொள்ளலாமென்று யோசித்தவனாய்த் தன்னுடைய ராஜரீகத்துக்கு மந்திரிபிரதானிகளைநியமித்து தன்னுடன் வந்திருந்த சைந்நியங்களை பட்டணம்

போய் சேரும்படியாகவனுப்பிவிட்டு, தவவேடம்பூண்டு தான்பி ரம்மகுலசிரேஷ்டனாகவேண்டியதாய் கிட்டிசையைநோக்கிச்சூரி யனைப்பார்த்துக்கொண்டே அநேககாலந் தபஞ்செய்தும்,பின்ன ர்தென்றிசையை நோக்கிச்சிலகாலந் தபஞ்செய்தும் புன்பு மேற் றிசையை நோக்கிச் சிலகாலமிருந்தும், அப்பால் பிராம்மணருக் குரித்தாகிய ஐம்புலாதிகளையுமடக்கி நவத்வாரங்களையுமடைத் து இராகத்வேஷாதிகளைப்போக்கி விருப்பும் வெறுப்புமற்றுவா சியையடக்கி ஆனி ஆடிமாதங்களிற் பஞ்சாக்னிமத்தியிலேயும் ஆவணி புரட்டாசி இரண்டிலும் மழைகளிருந்தும் மாசி பங்கு னிமாதத்திற் குளிர்ந்தஜலத்தைநின்றும் மற்றமாதங்களில் வெயி லும்தேகத்தின்மீது யாதொரு கவசனையுமின்றி கருங்கல்லைப் போல் அசைவறநின்று சங்கற்பவிகற்பங்களற்று சித்ரதீபத்தை ப்போல தேவவருடங்களிலே ஆயிரம் வருடம்வரையில் உத்திர திசையை நோக்கித்தபஞ்செய்துக் கொண்டிருந்தான்.

அப்படியிருக்கிறபோது இவன் செய்யுந்தபத்தின் திறத் தைதேவராஜனாகிய இந்திரன் அறிந்துஉடனே தனதுசபையில் நாட்டியஞ் செய்யப்பட்ட அரம்பையை வருவித்து, ஓ பெண் பாவாய், பூலோகத்திலோங்கும் கவுசிகநதி தீரத்திலே விசுவாமி த்திரராஜன் அரிதாகிய தபஞ்செய்து கொண்டிருக்கிறபடியால் நீ அங்குசென்று அத்தபத்தை அழித்துவாவென்றுசொல்ல, அ ப்போது அரம்பைகூறுவாள் சுவாமி அவ்வேந்தன் மகாகொடி தாகிய தபத்தையுடையவனாதலால் என்னால் அதற்கு விகற்பந் தேட முடியுமோ, வீணேயேன் துன்பத்துக்காளாவேன், என்னா ல்முடியமாட்டாதென்றுசொல்ல, அதைக்கேட்ட இந்திரன்அவ ளுக்கு இதமுண்டாகும் வார்த்தைகளைச் சொன்னதோடும் அவ ளுக்குச் சகாயமாய்மன்மதனையுங்கூட்டியனுப்ப, அதன்பேரில் அரம்பையானவள் தேவராஜனிடம் விடைபெற்று பூலோகத்திற் கவுசிகநதி தீரத்திலே தபஞ்செய்துகொண்டிருக்கும் விசுவாமித் திரருக்கு முன்பாகவந்துநின்று இன்னிசையினோடும் அநேககீத ங்களைப்பாடியும் வீணாகானஞ்செய்தும் நிற்கையில், அச்சமயத் தில் மன்மதனானவன் முல்லை அசோகுமுழுநீலஞ்சூதம் முளரி என்னுந்தன்னுடைய பஞ்சபாணங்களையுங்கருப்புவில்லினிடமா கச்சந்தித்து விசுவாமித்திரர்மீது பிரயோகஞ்செய்யும்போது வி

சுவாமித்திருடைய தேகமெல்லாம் மெழுகுபோலுருகிக்கரைந் துமனமானதுகலைந்து நிட்டைநீங்கி இஃதென்னகாரணமோதெ ரியவில்லையென்று கண்களை விழித்துபார்க்கும்போது, அரம்பை யானவள் நிற்பதைக்கண்டு இவளாலன்றோ இக்காரணம் விளை ந்ததென்றறிந்துகோபங்கொண்டு அடிபாதகி, நீஎனதுநிட்டை யைக்கெடுக்க நேர்ந்தமையாற் கல்லாய்ப்போகக் கடவையென்று சபித்தான் அதுகண்ட மன்மதனவன் நமக்கு என்னகேடுசம் பவிக்குமோவென்று மெய்நடுங்கி அரூபியாய் மறைந்து ஓடிப் போய்விட்டான்.

அக்காலையில் சாபத்தை எற்ற தெய்வகணிகையானவள் வி சுவாமித்திரவேந்தனது பாதகமலங்களிற் பணிந்துதுதித்து, சு வாமி! தெரியாமையாற்செய்த அடியாளது குற்றத்தைப் பொ றுத்தாண்டு இச்சாபவிமோசனஞ்செய்யவேண்டுமென்றுகேட்கு ம்அரம்பையினது பரிதாபத்தைக்கண்ட விசுவாமித்திரன்சற்றே கிருபைசுரந்துகூறுவான், வாராய், அரம்பைமாதே, நமதுசாபத் தின்படிநீபதினாயிரம்வருடம்வரையிற் கருங்கல்லாயிருந்து, பின் புஓர்பிராமணனால் இச்சாபவிமோசனமாய் தெய்வலோகம்போ ய்ச்சேருவாயென்றுசொல்ல, அப்போது அரம்பையுங் கற்சிலை யாய் நின்றாள்! இப்படி விசுவாமித்திரருடைய சாபத்தினாலே அரம்பையானவள் கருங்கல்லாய்நிற்க, அப்போது விசுவாமித்தி ரர் மகாமேன்மைபொருந்திய தபத்தினால் மெத்தவும்மகிமைக ளைப்பெற்று வசிஷ்டர் முதலிய சகலரிஷிகளுந்தன்னைப் பிரம்ம ரிஷியென்று சொல்லும்படியாய்,தெய்வலோகத்திலுள்ள காம தேனுமுதலிய நவநிதிகளுந்தனக்கு அற்பமாய்க்கிடைக்கும்படி மகிமைபெற்றிருந்தார்.

அப்படியிருங்காலத்தில் அநேக நாளைக்குப்பிறகு அகஸ் தியமகாரிஷியினுடைய மாணாக்கராகிய சுவேதனென்றுசொல்ல ப்பட்டவர் உமாமகேசனைச்சிந்தித்து மோட்ச சாம்பிராச்சியத் தில் இச்சைவைத்து கௌதமநதிதீரத்திலே தபஞ்செய்து கொ ண்டிருக்கிறகாலையில் அங்கராசைஎன்னும் ஓர் அரக்கியானவள் நீலகிரியைப்போன்ற சர்த்திரமாகிய ரூபமும் கோடைகாலத்தி டிபோன்றகெறஜனைமுழக்கத்தோடும் வந்து சுவேதனென்னும் பிராம்மணன்தபஞ்செய்யுமிடத்தில் மலமூத்திரங்களைக்கொண்டு வந்துசொரிந்தும் மதுமாமிசங்களைக்கொணர்ந்து சொரிந்தும்,

சுவேதனுடைய திருமேனி எல்லாம் அகோர சின்னங்களையடை யும்படியாய்ச்செய்தும், தபத்தைவிட்டோடும்படியான விகாதங் களைச்செய்தாள் அப்போது சுவேதன் மிகக்கொதித்தெழுந்து கண்களை விழித்து எறிட்டுப்பார்க்கும்போது அவ்விடத்தில்கோ ரரூபத்தோடும் நிற்கின்ற அரக்கியைக்கண்டு மகா உக்ரத்துட னே அச்சிலையைப்பிடுங்கி மந்திரபிரயோகஞ்செய்து அங்கார சை என்னும் அரக்கியைக்கொல்லக் கடவையென்று எறிந்தான்.

அப்போது அக்கற்சிலையானது புலப்பட்டு அங்காரசியைத் துரத்துகிறபோது அவளும்பயந்து இக்கற்சிலைக்குத் தப்பித்து க்கொள்ளவேண்டுமென்று தென்றிசைநோக்கி ஓடினாள். அவள் அப்படி ஓடியுங் கற்சிலையானது விடாமல் துரத்திக்கொண்டுவே கத்துடனே காடு, மலை, வனம், வனாந்தரங்களிலோடியும், விடா மற்றுரத்திவருகிறபோது, அவ்வரக்கியானவள் தென்றிசையி லோங்குஞ் சேதுமத்தியில் விளங்காநின்ற கவிதீர்த்தத்துக்குசமீ பமாய்போகையில், சிலையானதுவிடாமற் றொடருவதைக்கண்ட அரக்கியானவள், அக்கவிதீர்த்தத்திலே அடித்துமோதி விழுந் தாள் அப்படி விழுந்ததைக் கற்சிலையாகிய அரம்பைகண்டு, அந் நீரினின்றும் இராக்கதஸ்திரீ எழும்புவதற்குள்ளாக குபீலென் றுஅவள்பேரில் விழுந்து, மண்டை சிதறும்படியாய் நொறுக்கி அவள் பிராணனைவாங்கிவிட்டது அப்போது அரம்பையாகியக ற்சிலையும், அநந்தக்கவிதீர்த்தத்தில் மூழ்கவே, பழையபடி அரம் பாஸ்திரீயானாள்.

கேட்டீர்களோமுனிவர்களே! இவ்வாறு பதினாயிரம்வருடம் வரையிற்விசுவாமித்திரருடைய சாபத்தினாலே, சிலையாகவிருந்த அரம்பை, அகஸ்தியருடைய மாணாக்கராகிய சுவேதமகா முனியி னாலே அங்க ராசை என்னும், இராக்கத ஸ்த்ரீயையுங்கொன்று, பழையபடி தேவதாசொரூபம் பெற்றாளென்கிற செய்தியைத் தேவர்களாலறிந்து, அரம்பியின் மீதிருக்கும் மோகத்தினாலே மகாசந்தோஷத்துடனே, அப்சரஸ்த்ரீகளோடும் அரம்பைக்கு வேண்டிய ஆடையாபரணங்களுங்கொண்டுவந்துகொடுத்து,உப சரித்து உடுத்திகொள்ளும்படியாகச்செய்து, இந்திரவிமானத்தி லேற்றிக்கொண்டு, தேவர்கள் துந்துபி முழக்கிப் புட்பமாரிசிந்த ஸ்ரீராமநாதனைதரிசித்துப் பணிந்து விடைபெற்றவர்களாய்தே

ய்வலோகம்போய் சேர்ந்தார்கள். பின்பு அங்காரசை என்னும் அரக்கியானவள் அரம்பாஸ்திரீகளில் குருதாசி என்னும் பெய ருடையவர்களாயிருந்த வாக்கியத்தின்படி அகஸ்தியமாணுக்க ரானசுதேவமுனியின் தபத்துக்கு இடையூறுசெய்து, அதுநிமித் தங்கவிதீர்த்தத்தில் விழுந்துமடிந்து பழையபடி குருதாசி என் னும் பெயருடனே, தெய்வலோகம் போய்ச்சேர்ந்தாள்.

ஆதலால் அக்கவிதீர்த்தத்தின்பெருமை யாவராற் சொல்லி முடியும், இதல்லாமலும், அச்சேதுவின் மத்தியிலோங்குங்கந்த மாதனச்சாரில், காயத்திரி, சரசுவதிஎன்னும் இரண்டு தீர்த்த ங்களிருக்கின்றன, அத்தீர்த்தங்கள் அநேகபுண்ணிய பலன்களை யும் மோட்சசாம்பிராச்சியத்தையுங் கொடுப்பதோடும், அனேக ளைப்புகழ்ந்து பேசப்பட்டவர்களுக்குண்டானபாபங்களைவிமோ சனஞ்செய்துக்கொண்டிருக்கின்றனவென்று சூதமுனிவர்சொல் ல, அவ்வாய்மையைக்கேட்ட நைமிசாரண்யர்கள், சுவாமி, தேவ ரீர் அடியேங்களுக்கு அத்தீர்த்தங்கள் உண்டாகிய விதமும், அவ ற்றின்பெருமையும், ஆதியோடந்தமாய்க் கூறவேண்டுமென்று கேட்கச்சூதமாமுனிவர் ரிஷிகளின்மீது கருணையுண்டானவராய்ச் சொல்லத்தொடங்கினர்.

கவிதீர்த்தச்சரித்திரம்.

முற்றிற்று.

உ௪-வது

## காயத்திரி சரசுவதி தீர்த்தச் சரித்திரம்.

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய ருஷிவர்களே! ஸ்ரீ வைகுந்தவாசகராகிய மகாவிஷ்ணுவினது உந்திக்கமலத்திலுற் பவித்த பிரமதேவன் தன்னுடைய சிருஷ்டியினால், ஓர்வாக்கு என்னும் பெண்ணைப்படைத்து, அவளது ரூபாலாவண்ய சவுந்தரியத்தைக்கண்டு, அவளைச்சேரவேண்டுமென்று மோகங்கொண்டு அவளைப்பற்றி ருருக்கையில் அவ்வனிதையானவள் மிகவும் நாணமுற்றவளாய், ஐயா! தேவரீரால் நான் சிருஷ்டிக்கப்பட்டதால் நான்தங்களுக்குப் பெண்முறைபன்றோ, ஆகலால் காம வெறிமீறி என்னைத்தொடுவது அழகல்லவே என்றுகூற, அவ்வார்த்தையைக் கிஞ்சித்தேனுங் கேளாதவனுய் மறுபடியும், அவளைப்பற்றி இழுக்கும்போது அவள் மானுருவங்கொண்டு, காட்டகத்தில் ஓடினாள் அதைக்கண்டபிரமன் உடனே கலையைப்போல் வடிவங்கொண்டு அம்மானைத்தொடர்ந்து துரத்தும்போது, அவ்வாக்கினியானவள் அவ்வுருவத்தினின்றும்நீங்கி அன்னவடிவங் கொண்டு உயரவெழும்புகையில், அதைக்கண்ட பிரம்மனும், அன்னமாக உருக்கொண்டுதானும் ஆகாயவீதியிலெழும்பித் தொடர்ந்தான். இப்படிவாக்கினியானவளும் பிரமனும், எறும்புமுதல்யானையீறாக ருபங்களெல்லாம் மாறிமாறியெடுத்துத் திரிகிறபோது, வாக்கினியானவள் மெத்தவுந் துன்பவடைந்து, சகிக்கமாட்டாதவளாய் வாய்விட்டுக்கோவென் றலறிக்கொண்டே ஓடித்திரிய பின்னும் பிரமதேவனுக்கு மோகவிகாரமடங்காமல்வாக்கினியைத்துரத்திக்கொண்டு திரிவதை சகலதேவர்களுங்கண்டு கைகொட்டிச்சிரித்து, ஒருவரை யொருவர் பார்த்துச்சொல்லுவார்கள் ஓ தேவர்களே இந்தபிரமதேவரானவர் சகலஜீவான்மாக்களையும் படைக்கத்தக்கவராக இருந்தும் இப்படிமோகவிகாரங்கொண்டு தன்படைப்புக்குள் அகப்பட்ட பெண்ணை வேண்டிமையல்கொண்டலைந்தாள் மற்லயாவற்றான் ஞாயமாய் நடக்கப்போகின்ர்கள்.

இப்படியுங் கதிதப்பி நடப்பதுண்டோவென்று கொக்கரிக் கொட்டி நகைக்கும் ஓசையானது, ஸ்ரீகைலாசபதியாகிய உமாரு

கேசன் செவியிற் புகுந்தமாத்திரத்தில் அப்பரமசிவன் புன்சிரிப்புக்கொண்டு, தான் ஒரு வேடுவனைப்போற்சமைந்து, கையில்வில்லுமம்புமெடுத்து வருகிறபோது, அவர்களிரண்டுபேரும் பறவைகளுருவங்கொண்டு, அவர்கள்வரும்படியாகிய மார்க்கத்தில் வந்து மறித்து வில்லினிடமாக ஒரு சிலையைப்பூட்டி கர்னபரியந்தமிழுத்து இருவர்பேரிலும் பிரயோகஞ்செய்தார். அவ்வாறுபரமசிவத்தாற் பிரயோகஞ்செய்யப்பட்டவாளியானது, பினுகமென்னும்வில்லினிடத்திருந்தும், அதிகவேகத்தோடும் வெளிப்பட்டுபிரமதேவனுடைய உயிரைக் கவர்ந்ததோடும், பேதையாகிய வாக்கினி என்பவளது தேகத்தையும், இரண்டுபிளவாக்கி எறிந்துபரமசிவத்தினது அம்புறாத்தூணியில்வந்து சேர்ந்தது அப்போது கலைரூபமாயிருந்த பிரமனும் சுயரூபத்தோடும் நிலத்திற்சாய்ந்து மரணத்தையடைந்தான் அவனுடையதேஜசும் பிரமத்தை யடைந்திருந்தது, அக்காலையில் பரமேசுவரனாகிய வேடனும்பிரமன் பூமியிற்சாய்ந்தவுடனே மான்மழு சதுர்புஜ காளகண்டதிரிநேத்திர சந்திர ஜடாதாரியாய் தேவர்களெல்லாங்கண்டு மகிழ்ந்து தோத்திரஞ்செய்யும்படியாய் நின்றார்.

அவ்வாறுநின்ற ஸகலாசபதியானவர் தேவர்களை நோக்கி ஓ தேவர்களே இன்றையதினம் ஆதிரைநாளானபடியினாலும், நீங்களியாவரும் நம்மைப் பூசித்தபடியினாலும், இதுபோல் எக்காலமும, இத்தினத்தில் நம்மைப்பூசித்து வணங்கினால். உங்களுக்குச் சகலகாரியங்களுஞ் சித்தியாகுமென்று வரமளித்துக் கைலாசத்துக்கெழுந்தருளினார். அதுகண்ட தேவர்களெல்லாமனமகிழ்ச்சியோடும் தங்களுலகம்போய்ச்சேர்ந்திருக்கையில் பிரமதேவன் மரணமடைந்த செய்தியை அவன் தேவிமாராகியகாயத்திரியுஞ் சரஸ்வதியுமறிந்து; மகாதுக்கத்தோடுந் தாங்கள் புருஷனையிழந்து, கைம்பெண்களாகவிருப்பது பற்றித் தங்களுக்குத்தாங்களே, ஐயோ, மகாவிஷ்ணுவும்இலட்சுமிதேவியுமாகவும்இந்திரனும் அயிராணியுமாகவும்பரமேசுவரனும்பார்வதியுமாகவும், சந்துஷ்டியாய்வாழ்ந்துவர நாம்தானோபாவிகளானோம்தெய்வமே இப்படியும் நடப்பதுண்டோவென்று தங்களுக்குத் தாங்களே நொந்துகொண்டுபதுமாசனத்தையுடையநமதுமணாளனைப்பழையபடி எக்காலையிற் காண்போமென்று சிந்தித்தவர்களாய், அதற்

காகவேண்டிய எண்ணங்களை முடித்துக்கொண்டு, சகலலோகங்களுக்கும் மேன்மையான மகிமையைப் பெற்றதாயும் விளங்குங் கந்தமாதன பருவதச்சாரலிற் போய்ச்சேர்ந்து ஸ்ரீ கைலாசபதியைநோக்கி, அநேகநோன்புகளை யனுஷ்டித்தும், அவன் தங்கள் பெயரினால் இரண்டு தடாகங்களையுண்டுபண்ணி அத்தடாகத்திலே இரண்டுபேருமாய்த் திரிகாலமுந் தீர்த்தமாடி நியமநிட்டைகளை முடித்தும் உவர்ப்பில்லாமல் ஓர் போது உணவுகொண்டும் காமக்குரோதமுதலிய அறுவிதப்பகைகளையுநீங்கி, பஞ்சாட்சரத்தை இடைவிடாமல் தியானித்துக்கொண்டு, ஸ்ரீ பரமேசுவரனுடைய பாதாரவிந்தத்தை மனதிலே இடைவிடாம லிருத்திக்கொண்டு, அக்கந்தமாதன கிரிச்சாரலில் அநேககாலந் தபஞ்செய்து வந்தார்கள்.

அப்படி யிருக்கிறபோது சந்திரஜடாதர மூர்த்தியாகிய பரமசிவன் அப்பாவையர்களின்மீது கருணையுண்டானவராய்க்கலாசத்தினின்றும், முப்பத்துமுக்கோடிதேவர்கள்நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், அஷ்டவசுக்கள், கருடகாந்தர்வ சித்தவித்யாதர ருரக ராகாயவாசிகள் போகபூமியர் முதலிய சிவகணங்கள் புடைசூழும்படி பார்வதிசமேதராய் வெள்விடைமீதேறிக் கந்தமாதனச்சாரலில் தபஞ்செய்து கொண்டிருக்கும், காயத்திரி சரஸ்வதி என்னு மிருவர்களுக்குந் தெரிசனந்தந்தார். அப்போது காயத்திரியும் சரசுவதியும் பரமேசுவரனைக்கண்டு சந்தோஷ சாகரத்துட் டோய்ந்தவர்களாய், அர்க்கியபாத்திய சோடசோபசாரத்தோடும் பூஜித்து, நிலத்திற்பணிந்தெழுந்து நமஸ்கரித்து, அண்டசராசரங்களை யெல்லாம் ஈன்றளித்தழிக்கின்ற பரமேசுவரியை வாமபாகத்தில் வைத்துவிளங்கப்பட்ட கருணைபிரவாகநிதியைசுருதிவாக்கியங்களாலேதுதித்து, வணங்கிப்பரவசமடைந்து, ஆனந்தக்கூத்தாடினார்கள். அப்போது ஈமாமகேசன் அன்னவர்களின்மீது உள்ளமகிழ்ந்தவராய், உங்களுக்கு வேண்டிய வரம் யாதென்றுகேட்க, அவ்விருவர்களும் சுவாமிஇதற்குமுன்னோர்காலத்தில்தேவரீருடையபாதகமலத்தையுந்திருமுடியையும் காணவேண்டுமென்றஎங்கள் நாயகனும், இலக்குமிசமேதரான மகாவிஷ்ணுவும், அன்னமாகவும் பன்றியாகவும் ஜனித்து எத்தனையோகாலமலைந்துங் காணாத பரஞ்சோதி சொரூபமானது அடியேங்கள்பொருட்டாய்தரிசனந்தந்ததும் அப்புணைத்தாளறியாத செயலு முண்டோவென்றும் கூறினவர்களாய் மறுபடியுங் கூறு

வார்கள். சுவாமி, தேவரீர்ஸ்ரீபதாம்புயத்துக்கோர் விண்ணப்பஞ் செய்துகொள்ளுகின்றோம், அது யாதெனில் எங்களைக்கண்ட யாவரும் மனவெறுப்புக்கொண்டு எங்கள் முகத்தில் விழிக்கப் படாதென்று தூறிக்கொள்ளுகின்றமையால் எங்களுடையநாய கனை யெழுப்பித்தரவேண்டுமென்று அநேகவிதமாய்த் தோத்தி ரஞ் செய்தார்கள்.

அப்போது சாம்பமூர்த்தியுங்கருணைகூர்ந்து பிரமனுடைய உடலத்தையுஞ் சிரத்தையும் எடுத்து வாருங்களென்று சிவகண ங்களுக்கு விடைகொடுக்க, அவ்வாறே அவர்கள்போய்க்கொண் டு வந்தவையைப்பரமசிவன் தனதுகரத்தினால் வாங்கிஉடலையுஞ் சிரத்தையு மொன்றாகப்பொருத்திக் காயத்திரியுஞ் சரஸ்வதியுங் காணும்படியாய் பிரமனைப்பார்த்து ஓ பிரமனே எழுந்திருக்கக் கடவையென்றுதிருவாய்மலர்ந்தருளிய மாத்திரத்தில்அவன்உட லிற் பிரமதேஜசுவந்து பொருந்தி தூங்கி விழித்தவன்போல் நெ ட்டுயிர்ப்புக் கொண்டெழுந்து, சென்னிமேற் கரங்களைக்கூப்பி, சுவாமி அடியேன் புல்லறிவினால் அதர்மமாய் நடத்திய பெரும் பிழையைப்பொறுத்து ரட்சிக்கவேண்டுமென்று பாதப்புணையிற் படிந்து அநேகதோத்திரங்களைச்செய்யும்போது, பரமசிவமாகிய மகேசன் கருணைபோடும்நோக்கி வாராய்பிரமனே இனிமேலாயி னும் நீஇத்தன்மைபொருந்திய கவனத்தை நினையாதேஇவ்வாறு இன்னமெவர் செய்தபோதிலும் அவர்களை நாம் சங்காரஞ்செய் வோமென்றும் ஓதி சரஸ்வதியைப் பார்த்துச் சொல்லுவார்

வாராய் சரஸ்வதியே காயத்ரியே நீங்களிருவரும் உங்களு டைய நாயகனோடும்பிரமலோகம் போய்ச்சேர்ந்து வாழ்ந்துவரக் கடவீர்களென்று திருவாய்மலர்ந்து பின்னுங்கூறுவார். ஓபாவை யர்களே நீங்களிருவரும் இக்கந்தமாதனச்சார்பிலுண்டாக்கிமூழ் கிக்கொண்டிருந்த இவ்விரண்டு தீர்த்தமும் உங்கள் பெயரால் விளங்கக்கடவதென்றும் இதிற்தீர்த்தமாடப்பட்ட பெண்பால் கள் நித்தியசுப மாங்கல்யத்துடனே அநேககாலம் வாழக்கடவ ர்களென்றும் ஆண்பாலா யிருப்பவர்களது சகல தோஷங்களும் நிவர்த்தியாய் நித்யானந்த மோக்ஷத்தைப் பெறுவார்களென்றும் வரங்களைக்கொடுத்து சகல தேவர்களோடும் ஸ்ரீ கைலாசத்துக் கெழுந்தருளினார் அதைக்கண்ட பிரமதேவன் தனது தேவிமார்

களுடனே கூடிச்சத்தியலோகம் போய்ச்சேர்ந்தார். ஆதால் ஓ முனிவர்களே! இவ்வாறு காயத்திரிஎன்றுஞ் சரஸ்வதி என்றும் பெயர்வாய்ந்து விளங்கும் மகிமைபொருந்திய தீர்த்தங்களிலே காசிபரென்னும் மகாதபோதனுகிய ஓர் பிராம்மணன் இப்புண்ணிய தீர்த்தங்களில்வந்து தீர்த்தமாடி அவன்செய்த பாவங்களையெல்லாமகற்றிப் புனிதனுனனென்றுசொல்ல, அவ்வாய்மையைக்கேட்ட நைமிசாரண்யர்கள் சுவாமீ தேவரீர் இப்போது உரைத்த காசிபரென்பவர்யார் அவருக்கு தோஷங்கள்வந்து சம்பவித்தகாரணமியாது அவைகளையெல்லாம் அடியேங்களுக்குத்திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்கச் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

காயத்திரி சரஸ்வதி தீர்த்தச்சரித்திரம்.

முற்றிற்று.

---

## காசிபச்சரித்திரம்

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே! பாண்டவகுலத்தி லுற்பவித்த வாளபிமன்னன் குமாரனுகிய பரிக்ஷீத்து மகாராஜன் சிறுவனுக இருக்கும்போது ஓர்நாள் தமது பட்டணத்துக் கருகிலிருக்கும்வனத்தில் வேட்டையாடச் சென்றவன் அவ்வனத்தில் சமீகனென்னும் பெயரையுடைய ஓர்மகாரிஷியானர் தபஞ்செய்துக் கொண்டிருக்கையில் அவர்மகிமையறியாதஇச்சிறுவன் தனது வேட்டைமார்க்கத்தி லகப்பட்ட ஓர் மிருகத்தை வதஞ்செய்து அவ்விருடியின் ஆச்சிரமத்திற் கொண்டுவந்து சேர்ந்து அத்தபசியை நோக்கி, அடா பிராம்மணு, நீ ஏன் விருதாவிலேஅன்னபானுதிகளை மறந்துங்கண்ணைத்திறவாமலும் வயிற்றை எக்கிக்கொண்டு துன்புற்றிருக்கின்றய், இந்த மிருகத்தையாகிலும் புசித்து பசிநோய் தணியென்றுசொல்ல, அப்போது அம்முனிவர் ஐம்புலாதிகளையும அம்புலிவாதனையையும் அடக்கித் தன்னைமறந்து அகண்டபரிபூரண சச்சிதானந்த பரப்பிரம்ம சைதன்னியத்தில் லயப்பட்டு இருப்பதால் யாதுந் தோற்றுதவராய் இருந்ததனுலேமறுபடியும் அப்பரிக்ஷீத்தென்பவன்வினை

யாட்டு புத்தியால் அவன் உயிர்நீங்கி,இருந்த ஓர் பாம்பை எடுத்துவந்து அம்முனிவர் கழுத்தில் மாலையைப்போற் போட்டுத் தனது பதிக்குப் போய்ச்சேர்ந்தான்.

அங்ஙன மவ்வாறிருக்கையில் அக்கோலத்தைக்கண்ட கிரீசனென்னும் ஓர் தபசியானவன் அம்முனிவரது குமாரனாகிய சிருங்கிமாமுனியினிடத்திற்சொல்ல, அதற்கவன் கோபங்கொண்டு அதிவேகத்துடன் தகப்பனிடம்வந்து பார்க்கும்போது அப்படியே இருப்பதுகண்டு இவ்வாறுசெய்தவனாரென ஞானதிருஷ்டியினாற் பார்க்கும்போதுபரிக்ஷித்தென்றறிந்து மகாஉக்ரத்தோடும்எனது தந்தையை கிஞ்சித்தேனுஞ் சிந்தியாமல் இக்கோலஞ்செய்தவன் கார்க்கோடகனென்னும் பாம்பினால் மரணமடையக் கடவனென்றுசாபங்கொடுத்தான். அச்செய்தியை நிட்டையிலிருந்த அவன் றந்தையாகிய முனிவனறிந்து கண்விழித்துப்பார்த்து, அடாசிருங்கியே, என்னவேலைசெய்தாய் அந்தோ அவன் நீழலிற்குடியிருந்தும் கிஞ்சித்தேனும் பொறுமையின்றி அநீதமாய் சாபத்தைக் கொடுத்தனையே தருமமல்லவே ஐயோ, உன்னைப்போற் கோபத்தைப் பொருளாய்க்கொண்டவர்கள் எவ்வகையாய்நன்மையைப் பெறுவார்கள் கோபத்தினாலன்றோ பிறப்பிறப்பு முதலிய துன்பங்கள் சம்பவிக்கும் இதை நீ அறியாமற்சிறுபிள்ளை புத்தியாய் சபித்தனையே என்றுமனவருத்தமுற்றவராய் தன்னுடையமாணாக்கர்களில் ஒருவனாகிய கவுரமாமுகனிடத்தில் நடந்த சவிஸ்தாரங்களையெல்லாந் தெரிவித்துப் பரிக்ஷித்துராஜனுக் கறிவிக்கும்படியாய்ச்சொலல அதுபோல அம்முனிவன் பரிக்ஷித்து ராஜனைக் கண்டு தனது குருவானவர்கூறிய சங்கதிகளைச்சொல்ல, அதைக் கேட்ட பரிட்சித்துவானவன் சிறுபிள்ளையாதலால்யாதுந்தோற்றாதவனாகவிருந்தான் அப்படி யிருக்கையில் அதன்பின் சிறிது நாள்கழித்து இவன் இராஜரீகஞ்செய்துக்கொண்டிருக்கும்போது அங்குள்ள பெரியோர்களிடத்தில் தனதுகாலபலனை விசாரணை செய்கையில் இராகுகேது தோஷங்கள் போதாதெனவறிந்து அத்தோஷஞ் சம்பவிக்குங்காலத்திலே உவரிஎன்னுஞ் சமுத்திரமத்தியில் ஒற்றைக்காலின்மீது மண்டபம் புதுக்கி அம்மண்டபத்திற்றான் ஒண்டியாகவிருந்தும் அதைச்சுற்றிலும் தனதுமந்திரி பிரதானிமுதலிய படைவீரர்களைச் சர்ப்பமுதலிய விஷஜெந்துக்கள் உட்பிரவேசிக்காவண்ணங் காக்கும் படியாய்க் காவலமைத்

துக் காத்தும்வருகையில்விதியை விலககொணுதென்னு மொழி போல் கார்க்கோடகனென்னும் பாம்பானது சிருங்கியின் கட்டளைப்படி பரீக்ஷித்து ராஜனைத் தீண்டவேண்டி பிராம்மண சொரூபமாய் பிரயாணப்பட்டு வருகிறபோதுவிஞ்சை மந்திரத்தை யுணர்ந்த வல்லவனுகியும் எங்கும்பிரசித்தனுகியுமிருக்குங்காசிப னென்னும் ஓர் பிராம்மணன் பரிட்சித்துராஜனைக் காணவேண்டுமென்று வருகிறபோது காசிபனைப் பிராம்மண உருவங்கொண்டு ஏகுங் கார்க்கோடகன் கண்டு, சுவாமி! எங்கு போகிறீரென்று கேட்க, அதற்கு காசிபன் கூறுவான்.

ஐயா, நான் பரிட்சித்து மகாராஜனை விஷந்தீண்டப்போகுதென்றுசமுத்திரமத்தியில வீடுகட்டிக்கொண் டிருப்பதால்அவ்வேந்தனை ஒருவேளை சாபந்தீண்டி உயிரிழந்து பிரேதமா யிருந்தபோதினும்அப்பிரேதத்திலே எனது வலலமையினுலே ஜீவனை வருவித்து எழுப்பி அவனிடத்திற் பரிசு பெற்றுக்கொண்டுபோகஎண்ணங்கொண்டு வந்தேனென்றுசொல்ல அவ்வார்த்தையைக் கார்க்கோடகன் கேட்டுநகைசெய்து அடாபயித்தியங் கொண்ட பிராம்மணு, என்னவார்த்தைசொன்னுய். அந்த கார்க்கோடகன் தீண்டுவானுயின் உன்னைப்போன்றவன நூறுவருடம் வரையிற் கற்ற மந்திரங்களைக்கொண்டு ஓதியபோதிலும், அவ்விடத்தையிறக்கும் வல்லபமுளாதோ வென்று கூறியதல்லாமலும், பின்னும் கூறுவான்.

ஓ பிராம்மணு, அவ் வேந்தனைத் தீண்ட எத்தனித் திருக்குங்கார்கோட னென்பலன் நான்தான், எனது சொரூபத்தைப்பாரென்று தன்சொரூபத்தையுங்காட்டி, பின்பு அவனுக்குறுந்துன்பத்தை நீக்கி உயிர்கொடுப்பது நிச்சயமாயின், யான் ஒரு வார்த்தைசொல்லுகிறேன் கேள், அது யாதெனில் அதோ நமக்கெதிரிற் றளிர்த்தும், பூத்தும், காய்த்தும், பழுத்துமிராநின்ற மாமரத்தை நான்தீண்டிஎனது விஷாக்கினியினுல பஸ்மீகரப்படுத்தி விடுகிறேன், பின்பு அதனை நீ உனக்கு வல்லபமிருந்தால், பழையபடி தளிர்த்திருக்கச்செய்வையேயாகில் பரிக்ஷித்தைஎழுப்புவாயென நம்புவேன்என்று கார்க்கோடகனுகிய பிராம்மணன் சொல்ல, அதற்குக் காசிபன், நான் அப்படியே செய்கிறேன், உனது திறத்தைக் காட்டென்றுகூற உடனே கார்க்கோடகன் தன்சொரூபத்தை யெடுத்துமகா கோபாக்கினியோடும், அம்மா

மரத்தருகேசென்று அதின்வேரைத்தனது வாயினுற்பற்றிக் கடித்தமாத்திரத்தில், அம் மரமானது திக்கென்றெறிந்து சாம்பலாயிழுந்தது, அதுகண்ட காசிபனென்னும் பிராமணன் உடனே தனக்குகைவல்யமாயிக்கும் விஞ்சைமந்திரத்தை யோதிப் பழையபடி தளிர்த்திருக்கும்படியாய்ச் செய்தான்.

அப்போது அதனைக்கார்க்கோடகன் பயந்தவனுப், அவனுடைய பாதாரவிந்தத்திற் பணிந்து நமஸ்கரித்து எழுந்துகூறுவான் வாருமையா சுவாமி! கேவலநாகியநான் அந்த பரிக்ஷித்துராஜனைக்கடித்து அதனுலவன் மரணத்தையடைந்தாலும் அவன்பிரேதத்தைக்கொண்டுபோய்க்கட்டையின்மீதுவைத்துக்கொளித்திச் சாம்பலாக்கினுலுந்தேவரீர் எழுப்பித்தருவீரென்பதற்குயாதொருசந்தேகமுமில்லை ஆதலால் தாங்கள் அவ்வாறு செய்வீர்களாயின், மகாரிஷியினது வாக்கும் என்னுடைய திறமுங் கெட்டுப்போம். அப்படி கெடாமலிருக்க நீர்என்னைவேண்டி ஒருகாரியஞ்செய்யவேண்டும், அது யாதெனில், நீர் அந்தபபரிக்ஷித்துவுக்குப் பிராணபிட்சைகொடுத்து, அவனிடம் பெரும்படியாகிய பரிசினும், பதினமடங்கதிகமாய்த் தருகிறேன், தேவரீர் அதனைப்பெற்றுக்கொண்டு, இப்படியே வந்தவழி போய்விட்டால் மெத்தவுஞ்சுகுணமாமென்று சொல்லித் தன்னிடமிருந்த நாகரத்தினத்தைக்கக்கி அவ்வேதியன் கையிற்கொடுக்க, இதை ஏற்ற காசிபனென்னும் பிராமணன் மகா சந்தோஷத்துடனே திரும்பிப் பாராமல்போய்விட்டது எப்படியிருந்ததென்றால், பொருண்மீதவாவுற்ரேன் புண்ணியம் வேண்டானென்னுந் தன்மைக் கிணங்க அவ்வேதியன் சென்றவுடனே, கார்க்கோடகனுனவன் வந்தகாசிபனென்னும் பிராமணனுல் பரிட்சித்து ராஜனிருக்கும் இடமுமறிந்துகொண்டவனுப், அவ்விடத்தினின்றே தனது உருவத்தை மாற்றித் தெய்விகம் பொருந்திய ஒரு எலுமிச்சம் பழம்போல உருவங்கொண்டு, குபீலென்று ஆகாயவீதில் லெழும்பிக்கடலில் வீழ்ந்துமிதந்து கொண்டிருக்கிறபோது அதைக்கண்ட காவலாளிகள் ஜலத்தில் குதித்தெடுத்துக் கொண்டுபோய் பரிட்சித்து ராஜனிடத்திற்கொடுக்க, அதைக்கண்டவேந்தன் மகா அபேட்சையோடும், இவ்வளவு காத்திரமுங் காந்தியுமுள்ள பழத்தையான் இதுவரையிற் கண்டதில்லை யென்று சந்தோஷத்துடனே கரத்தினுல் வாங்கிக்கண்ணில் ஒற்றிக்கொண்டான்.

அப்படி ஓற்றிய உடனே எலுமிச்சம்பழமாக இருந்த கார்க்கோடகனென்னும் பாம்பானது சீறிப் பரிட்சித்தைக்கடித்து மறுபடியும்வேந்தன் கரத்தினின்றுங் கீழேவிழுந்து கடலிற்குட்த்தோடிப்போய்விட்டது. அக்காலையிற் பரிட்சித்துராஜனுக்கு விஷந்தலைக்கேறித் துன்னணெனவீழ்ந்து மரணமடைந்தான். அக்காலையில், அவனைச்சுற்றிக் காவலாகவிருந்த யாவருங்கண்டு, அபயமிட்டுக் கோவென் றலறி மகாதுக்கத்தோடும், அவன்புதல்வனாகிய ஜெனமேஜெயராஜனிடம்வந்து நடந்தசவிஸ்தாரங்களைச்சொல்லித் துக்கித்தபோது அவனும் அவ்வார்த்தையைகேட்டு அபயமிட்டலறி மகாதுக்காக்ராந்தனாய் ஓடிவந்து, தனது தந்தையைக்கண்டு திடீரென்றுபாதத்தடியில்வீழ்ந்து பதறிக்கதறி மூற்சித்து அங்குள்ளவர்களால் ஒருவாறுதேறி யெழுந்து பெருந்துன்பத்தோடும், கடலினின்றும் பட்டணத்திற்குக் கொண்டுவந்து, செய்விதியாவு முடித்து தகனஞ்செய்து, கர்மக்கிரியைகள் யாவும் வழுவறநடத்தி பின்பு தான் அவ்வரசுக்குரியவனாய்ப் பட்டாபிஷேகஞ்செய்துகொண்டு, இராச்சியப்பரிபாலனஞ்செய்துக்கொண்டிருக்கிறநாளையில், ஓர்நாள் பரிட்சித்தைஎழுப்பவேண்டிச்சென்ற இக்காசிபன் சத்துருவாகிய கார்க்கோடகனிடத்தில் நாகரத்தினத்தைப்பெற்றுக்கொண்டு அவ்வரசனை நாசப்படச் செய்துவிட்டு வந்தாயென்றூரில் வதந்தி உண்டானதால் அந்நிந்தைவார்த்தையை அவனுடைய புத்ரமித்ர களத்திராதிகளுஞ் சுற்றத்தாரும் பெரியோர்களும் முனீஸ்வராள்முதலிய தபோதனர்களும் இராஜாராஜாக்களும் கேட்டுத்துன்புற்றவர்களாய் இச்சண்டாளனைக் கண்ணினாலும் பார்க்கப்படாதென்று யாவரும் நிந்திக்கத்தலைப்பட்டார்கள்.

அக்காலையில் அந்நிந்தையைக்கேட்ட காசிபன் ஒருவர்முகத்தில் விழிப்பதற்கு நாணமுற்றவனாய் மனஞ்சலித்து சகிக்கப்படாததுன்பத்தை யடைந்து பிரமைகொண்டு திரிகிறபோது ஓர்நாள் சாகுல்யரென்னும் ஒருதபோதனரைக்கண்டு அவருடைய பாதகமலங்களிற்பணிந்து தோத்திரஞ்செய்து,சுவாமி, அடியேன்பிரமஹத்திமுதலியஓர் பாபமுஞ் செய்தறியாமலிருக்க என்னைக்கண்டயாவரும் மஹாசண்டாளன், இவனைப்பார்க்கவும்படாதென்று நிந்திப்பதோடும் என்வர்க்கத்தவரும் என்னைநீக்கிவிட்டார்கள் என்செய்வேனென்று துன்பத்தோடும் வணங்கி நின்

றவனைப்பார்த்து, சாகுல்லியமாமுனிவர் ஓர் முகூர்த்தகாலம்வ ரையில் நிருவிகற்பசமாதியிலிருந்து பிறகு அந்நிட்டையினின் றும்நீங்கி காசிபனைப்பார்த்துக் கூறுவார்

வாராய் பிராம்மணா உன்னிடத்திலே ஒருகாரண மில்லாம ல்விணே உன்னை நிந்திக்கமாட்டார்கள், ஆதலால் பரிட்சித்து ராஜனை விஷந்தீண்டுகொலையில் எழுப்புகிறேனென்றுபோய் அவ னைக்கொல்லும்பொருட்டாய்வந்த கார்க்கோடகனென்னுஞ் சர் ப்பத்தினிடத்தில் நாகரத்தினத்தைப் பெற்றுக்கொண்டு கொடி யசண்டாளர்களுக்குங்கடையாய் போனவழியேதிரும்பிவந்துவி ட்டபடியால் அக்கொலையானது உன்னைப்பற்றி யலைக்கின்றதெ ன்றறிவாய் இதல்லாமலும் உலகத்திற் பஞ்சமாபாதகஞ் செய்த பேர்கள், கன்னிகளை விற்பனைசெய்தபேர்கள் தனது குதிரை யை விற்பனை செய்யும்பேர்கள், செய்நன்றி மறந்தபேர்கள் ஒரு வருக்கு விஷந்தீண்ட அவ்விஷத்தைமாற்றதக்க வல்லபமிருந்து ம் அவற்றிற் பிரவேசியாமல் வஞ்சித்துவந்தபேர்கள் ஒருகாலங் களிலும் ஈடேறமாட்டாமல் துன்பத்தை யநுபவிப்பதோடும் இ ரவுரவாதிநரகத்துக் கேதுவார்களென்று சுருதியவாக்கியங்கள. ற்சொல்லியிருப்பதை உணர்ந்திலேயோ, பாதகனே அதல்லாம லும் இவ்வுலகத்திலுள்ள நான்குவர்ணாசிரமங்களில் எவர்களுக் கேனும் ஆபத்துநேரிட்டால் அவ்வாபத்தின் பொருட்டு எந்தவ ஸ்துவைகேட்டபோதிலும் இரட்சிக்கவேண்டுமென்று சுகர்முத லிய பெரியோர்களாலே நீ கேட்டிருந்தும் அவ்வாக்கியத்தைமற ந்து உலகையாளும் வேந்தனுக்கு கேடுவிளைந்தமையால் அப்பெ ரும்பழியானது உன்னைதொடர்ந்து ச லராலும் நிந்திக்கப்படுகி றுயென்றுசாகுல்யமகா முனிவர்சொல்ல, அதைக்கேட்ட காசிப ன்மகாவியாகுலத்வதயடைந்து முனிவரைப்பணிந்து சுவாமிஅ றிவிலியேன்செய்த இப்பாதகந் தீரும்படியாய் ஓர் உபாயஞ்சொ ல்லவேண்டுமென்று தோத்திரஞ்செய்ய, அதைக்கேட்ட சாகுல் யமாமுனிவர் கூறுவார்.

வாரும் பிராம்மணா, நீசெய்திருக்கும் பாபந்தீரவேண்டுமா யின் நாம்ஓர் உபாயஞ்சொல்லுகின்றோம், அதுயாதெனில்,இந்த பூலோகத்திலேதென்றிசையிலோங்கும் கந்தமாதனகிரிச்சார்பில்

ஸ்ரீராமநாதனுக்கு முன்பாக காயத்ரியென்றுஞ் சரஸ்வதியென்றும் இரண்டு தீர்த்தங்களுண்டு, அத்தீர்த்தத்திலே நீபோய் சங்கற்ப விதியின்படி மூழ்குவையேயாகில் உனது பாப விமோசனமாகி இப்பழிவார்த்தையும் நீங்கிவிடுமென்று சாகுல்யர்சொல்ல, அவ் வாய்மையைக்கேட்ட காசிபன் முனிவரைப்பணிந்து விடைபெற்றுத் தானிருக்கும்பதியைவிட்டுப்பிரயாணப்பட்டு அதிதீவிரமாய்க் கந்தமாதனபருவதம் போய்ச்சேர்ந்து சாகுல்யர் சொல்படி சங்கற்பவிதியின்படி தீர்த்தமாடி அங்குள ஸ்ரீராமநாதனை வணங்கித் தோத்திரஞ் செய்துவருகையில் ஓர்நாள் காசிபன் தீர்த்தமாடிக்கொண்டு நிற்கிறவேளையிலே காயத்திரியுஞ் சரசுவதியும் இரண்டு பிராம்மணப்பெண்களாய் உருவங்கொண்டு காசிபனுக்கெதிரில் வந்துநின்றுஓய் பிராம்மணா நீ செய்ததோஷங்களெல்லாம் நமது பரிசம்பட்டமாத்திரத்தில் விலங்கிப்போய்விட்டபடியால் இனி உனக்குவேண்டியவரத்தைக் கேட்பையேயாகில் தருகிறோமென்றுகூற அவ்விருவரையுந் தோத்திரஞ்செய்து அம்மா தாய்மார்களே, அடியேன் இம்பருலகத்திலும் உம்பருலகத்தினுமோங்கும் வேதாகமசாஸ்திரபுராணகலைகளில்ஒப்பொருவருமில்லாதவனாகவிருக்கவும் இனி இவ்வுலகின்கண் இருக்குமளவும் அதர்மகுணத்தை நீக்கி தருமகுணத்தோடு இருக்கும்படியாகவும்,உலகிலுள்ளயாவரும் என்னைப்புகழும்படியாகவும்இம்மூன்று வரமுங்கடாக்ஷித்தருளவேண்டுமென்று காசிபர்கேட்க, அதற்கு அவ்வாறேகாயத்ரியம்மனுங் கருணைசெய்தவர்களாய்த் தங்களுடைய லோகத்துக் கெழுந்தருளியபின், காசிபன் மறுபடியும் காயத்ரி சரஸ்வதிமுதலிய தீர்த்தங்களிலுஞ் சேதுதநுக்கோடியிலும் மூழ்கி ஸ்ரீராமநாதனை வணங்கிவிடைபெற்று அவணிருந்தும் மீண்டு தனது சுதேசம்வந்து சேர்ந்து சகலத்திராளும்புகழும்படியாய் வாழ்ந்துகொண்டிருந்தான.

கேட்டீர்களோமகாரிஷிகளே, இப்படியாய்அக்கந்தமாதனத்திலே விளங்கும் காயத்ரி சரஸ்வதியென்னுந் தீர்த்தங்களின்பெருமையாவராற்சொல்லிமுடியும் இதல்லாமலும்இன்னும் அச்சேதுவின் மத்தியிலே கோடானுகோடி தீர்த்தங்கள் பற்பலவிதங்களாய்மகாமகிமைபொருந்தியதாகவும்அற்புதமுள்ளதாகவும்விளங்கும்இருணமோசனமென்னும் பெயருடைய ஓர்புண்ணியதீர்த்

தமுண்டு அப்புண்ணியதீர்த்தத்தில் மூழ்கினபேர்களுக்கு முக்கடன்களும் விமோசனமாம் அவ்வாறுமூன்று இருணங்களும் விமோசனமாகின்றபடியினுலே இருணவிமோசனமென்னும்பெயரினையுடையதாய் விளங்குகின்றது இதல்லாமலும் மற்றதீர்த்தங்களும் அப்படியே ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொருமகிமை பொருந்தி ஒவ்வொரு காரணநிமித்தமாய் விளங்குவதால் அக்கந்தமாதனகிரியில் உண்டாயிருக்கும் மகிமைகளை என்னவென்று சொல்லப்போகின்ேறம், மேலும் அப்புண்ணியமலைச்சார்பில் கண்டவிடங்களெல்லாந் தீர்த்தங்களாகவும் இலிங்கங்களாகவும்இருத்தலால் அதற்கொப்பாகிய பூமியெங்கும் கிடையாதெனச்சொல்லுவோம் என்று சூதமுனிவர்சொல்ல, அவ்வார்த்தையைக்கேட்ட நைமிசாரண்யர்கள் சந்தோஷமடைந்து சுவாமி இந்த இருணவிமோசனத்திலே மூன்றுவித இருணந்தீருமென்று சொன்னவிதமும் மற்றபலதீர்த்தங்களில் மகிமையும் அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்றுகேட்க சூதமுனிவர் சொல்லத்தொடங்கினுர்.

காசிபச்சரித்திரம்.

முற்றிற்று.

---

உ௫-வது

# இருணவிமோசன தீர்த்தச் சரித்திரம்.

கேளுங்கள் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களேநெடியகடல் சூழ்ந்த இவ்வுலகின்கண் கருமபூமியிலே ஜனனமெடுத்தபேர்களுக்கு மூவகைக்கடனுண்டு, அவையாவையெனில் தபசிகள்கடன் தேவர்கள் கடன் பிதுர்க்கள் கடனென்னும் இம்மூன்றில்வேதசாஸ்திர விசாரஞ்செய்யாதவன் தபசிகடனுடையோனுகும், யாகாதி கிர்த்தியங்கள் செய்யாதவன் தேவர்கடனுடையோனுகும்பிள்ளைபேறில்லாதவன்பிதுர்க்கடனுடையயோனுகும் இவ்வகைப்பட்டமுக்கடன்களும் கற்பகோடிகாலஞ்சென்றுலும்

தீர்க்கப்படாததாக இருக்குமாதலால் அத்தன்மைகொண்டவர்களும் இத்தீர்த்தத்திலே வந்துசங்கற்பவிதிப்படிமூழ்குவராயின் அவர்களுக்கு உடனே அந்த மூன்றுகடன்களும் விமோசனமாகுமென்றுவேதங்களால்முறையிடப் படுகின்றபடியால் அத்தீர்த்தத்துக்கு இருணவிமோசனமென்று பெயர்விளங்குகின்றது. இந்த இருணவிமோசனத்திலே பிரமசரியவகை யிரண்டிலும்யாகாதிகள்செய்யாமல் குபேரசம்பத்துடையவர்களாய்விலங்குவார்கள் ஆனபடியினாலே சகலத்ராளும் அந்த இருணவிமோசனத்திலே தீர்த்தமாடினால் நாபசொல்லியமூன்றுவித இருணமுந்தீர்ந்துபின் சேதுதநுக்கோடியில்மூழ்கி ஸ்ரீராமநாதனையும் வணங்கிவருவார்கள் இஃதல்லாமலும் பஞ்சபாண்டவாள் இராஜசூயயாகஞ்செய்யவேண்டி அதற்குமுன்பாக இக்கந்தமாதனத்திலே இலட்சுமிதீர்த்தமாட வந்தபோது அவர்களால் உண்டாக்கப்பட்ட

## உசு-வது பாண்டவ தீர்த்தம்.

பாண்டவதீர்த்தமென்னும் ஓர் தீர்த்தம் விளங்கிக்கொண்டிருக்கின்றது, அத்தீர்த்தம் பதினாயிரம் தீர்த்தத்துக்கும்மேலான தீர்த்தமாய் பலன்களைத்தருவதுமன்றியில் அத்தீர்த்தத்திலேபன்னிரண்டு சூரியசந்திராளும் அஷ்டவசுக்களும் பதினொருகோடிருத்திராதிதேவர்களும் நித்தியப்படியாய் நீங்காமலிருந்து அதிற்றீர்த்தமாடி தேவபூசைகள் நடத்திப்பின் தேவர்களும் பிதுர்க்களும் மனிதர்களாலே சந்தோஷிக்கும்படியாய்த் தாங்களவ்விடமிருந்து அர்க்கியஅவிர்ப்பாகமும் பெறுவதனாலே அந்தத்தீர்த்தக்கரையிலே பிராம்மணபோஜனஞ்செய்துவைத்தால்கோடாநுகோடி புண்ணியமுண்டாகும். இதல்லாமலும் உலகததிற்பிறந்தவர்களிற் கடைக்குடியிற்பிறந்தவராயினும் அத்தீர்த்தத்திற் பிறப்பதோடும் யமதண்டனையுமற்று கங்காஸ்நானஞ்செய்தபலனுமுண்டாகும், இதல்லாமலும் முன்னொருகாலத்தில் தேவர்களெல்லாங்கூடி மஹோசுரயாகஞ்செய்யவந்தபோது அந்தகந்தமாதனச்சார்பிலே அவர்களால் உண்டாககப்பட்டது.

## உஎ-வது தேவதீர்த்தம்.

தேவதீர்த்த மென்றோர்தீர்த்தமுண்டு, அத்தீர்த்தத்திலே மூழ்கும் புண்ணியபுருஷர்களுடைய பாபங்களெல்லாஞ் சுழகா.

ற்றிலகப்பட்ட பஞ்சபோற் பறந்தோடுவதோடும் திவ்யதேஜசும் மேலானபோகபாக்கியங்களும் கிடைப்பதல்லாமலும் தேவர்களி ல்மகாவிஷ்ணுவானவர் எப்படி மேன்மையுற் றிருக்கின்றனரோ அதுபோல் பூலோகதீர்த்தங்களிலே இதுதெய்விகம்பொருந்திய தீர்த்தமாதலால் இதில் ஸ்நானஞ்செய்தபேர்களுக்கும் அவன் வாசஞ் செய்தபேர்களுக்கும், தானதருமஞ்செய்தபேர்களுக்கும் அசுவ மேதபலனைக்கொடுக்கும், தபசிகட்கும் தேவர்கட்கும் பிதுர்க்க ளுக்கும் மனமகிழ்ச்சியையுண்டாகி வைகுந்தபதத்தைக்கொடுக் கும், இதன்றியும் ஒருவாரம்வரையில் அதில்வாசஞ்செய்வார்க ளாகில் அவர்கள் மறுபடியுந்தாய்வயிற்றில் ஜனிக்கும் பிறவிநோ யைஅணுகார்கள் ஆதலால் அதன்பெருமை அளவிறந்ததாக இரு ப்பதால் ஒருவராலுஞ்சொல்லிமுடியாது இதல்லாமலும்வாலியி ன்சகோதரனுகிய.

## உஅ-வது சுக்ரீவ தீர்த்தம்.

சுகரீபனென்பவனுல் உண்டாக்கப்பட்ட ஓர்தீர்த்தமுண்டு அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தபேர்கள் அவன்தந்தையாகிய சூரியன துலோகத்தைப்பெறுவார். ஆயிரங் கோதானஞ் செய்தபலனும் அசுவமேதயாகஞ்செய்தபலனும்பெற்று அத்தீர்த்தத்தை மன தில்தியானஞ்செய்தவர்கள் வேதாகமங்களையோதி யுணர்ந்தபல னைப்பெறுவார்கள். உலகத்தில் உற்றமனிதர்களுக்கு வாய்ந்தபி ரம்மஹத்திமுதலிய தோஷங்கள்தீரவேண்டுமாயின், அத்தீர்த்த க்கரையில், உபவாசமாயிருந்து தீர்த்தமாடினால், உடனே விலகி ப்போம்மேலும் அதீர்த்தத்தில், பிதுர்க்களைகுறித்து தர்ப்பண ஞ்செய்தால், அநேகம்யாகாதி கிர்த்தியஞ்செய்தபலனும் நரமே தயாகஞ்செய்தபலனும் பெற்றுப்பேரின்பத்தை யடைவார்கள். இதன்றியும்,

## உகூ-வது நளதீர்த்தம்.

நளனாலே உண்டாக்கப்பட்ட நளதீர்த்தமென்றோர் தீர்த்த முண்டு, அத்தீர்த்தத்தில் மூன்றுநாள் உபவாசமிருந்து தேவர்க ளையும், பிதுர்க்களையும்நினைந்து, ஆராதனைசெய்து தீர்த்தமாடி னால், யாகாதிகள்செய்தபலனும், கோடானுகோடி புண்ணியஞ் செய்தபலனும் பெறுவதோடும், அவர்கள் பிறவிநோயுமொழிந் து, சூரியப்பிரபைபோல் விளங்குவார்கள். இதனோடும்,

## ௩0-வது நீலதீர்த்தம்.

நீலனென்பவனால் உண்டாக்கப்பட்ட நீலதீர்த்தமென்றோர் தீர்த்தமுண்டு, அத்தீர்த்தத்தில் முழுகியபேர்களுக்கு சொர்ன யாகஞ்செய்த பலன்கிடைப்பதோடும், அக்கினிலோகத்தையடை வார்கள். இதல்லாமலும், வானரவீரர்களுள்,

## ௩௧-வது பசுக்கண்ண தீர்த்தம்.

பசுக்கண்ணனென்பவனால் உண்டாக்கப்பட்ட ஓர் தீர்த்த முண்டு, அதில்தீர்த்தமாடிய பேர்கள், திக்குவிஜயஞ் செய்தபல ன் கிடைப்பதோடும், தெய்வலோகத்தையடைந்து கற்பகவிருட் சநீழலில் வாழ்ந்துக் கொண்டிருப்பார்கள் இதனோடும், அக்கந் தமாதனச்சார்பில்,

## ௩௨-வது அங்கத தீர்த்தம்.

இதுவாலிமைந்தனான அங்கதனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

## ௩௩-வது கயன் தீர்த்தம்.

இது கயனாலுண்டாக்கப்பட்டதீர்த்தம்.

## ௩௪-வது சாம்பவதீர்த்தம்.

இதுசாம்பவனால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம்

## ௩௫-வது நரன்தீர்த்தம்.

இது நரனா லுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

## ௩௬-வது பனச தீர்த்தம்.

இது பனசனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

## ௩௭-வது கவைய தீர்த்தம்.

இது கவையனா லுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

## ௩௮-வது குமுத தீர்த்தம்.

இது குமுதனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

## ௩௯-வது அமுத தீர்த்தம்.

அமுததீர்த்தமென்றும், தேவர்களாலும், வானரவீரர்களா லும், உண்டாக்கப்பட்டதீர்த்தங்கள் அனந்தம்உண்டு, அத்தீர்த்

தங்கள் தம்மிடத்தில் முழுகியபேர்களுக்கு வேண்டிய பலன்களைக்கொடுப்பதோடு, அநேக மகிமைகளையும் உண்டாக்கும் இதல்லாமலும், பிரமனுடைய பவுத்திரனுகிய.

## ௬௫-வது விபீஷண தீர்த்தம்.

விபீஷணனால் உண்டாக்கப்பட்ட விபீஷண தீர்த்த மென்றோர் தீர்த்தமுண்டு, அத்தீர்த்தத்தில் முழுகிய பேர்களினுடைய பழிபாவங்களையுந் தாரித்திரத்தையும் போக்குவது மல்லாமல், ஞானமும் கல்வியும் பெற்றுவைகுந்த வாழ்வையடைவார்கள்.

## ௬௬-௬௭-௬௮-௬௯-வது.

## விபீஷணன் மந்திரி நால்வர்கள் தீர்த்தம்.

பின்னும் அவ்விபீஷணனுடைய மந்திரிகளாகிய நாலுபேர்களும்வீரம், விம்ரகதனம், நாரணம், நாரணீயமென்னும் நான்குபேர்கள் பேரால் மகாமகிமையோடு விளங்கும், அத் தீர்த்தங்களில் முழுகியபேர்களுக்கு புத்தியும், யோசனையுமுண்டாவதோடும் பெரும் புண்ணியமும் பேரின்பமுங்கிடைக்கும்

கேட்டீர்களோ நைமிசாரண்யர்களே! மகா மகிமைபொருந்திய ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியானவர் கங்கையைச் சடையிற் றரித்திராநின்ற சாம்பவமூர்த்தியை அந்தக் கந்தமாதனச் சார்பில் பிரதிஷ்டைசெய்து பூசித்தபடியினுமேல அவன் அநேகங் கோடி தீர்த்தங்கள் தமக்குத்தாமேமிகராய் விளங்கிக்கொண்டிருக்கும் இதல்லாமலும் அச்சேதுவில்லொருநாள் தீர்த்தமாடியபேர்களுக்கு பதினுயிரங்கோடி விசை கங்கை, பிரயாகை யமுனை, முதலிய தீர்த்தங்களாடிய பலனும் சிவாலய விஷ்ணுவாலய பிரம்மாலய முதலிய தேவாலயங்களைச் சேவித்தபலனும் பெறுவார்கள், மேலும் அக்கந்தமாதனத்தில் பொன்னுலகவாசிகளாகிய தேவர்களும் பிரம்மருத்திரர்களும், தும்புருநாரத, கெருடகாந்தர்வ,சித்தவித்யாதராருரகராகரயவாசிகள் போகபூமியரும் ஸ்ரீராமனுடையகட்டளையின்படி சதாகாலம் வாசஞ்செய்து, நித்யபடி தீர்த்தமாடி, ஸ்ரீராமநாதனைப்பூசித்து வணங்கிவருவார்கள். இவ்வளவு மகிமைபொருந்திய சேது முதலிய தீர்த்தங்களெல்லாம். அக்கந்தமாதனகிரிச்சார்பில் பொருந்தியிருக்கும் பெருமையில் ஆயிரத்திலோர் பாகம் உங்களுக்குச் சொன்னோமாதலால், அதன்பெ

ருமையை பூரணமாய்ச் சொல்லவேண்டுமாயின் சொல்பவர்களு க்கும்கேட்பவர்களுக்கும், ஆயுள்போதாமையாக இருக்கும்இத் தன்மையாகிய தீர்த்தங்கள் விளங்கப்பட்ட கந்தமாதனபருவத த்தில் இலங்கும், மூர்த்திமகிமையைச் சொல்லவேண்டுமாயின் அளவுபடாததால்நாம்என்னவென்று சொல்லப்போகின்றோமெ ன்று சூதமகாமுனிவர்சொல்ல, அவ்வார்த்தையைக்கேட்ட நைமி சாரண்யர்கள் சுவாமிதேவரீர் அக்கந்தமாதனத்தில் விளங்கும் மூர்த்தி மகிமைகளையும் அடியேங்களுக்குச் சொல்லவேண்டுமெ ன்றுகேட்க, அதைக்கேட்ட முனிவர் உளமகிழ்ந்து ஸ்ரீராமநாத னுடைய மகிமையைச் சொல்லத்தொடங்கினர்.

முற்றிற்று.

---

௪௫-வது.

## இராமநாதர்மகிமைச்சரித்திரம்



கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே! நெ டியகடல்சூழ்ந்த இவ்வுலகின்கண் கோசலதேசத்தி ராஜகுமார னாகிய ஸ்ரீராமசந்திரன் தனது தம்பியோடும், சீதாதேவி சமேத னாய் வானராதிகளோடும் கந்தமாதனத்திற் பிரதிஷ்டை செய்தி ருக்குந் திருநேத்ரதாரியாகிய ஸ்ரீராமநாதனைத் தரிசித்தபேர்கள் மேலான ஞானானந்தத்தையடைவதோடும், திரேதாயுகத்திலொரு வருட காலமும், துவாபரயுகத்தில் ஒருமாதகாலமும், கலியுகத் தில் ஒருமாரதினமும் தெரிசித்தால், அவரவர்கள்நன்மைதீமைக் குத் தக்கபலன் கிடைக்குமென்று வேதங்களாலே சொல்லப்பட் டிருப்பதாலும் ஸ்ரீராமநாதனை தரிசிக்கும்பலன் ஒன்றுகோடியாய் இமைப்போதில் அநேகபுண்ணிய பலன்களைக்கொடுக்கும். மே லும் தேவமாதவ பிதுர்ப் புண்ணிய தீர்த்த சொரூபங்கோடி கொண்டதாய் விளங்கிய ஸ்ரீராம நாதனை ஒருபோது இர ண்டுபோது, மூன்றுபோது, அல்லது க்ஷணப் போதாவது அன்போடும் மனக்குவிந்து வணங்குபவனெவனோ, அவன் என் னபாபியாயிருந்தாலும், அவன் நற்குலத்திற் பிறந்து, சுத்தஞா னியாய் பிரமசொரூபத்தையறிந்து அகண்ட பரிபூரண சச்சிதா னந்த சொரூபமே தானாய் விளங்குவான். மேலும் யுத்தரங்கத் துக்கிளையாத ஸ்ரீராமசந்திரனாலே பூசிக்கப்பட்ட ஸ்ரீராமநாதனை

அர்ச்சித்து வணங்கப்பட்டபேர்கள் தேவ சொரூபம் பெறுவார் களல்லது, மானிடராக ஜனியார்கள்.

இத்தன்மைபொருந்தியராமநாதக்கடவுளை அர்ச்சித்துவண ங்காத பேர்கள், பிரவிச்சாகரத்தில்மூழ்கி, முத்தியாங் கரையை க்காணுமல் துன்பத்தையடைவார்கள் இதெல்லாமலும்அக்கந்த மாதனத்தில் விளங்கும் இராமநாதனை திரிகாணத்தோடுங் னிதி யாத்து வணங்கப்பட்டவர்களைக்கண்டு, அவர்களுடைய பெரு மையை எழுதிவைத்துக்கொண்டு வாசித்து வருபவன்மகா புண் ணியத்தைபெற்று வாழ்வான், அப்படிச் செய்யாதவன், லோக த்தில் கூன், குருடு, செவிடு, சப்பாணியாகப்பிறந்து தாரித்திர த்தை பறுபவிப்பதோடும், பெண்சாதி பிள்ளைபாக்கிய மற்றவ னுய் பசாசுவேதாளங்கள் பிடித்து, அறுசுழிந்து துத்திஎன்னும் நரகத்தையடைந்து துன்பப்படுவான்மேலும்ஸ்ரீராமநாதனுடைய பாதாரவிந்தங்களை யாரொருவர்சிந்தித்துவணங்குகின்றார்களோ அவர்கள் ஆயிரம் பிரம்மஹத்தி செய்திருந்தாலும், அவைகளெ ல்லாம் நாசப்படுவதல்லாமலும், அழகுள்ளவர்களாயும், பாக்ய சம்பன்னர்களாயும், நற்குலத்திற்பிறந்து மேலோர்களைச்சார்ந்து எமலோகத்தை அறியாதவர்களாய் வாழ்ந்து முடிவிற் பரமபத த்தைப் பெறுவார்கள்.

பின்னும் அந்த ராமலிங்கத்தைக் கண்ணினுற் கண்டபேர்க ளையும் கண்டுவணங்கியபேர்களையும், சகலரும் புகழ்வதோடும் கங்கை, யமுனை, பிரயாகைமுதலிய புண்ணியநதிகளிலாடினபல னும்பெற்று மானுடப்பிறவி யொழிந்துதேவ சொரூபம் பெற்று பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்களால் புகழத் தக்கதாகவிருந் தால், அந்த ராமநாதனுடைய மகிமையை நாம் என்னவென்று சொல்லப்போகின்றோமாதலால், அவ்விலிங்கத்தை எந்தவிதவி னுலாவது மனதிற்சிந்தித்துப் புகழ்ந்தவர்களினது கொடுமையா னபாதகங்களெல்லாம் அக்கினியிற் பிரவேசித்த விறகுபோலெரி ந்து சாம்பலாய்க் காற்றோடு காற்றாய்ப்பறந்துபோய்விடும் ஈதன் றியும், அஷ்டமூர்த்தி சொரூபமாய் விளங்கப்பட்ட ஸ்ரீராமநாத னை திணைத்துணைப் போதேனு மனத்தில் அன்போடும், வாய்குள றும் படியாகவும், கண்களில் ஆனந்தக்கண்ணீர் சொரியத் தக்க தாகவும்சிந்தித்து அவர்பதாம்புயங்களைக் கைவருந்தும்படியாய் அர்ச்சனைசெய்து ஆனந்தக் கூத்தாடிய பேர்களும் இராமலிங்க சொரூபத்தைபாவது அல்லது ஸ்ரீ ராமனுடைய அவயவ காசா

ணுதிகளை அவரவர்களுடைய ஜீவனுடனே தன்யமாகும்படி பக்தி சிரத்தையோடும்யார் வணங்குகின்றார்களோ அவர்களும்,பேரின்பமென்னுஞ்சாகரத்தில் ஆனந்தாமிர்தங்களைப்புசித்து நித்யானந்தசொரூபத்தையடைந்து சின்மயானந்தப்பொருளாய் விளங்குவார்களேயன்றி இப்பிரபஞ்சமென்னுஞ் சமுத்திரத்தை யடையமாட்டார்கள்.

இதல்லாமலும், லோகத்தில் மூடராயிருக்கப்பட்ட பேர்களும் ஸ்ரீராமச்சந்திரனுடைய தரிசனஞ்செய்தால், அவர்கள்மகா அழகுபொருந்திய சாஸ்த்ரகுணத்தையும் அஷ்டமாசித்தியையும், அஷ்டாங்கயோகத்தையும், பிரம்மஞானத்தையும்பெற்று வாழ்வார்கள். மேலும் மோக்ஷஞானம் ஒருவருக்கு வரவேண்டுமாயின்சிரவண மனன நிதித்தியாசனங்களினாலும், வேதாந்தபாஷ்ய பாடங்களினாலும் துறவாசிரமத்தை யடைந்தபேர்களுக்கு சித்திக்குந்துறவுமல்லாமல் ஆசிரமநேயங்களு மில்லாமலிருந்தால் எந்தவகுணத்தோர்களுக்கும் ஸ்ரீராமநாதனுடைய தரிசனபலத்தினால் பிறவிச்சாகரத்தையொழித்து மோக்ஷவீட்டைக் கொடுக்குமானால் அதன்மகிமைகளை நாம்எவ்வாறு அளவிட்டுச் சொல்லப்போகின்றோம் மேலும் ஓ முனிவர்களே அத்தலத்திலேவாசஞ்செய்கிற யானைமுதலெறும்பீறாகிய சகலஜீவராசிகளுக்கும் மானிடர்களும், சொர்க்கலோகவாசிகளாகிய தேவர்களுக்கும் ஏற்றமுங்குறைவுமில்லாமல் சரியாகவேவாழ்ந்து வருவார்கள் மேலும் அக்கந்தமாதனத்தில் ஓங்கும் ஸ்ரீராமநாதனை யாரொருவர் வணங்குகின்றார்களோ அவர்கள் அக்கடவுளினது கடாக்ஷம்பெற்று இகத்திலுறும்வினைகளுக்கு பயப்படாதவர்களாகியும் எத்தன்மைபொருந்திய பாபங்கள் செய்தபோதிலும், பருதிமுன்பனிபோல் விலகிப்போவதோடும் அவர்களுக்கு வேதங்களையுணர்ந்தபிராம்மணனும், முனிவர்களும் சித்தர்களும் சரியாகமாட்டார்கள்.

மூன்றாம்பிறையைச் சடாமகுடத்தில் தரித்திருக்கப்பட்ட ஸ்ரீராமநாதனை தரிசித்து வணங்கப்பட்டபேர்களை கண்ணினாற் கண்டபேர்களுக்கு அவர்கள்செய்த பாதகங்களெல்லாம் இமைநேரத்தில் நாசத்தையடையுமென்று பெரியோர்கள் சொல்லியிருக்கின்றார்களாதலால் அதுபோல்ராமநாதனுடைய குற்றமற்ற பாதாரவிந்தங்களைவணங்கி துதிப்பதற்கு கொடுத்துவையாத பேர்கள்நான்குவேதங்களையு முணர்ந்திருந்தாலும் நூறு அசுவமேதயாகங்கள் செய்திருந்தாலும் சந்திரவட்டக்குடை நீழலில்

ருந்து கடல்சூழ்ந்த உலகையெல்லாம் வேறொருமன்னனுக்கில்லாதுதானே அரசுசெய்யத்தக்கவர்களாக விருந்தாலும் பொன்னுலகவாழ்க்கைக்குப் பாத்திரராகமாட்டார்கள் அந்த ராமநாதனைவணங்கித் துதிக்கப்பட்டபேர்கள் லோகத்தில் கல்வியைக்கல்லாமற் கடையாகியதொழிலிற் பிரவேசிப்பானுயினும் அவனே அனுகைக்குரியவனுய் தெய்வலோகத்துக்கருதனுய் விளங்கப்பட்டு ஈனுக்குஈனுயர்வுபொருந்திச் சக்ரவர்த்தியாவான். மேலும் அத்தலத்திலே அன்புடனே வாசம்பண்ணிக்கொண்டிருப்பவரியாவரும் மான்மழு சதுர்ப்புஜகளை யுடைய திரிநேத்திரமுடையவராய் மூன்றும்பிறைச்சந்திரனையும், கங்கையையும், உருத்திராக்கதையும், கொன்றையையும் வில்வத்தையும், அறுகையுஞ் சிரத்திலணிந்திருக்கப்பட்டவராயும், ஐம்முகங்களை யுடையவராயும் விளங்கும் ஸ்ரீராமநாதனைப்போலயுருவம்பெற்று வாழ்வார்களேயன்றி வேறுருபமாக இரார்கள், பின்னும் அந்தராமநாதன் விளங்கப்பட்ட ஸ்தலத்துக்குப்போய் தரிசித்துவந்தபேர்களுக்கு அசுமேதயாகம் பண்ணினபலன்கிடைக்கும். அவ்விராமலிங்கத்தினுடைய பூஜைக்குநல்ல பரிமளம்பொருந்தி, விதம்விதமாயிருக்கும்படியாகிய புட்பங்களையும் இரசவஸ்துக்களையும் காய்கனிகளையுங் கொடுப்பவர்கள்பேரில், மிகுதியும் கிருபைவைத்து ஸ்ரீராமநாதன் இரட்சிப்பார்.

இதல்லாமலும், அச்சேது தனுக்கோடியிலே பெரியோர்கள்வணங்கும்படியாய் விளங்கும் ஸ்ரீராமநாதன் மனமகிழும்படியாய் அவர் சந்நிதானத்திலே ஓர் பிராமணனுக்கு ஒரு பிடியன்னங்கொடுத்தால் அவர்களுக்கு ஆதிசேஷனுற்றுங்கப்பட்டபூமிமுழுவதுந்தானம்பண்ணின பலனைக்கொடுக்கும் மேலும், அந்தராமனுதக்கடவுளை அர்ச்சித்து நாவினுற்ஸ்தோத்திரஞ் செய்யும்படியாயும், வணங்கும்படியாயும், சேதுவுக்குப்போகக் கூடாதவர்கள்தாங்களிருக்குமிடத்திலே யிருந்தாவது ஸ்ரீராமநாதனைப்போற்பாவித்துவணங்கித் தோத்திரஞ்செய்தால் அவர்கள் சேதுவுக்குப்போய் தீர்த்தமாடியபலன் சித்தமாய்பெறுவர் இஃதன்றியும் ஸ்ரீராமமூர்த்தியினுற் பூசிக்கப்பட்ட காளகண்டமூர்த்தியைநினைத்து வணங்கப்பட்டபேர்களே மகாசிறப்புடையோர்கள். அப்படி வணங்காதவர்கள் ஒருக்காலங்களிலும்நல்லகதியையடையமாட்டார்கள் லோகத்தில்எக்கருமத்தையாவதுஎப்புண்ணியத்தையாவதுஎத்தயாகத்தையாவதுஙிகரொன்றில்லாமற்செய்திருந்

தாலும், வணங்காதவர்களாகவு மிருப்பாராயின அவர்களுக்கு ஆயிரம் பிரம்மஹத்திசெய்த தோஷங்களுண்டாகி இரவுரவாதி நரகங்கள் சித்தமாய்க் கிடைக்குமென்பதாம் மேலும்வேதசாஸ்திர புராணங்கள் யாகாதி எக்கியங்கள் தான தருமங்களாலே உண்டாக்கப்பட்ட பலன்களுக்குப் பிரயாசிப்பதைப் பார்க்கிலும்இராமநாதனுடையபாதாரவிந்தத்தை தரிசனஞ்செய்தால்அப்பலன்களெல்லாம் ஓர் இமைப்போதிற்பெற்று குற்றமற்ற சைவகுலத்திற் பிறந்து மேலானகதியை யடைவார்கள், பின்னும் அந்தராமநாதனை இரண்டு நாழிகையாவது அன்புடனே தியானஞ்செய்திடுவாராயின், அவனுடைய கோத்திர சூத்திரங்களினாலே இருபத்தொருகோடி தலைமுறையிலுண்டான புத்ரமித்ர களத்ராதி பந்துஜனங்களுடைய தோஷங்களுந்தீர்ந்து அவனோடுஞ்சிவலோகஞ் சேருவார்களென்றும் ஸ்ரீராமமூர்த்தியினுடையவரப்பிரசாதமுண்டா யிருக்கின்றது அன்றியும் அவ்விராம லிங்கத்தை ஒருநாளையில் ஒருபோதேனும் பத்தியோடு தரிசித்த பேர்கள் இகத்திலுங்குற்றமற்ற போகபாக்கியங்களைப் பெற்றிருந்து பரத்திலும்மேலான சாயுச்யபதவியிலே ஸ்ரீ ராமநாதனுடைய சொரூபமே முடிவாய் பெற்று விளங்குவார்கள் சூரிய உதயத்திலே ஸ்ரீராமநாதனை தரிசித்தால் அவர்கள் செய்த பாபங்களெல்லாம் பறந்துபோம் மத்தியான காலங்களில் தரிசித்தால் சென்மசென்மங்களில் செய்தவினையெல்லாம்பறந்துபோம். மாலைப்போதில் தரிசித்தால் கனத்திலுண்டாகிய அஞ்ஞானங்க ளெல்லாமகன்று அநேகங் கீர்த்திகளுண்டாகி சென்மங்கடோறுஞ்செய்த பாபமாகிய இருண்மலையை ஸ்ரீராமநாதனுடையபாதப்புணையின் பெருமையாகிய வச்சிராயுதமானது பொடிப்பொடியாய் தகர்த்துத் தூளாக்கி யெறிந்துவிடும். இந்த ராமநாதனுடைய பாதாரவிந்த தரிசனத்தினாலே போகாதபாபங்கள் மற்ற எந்த புண்ணியத்தினாலும்போகமாட்டாது கோடிபுண்ணியங்களைத் தாத்தக்க ஸ்ரீ ராமதனுக்கோடியில் தீர்த்தமாடிராமநாதனைவணங்காதபேர் கெங்காஸ்நானத்திற்குப் போனபோதிலும் பலன் கிட்டாதாகையால் அப்பேர்கொத்த கங்காஸ்நானத்திற்குப்போகப் பட்டவர்கள் ராமதனுக் கோடியிலே மூழ்கி ராமநாதனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு கங்கைக்குப்போனால், பலன் ஒன்றுங்கோடியாய்விளங்கப்படும். ஆதலால்கேளுங்கள் முனிவர்களே! இப்போது நாம் கூறியவண்ணம், கங்கைக்குப்போய்வந்து ராமநாதனைவண

ங்காதபேர்கள் அவர்கள் தந்தைக்குப்பிறந்தவர்களல்ல அருணோ தயத்தி லெழுந்த வுடனே ஸ்ரீராமநாதா, ராமநாதா, ராமநாதா வென்றுமூன்றுவிசை சொன்னபேர்களுடையபாபங்களெல்லாம் நாளுக்குநாள் அகன்று போவதன்றியும் அவர்களுடைய பவப் பிணியுமொழிந்து அவர்கள் வாய்மொழியானது சூரியனைப்போ ற்பிரகாசிப்பதோடும், அன்னவர்ஆன்மாபிரியுங்காலையில் இராம நாதா வென்றுசொன்னால் அவ்வான்மா மறுபடியுஞ்சனனத்துக் கேதுவாகாமல் தேவசொரூபம் பெற்று விளங்கப்படும். உலகின் கண் சனித்தவர்கள் யாவராக விருந்தபோதினும் இராமநாதப் பிரபு மகாதேவா கிருபாநிதி, அகண்டபரிபூரணா, லோகரக்ஷகா உலகநாதா சந்திர சடாதரா சதாசிவாநீலகண்டா, சங்கராசுயம் புஎனச் சொல்லப்பட்ட பேர்களினுடைய பாபங்களெல்லாம் பரிகாரமாய்துன்பமகன்று இன்பமுண்டாகி மேன்மையையடை ந்து வாழ்வார்கள். இராம நாதனுடைய ஆலயத்திருப்பணி செ ய்ய முயலுவாராயின் அவர்களுடைய சுற்றத்தாரைச் சேர்ந்த கோடிசென்மம் வரையிற் கயிலாயத்தை யடைவார்கள்.

ஸ்ரீ ராமநாதனுடையஆலயத்தைச் சாந்திறுற்கட்டிமுடித்த பேர்கள் பிரமலோகத்தைப் பெறுவார்கள், பளிங்குக்கற்களினால் மண்டபமிழைத்த பேர்கள், சொன்ன விமானத்திலேறிச்சென்று கையிலைவாழ்வைப்பெறுவாகள் ஸ்ரீராமநாதனுடையதிருப்பணி மண்டபத்துள் வெள்ளியினாற் சிங்காசன மமைத்த பேர்கள் சாம்பவமூர்த்தியைப்போல் சொரூபம்பெற்று மகிழ்ச்சி யடைந் திருப்பார்கள் பொன்னினாலும், தங்கத்தினாலும், கடவுளுக்குரி ய சப்ரமஞ்சங்கள், விமானங்கள், ஸ்தூபிகள் செய்துவைத்தபே ர்கள், அச்சிவக்கொழுந்தோடுங் கலந்திருப்பார்கள், இராமநாத னுக்கு வேண்டிய பாத்திரங்கள், தவலைச்செம்புகள், குத்துவிள க்குகள், தாம்பாளங்கள், தூபதீபக்கால்கள், கற்பூரத்தட்டுகள், குடை, பீலி ஆலவட்டம், சாமரை குஞ்சம் பாவாடைஆடையா பரணம் ஆண்குதிரை, ஒட்டகம், சிவிகை, கண்டிகை முதலிய கைங்கர்யங்கள் செய்தபேர்களை ஸ்ரீராமநாதன்தன்னுடையசொ ரூபத்திலே நின்று விடுபட்டவர்க ளென்றும் நணிகாத லோடுங் கருணை செய்தாட் கொள்ளுவார் இதல்லாமலும் அந்த ராமநாதனுக்கு திரிகாலமும் அபிஷேகம், ஆராதனை, நிவே தனம்ஆடல் பாடல் திருவிழாச் செய்து வைத்தபேர்கள்

பூலோகத்திலே குபேரனைபோல் வாழ்ந்துமுடிவிற் கயிலாயவா ழ்வைப் பெற்றிருப்பார்கள். இதல்லாமலும், அந்த இராமநாத னுக்கு அபிஷேகஞ்செய்கிறகாலத்தில் உருத்திரம் நமக சமகமெ ன்னுமந்திரத்தைச்செபித்தவர்கள் ஒருகாலங்களிலும் நரகத்தை யடையமாட்டார்கள் அந்தராமநாதனுடையஅபிஷேகத்துக்கும் பால்தயிர், பஞ்சகவ்யம், பழவர்க்கம், ரசவர்கம் கொடுத்து அபி ஷேகஞ்செய்து வைக்கப்பட்டவர்கள் பெறுகிறபேற்றைச்சொ ல்லுகின்றோம் யாதெனில், பாலபிஷேகஞ்செய்து வைத்தபேர்க ள்அவர்கள் அருபத்தொருதலை முறைவரையில், புத்ரமித்ரகள த்திராதிவர்க்கத்தோடும், தேவசொரூபத்தைப்பெற்று கயிலாய த்தில்வாழ்வார்கள், தயிர் அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், அவர்கள் கற்பகோடிகாலங்களிலெடுத்த ஜென்மங்களிலடர்ந்த தீங்குகளெல்லாம் அகன்று சங்குசக்கரத்தையுடைய ஸ்ரீமந்நா ராயணன் பதியாகிய வைகுந்தத்திலேவாழ்ந்திருப்பார்கள், கற்ப கோடிகாலம்வரையிலெடுத்த ஜென்மங்களினது பாபங்களெல்லா ம்விமோசனமாகி தெய்வலோகத்தை யடைவார்கள், தேனினால் அபிஷேகஞ்செய்துவைத்தபேர்கள், பிரம்மலோகத்தையடைந் துவாழ்வார்கள் எண்ணெயினால் அபிஷேகஞ்செய்து வைத்தபே ர்கள். குபேரனுடைய அளகாபுரியைச்சேர்ந்து வாழ்ந்திருப்பா ர்கள், கரும்பஞ்சாற்றினால் அபிஷேகஞ்செய்துவைத்தபேர்கள். வருணனுடையலோகத்தை யடைந்திருப்பார்கள், கனிவர்க்கங் களால் அபிஷேகஞ்செய்துவைத்தபேர்கள், பிதுர்லோகமடைந் துவாழ்ந்திருப்பார்கள் சம்பாஅன்னங்களினால்அபிஷேகஞ்செய் து வைத்தபேர்கள் ஜாயுச்சிய பதவியை யடைந்து வாழ்ந்தி ருப்பார்கள் கர்ப்பூரவாசனைகட்டிய சந்தனக்குழம்பினால் அபி ஷேகஞ்செய்துவைத்தபேர்கள் காந்தர்வலோகமடைந்து வாழ்ந் திருப்பார்கள், ரசவர்க்கங்களினால் அபிஷேகஞ்செய்து வைத்த பேர்கள், இந்திரனுடையபதியைச்சேர்ந்து வாழ்ந்திருப்பார்கள் பாதிரி, புன்னை, அலரி, செங்கழுநீர் முதலிய கட்பவாசனைகள் கட்டிய ஜலத்தினால் அபிஷேகஞ் செய்துவைத்தபேர்கள் அவர் களுடைய குற்றங்களெல்லாம் அகன்று, சிவலோகபதவியைப் பெற்றுவாழ்வார்கள், திவ்யமான ஏலம் கிராம்பு, ஜாதிக்காய், ஜாதிபத்திரிவெற்றிலைபாக்குகள் நிவேதித்து கற்பூரவாசனைகட் டிய ஜலங்களாலே அபிஷேகஞ்செய்து வைத்தபேர்கள், அக்கி னிலோகஞ்சேர்ந்து வாழ்வார்கள். பித்தளையினாற் குடஞ்செய்து கொடுத்து, அதனால் ஜலமெடுத்து அபிஷேகஞ்செய்துவைத்த

பேர்கள், இலட்சுமி கடாட்சம்பெற்று, பூமியிலேவாழ்ந்திருப்பார்கள். அபிஷேகத்துக்கு தாம்பாத்தினால் குடஞ்செய்துகொடுத்தபேர்கள், தெய்வலோகத்தை யடைவார்கள். வெள்ளிக்குடங்கொடுத்தபேர்கள், சிவலோகத்தையடைவார்கள். தங்கக்குடம்கொடுத்தபேர்கள். வைகுந்தத்தைப்பெறுவார்கள். இஃதல்லாமலும், ஸ்ரீராமநாதனுக்கு நிவேதனமாகும்பொருட்டு, பாற்பசு கொடுத்தபேர்கள் அசுவமேதயாகஞ்செய்த பலனைப்பெற்று,பரசிவசொரூபமாய் சிவலோகத்தை யடைந்திருப்பார்கள்.

எப்போதும், இராமநாதனை தரிசித்து, இராமதனுக்கோடியில் தீர்த்தமாடப்பட்டவர்கள்,இதரதேசங்களிற்சென்றகாலையில் எந்தஜலங்களில் தீர்த்தமாடினாலும், இராமநாதாவென்று மஞ்சனமாடினால், சேதுஸ்நானஞ்செய்தபலன் பெறுவார்கள் ராமநாதனுடைய ஆலயத்திற் கிலபட்டபணிகளை நடத்திவைப்பார்களாகில்அவர் செய்துவைத்த செலவுக்குப் பதின்மடங்கதிகமாய்ப் பொருளைப்படைத்துச் சுகித்திருப்பார்கள் ராமநாதனுக்கு தீபப்பணிசேய்தபேர்கள் மனத்துள்ள அஞ்ஞானங்களகன்று சுஞ்ஞானிகளாய் வாழ்வார்கள். சர்க்கரை, பருப்பு, அரிசி, வெல்லம் எண்ணெய் கண்ணாடி, சாமரை கொடுக்கப்பட்டபேர்கள், செய்தபாபங்களெல்லாமகன்று, இரதகஜதுரகபதாதிகளையுடைய வேந்தர்களாகப்பிறந்து, போகபாக்கியங்களைப்பெற்று முடிவிற் சிவலோகத்தையடைவார்கள் ராமநாதனுலயத்துக்கு முரசுமுதலியவாத்தியக்கருவிகள் வாங்கியளித்தபேர்கள், இராஜபோகத்தைபெற்றுவாழ்ந்து, முடிவிற்சிவலோகத்தை யடைவார்கள். ராமநாதனைப்பூசிக்கவும், வணங்கவும்தோத்திரஞ்செய்யவும்,ஆசைப்படுவார்களாயின் அவர்களுக்குசம்பவித்த இடுக்கண்களெல்லாமகன்று ஆனந்தபோகபாக்கியங்களை எழுபத்தொருகோடிச் தூர்யுகம்வரையில் அநுபவித்திருந்து முடிவிற்பேரின்பத்தைப் பெற்றுச்சைதன்யசொரூபமாய் விளங்குவார்கள் மராமராங்கடேழும் ஓரம்பினால் ஊடுருவச்செய்த, ராமச்சந்திரனால் பூசிக்கப்பட்ட இராமநாதனுக்கு பூசைநிவேதனத்துக்குத்தகுந்த கிராமபூமிகள்விடுத்து, அன்பினால் அவாடிமைப்பணி செய்யப்பட்டபேர்கள்சாயுச்சியபதத்தையடைந்து சிவசொரூபமாகி என்றைக்கும்ராமதனைப்போல விளங்குவார்கள். சொற்கமத்ய பாதாளமென்னுமூன்றிலும் இராமநாதனுக்கு மேலான புண்ணியக்ஷேத்திர

மும் சேதுதநுக்கோடிக்கு மேலான தீர்த்தமும் இல்லையென்று திருதிவாக்யப் பிரமாணங்களினாலே சொல்லப்பட்டிருக்கின்ற படியால் அந்த ராமநாதனுக் கர்ப்பிதமாய் கொடுக்கப்பட்டபுண் ணியத்துக்கு மேலான புண்ணியமில்லையா தென்றும் மேலோர் கள் கூறுவார்கள்.

இதன்றியும் ராமநாதனுடைய சந்நிதானத்தை திருவலமிட் டு, மெழுகி, நந்தவனங்கள் வைத்து, புட்பங்களெடுத்து மாலை கள் தொடுத்துச்சாத்தித் தோத்திரஞ் செய்யப்பட்ட அன்பர் களை ராமநாதனே புகழ்ந்துகொண்டாடி அவர்கள்பெருமையைச் சொல்ல வேண்டுமேயல்லது,நம்மாற்சொல்லமுடியாது. இதன்றி யும் பூலோகத்தில் ஜனித்த மானிடரானவர்கள் இந்திரியங் கெ ட்டுப்போகுமுன்தேகத்தில் நரையுண்டாகி மனங்கலங்கித் தலை நடுக்குற்று கண்பஞ்சடைந்து கபமேலிட்டு காலன்வந்து கிட்டு முன்னமே வீண்காலங் கழிக்காமல் ராமநாதனுடைய பணியை குறித்தும் தரிசனத்தைக்குறித்தும் அவாவுற்று ஆகமபுராணங் களால் ராமநாதனைத்தொழுது வணங்கித்தோத்திரஞ் செய்வா ராயின், அவர்களை அந்தராமநாதன், தன்னுடைய அற்புத சின் மயமதுர சாம்பிராச்சிய வைபவமோ கானந்தசுகிர்தபல விசேட காருண்யகருணாநிதி பிரசாதமகிமை யுடையவர்களாய்ச்செய்வா ரென்று சூதமாமுனிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்ய முனிவர்கள் தங்கள் கண்களினின்றும், ஆனந்தபாஷ்பந் தாரை தாரையாய்ப்பொழிய இருகரங்களையுஞ் சிறமேற்கூப்பி அவர்க ளிருந்த ஸ்தானத்திற்றானே சமாதிநிஷ்டராய், ராமநாதனுடைய சரணாரவிந்தங்களை நினைந்து ஆனந்தக் கூத்தாடினார்கள்.

இராமநாதச் சரித்திரம்.

முற்றிற்று.

௬௬-வது.

# இராமர் அருச்சனைசெய்த தீர்த்தம்.

இவ்வாறு ராமநாதனுடைய மகிமைகளைக்கேட்ட நைமிசாரண்ய மகாரிஷிகளியாவருஞ் சந்தோஷசாகரத்துட் டோய்ந்தவர்களாய் சூதமகாமுனிவரை நோக்கிக்கூறுவார்கள் சுவாமி! தேவரீருடைய பெருமையை அடியேங்களென்னசொல்லப் போகின்றோம் வேதங்களின்முடிவை யறிந்துணர்ந்து இதன்உண்மைகளைத்தெரிந்துகொண்டதும் பலபல வேதாகமபுராணங்களை அறிந்திருப்பதும் கல்விக்கடலுள் நீந்தித்திரிவதும் தேவரீரை யன்றி வேறொருவரை யாங்கள் கண்டதுமில்லை கேட்டதுமில்லை வேறொருவரை நிகராகச் சொல்லவுங்கூடாது ஆதலால், வேதவியாச மகாரிஷியினுடைய கிருபையை மென்மேலும் பெற்றுச் சகலகலைகளையும் உணர்ந்திருக்கப்பட்ட தேவரீருடைய வாக்கினாற் சேதுமான்மியங்களைக் கேட்டறிந்த எங்களுக்கு வேறொன்றுந் தேவையில்லைசகலசாம்பிராச்சிய மோக்ஷாநந்தங்களுங்கைகூடியதாகையால் எளியேங்கள் ஒரு விண்ணப்பஞ் செய்கின்றோம். அதுயாதெனில் அண்டசராசரத்தின்கண் ஓதுதற்குரிய ராமநாதக்கடவுளை தசரத குமாரனாகிய ராமச்சந்திர மூர்த்தியானவர் எவ்வண்ணம் பூசைசெய்தனரோ, அதனை எங்களுக்குச்சொல்ல வேண்டுமென்று நைமிசாரண்யர் கேழ்க்க, அதைக்கேட்ட சூத மகாமுனிவர் கூறுவார்.

கேளுங்கள் மகாரிஷிகளே, இராமச்சந்திரானவர்வானராதிகளுடனேபிரயாணப்பட்டுப்போய் தர்ப்பசயனஞ்செய்திருந்து முன்சொல்லி யிருக்கிறதுபோல், நளன்முதலிய வானரவீரர்களோடும் சேதுபந்தனஞ்செய்து ஸுவேதகிரியிற் பாளைய மிறங்கி இராவணாதிகளுடனேஎதிர்த்து யுத்தஞ்செய்துஜெயித்துச்சீதாபிராட்டியோடும் புட்பகவிமானேறி வருகிறபோது விபிஷணனுக்கு இலங்கையைப் பட்டாபிஷேகஞ்செய்து அழைத்துக்கொண்டு வானராதிகளோடுங் கந்தமாதனத்திற்சேர்ந்து தனுக்கோடி உண்டுபண்ணி, அக்கந்தமாதனகிரிச்சாரிபில் றபஞ்செய்து கொண்டிருக்குந்தபோதனர்க ளியாவரும் ராமச்சந்திரன் நமது துன்பங்கள் தீரும்படியாய் இராவண சம்மாரஞ்செய்து வந்தாரென்

னுஞ் செய்திகேட்டு மகாசந்தோஷத்துடனே அவரவர்கள் பத்தினி மார்களோடுஞ் சிடர்களோடும் தனித்தனியே பிரயாணப்பட்டு வந்து ஸ்ரீராமச்சந்திரனைக்கண்டு ஆசிகூறிப்புகழ, அதற்கு ஸ்ரீ ராமச்சந்திரன் ஆனந்த முற்றவராய் தன்னைக்கண்ட முனிவர்களெல்லாம் அர்க்கிய பாத்திசமளித் துபசாரஞ்செய்து தர்ப்பாசனங்களில் எழுந்தருளப்பண்ணி ஏகாந்தமாய்பேசிக்கொண்டிருக்கிறபோது ஸ்ரீராச்சந்திரன் அவ்விருடிகளைப்பார்த்து ஒரு வார்த்தை சொல்லுவார் வாருங்கள் தபசிரேஷ்டர்களே, உங்களுடைய தபோபலத்தினால் இராவணனாதி ராக்ஷதர்களை நாம் சம்மாரஞ்செய்துவந்த போதிலும் உங்களுடைய வாக்குப் பிரசாதத்தைப் பெறவேண்டி ஒருகாரியஞ் சொல்லுகின்றோம் அதைச் செவ்வையா யோசித்து அதன் உண்மையை அறிந்துரைக்க வேண்டும். யாதெனில் கேளுங்கள் ஓ முனிவர்களே! இலங்கைவேந்தனாகிய இராவணனைக் கொன்றதோஷம் என்னைவிட்டு நீங்கும்படியாய் ஒரு பரிகாரஞ்சொல்ல வேண்டுமென்று கேட்க, அதைக்கேட்டமுனிவர்கள் சந்தோஷ மடைந்தவர்களாய் செவ்வையா யோசித்து சொல்லுவார்கள்.

வாருமையா இராமச்சந்திரமூர்த்தியே, தேவரீருக்குத் தெரியாதவை யொன்றில்லை யாயினும் எங்களை ஒரு பொருட்டாக எண்ணிக் கேட்டபடியினாலே சொல்லுகின்றோம், யாதெனில்தாங்கள் பூலோகத்திலே வந்து பிறந்து இராஜரீகத்துக் குட்பட்டிருப்பதினாலும் க்ஷத்திரிய தருமப்படிக்கு தங்களுக்குண்டான தோஷம்போகவேண்டு மாயின் இந்த கந்தமாதனத்திலே வேத விதியின்படிச்சிவபூசை பண்ணினால் சகலதோஷங்களும் நிவாரணமாய் மோட்சானந்தத்தை கொடுக்குமாதலால் அதுபோற்றுங்கள் செய்வீர்களாகில் அதைக்கண்டு தரிசித்தபேர்களுக்கு காசிமகா க்ஷேத்திரத்திலே கோடானுகோடி லிங்கப்பிரதிஷ்டை செய்தபலன் உண்டாகும்அதன்றியும்தேவரீரால் பூஜிக்கப்பட்ட லிங்கத்தின் மகிமையினாலே இந்தஇடத்துக்கு எப்போதுமஇராமேச்சரமென்றும் பெயர் விளங்கிகொண்டேயிருக்குமாதலால் தேவரீர் அதிதீவிரத்தோடும் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்ய ஆரம்பிக்க வேண்டுமென்று சொன்னார்கள்.

அவ்வார்த்தையைக் கேட்ட இராமச்சந்திரன் மனமகிழ்ச்சியோடும் கூறுவார். வாருங்கள் மகாரிஷிகளே உங்கள் வாக்கியப்படி சிவலிங்கப்பிரதிஷ்டை செய்வதற்கு பொருந்திய தினமாய்

ஒருதினம்பார்த்துச்சொல்லுங்களென்றுகேட்க, அகஸ்தியர்முத லிய முனிவர்களெல்லாஞ் சந்தோஷமடைந்து ராமச்சந்திரனாலே இக்கந்தமாதனச்சார்பில் சிவலிங்கப்பிரதிஷ்டை யுண்டாகுமாயின் அத்தேவனை நாமனைவருங்கண்டு தரிசிக்கலாமென்று விருப்பத்தோடுஞ் சகலருங்கூடிச் சாஸ்திர புராணங்களை ஆராய்ந்து பார்த்து சொல்லுவார்கள் ஐயா ராமமூர்த்தியே! ஆனிமாதம்சுக்லபட்சம் புதன்கிழமை அவிட்டநட்சத்திர தசமிதிதியும் விதிபாதயோகமுங் கூடிய சுபதினத்தில் அருணோதய வேளையாகும் விருஷப லக்கினத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்ய தேவரீருக்குப்பொருந்தியதினமாகயிருக்கின்றதென்று சொன்னார்கள் அவ்வார்த்தையைக்கேட்ட ராமச்சந்திரன் சந்தோஷத்தையடைந்து உடனே அனுமானை யழைத்துச் சொல்லுவார் வாரும் அனுமானே! நீ இதுவரையிலுஞ்செய்தவுபகாரங்களெல்லாம் பெரிதல்ல நாளை உதயகாலபூஜைக்கு ஆகும்படியாய் சிவலிங்கங்கொண்டு வரவேண்டுமாதலால் அதிதீவிரத்தோடும் பூலோககைலாசமாகிய காசிமகா க்ஷேத்திரத்தையடைந்து இலிங்கங் கொண்டுவாருமென்று விடைகொடுத்தனுப்பி பின் சிவப்ரதிஷ்டைக்காகவேண்டிய சாமக்கிரியைகளைக் குறைவில்லாமல் அதிசாக்ரதைபோடுஞ் சேகரஞ்செய்துக் கொண்டிருக்கையில் அனுமாரானவர் இராமச்சந்திரனிடத்தில் விடைபெற்று சகலத்திராளுங் காணும்படியாய் கந்தமாதனத்திலேநின்றுவிசுவரூபங்கொண்டு ஆகாசமார்க்கத்திலெழும்பிப்பின்னும் பூமியிற்றாழ்ந்து லாகுகொண்டு பாய்ந்துபூலோககைலாசமாகிய காசிமகாக்ஷேத்திரத்திரத்தையடைந்துகங்கையில் ஸ்நானம்பண்ணி தர்ப்பையைக்கீழேபரப்பி அவ்வாசனத்திருந்து இந்திரியங்களையடக்கி இடைகலைபின்கலைசுழிமுனையைக்கூட்டி நிருவிகற்பநிட்டைபொருந்தி யிருந்து ஈஸ்வரப்ரசாதங்களைப்பெற்று இலிங்கங்கொண்டு வருமுன்னுதாகருஷியீஸ்வரர்களமைந்த முகூர்த்தம் சமீபித்து விட்டதனாலே ராமச்சந்திரனும் அனுமாரவரவில்லையேயென்று வரும்வழியைநோக்கிச்சிந்தித்துக்கொண்டிருக்க, அச்சமயத்தில் சீதாலட்சுமியானவள்மிர்த்திகையான மணலைக்கையினாற் குவித்து இலிங்கம்போற் செய்து விளையாடிக் கொண்டிருக்கிறபோது அதை சகல முனிவராளும் ருஷியீஸ்வரர்களுங்காண அவர்கள் கண்களுக்கு அவ்விலிங்கமானது தெய்வீகமாய்த் தோன்ற சகலரும் ராமச்சந்திரனிடத்தில் வந்து சொல்லுவார்கள் சுவாமி, அனுமாரானவர்வருவதற்குள் முகூர்த்தவேளை தப்பிப்போகின்றதாக விருப்பதால்

மகாலட்சுமியாகிய சீதாதேவியார் தமதுகரத்தினால் மிர்த்திகை யானமணலைக்குவித்து இலிங்கம்போற்செய்து விளையாடிக்கொண்டிருப்பதைப்பார்த்தால் அவற்றில்தெய்வீகம் விளங்குகின்றபடியினால் மிகவுஞ்சிலாக்கியமாயிருக்கும் அவ்விலிங்கத்தையே தேவரீர் பூசிக்கவேண்டியதென்று முனிவர்சொல்ல, அதைக்கேட்ட இராமச்சந்திரன் சந்தோஷத்தையடைந்து எல்லாம் பிரம்மமயமென்றறிந்துகொண்டவராய் தாமுஞ் சீதாபிராட்டியும் இளையபெருமாளுந்தீர்த்தமாடி நியமநிஷ்டைகளைமுடித்து விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டவர்களாய் சீதைகையினாற்குவிக்கப்பட்ட மகாலிங்கசொரூபத்துக் கருகாமையாகவிருந்து சிவபூசைக்குண்டான சாமக்கிரியைகளும் பத்திரபுட்பங்களுமெடுத்துராமச்சந்திரமூர்த்தியானவர் சாந்தபதத்தைப்பொருந்தி அவ்விலிங்கத்துக்குத் தென்பாரிசத்திலே வியாக்ராஜிநமுதலிய ஆசனத்தின்பேரில் வடக்குமுகமாயிருந்து பூஜாஸ்தானத்தைத் திக்குபந்தனம்பண்ணி, அவகுண்டனமுதலிய தேனுமுத்திரை மகாமுத்ரையுங்கொடுத்து இடைபிங்கலைநாடி இரண்டும் இரண்டு காற்பெருவிரலின்மேல நின்றுகிளம்பிமூலாதாரத்தளவுமிரண்டுரூபமாயிருந்து மேற்சுழிமுனையுடனேகூடி ஏகமாய் பிரம்மரந்திர மளவும்போயிருப்பதை இருதயகண்டத்தாலும் மூலம் புருவநடு பிரம்மரந்திரம் இந்தஸ்தானங்களே இடைபிங்கலையினாலேகூடி யொத்திருக்கும்படியாகவும் அந்த இருதயமுதல்ஐந்து தானங்களிலேயும் தாமரையரும்பு கீழ்நோக்கி இருப்பதில் உள்ளும்புறமும் பொருந்தியிருக்கிற பரமவியோமரூபினி என்னுஞ் சத்தியை யுடைத்தானதாயிருக்குஞ் சுழிமுனைநாடியைத் தியானம்பண்ணி, அதின்நடுவிலே ஊங்காரஞ் சொலிக்கும்படியாய்ச் செய்து வாயுவைக்கும்பித்து நாசியினாலேவிடுத்து மீளவும் வாயுவைமேல்நோக்கி சோபிகாமுத்திரையினாலே கீழ்நோக்கியிருக்கிற தாமரையரும்புமேல்நோக்கி யலர்ந்ததாகப்பாவித்து சாந்தரசமயமாய் இதயசம்படிதனை ஊங்காரத்திலுடைய சிகையிலே பீஜவிக்கிரகனாய் ஊங்கா சிகாரித்தனாய் புரியட்டகதேகத்திலே நின்றும் விடப்பட்டவனாய் சூக்குமரூபனாய் நிராமயனாக ஆத்துமாவைத் தியானம்பண்ணி வாயுவைக்கும்பித்து மேலெழும்பிச் சங்காரமுத்திரையினாலே பிரமாதி காரணத்தியாகக்கிரமமாகவுச்சரித்துக்கொண்டு ஆத்துமாவையீளவும் தேகத்திருத்தி யோகங்களைப் புசிக்கிறவனாக சங்காரமுத்திரையினாலே கொண்டுபோ

ய்துவாதசாந்தத்திறற் சிவனிடத்திலே யோசித்துப்பின்பு பிரா
தவோமதாரணத்தினாலே இதயம்கண்டம் தாலுமூலம் புருவநடு
பிரம்மரந்திரதத்துவ முப்பத்தாரையும் தோற்றமொடுக்கஞ்செ
ய்து அவைகளிலே சத்துபரிசத்தை பிரம்மாவினிடத்திலும் இர
சத்தை விஷ்ணுவினிடத்திலும் ரூபத்தையுங் கந்தத்தையும் உரு
த்திரனிடத்திலும் மனதையும்விந்தையுஞ் சதாசிவனிடத்திலும்
யோசித்துச் சூக்குமதேகத்தைச் சுத்திபண்ணினவராய் பின்பு
தூலதேகத்தைசுத்திசெய்யும்படி பிருதிவிமண்டலம் நாற்கோ
ணமாய் பொன்னிறமாய்க் கடினகுணமாய்லவ்வென்று மக்ஷர
மாய் நிவர்த்திகலையாய் சத்தியோசாத மந்திரமாய் அதிதேவதை
பிரம்மாவாய் ஆயுதம்வச்சிரமாய் கெந்தாதி ஐந்துகுணத்தையு
முடைத்தாயிருக்கிற பிருதிவியைப் பூரககும்பகஞ்செய்து மே
னோக்கியுச்சரித்துச் சத்தமுதலான ஐந்துகுணத்தையும்போக்கி
ச்சோதனைசெய்து பின்பு அப்புமண்டலமானது உயர்ந்தசந்தி
ராகாரமாய் வெள்ளைநிறமாய் நெகிழ்ந்தகுணத்தையுடைத்தாயி
ருக்கின்றதாய் யவ்வென்னும் அக்ஷரமுடையதாய் தேவதைபிரம்
மாவாய் ஆயுதம் வச்சிரமாய் பிரதிஷ்டாகலையாய் வாமதேவமந்
திரமாய் அதிதேவதைவஸ்துவாய் ஆயுதந்தாமரையாய்ப் பூரக
கும்பகம்பண்ணி மேல்நோக்கி உச்சரித்தரசாதிமுதலிய நான்கு
குணத்தையும் போக்கிச்சோதனைசெய்துபின்புதேயுமண்டலமா
னது மூன்றுகோணமாய் சிவந்தநிறமாய் வெப்பமானகுணத்தை
யுடைத்தாயிருக்கின்றதாய் ரவ்வென்னும் அட்சரமுடையதாய்
வித்யாகலையாய் அகோரமந்திரமாய் அதிதேவதை உருத்திரனாய்
ஆயுதஞ்சுவத்திகமாய் ரூயாதிமூன்று குணத்தையு முடைத்தா
யிருக்கிறதேயுவைப் பூரககும்பகம்பண்ணி மேல்நோக்கிஉச்சரித்
தரூபாதிமுதலா மூன்றுகுணத்தையும்போக்கிச் சோதனைசெய்
து பின்பு வாரி மண்டலமானது அறுகோணமாய் கறுப்புநிற
மாய் தண்மையான குணமுடையதால் யவ்வென்னும் அட்சரமா
ய்சாந்திகலையாய் தற்புருஷமந்திரமாய். அதிதேவதைமகேசுரனாய்
ஆயுதம்அறும்புள்ளியாய்பரிசாதி இரண்டுகுணத்தையுடைத்தா
யிருக்கிற வாயுவைப்பூரககும்பகஞ்செய்து மேல்நோக்கிஉச்சரித்
துப்பரிசாதி இருகுணத்தையும் போக்கிச் சோதனைசெய்துபின்
புஆகாசமானது வட்டமாய்ப் படிகநிறம்போற் பூரணகுணமாய்
ஸவ்வென்னு மட்சரமாய் சாந்திதாகலையாய் ஈசானமந்திரமாய்
அதிதேவதை சதாசிவமாய் ஆயுதமமுத விந்துவாய் சத்தகுண
மொன்றும் உடைத்தாயிருக்கின்ற ஆகாசத்தைப் பூரக கும்பகம்

பண்ணி மேல்நோக்கி யுச்சரித்து சத்தகுணமொன்றையும்போக்கிச் சோதனைசெய்து, ஆகாசத்தைச் சத்தியினால் மறைக்கப்பட்டதாய்ப் பாவனைசெய்து, இவ்விதந் தன்னுடைய தேகத்தைச் சோதித்துச் சர்வசூன்னியமானபின்பு பிரமரந்திர பாவத்திலே நின்றுவிழாநின்ற அமிர்ததாரையினாலே தன்னுடைய சரீரமுழுதும்நாடிகளிலே அமிர்தத்தைக்கொண்டுவந்து தேகமுழுவதும் நனைந்து இதயபரமாசனத்தில் கன்னிகையிலே நான்கு கலையுடனே பிரணவத்தினாலே பிரமன் முதலிய ஐந்துபேர்களிடத்தும் போய் அடங்கியிருக்கின்ற புரியட்டக தேகத்தைக்கொண்டுவந்து அந்ததேகத்தின் துவாதசாந்தத்திலே, பீஜரூபமாய் சிவமாக இருக்கிற ஆன்மாவை ஆகமமந்திர பூரகத்தினாலே சிருஷ்டிக்கிரமமாக சங்காரமுத்திரையினாலே கொண்டுவந்து சேர்த்து மந்திரத்தினாலுச்சரித்து சிவன்சத்தியினாற் கலக்கப்பட்டிருக்கிறவிந்துவினிடத்தினின்றும், பெருகாநின்ற அமிர்தத்தினாலே அந்தஆன்மாவைஅபிஷேகம் பண்ணினவராய். தூலதேகசுத்திசெய்துகொண்டு, பின்புநாகந்தத்திலே எட்டங்குலமான ஞாயத்தையுடைத்தாய், எட்டிதழ்களுடனே கூடியவெண்டாமரைப் புட்பம்போலிருக்கிற இதயாசனத்திலே சோதிமயமாக யிருக்கின்ற இலிங்கத்தில், துவாதசாந்தத்திலிருக்கின்றசிவனை யாவாகனம்பண்ணிச்சகலமந்திர தந்திரங்களுடனே அபிஷேகநிவேதனசோடசஉபசாரத்துடனேபூசையும், பகிர்முகாற்கிய முடிவாக மானதபூசையாகப் பண்ணினவராய், மந்திரங்களினாலே தானத்ரையம், திக்குபந்தனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, மகாமுத்திரையுங்கொடுத்து, பூஜாஸ்தானத்தை சுத்திசெய்து விந்துஸ்தானத்திலே நின்றும், பெருகாநின்ற அமிர்தமாகுஞ் சுத்தஜலத்தினாலே பூரித்து மந்திரங்களினாலே அற்சித்து, அபிமந்திரித்து, திக்குபந்தனம் அவகுண்டனம் தேநுமுத்திரை மகாமுத்திரையுங்கொடுத்து அந்த அர்க்கிய ஜலத்தினாலே தன்னையும் புரோக்ஷித்துக் கொண்டு பூசையும் காண்டத்ரவியங்களையும் புரோட்சித்து திருமஞ்சன குடத்துக்கு பந்தனம் அவகுண்டனம் தேனுமுத்திரை மகாமுத்திரையுங் கொடுத்து திவ்யசுத்தி பண்ணிக் கொண்டவராய் தன்னுடைய ஆசனத்தை மந்திரத்தினாலேபூசித்து லலாடத்திலே சந்தனமிட்டு, மந்திரத்தினால் அர்ச்சனைசெய்துமூலமந்திரத்தைத் துவாதசாந்த மளவாகவும், பஞ்சப்பிரம்ம மந்திரத்தை பிரம்மமந்திர மளவாகவும், சடங்களை விந்து பரியந்தமாகவும்; மந்திர சுத்திசெய்து பின்பு சிதாலட்சுமி கையினாலே நியு

மிக்கப்பட்டவராக விருக்குஞ் சிவலிங்கத்திலே அஷ்ட புட்பஞ் சாத்திச் சுத்தசலம்பண்ணி எண்ணெய்க்காப்பு, மஞ்சட்காப்பு, நெல்லிக்காப்பு, பஞ்சாமிர்தம், பஞ்சகவ்வியம்பசுவின்நெய்,இளநீர், வில்வக்குழம்பு, பச்சைகர்ப்பூரம், பால், தயிர், தேன், சர்க்கரைகருப்பஞ்சாறு, வாழைப்பழம், மாம்பழம்பலாப்பழம்முதலிய பழவர்க்கங்கள், ரசவர்க்கங்கள், இவைகளினாலேமந்திரவிதியாய் அபிஷேகம்பண்ணி, இடையிடையே சுத்தஜலமான கோடிதீர்த்தமும், அபிஷேகம்பண்ணி, அஷ்டபுட்பமுந் தீபமும் அர்க்கியமுங்கொடுத்து, பின்சுத்தஜல வபிஷேகஞ்செய்து, மறுபடியும் சுத்தஜலங்களினாலே ஒருதரம் சகஸ்ராரவிந்த சந்தனக்குழம்பு வரையிலும் விதிப்படி அபிஷேகம்பண்ணி ஆசமனார்க்கியங்கொடுத்துப் பின்சுத்தஜலத்தா லபிஷேகஞ்செய்து உயர்ந்த பரிவட்டம, பீதாம்பரங்கள்சாத்தி, அப்பால் மகாகணபதியையுந்தியானித்துப்பூசித்து சன்னிதான அர்க்கியங்கள்கொடுத்து பிரார்த்தித்துக்கொண்டு, பீடத்துக்கீழே பிரமசிலைக்கு நடுவேகூறும் சிலையிலே ஆதாரசத்தியைப் பூஜித்துபிரமசிலைக்கு மேலே அனந்தாசனத்தைத் தியானம்பண்ணிப்பூசித்து அதன்மேல் நான்கு புறமும், வெள்ளை, சிவப்பு, மஞ்சள், கறுப்பு, நிறமாயும், ஒன்றுக்கொன்று பின்பார்த்த பார்வையாயும், தியானம்பண்ணி அதற்குமேற் சட்டமும், அப்படியே தியானித்து அவ்வாறு தியானித்த சிங்கக்காலின்மேற் சடரூபமாகத் தியானம் பண்ணிப் பூஜித்து,அதற்குமேல்ஈசான்யதிக்கிலேவெள்ளைநிறமாய்சுத்தசொரூபமாக வூர்த்தாசனத்தை தியானம்பண்ணிப் பூஜித்து அதின் நடுவிலும் மேலிலும் மாணிக்கநிறமான கிழங்கும் பவழம்போன்ற முளையும்நீலநிறமான நாளமும், வெள்ளிநிறமானஸ்தனங்களுஞ் சொர்ணநிறமான கேசரமும் அதன் நுனியை முத்தைபோலுந் தியானப்பண்ணிக் கிரமமாய் மந்திரத்தினாலே தியானித்துப் பூசித்து அதினடுவே ஓடவைத்தபொன்னிறமுள்ள விரைகளையுடைத்தாயிருக்கிற கன்னிகையைத் தியானித்துப் பூஜித்து, பின்பு எட்டுதிக்கிலுள்ள எட்டிதழிலும், வாமாதிகளாகவிருக்கின்ற எட்டுச்சத்திகளையும், கன்னிகை ஈசான்யத்திலே மனோன் மணியையும் தியானித்துப் பூஜித்து தளத்தின் நுனி வட்டத்திலே சூரிய மண்டலம் சந்திரமண்டலம், அக்கினிமண்டல முதலானவைகளையும், அதற்குரிய அதிதேவதைகளையும் தியானித்தும்பூஜித்து அதன்மேல் ஆதாரசத்திமுதலாய், குடிலாசத்திபரியந்தம், விய

பகமாய் மநதிரவித்தாய், சிதாசனத்தை உபாசித்துப் பூஜித்து சிவமூர்த்தியைத் தரிசனமாய்த் தண்டாகாரமாய்த் தியானம் ப ண்ணிப் பூஜித்து, கையை முஷ்டியாகப் பிடித்து, சுவாமியினு டைய சிரம், முகம், இதயம், நாபி, முழங்கால்களிலே மந்திரங் களினாலே கிரமமாய்த் தண்டபத்ரியாயம் பண்ணி, ஈசானம்,தற் புருஷம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதத்தையும் கிரமப் படி அந்தத் திக்கிலே முண்டபந்நியாசம் பண்ணி யோகபீட த்தைப் பூசித்து ஆதாரசத்தி முதலாய், குடிலாசத்தி பரியந்தம் வியாபகமாயிருக்கிற மந்திர சிங்காசனத்திலே பரமாசனத்தில் முன்சொன்ன மகாலிங்க சொரூபமா யிலங்குபவராயும், சுத்த படிகநிறமாயும், முப்பத்திரண்டு லட்சணங்களையு முடைத்தான வராய் ஐந்துமுகமும், அம்முகங்கடோறும் ஞானசத்தி, கிரியா சத்தி, இச்சாசத்தி சொரூபமாயும், விசாலமாயிருக்கின்ற திரி நேத்திரத்தையு முடைத்தனவராய், ஞானசந்திர கலையோடுங் கூடி இருப்பவராய் ஐந்து முகங்களும், ஐந்து வருணமாயிருப்ப வராய், நாகாபரணராயும், சாந்தராயும், அர்த்த சந்திர ஜடா மகுடராயும், பத்துகரங்களை யுடையவராயும்,வலப்புறமோங்கு மைந்துகரத்திலுப, சத்தி, கத்தி, சூலம், கட்டுவாங்கம், வரத மும், இடக்கரமைந்திலும், டமருகம், மாதுளம் பழம், நாகம், செபவடம், நீலோற்பலமுடையராகவும், தியானஞ்செய்து இலி ங்கபாவனையை விடுத்து விந்தியா தேகமாய்ப் பாவித்து அஞ் சலி யஸ்தத்தினாலே இலிங்கத்தில் பிரம்ம ரந்திராந்த வியாபக ப்பிரசாதமாக உச்சரித்து, பின்னின் சமுகம் அஞ்சலிக் குள் ளே யோசித்துத் தியானித்து பஞ்சமுகத்திலும் நேத்திரங்கொ டுத்துப் புட்பங்களினாலே கைகளை நிறைத்து அஞ்சலி பண்ணிக் கொண்டு மூலமந்திரததினால் துவாத சாந்தமளவாக உச்சரித் து, சமனானந்தமான பாசசலத்தைக் கடந்து போய், நிஷ்மளமா ய், சர்வகாரணமாய், வியாபகமாய், தத்துவாதீதமாய், ஞானா னந்த சொரூபப்பிரகாசமாய் தியானம் பண்ணி சிருஷ்டிக்கிரம மாக விந்துஸ்தானமளவாகக் கொண்டு வந்து அதில் நின்று அஞ் சலிக்குள்ளே அநேககோடி சந்திரப்பிரகாசம்போ லெழுந்தரு ளச் செய்து நேசித்து விந்து நாதசொரூபமாய் இலக்கியமாக விருக்கின்ற மூர்த்தியிலே ஆவாகன முத்திரையினாலே மந்திரத் திறத்தினால்,ஆவாகனஸ்தாபனம், சன்னிதான சன்னிரோதனம் பண்ணிச் சுவாசகாந்தம் விண்ணப்பஞ்செய்து அனுக்ரகம் பெ ற்றவராய் அர்க்கியங் கொடுத்து இருகரங்களையுஞ் சிரத்தின் மீது நியாசம் பண்ணி நாகத்வஜமகாமுஷ்டிகாரமாய்ச் செய்து,

திக்குபந்தனம், அவகுண்டனம், தேனு முத்திரை, மகாமுத்திரை, கோகர்ன்ன முத்திரை, இலிங்கமுத்திரை, நமஸ்காரமுத்திரை, என்னும் பஞ்சமுத்திரையுங் கொடுத்து, அந்தந்த ஸ்தானங்களிலே அர்க்கிய பாத்தியங்களளித்து, மந்திர விபரமாய் அறுகு அக்ஷதை புட்பஞ்சாத்தி, தூபதீபங் கொடுத்து, பின்னும், ஆசமனற்கியங் கொடுத்துச் சாத்திப் புட்பத்தைக் கழித்து, மறுபுட்பஞ்சாத்தி, எண்ணெய்க்காப்பு முதலிய அபிஷேக திரவியங்களை மனதிலே பாவித்து அபிஷேகம் பண்ணினதாக ஒரு புட்பத்தினால் இலிங்கத்துக் கபிஷேகம்பண்ணி மெல்லியபரிவட்டத்தினாலே திருப்பொன்னுடை சாத்தி, மந்திரத்தினால் ஒரு புட்பஞ்சாத்தி, மந்திரான்னம், நெய்வேதனம் பண்ணிச் சந்தனம் அக்ஷதை, அறுகு, தாமரைப்பூச்சாத்தி, பொன்னினரை நாண், கௌபீனமேகலை, உபவீதம், குண்டலம், ஆபரணம், விசித்ர வஸ்த்ரங்கள், கிரீடகேயூர மணியாபரணங்கள், தண்டை கிண்கிணி வெண்டயம் சிலம்பு முதலிய ஆடையாபரண பூஷணாதிகளை மனதிலே பாவித்துச்சாத்தி, மூன்றுதரம் மந்திரத்தினாலே புஷ்பாஞ்சலி செய்து புஷ்பஞ்சாத்தி, கொன்றைமாலை முதலிய திவ்ய புஷ்பாலங்கிருதஞ் செய்து, மணிநாதத் தொனிகள் செய்து மனோரத முத்திரையுங் கொடுத்து, லாயங்கம் பூசித்து அர்ச்சித்து போகாங்கத்தைப் பூசிக்கும்படியாய் ஈசான்யமுதல், சத்தியோசாதம் வரையிலும் நேத்திரமுதற் கவசம் வரையிலும் மந்திரங்களினாலே போகாங்கம் பூசித்து அர்க்கியங் கொடுத்து, ஈசானத்துக்கு தேனு முத்திரையும் தற்புருஷத்துக்குப பரம முத்திரையும், அகோரத்துக்கு திரிசூல முத்திரையும், வாமதேவத்துக்கு மகா முத்திரையும், சத்தியோசாதத்துக்குச் சுருக்கு முத்திரையுங் கொடுத்து மற்ற அங்கங்களுக்கு நமஸ்கார முத்திரையுங் கொடுத்து, புஷ்பாஞ்சலித்திரையஞ் சாத்தி மகாமுத்திரையுங் கொடுத்து, பஞ்ச பிரமங்களும், இதயமுதலிய அங்கங்களும், சிவனுடனே கூடியிருக்கிறவைகளாகப் பாவித்து தீப தூப முதலாய சோடசோபசாரங்களுஞ் செய்து, ஆசமனர்க்கியங்கொடுத்து, திவ்பான்னங்களும், சித்ரான்னங்களும், பால், பழம் சர்க்கரை, நெய், பலகாரங்களும், நானாவிதமான கறி வர்க்கங்களும் வாசனைபொருந்திய ஜலமும் படைத்து நிரீக்ஷணாதி சுதிபண்ணி அர்க்கிய ஜலத்தினாலே புரோக்ஷித்து மந்திரத்தினால் அபிமந்திரித்து, திக்குபந்தனம், அவகுண்டனம், தேனு முத்திரையுங் கொடுத்து திவ்ய முத்திரையை தரிசிப்பித்து

கௌரிகையினால் நிவேதித்து பாவனைசெய்து தற்புருஷ முகத்தி லே நிவேதித்து ஆசமனார்க்கியங்கொடுத்து சோடசோபசாரங்க ளுஞ்செய்து அஞ்சலி புட்பஞ்சாத்தி கற்பூர தீபங்கொடுத்து ஆனந்தாதிகளாலே தோத்திரம்பண்ணப்பட்டு சந்துஷ்டியாயிரு க்கின்றவராகச் சிவனை தியானம்பண்ணி மூலத்தினாலே புட்பாஞ் சலித்தியஞ்சாத்தி, மகாமுத்திரை பஞ்சமுத்திரையுங்கொடுத்து ஜெபவட்சதை நிரிக்ஷணாதி சுத்திபண்ணி அபிமந்திரித்து இடது காத்திலே புட்பங்களை வைத்துக்கொண்டு ஜெபமாலையினாலே நூற்றெட்டுரு ஜெபித்து புட்பத்தை வலதுகரததில்வாங்கி அர்க் கிய ஜலத்துடனே மந்திரபூர்வகமாய்ச் சாந்தி போகங்களுக்குந் தனித்தனியே மந்திரத்தினாற்பத்துரு ஜெபித்துச்சாத்தி சுவா மிக்கு அக்கினிதிக்கிலே சடுச்சாதனம்பூசித்து அதிற்சிவகுருவை ஆசனத்தினாலே ஆவாகனாதிஜெபாந்தமாகப் பூஜித்துத்தோத்திரம் பண்ணிப்பின்பு சுவாமிக்கு மேற்புறததிலே யோகபீடம் வித்தி யாபீடம் பூஜித்து அர்க்கியமுங்கொடுத்து சுவாமிக்குப் புட்பா ஞ்சலிதிரயமாக நாமகரணம் இராமநாதாவென்று சாத்தி அநேக வேதமந்திர சுருதிவாக்யப் பிரமாணங்களாலே தோத்திரங்களு டனே சீதாதேவியார் பின்றொடர்ந்து வரும்படியாயும் தான் இல ட்சுமணருடனே எழுந்திருந்து சகலதேவருஷிகளும் புடைசூழ் ந்துவர ஸ்ரீராமநாதனை முப்பிரதட்சணஞ்செய்து மகா அன்போ டும் பூமியிலேவிழுந்து அஷ்டாங்க பஞ்சாங்கத்துடனே நமஸ்கா ரஞ்செய்து எழுந்திருந்து சிரத்தின்மேற் கரங்களைக்கூப்பிக்கொ ண்டு ஆனந்தக்கூத்தாடி தேகமயிர்க்குச்செறிய வாய்குளற கண் ணீர்ததும்பி மலையருவிபோற் றாரைதாரையாகப்பெருக அடிக்கடி கைகளைகொட்டி யாதுந்தோற்றாமல் எங்குஞ் சுயம்பிரகாசமாய் மகா ஆனந்தத்துடனே அன்புபெருகி நிற்கும்போது அந்தராம லிங்கத்திலேயிருந்து கோடிசூரியப் பிரகாசம்போல் ஓர் தேஜசு தோன்றி அதனோடும் மான்மழு சதுர்ப்புஜகாலகண்ட திரிநேத் திர சந்திரகெங்காதர ஜடாதாரியாயும் மகரகேயூர குண்டல மணிமகுட தாரியாயும், ஆடையாபரண பூஷணாதி அலங்கிருத அர்த்த நாரிபாகராயும், அரவாபரண கங்கண உருத்திராக்ஷ விபூ திதாரியாயும் மச்சத்தின் என்பு கூர்மத்தின் ஓடு வராகத்தின் கொம்பு நாசிங்கத்தின்நகங்கள் புலியுடை ஆனையுரிபிரமகபாலம்

முதலிய பக்தாளுடைய சிரமாலைவில்வக்குழை துளசிமாலைவிரு ஷபவாகனத்தின்மீது பார்வதிசமேதராய் முப்பதுமுக்கோடிதே வர்களும் சித்த கின்னரர் காந்தருவர், கெணநாதர் சிவபக்தர்க ளும் புடைசூழும்படியாய் எழுந்தருளி ஸ்ரீராமச்சந்திரனைப்பார் த்துவாரும் இராமச்சந்திராவென்றவுடனே பிரமஹத்தியானது காற்றோடுகாற்றாய்த்துலையப்பரமேஸ்வரன்கூறுவார்.நீரிந்தக்கந்த மாதனத்திலேசேதுதநுக்கோடி தீர்த்தமாடிநம்மையும் விதிப்படி பூஜித்தமையினால் உம்முடையபாபங்களெல்லாம் நீங்கிவிட்டது.

இனிமேல் பூலோகத்திலே சேதுதநுக்கோடி தீர்த்தங்களை விதிப்படியாடி நம்மைப்பூஜித்து வணங்கியபேர்களினுடையசகல பாபங்களும் விமோசனமாகிநம்முடைய பதங்களைப்பெற்றுமோ ட்சத்தையடைந்து பிரம்மானந்தத்தை யநுபவிக்கக் கடவார்க ளென்றும் வாக்களித்துப் பின்னுங்கூறுவார். இராமச்சந்திரனே! நம்மை இக்கந்தமாதனத்திலே யாரொருவர் உம்மைப்போற்பூஜி ப்பார்களோ அவர்களுக்கு அநேகவரப்பிரசாதங்களும் இஷ்ட காம்மிய மோட்சகாம்மியங்களும் பிர்ம்மானந்தமும்பெருகிவாழ க்கடவர்களென்றும் வாக்களித்துப் பின்பு அந்த ராமலிங்கத்தி ற்றனே அத்தேஜசுடனே ஐக்கியமாய் எழுந்தருளியிருந்தார். இப்படி இராமநாதன்தெரிசனந்தந்து வரப்பிரசாதங்கள் அளித் ததைக்கண்டிருந்த சகலதேவரிஷிகளும் முனீஸ்வரர்களும் தபசி களும் விபீஷணன் சுக்ரீவன் முதலிய வானராதிகளும் அவரவர் தனித்தனியே மிருத்திகைகளைபாணித்து வேதாகமபிரகாரம்தப் பாமற் சிவபூசைசெய்துமுடித்து அநேக தோத்திரங்கள்செய்து ஆனந்தக் கூத்தாடினார்கள் அப்போது ஸ்ரீராமச்சந்திரன் முத லானபேர்களெல்லாம் அப்படியே தோத்திரஞ்செய்துக் கொண் டிருந்தார்கள்.

கேட்டீர்களோ முனிவர்களே இவ்வாறிருக்கையிற் கைலாச த்தைப் போன்ற காசிமகாக்ஷேத்திரத்திற்குச்சென்று இலிங்கங் கொண்டுவரச்சென்ற அனுமாரும் ஈசுவரப்பிரசாதமாய் இரண்டு லிங்கங்களைக்கொண்டு மகாஜாக்கிரதையோடும் விசுவரூபங்கொ ண்டு கந்தமாதனத்திற்கு ஸ்ரீராமச்சந்திரனையும் சீதாதேவியை யும் லட்சுமணரையுஞ் சுக்ரீவனையும் கண்டு நமஸ்கரித்து பார்க் கும்போது சிவபூசை நடந்தேறித் தோத்திரஞ் செய்துக்கொண்

டிருப்பதைக்கண்டுவியசனங்கொண்டு பெருமூச்செறிந்து கூறுவார்சுவாமி, இராமச்சந்திரமூர்த்தியே, நாண்வீணேநெடுந்தூரம் போய்இலிங்கங்கொண்டுவந்தும் பிரயோசனப்படாமற் போயிற்றே என்று கண்ணீர்தாரைதாரையாய்ச்சொரியவிடுத்துத்தேவரீருக்கு இந்தமனதுண்டாகிய விதம்யாதோ அறியேன், அந்தோநான்இந்தஜன்மத்திலே இராகத்வேஷங்களுடனே கூடிக்கொண்டு ஊன்தின்னும்பொருட்டாய் இன்பதுன்பங்களையறியாத மர்க்கடபுத்திக்குச் சரியாய்நடந்து தேவர் இராட்சதாள்மணிதர்களாலேஇம்சைகளையடைந்து பிரயாசிக்கும்படியாய், எனதுதாய்தந்தையர்கள் என்னைப்பபந்து வளர்த்துப்பரிபாலனஞ்செய்து வந்தவர்களாகிலும் இவ்வகைத்துன்பத்துக்கிடமாய்க் கரைகாணுமல் அலைந்துதிரிந்த என்னை, தேவரீர்தடுத்தாட்கொண்டு நான்பட்ட சிரமத்தையெல்லாந்தீர்த்துவெற்றிபடையும்படிக் கிருபைசெய்து அதனாலே அநேகங்கீர்த்திகளைப்பெற்று சுத்தவீரதத்துவத்தோடும் விளங்கும் என்னைப்பெற்றபிள்ளையைப்போல், ஆதரித்துக்கொண்டுவந்திருக்க, இப்போது, அடியேன், என்னகுற்றஞ்செய்தேன் தேவரீராயினுஞ் சீதாபிராட்டியின்பொருட்டுஇவ்வளவு பிரயாசைபடைந்தும் சுக்ரீவர் விபீஷணர்முதலியவானரவீரர்களியாவரும் அவரவர்கள் சுகமாய்ப்பட்டாபிஷேகஞ்செய்துகொண்டுவாழவேண்டுமென்றும், தேவரீர் பின் ஏவற்பணிசெய்து நடந்துவருகிறார்கள்.

அடியேன், என்னகாரணத்தால் இதுவரையில் பணிசெய்துவந்தேன், மேலும், இவ்விடத்தில் சகலதேவர்களும், முனீஸ்வராளும் வானராதிகளுஞ் சுதநவீரர்களுமாகிய கோடானுகோடிபேர்களிருக்க அவர்களையெல்லாம்விடுத்து என்னைப்போய்ச்சிவலிங்கங்கொண்டுவரச்சொல்லி யான்கொண்டுவந்தபிறகு அதனைஉபயோகப்படுத்தாமல் என்னை அவமானப்படுத்தவோ நான் கைலாசவரைக்கும்போய்ச் சருகாகத் தேசத்தையுலர்த்தி நிஷ்டைசெய்து வரப்பிரசாதத்தினால் நான் இலிங்கங்கொண்டுவருவதற்குள்ளாக மணலைக்குவித்து என்ன அவசரமுகூர்த்தமாய்ப்பூசையை முடித்தீர்கள். ஆயினும் மகாலிங்கச்சொரூபத்தை முன்செய்த தபோபலத்தினால் பூசைசெய்யும்படியான நன்மையும்புண்ணியமும் பெற்றிருக்கவேண்டும், அவ்வாறுபுண்ணியங்கள் செய்யாதபேர்களுக்கு ஒருபோதுங்கிட்டாதென்று சுருதிவாக்கியஞ்சொல்லியிருப்பது என்னளவிலே பலித்ததென்று மிகவுந் துன்பத்தையடைந்தவராய் பின்னுஞ் சொல்லுவார்.

தேவரீர் இப்படி நினைத்து அடியேனைக்கைவிட்டபோதே இனி என்னகதி இருக்கின்றது, யான்செய்தபாபமே இப்படிவந்து சம்பவித்ததுபோலு மிருக்கின்றதென்றும்நீதேவரீருககு ஊழியஞ்செய்தவுடலைவைத்திருக்கப்படாதென்றும் உயிரைமாய்த்தாலொழிய இத்துன்பாதீராதென்றும் அநுமார் ஏங்கியேங்கி நெடுமூச்செறிந்து என்னமாய்முடிந்தது நம்முடையசுத்தவீரத் தன்மையென்று வாய்விட்டலறி, ஸ்ரீராமச்சந்திரனுடையபாதாரவிந்தந்திலே வீழ்ந்து அடித்துமோதி. என்பழியை ஏற்றுக்கொள்ளுமென்று கூக்குரலிட்டார். அப்போது ஸ்ரீராமசந்திரமூர்த்தியுங் கருணையோடு அநுமாரைக்கட்டியணைத்தெடுத்து அவர்மேற்பட்டிருக்கின்ற தூசுகளைத்துடைத்து முதுகைதடவிக்கொடுத்துச்சொல்லுவார் வாராய் அநுமானே, யான் என்னுடையநிலையையும் என்னையன்றி நின்னைப்போன்றவர்களிது நிலையையும்அறிவேன் அஃதெப்படியெனில், உலகின்கண் ஆன்மகோடிகளுடையவுயிர்களெல்லாம் ஒன்றேயல்லாமல் இரண்டிலையே அதுபோல் உள்ளதை உள்ளதாய் பார்க்கிறபோது நீவேறு நான்வேறாக மாட்டாது.

ஆதலால் பிறப்பதும் இறப்பதும் முன்செய்த கன்மாநுபவம்படியே நடக்கும், அவ்வினைக்கீடாய் நன்மைதீமைகளும் நரக சொர்க்கமும் கிடைக்கும், இவ்வளவுகாரியங்களும் நடத்தும் பொருட்டு சைதந்யமே எங்குந்தானாகவிருந்து நானாவிதரூபமானபேதா பேதங்களெல்லாம் மனக்கட்டேயன்றி வேறில்லை, இதல்லாமலும் நீயென்றும் நானென்றும் பேதமுண்டோ, நான்செய்ததல்லவோ நீசெய்தது நான்செய்ததல்லவோ, எங்குஞ் சுயம்பிரகாசமாயும் சுயஞ்சோதியாயும் ஆண்பெண் ணலியல்லாமலும் ஆதியந்தமில்லாமலும் விளங்கிக்கொண்டிருப்பதுவே ஆத்துமசொரூபமாக்கும் அப்படிக்கொத்த ஆத்துமசொரூபமே நீயாய்தானவனைப்பார்த்து விளங்காமல் அகங்காரமுறுவதுசரியல்ல, ஆதலால் தருமத்தை மனதிலே சிந்தனைசெய்து சாவகாசத்தையும் இந்திரியாதி நாட்டங்களையும் பொறுமையைசிந்தவிர்த்துச்செவ்வையாயோசித்துப்பார்த்தால்கலதேவர்களுந் துதிசெய்யப்பட்ட கர்த்தனுடைய பாதாரவிந்தத்திலே வந்தனை செய்துவணங்கித் தோத்திரஞ் செய்து உள்ளும்புறமாய் ஒன்றாய் நிறைந்து அத்வைசொரூபமாய் விளங்கப்பட்ட பிரமமே நிச்சய வஸ்துவாகவும் மற்றவை எல்லாம் பொய்யாகவும் ஒரு கற்பனையுண்டாகிறபோது, சயிதன்யத்தின் அருள்

யாதெனில், சூரியப்பிரகாசத்துக்குமுன்னே அந்தகாரம்தோன்றி யதுபோல ஆத்மாவுக்கு இல்லறத் துக்கந்தோன்றி இருக்கின்றது அவை யெதினாற்றோன்றியதென்றால், கருமத்தினாலே தன்னிடத்தில் தோன்றப்பட்டது, அன்றியுங் கருமமேன் வந்ததென்னில் காமக்குரோதங்களால் உண்டாயிற்று காமக்குரோதமேன் வந்ததெனில் அவமானத்தினால்வந்தது அவமானமெவ்வகைவந்தததென்னில் அவிவேகத்தினால்வந்தது அவிவேகமெத்தன்மையாய் வந்ததென்னில், அஞ்ஞானத்தினால், வந்தது, அஞ்ஞானமென்ன வகையால் வந்ததென்னில், தன்னைமறந்ததனாலே சம்பவித்ததானபடியால் ஞானமென்னும் அறிவினால் அஞ்ஞானத்தையும் அபிமானத்தையும் போக்கினால் அவனுடைய ராகாதிகள்கெட்டு, நீயேநானென்றும், நானேநீயென்றும் சொல்வது தெளியும் அப்படி தெளிந்துபார்ப்பையேயாகில், இந்தகால தேசவர்த்தமானமெல்லாம், ஒன்றாய்ச் சுயம்பிரகாசமாய் வேறுபாடில்லாமல்தோற்றப்படும் அதைவிட்டுவிட்டு நீரிந் துராங்காரத்தினால் உன்னை மறந்து இவ்வகைத்துன்பத்தை யடைகின்றது யாதுகாரணம்.

மேலும், யாவும்ஒரேமயமாய் விளங்குவதால் நீநானென்று இரண்டில்லை ஆதலால் இவையெல்லாம் பிராந்தியினாலேஉண்டாக்கப்பட்டது மனத்தில் வேற்றுமையேயன்றி வேறல்ல ஆதலால் யான் உனக்குவஞ்சகம்நினைத்து அவமானப்படுத்தவில்லைமேலும் ருஷீஸ்வராளால்சிவலிங்கப்பிரதிஷ்டைக்கு நியமித்தமுகூர்த்தம் தப்பிப்போகின்றதா யிருந்தமையாலும் நீவருவதற்குக்காலந்தாழ்த்தமையாலும் இவண் சீதையின் கையினாற்பிடித்து விளையாடியமிருத்திகையானது இலிங்கம்போலுந்தெய்வீகம்விளங்கியிருப்பதைக்கண்டயாவரும் அதனையேபூஜிக்கும்படியாய்ச்சொன்னதால் அவ்வாறே நானும் முகூர்த்தவேளை தப்பிப்போகின்றதாக விருக்குதென்று பூஜைபண்ணியதேயன்றி வேறில்லை அப்படியிருக்க நீ இதனையோசியாமல் வியாகுலப்படுவதும், கோபித்ததும், தகுதியல்ல ஆதலால். நீ மிகவும் பிரயாசை யெடுத்துக்கொண்டு கைலாசத்திலிருந்து கொணர்ந்த இலிங்கத்தை உன்னுடைய பெயராற் பிரதிஷ்டைசெய்து வணங்குவையேயாகில் உன்னைப் பற்றிய பாபங்களெல்லாம் நீங்கும்படியாய் சாம்பமூர்த்தியின் கிருபைபெற்று, பூலோகத்திலே சகலத்தாராலும் உன்னாற்பிரதி

ஷ்டைசெய்த அநுமலிங்கத்துக்கு முன்வணங்கிப்பின்புநம்மாற் பிரதிஷ்டைசெய்யப்பட்ட இராமலிங்கத்தை வணங்குவார்களாயின், அவர்களுக்குச் சகலபாபங்களும், சகலதோஷங்களும்பூதவேதாள பசாச கணங்களும்விலகி இஷ்டகாமியங்களைத் தருவதன்றியும், மோக்ஷாநந்தமும்பெற்று வாழ்கக் கடவர்களென்று கூறிப்பின்னும் கூறுவார்.

ஓ அநுமானே, உன்னாற் கொண்டுவரப்பட்ட அநுமலிங்கத்தையும், இராமலிங்கத்தையும், துதிசெய்யப்பட்ட புண்ணியசாலிகளுக்கு எக்யங்கள், யாகங்கள் அநேகதானதருமங்கள்தலதரிசனங்கள், இவையாவும் வேண்டுவதில்லை ஆதலால் இந்தக்கந்தமாதனத்திலேயான், சீதை இலட்சுமணன் முதலியபேர்களோடும், பூசைசெய்திருக்குஞ் சிவலிங்கத்திலே பரமேஸ்வரன் நிறைந்து விளங்குவதினாலும், உன்னாற்பிரதிஷ்டை செய்யப்பட்டசிவலிங்கத்திலே பரமேஸ்வரன் பிரதானமாய் விளங்கக்கடவதென்றும், ஸ்ரீராமச்சந்திரன் வரமளித்ததல்லாமலும் பின்னும் சொல்லுவார். வாரும் அநுமானே, உன்னுடைய துன்பங்களெல்லாந்தீரும்படியாய் நீ கைலாயத்திலிருந்து கொண்டு வந்தசிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து வணங்குவையேயாகில், அப்படி வணங்கிய அநுமேசனையும், நம்மாற் பூசிக்கப்பட்ட இராமேசனையும் ஆயிரம்யோசனைதூரத்திலிருந்து நினைக்கப்பட்ட பேர்களுக்கும் அநேகப்புண்ணியங்களுண்டாகி அஞ்ஞானமுதலியபாசங்களெல்லாம்அற்றுப்பரமபதத்தை யடைவார்களென்றுராமச்சந்திரன் திருவாய்மலர்ந்து அநுமானை இலிங்கப்பிரதிஷ்டைசெய்யும்படியாய்ச்சொல்ல, அப்போது மாருதி கூறுவார்.

சுவாமி, இராமச்சந்திரமூர்த்தியே, தேவரீர்பூஜித்தஇலிங்கத்தைப் பெயர்த்தெறிந்துவிட்டு அடியேன் கொண்டுவந்திருக்கும் மகாலிங்கத்தை உம்முடையகையினாற் பிரதிஷ்டைசெய்யவேண்டுமென்றுசொல்ல, அதைக்கேட்டஇராமச்சந்திரன் வாராய்அநுமானே! இப்போது என்னாற் பிரதிஷ்டை செய்திருக்கும் இலிங்கத்தை பேதிக்கப்படாது ஏனெனனில் அது பாதாளபரியந்தம் தட்டுத்தட்டாய் வேரூன்றி எங்கும் வியாபித் திருக்குமாதலால் உன்னால் அசைக்கப்படாது மேலும் முன்னொருகாலத்தில் இச்சிவலிங்கமானது அக்கினிமலையாக விருந்தம்பாது அதினுடைய அடியைக்கண்டாலும்மகம்மேருமுதலிய அஷ்டகுலபருவதங்களி

னது அடிமுடிகளைமாறிமாறி பிடுங்கிவைத்துக் கயிறுகத்திரித்தா லும், இவ்விலிங்கத்தைமாத்திரம் சற்றேனும் அசைக்கப்படாது மேலும் அப்படி உனக்கு அதிகபெலனிருக்கு மாயின் நாம்செய் தசிவலிங்க பிரதிஷ்டையை யெடுத்துப்போட்டுநீ கொண்டுவந்தி ருக்குஞ்சிவலிங்கத்தை பிரதிஷ்டைசெய்யென்று ஸ்ரீராமச்சந்திர ன்சொல்ல அதைக்கேட்ட வாயுகுமாரன் மகா பூரிப்போடும்அ வ்விலிங்கத்தைநோக்கி, இந்த மிருத்தியானமணலைப் பெயர்தெ றிவது எனக்கோர்பெரிய காரியமோவென்று தாவிக்குதித்து, அ ங்குள சகலதேவர்களும், ருஷீஸ்வராளும், மூநீஸ்வராளும், யா வருங்காணும்படியாய் குபீலெனப்பாய்ந்தே இராமலிங்கத்தை பிடித்தசைத்தார் அவ்வாறசைத்ததற்கு இலிங்கமானது அசை வில்லாததுகண்டுபின்னும் மிருத்திகையான இம்மணலுக்கு இவ் வளவு வலுவுளதோவென்று அனுமாரானவர் தனது பஞ்சபூத ங்களையுமடக்கிச்சுவாசு பந்தனஞ்செய்து மகாபலத்தோடும் பல தரமுய அசைத்துப்பார்த்தார். அப்படி அசைத்தும் இராமலிங் கமானது அணுவளவும் அசையாமலிருப்பதுகண்டு ஆங்காரங் கொண்டு வாலைமுறுக்கிப்பற்களை நெறநெறவென்று கடித்துவா லிற்கட்டியிருக்கும் மணியானது கணகணவென்று சத்தாடம்ப ரஞ்செய்யத் தலைக்குமேல் ஆகாசவெளியைப்பார்க்க வாலைநீட்டி க்கொண்டு மகாகருவத்தோடும், இராமலிங்கத்தைப் பிடித்தசை த்தார்.

அப்போதும் அசையாததுகண்டுமகிமையறியாதவராய்மலை யைப்போலும் மரத்தைப்போலுமெண்ணி இந்த மிருத்திகையா ன மண்ணிலிங்கத்துக்கு இவ்வளவு வலுவாவென்று விசுவசொ ரூபங்கொண்டவராய் இரண்டுகரங்களையும பூமியிலூன்றி வாலி னால் இராமலிங்கத்தைச்சுற்றி இறுக்கிமகா கோபாவேசத்தோ டும் பூரணவலுவைக்கொண்டு ஆகாசவீதியில் வாழும்சூரியசந்தி ராள் நக்ஷத்திரங்கண்முதலிய உம்பர்களியாவருந்திடுக்கிட்டுநடு ங்கும்படியாய் லாகுசெய்து கால் இரண்டையுமுயரத்தூக்கிவெ குபராக்ரமத்தோடும் விசைகொண்டு அசைக்கிறபோது, பூமியந் தரசொர்க்கமென்னு மூன்றுலோகங்களும் அஷ்டதிக்குகளும் அண்டசராசரங்களும் அஷ்டகுலபருவதங்களும் சப்தசாகரங் களும் எறும்புமுதலி யானையீறுரும் எண்பத்துநான்கு நூறுயி ரஞ்சீவகோடிகளும் அசைவுகொண்டு அல்லோகல்லோலமாய்ச் சுழன்றதேயன்றி ஸ்ரீராமச்சந்திரனாற்பூசித்த இலிங்கமானது

அசையாததுகண்டு ஒன்றும் தோற்றுதவராய்ப்பின்னும் வாலை முறுக்கியிறுக்கி விசைகொண்டு அசைக்கும்போது அனுமாருடைய வாலானது நீண்டுநைந்து இளகிப்பழுவென்று அறுந்துவிட்டது அப்படி அறுந்தவுடனே அவ்விராமலிங்கத்தின் வடபாரிசத்திலே கூக்குரலிட்டுத் தலைகுத்தாகக் கரணம்போட்டு விழுந்தார்

அவையெப்படி இருந்ததென்றால் முன்னொருகாலத்தில்வாயுபகவானுடைய பெலத்துக்குட்பட்ட ஆதிசேடன் மகாமேருவின்கொடுமுடியைப் பெயர்த்தெறிந்தானென்னுந் தன்மைக்கிணங்கதானுமோர் கொடுமுடியைப்போல அலறிக்கொண்டு விழுந்தமாத்திரத்தில் வாயினாலும் மூக்கினாலும் இரத்தங்கள் குபீர்குபீரென்றுபெருக எலும்புகளெல்லாம் நொறுக்கிக்கண்விழி பிதுங்கிவிழுந்த அதிர்ச்சியினால் மண்டையுடைந்து பூமியானது பெலத்துவாரம்போற் பள்ளப்பட்டுத் தண்ணீரூற்றுவரையிலும் பேதித்து அதிலூறிய சலமும் இரத்தமும் ஒன்றாய்ச்சேருடிச் சமுத்திரத்தில் பிரவாகமாய்ப்போய்ச்சேர, அப்போது அனுமாரானவர் தலைக்குப்புற்று நாக்கைநீட்டிக்கொண்டு மூர்ச்சையோடும்பூமியின்பேரில் அசைவற்றிருப்பதை தேவர்முதலிய ருஷிஸ்வராள் முநீஸ்வராள் வானராதிகளியாவருங்கண்டு ஸ்ரீராமச்சந்திரனுடைய அன்பையும் ஸ்ரீராமநாதனுடைய கிருபானந்தம் பெருக்கையுநினைத்து புகழ்ந்துகொண்டாடி நின்றவர்களாய் ராமலிங்கத்தின்பேரிற் பாதிவால்சுற்றியிருக்கப் பாதிவால் அறுப்புண்டதோடுங் கூப்பிடுதூரத்திற்போய்விழுந்து மூர்ச்சித்திருக்கும் அனுமாரைக்கண்டு நடுங்கி வெறுத்து யாவருஞ்சகிக்கமாட்டாதவர்களாய் துன்பக்களுட்டோய்ந்திருப்பதை இராமச்சந்திரன் கண்டுமிகவும்பதறிக் கண்ணீர்தாரைதாரையாய் விடுத்துக்கதறும்போது இலட்சுமணரானவர் வயிற்றிலும் வாயிலுமறைந்துக்கொண்டுபுலம்ப சீதாதேவியுங்கோவென்றலறிப் பூமியின்மேற்சாய்ந்து புரண்டுபுரண்டழுது ஐயோ பாழுந்தெய்வமே யென்று வாய்விட்டலறி தன்னுடைய இரண்டு கரங்களாலும் அனுமாருடைய அங்கத்தை இரத்தவெள்ளத்தி னின்றுந் தடவியெடுத்தாள்.

அவ்வாறு அம்மனவள் எடுத்துப் பார்க்கும்போது அனுமாரானவர்நைந்து குழைந்து சுருண்டிருப்பவைக்கண்டவானராதிமுதலியயாவரும்,ஐயையோவென்று அபயமிட்டுமுகத்திலறைந்துகோவென்ற ழுதார்கள் அதுகண்ட இராமமூர்த்தியும் அனுமா

ரைத்தோரோடே சேர்த்தனைத்துகொண்டு இக்கண்ராவியைப் பார்க்கவா இருந்தோமென்றும் மாருதியின் தலையைத்தூக்கி தன்துமடியின்பேரில் உட்காரவைத்தபோது அம்முடியானது நிற்கமாட்டாமற் சோர்ந்து சாய்வதைக்கண்ட சீதாதேவியானவள் அடித்துமோதிவிழுந்து எழுந்திருந்துதனது இருகரங்களாலும் அநுமாருடையதலையைத் தாங்கிக்கொள்ளராமச்சந்திரன் முதலியயாவரும் அநுமாருடையதேகத்திற்படிந்திருக்கும் தூசுகளையும், இரத்தங்களையும் துடைத்து, ஆ எங்கள் தெய்வமே என்றும எங்களையனே என்றும் கண்மணியே என்றும் துக்கித்துக்கூவி, அந்தோபம்பையாற்றங்கரையில் எங்களைநட்புக்கொண்ட நாள் முதல் சுக்ரீவன்முதலிய வானராதிகளை யெல்லாஞ் சேர்ப்பித்துவைத்து உனதுதாயாகிய அஞ்சனாதேவியையுந்தாதையாகியவாயுபகவானையுமறந்து எங்களைச்சதமென்றெண்ணியிருந்து எங்களெண்ணப்படி நடந்துவந்தஉன்னை எப்போதுகாண்போம் ஐயோ உனது வாய்திறந்தோர்வார்த்தை பேசாயோ கண்ணைத்திறந்துபாராயோ எங்கள் பொருட்டாய்நைந்து மெலிந்தனையே மகேந்திரகிரியினின்று மெழுந்த நினது கால்களும் இலங்கினியைச் சம்மாரஞ்செய்துதிருவாழியைக்கொண்டுபோய் கொடுத்தகரங்களும் இலங்கையைச்சுட்டு சாம்பலாக்கியவாலும் அசோகவனத்தில் பஞ்சசேனாபதிகள் முதலிய இராக்ஷதவீரர்களை வெற்றிக்கொண்ட புஜபலபராக்ரமங்களும் எங்கேயடக்கினாய் அப்பனே எனதாருயிர்த் துணையாகிய நீ மூர்ச்சித்திருப்பதைப்பார்த்து சகிக்கவும் காலமாயிற்றே என்று பின்னுங் கூறுவார்.

ஆ எனதுசெல்வமே விபீஷணனை அடைக்கலங்கொள்ளும்படியாய் அநேக நீதிவாக்கியங்களை யெடுத்தோதிய விவேகசாலியாகிய உனக்கு எவ்வளவுந் தோற்றாமல் இப்படி அவதிக்குள்ளாய் அயர்ந்தனையேயென்றும் நான் இராவணனைச் சங்கரித்து வெற்றிமாலைபூண்டது நின்வலுவாலன்றி வேறில்லையே யென்றும் ஐயோ என்னிருகண்மணிபோன்ற உன்னை இவ்விடத்திற் பறிகொடுத்துவிட்டு அயோத்தியாபுரிக்குப்போய் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு அரசாட்சிசெய்துவாழவும் மனமெழுமோ அநுமானே! எங்களை அயோத்தியாபுரியிற் றம்பிமார் தாயாருடனே கொண்டுபோய் சேர்த்துப்பார்க்காமல் இப்படி நாங்கள் பரதவிக்கப்பார்க்கின்றனையேயென்றும் ராமச்சந்திரன் புலம்பிக்கண்ணீ

ராறுபோற் பெருகவும் அதுகண்டசீதாதேவி முதலாகியபேர்க ளும். அழுதுபுலம்புங் கண்ணீரும், அநுமார்தேகத்தில் வீழ்ந்து தேகத்தின் மயிர்க்காய்கடோறும் புகுந்து அதனால் அவர்அடை ந்த தாபசோபங்கள் தீர்ந்து உடம்பில் வலுவுபொருந்தி அசை உண்டாகிக்கண்களை விழித்துப்பார்த்து ராமச்சந்திரன், சீதா தேவி, இலட்சுமணப்பெருமாள் முதலானபேர்களினுடையகண் ணீரால் ஸ்நானம்பண்ணப்பட்டதினால் அக்கந்தமாதனத்தில்விள ங்கும் இராமநாதனைத்தொட்டுப் பிடுங்கி எறியவேண்டு மென்று நினைத்து அபசாரஞ்செய்த பாபமும் விமோசனமாகி அஞ்ஞான ங்களெல்லாம் அகன்று ஞானோதயமுண்டாகி எங்குஞ் சச்சிதா னந்தமயமாய்த் தோன்றப்பட்டதினாலே ராமச்சந்திர மூர்த்தி யையும், சீதாபிராட்டியாரையும் தோத்திரங்கள்செய்து வணங் கிச் சகஸ்ரநாமங்களையும், தசாவதாரங்களை ராமச்சந்திரனுடை யகருணாநிதிப் பிரவாகங்களையும் சொல்லித்துதித்து அடியேன் செய்த அபசாரங்களைப் பொறுத்து ரட்சிக்கவேண்டியதென்று ராமச்சந்திரனது பாதகமலங்களை வணங்கி நமஸ்கரித்து எழுந் திருந்து கைகட்டி வாய்புதைத்து நின்றார் அப்படி நின்றமாருதி யைச் சகலத்ராளும்கண்டு சந்தோஷித்துக் கொண்டாடினார்கள்.

அதுகாலையில் ராமச்சந்திரனும் அநுமானைப்பார்த்துக்கூறு வார். வாரும் அநுமானே! நாம் மகாருஷிகள் வாய்மையின் வண் ணம் சீதைகரத்தினால் பிடித்துப்பாணித்த சிவலிங்கத்தைப் பூஜி த்து இருப்பதின்மகிமையறியாது இறுமாப்புக்கொண்டுகோபித் துக்கொள்ளலாமோ, அதன்றியும் நான் பூஜித்த இராமலிங்கத் தை முப்பதுமுக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம்ருஷி களும் கருடகாந்தர்வ சித்தவித்தியாதர ருரகராகாயவாசிகள் போகபூமியர்முதலிய சிவகணங்களும்பிரம்மா விஷ்ணுருத்திரன் முதலாகியபேர்களும் ஒன்றாய்க்கூடி பேதிக்கவேண்டு மென்றா லும், பேதிக்கக்கூடுமோ அப்படிஇருக்க நீசிறுபிள்ளை புத்தியாய் வீணே இப்படிக்கொத்ததுர்ப்புத்தியைநினைந்து துயருற்றனையே ஆயினும் உனக்கு இன்னம் கூறுகின்றோம்.

யாதெனில் இப்போது என்னால் இறக்கப்பட்ட இலங்கை வேந்தனானவன் முன்னொருகாலத்தில் என்னையனுகிய சாம்பவமூ ர்த்தியானவர் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீகைலாசத்தை பெயர்த்

தெடுக்கவேண்டுமென் றெண்ணங்கொண்டவனும் அவன்பட்ட பாடுகளை யெல்லாம் நீ கேட்டறிந் திலையோ, இஃதல்லாமலும் அந்தப்பரமேஸ்வரன் தேவர்களை கெருவபங்கஞ் செய்யவேண்டி ஓர் துரும்பைஎடுத்து முன்னெறிந்து பேதிக்கச்சொன்னபோது சகலதேவரும் ஒருங்கூடி எடுத்தும், உனது றந்தையாகிய வாயு பகவான் மகாவலுவுகொண்டு சூறுவளியாய்த் தன்னுடைபூரண வலுவோடு சுழன்றுசுழன் றடித்தும், பேதிக்கப்படாதவையையா வருங்கண்டு மயங்கித்தயங்கி நின்றனரேயன்றி அத்துரும்பை அசைக்கக்கூடாதவைக்கு அவனசையாமல் அணுவசையாதென் றும், ஓர்வதந்தி தேவர்களால் உண்டாகியாவரும் வணங்கித்தோ த்திரஞ்செய்ததை நீகேட்டதில்லையோ மேலும் இச்சதுர்புவன மும், அண்டபிண்டசராசரமும், விளங்காநின்ற எறும்புக்கடை யானைமுதல் எண்பத்துநான்கு நூறுயிரஞ் ஜீவாத்மாக்களிலும் நிறைந்து எள்ளுக்குள் எண்ணெய்போல எங்கும் வியாபகமாய் உள்ளும் புறமும் ஒன்றாய் ஆதிமத்யானந்த ரகிதமாய் திரிநேத் திரதாரியாய் விளங்காநின்ற கர்த்தனுடைய மகிமைகள் உனக்கு த்தெரியாத துண்டோ அந்தோ நவவியாகரண பண்டிதனாகிய உனக்குநாம்சொல்லவேண்டிய தென்னவிருக்கின்றது, மேலும் ஸ்ரீகைலாசபதியாகியசிவபெருமான் எவ்வண்ணமிருப்பாரெனில் காலனுக்காலனாகவும் கருதித்துதிப்பவர்களுக் கெளியவனாகவும் இருப்பவனை அறியாமற்செய்த அபசாரத்துக்குப் பொறுதவரா ய்உனக்கு இத்தன்மையாகிய துன்பங்களைச்செய்தார், ஆயினும் நீசெய்த அபசாரத்தை அக்கடவுள் எப்போதும், அவர்திருவு ளத்தில்வையார் ஏனெனில், அடியர்களானோர் தீங்குசெய்தால் அன்னவரைத்தண்டித்தும், பாங்குசெய்தவர்களைக் கடாக்ஷித்து வரும் பக்குவத்தையுடையவராதலால் நீசெய்தபிழையைப் பொ றுத்துக் கருணாகடாக்ஷஞ் செய்வரேயன்றி, கைவிடமாட்டார்.

ஆதலால், நீவிழுந்த அதிர்ச்சியினாலுண்டாகிய பிலத்வார மானது பூலோகத்திலே உன்பெயரால் உண்டாக்கப்பட்டதீர்த் தமெனச்சிந்தித்து, அதில்தீர்த்தமாடும்பேர்களுடையபாபங்களை யெல்லாங்கெடுத்துப் புண்ணியங்களைக்கொடுத்துக்கொண்டிருக் கும், அஃதெப்படியெனில், அவ்விடத்திலே ஊறிஇருக்குஞ்ஜல மானது ஆதிபரமேஸ்வரனுடையசடாடவியில்விளங்கும்கௌரி கங்காபவானி கெதமியென்று சொல்லப்பட்ட நாமதேயங்களை

யுடையகங்கையானவள் பாதாளவாஹினியாய்ப் புறப்பட்டிருப்ப தனாலே அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்பவர்களுக்கெல்லாம், ஆயிரம் அஸ்வமேதயாகஞ்செய்தபலன் கிடைக்கும், இதல்லாமலும் கங்கை, யமுனை, சரஸ்வதியென்னு மிம்மூன்றுநதியினும் தீர்த்தமாடினால், எவ்வளவுபலன்கொடுக்குமோ, அவ்வளவுபலனைக்கொடுக்கும், அதன்றியும் நீ விழுந்தவிடத்திற் பெருகியிருக்குந்தீர்த்தம் அநுமந்தீர்த்தமென்று உன்பேரால் இதுமுதல் பூலோகமுள்ளளவும் விளங்கிக்கொண்டிருக்கும் அதல்லாமலும் அந்த தீர்த்தக்கரையில் பிதுர்க்களைக்குறித்து திலதர்ப்பண சிரார்த்த பிண்டங்கள் யாரொருவர் செய்கின்றார்களோ, அவர்களுடைய செயலைநம்மால் அளவிட்டுச்சொல்லப்படாது மேலும் உன்னாலுண்டாயிருக்கும் அநுமகுண்டத்திலே சிரார்த்தபிண்டங்கள் செய்யாமல்மற்றவிடங்களிற் செய்வராயின் அன்னவர்களை அவர்களுடைய பிதுர்க்கள்கோபித்து விரும்பமாட்டார்கள்

ஆதலால்அவ்வளவு மகிமையுடையதாய் விளங்கு மத்தீர்த்தத்திலே முழுகாதபேர்களும், சிரார்த்தஞ் செய்யாதபேர்களும் மகாபாவிகளென்று சொல்லப்படுவார்கள். இதல்லாமலும் அத்தீர்த்தத்திற் றண்ணீர்முகந்து திலதர்ப்பணஞ்செய்தாள், அன்னவரைப்பயந்தமாதாபிதாக்களுக்கு நெய்யினால்தர்ப்பனம் செய்ததற்கு சமானமாய் ஒப்புக்கொண்டு சந்தோஷத்தோடும் வாழ்த்துவார்கள். இஃதன்றியும், உன்னாற் பிரதிஷ்டைசெய்துபூஜிக்கப்பட்ட சிவலிங்கமும், அவ்வாறேமகிமையோடும், விளங்கிக்கொண்டிருக்கும். அதினும்நம்மாற் பிரதிஷ்டைசெய்யப்பட்ட இராமலிங்கத்துக்கு நீசெய்யப்போகின்ற மகாலிங்கமானது முதன்மையாய் விளங்கும் அப்படிவிளங்குவதன்றியும், அந்த மகாலிங்கத்துக்கு அபிஷேகம் நைவேதனமுதலியசோடசவுபசாரங்களும் முன்னவாய்நடந்து, பின் இந்தக்கந்த மாதனத்திலே நாம் பிரதிஷ்டைசெய்யுமுன்னம், கவுதமராலும், அகஸ்தியராலும், பூஜிக்கப்பட்டுக்கொண்டிருக்கிற அத்ர பூர்வ மகாதேவரென்னும் இரண்டு லிங்கத்திற்கும் அபிஷேகஆராதனைமுதலியவைநடந்து அதன்பிறகு நாம்பூஜிக்கப்பட்டராமநாதனுக்கும்பூசைநடக்கும் படியாய் வரமளித்தோமாதலால், நீகொண்டுவந்திருக்கும் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து பூஜித்து வணங்கென்று மகாசாந்தகுண சாலியாகிய இராமசந்திரமூர்த்தியார் சொல்ல அதைக்கே

வர் மனமகிழ்ச்சியடைந்து ஸ்ரீராமச் சந்திரமூர்த்தியாற் பிரதிஷ்டைசெய்த இராமலிங்கத்துக்குவடபாலாகத்தான்கொண்டுவந்த சிவலிங்கத்தில் ஒன்றைப் பிரதிஷ்டைசெய்து லோகோபகாரமாய்ப்பூஜித்து, மற்றொரு லிங்கத்தை தன்னுடைய ஆத்மாநுபவமாய்ப்பூஜித்து வணங்கி தோத்திரஞ்செய்தா ராதலால், ஓ நைமிசாரண்யர்களே முன்னர் அநுமானுடையவாலினால் மூன்றுசுற்றுகச்சுற்றப்பட்டு இழுத்தகாலையில், அந்த இராமலிங்கத்துக்கு மூன்று இரேகைபோல் வடுத்தோன்றி இருப்பதனால் யாவருங் கண்டறியலாமென்று சூதமாமுனிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் மெத்தவும் பிரம்மானந்தங்கொண்டு சுவாமி தேவரீர் இதுவரையிற் சொல்லிவந்த புண்ணியகதைகளிற்இவை மிகவும் மகிமைதங்கி யிருப்பதைநோக்கின் தேவர்களுக்கு இம்சையைத்தந்தும் ஸ்ரீராமச்சந்திர ர்த்தியினுடைய மனதையும் வருந்தச்செய்ததால் அச்சண்டாளனாகிய ராவணனைக்கொன்ற தோஷம், ஸ்ரீராமச்சந்திரனுக்கு நீரவேண்டியதாய் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து பூஜித்தாரென்னுஞ் சொல்லியதால் அப்படி அவனை வதஞ்செய்த நிமித்தம் ஸ்ரீராமச்சந்திரனுக்கு பிரம்மஹத்திவருவதற்கு அவன் பிரம்மகுலனாக விருந்தாலன்றோ சம்பவிக்கும். ஆதலால் அவ்வரக்கனுடைய வரலாற்றையும், அவ்வரசனுடையவரலாற்றையும், தசரதநயனாகிய இராமமூர்த்திக்கு பிரம்மஹத்தி அணுகிய விதத்தையுந்திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்று கேட்கச் சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

## இராமச்சந்திரன் அர்ச்சனைசெய்த சரித்திரம்.

முற்றிற்று.

சஎ-வது

# பிரம்மஹத்தி தீர்த்தச் சரித்திரம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே சத்தியலோகத்தின்கண் வெண்டாமரை யாசனத்தில் வீற்றிருக்கும் பிரம்மதேவனுடைய புத்திரானபுலத்திய மஹாருஷியிடத்திலே மகாபுண்யகுணவேதநீத ஒழுக்கத்தோடும் ஓர்புத்திரன்தோன்றி விச்சிரவாவென்னும் பெயர்பூண்டு சொர்க்கமத்ய பாதாளமென்னுந்திரிலோகங்களும் மதிப்பதற்குரிய பெருந்தவத்தைச்செய்து கொண்டிருக்கையில் பாதாளலோகத்தில் வாழும் இராட்சதர்களில் மகாபலசாலியாயும் அதிவீரபராக்ரமனுகியுமிருக்கும், சுமாலியென்பவன்பூலோகமுழுவதும் சஞ்சாரஞ்செய்துகொண்டுதிரிபவன்தனக்குள்தானே நமதுகுலத்தை அபிவிர்த்தியாகச்செய்ய வேண்டுமென்பதற்கு மிகவும் ரூபலாவண்யமுள்ள தனதுகுமாரத்தின்வயிற்றிற்பிள்ளைகள் பிறக்கவேண்டி அவளுக்கிசைந்தமணாளனுகவும் பலசாலியாகவுந் தபோபலன்களை யுடையவனுகவும், இருப்பவனைத் தேடிப்போகவேண்டுமென்று எண்ணங்கொண்டவனுய் தன்புத்திரியை உள்ளங்கையிலேந்திக்கொண்டு பூமி மந்திரசுவர்க்கமெங்குந் தன்மகளுக்கேற்ற புருஷன் கிட்டாமையால் கார்கொண்டமேகமானது மின்னலோடுங்கூடித் திரிந்தாலெப்படியோ அப்படியே திரிகிறபோது ஓர்நாள் ஆகாசமார்க்கமாய் விமானத்தை நடத்திக்கொண்டு வருகிறபோது அக்குபேரனுடைய ரூபலாவண்ய சவுந்தரிபத்தையும் விமானத்தையுங்கண்ட சுமாலி என்பவன் ஆச்சரியமடைந்து, இவ்வகைப்பட்ட புருஷாளுமிருக்கின்றார்களோவென்று யோசித்தவனுயும்இவனைப்போல் நமதுகுமாரத்தியின் வயிற்றிற் பிள்ளைகள்பிறந்து அப்பிள்ளைகளினுல் இவ்விதமானமும் பரிபட்டு இவனும் புறமுதுகிடும் படியான வலுவும் வரப்பிரசாதங்களும் பெற்ற பிள்ளைகளாக இருக்கவேண்டுமென்றும், எண்ணங்கொண்டவனுய்த் தனதுபுத்திரியைப்பார்த்துச் சொல்லுவான்.

வாராய் என்குலக்கொழுந்தாகிய கைகேசி யென்னுங்கண்மணியேஉன்னுடையரூபலாவண்ய சவுந்தரியங்களைமேனகை அரம்பை, ஊர்வசி, திலோத்தமைமுதலிய பேர்கள்கண்டால்நாணித்

தலைகுனிந்தோடவு மிருப்பதோடும், மகாலட்சுமியும் சந்தோஷ ப்படும்படியாகவும், இனது பூரணசந்திரோதயம் போன்றமுகார விந்தத்தைக்கண்டு மணிவண்ண நிறத்தையுடைய வண்டுகளான வை ஓடிவந்து தாமரை மலராக்குமென்று மதுக்களை யருந்தும் படி கிதம்பாடி மருண்டோடிப்போகவும், இருப்பதனாலேஉன்னை யாவர்கள் கண்டபோதிலும் மோகிப்பார்கள். அப்படி மோகிப் பவர்களுக்கெல்லாம் கொடுப்பது அழகன்றேயென இருப்பது யாதுகாரணமெனில் உலகின்கண் ஓங்கும், உயர்வாகிய இரத்தி னத்தை அதற்கேற்ற பசும்பொன்னோடுஞ் சேர்த்தணைத்தால்பிர காசத்தைகொடுக்கும் அப்படியல்லாமல் மாற்றுக்குறைந்தபொ ன்னிற் சேர்த்தால் அழகுபடாததால், யான் உன்னை உனதுசவுந் திரியத்துக்குத் தக்க புருஷனைக்கண்டு அவனிடஞ்சேர்த்துவை க்கவேண்டுமென்று இதுவரையிலும்வைத்திருந்தேன். அதுவும ல்லாமல்லோகத்திலே பெண்களைப்பெற்றவர்களுக்குமனமானது எப்படி இருக்குமென்றால், பெண்ணுக்குக்கிடைக்கும் புருஷன் கல்வித்திறனும் புஜபல பராக்ரமத்தினும், ஐசுவரியத்தினும், ரூப த்தினும், மிகுந்தவனாக விருந்து அப்புருஷனைக் கூடிவாழும் விப வத்தைக்காண்பதே பெற்றவர்களுக்குப் பெருமையாம். அப்படி வாய்க்காமல், நிஷேதமானவனைக் கூடிவாழ்ந்தால், துன்பமேசம் பவிக்கும் இஃதல்லாமலும், தின்னப்பட்டவனுக்கு ஒரு வஸ்து வைக்கொடுக்க வேண்டுமேயன்றித் தின்னமல் எறியப்பட்டவனு க்குக் கொடுக்கப்படாது.

ஆதலால் உனக்கேற்ற புருஷனை என் கண்ணினாற் காணு மளவும் உன்னைவைத்துப் பாதுகாத்துக்கொண்டிருக்கின்றேன், மேலும், உன்னைக் கண்டபேர்களுக்கு தேவாமிர்தத்தைக் கண் டதுபோல் இச்சையிருந்தும், அன்னவர் இச்சையற்றவர் போ லிருப்பது யாதுகாரணமெனில், நான்உன்னைக்காத்தி லேந்திக் கொண்டேதிரிவதால்யாவருங்கண்டு அச்சமுறுகின்றார்கள். ஆன தால் யான் உனக்கோர் உண்மைசொல்லுகின்றேன் அதுயாதெ னில், பிரமன் பேரனாகிய விச்சிரவாவென்று சொல்லத்தக்கவன் மகா சவுந்தரியத்தையும் புஜபல பராக்ரமத்தையும் உடையவ னாய், அதோ அந்தவனத்திலே தபஞ்செய்துகொண்டு இருப்ப தால் நீ அவனிடத்திற்போய் அவனை நட்புகொண்டுசேர்ந்திருப் பாயாகில், மகா பலசாலிகளாகிய பிள்ளைகளைப்பெறுவாய், அப்

பிள்ளைகளாலே அண்டபகிரண்டங்களையெல்லாம் ஓர்குடையின் கீழாண்டு களிப்பெய்தலாமென்றுசொல்ல, அதைக்கேட்டகுமாரத்தியானவள்மிகவுஞ்சந்தோஷத்துடனே விச்சிரவாவின்பேறிற்றனியாகக் காதலைக்கொண்டு அன்று மாலைப்போதில் பிரயாணப்பட்டு ஓம குண்டத்தக்கினி முன்பாக சூரியபிம்பம்போற் பிரகாசித்துக்கொண்டு நிஷ்டைசெய்திருக்கும் விச்சிரவாமாமுனிபின்முன்பாக வந்துநின்றாள், அஃதெப்படி யிருந்ததெனில், ஆகாசத்தினிடையில் விளங்கப்பட்டமின்போன்ற தேகத்தையுடைய கைகேசி யானவள், மகா சவுந்தரியமுற்றவளாகவிருந்தும்நாணமுற்றவளாக விருந்தும்நாணமுற்றவளாய் நின்றதைக்கண்டவிச்சிரவா ஊழ்வினைப்பகுதியால் அன்னவளை ஏறிட்டுப்பார்க்கும் போது, அதையுணர்ந்த கைகேசியானவள் புன்னகையோடுந் தனதுகாற்பெருவிரலினாலே பூமியைக்கீறிக்கொண்டே நின்றாள். அவ்வகை நிற்பவளைக்கண்ட விச்சிரவாமுனிவர் கூறுவார்.

வாராய் அதிரூபலாவண்யமுள்ள சவுந்தரியே, நீயார் உன் தகப்பன்பெயர்யாது நீ இங்குதனித்து வருவதற்குக் காரணமென்ன, சொல்லுவாயென்றுகேட்க, அப்போது கைகேசியும் அவருடையபாதகமலங்களிற்பணிந்து நமஸ்கரித்தெழுந்து, கைகளைக்கட்டிக்கொண்டு சுவாமி! அடியாள்பாதாள லோகத்திலேவாழப்பட்ட சுமாலியினுடையமகள், என்பெயர் கைகேசிஎன்றுசொல்லுவார். ஆதலால், யான் எனதுதந்தையினது உத்திரவின்படி புத்திரபாக்கியம் வேண்டித் தேவரீரை நாடிவந்தபடியால் தேவரீர்கிருபைசெய்து ஆட்கொள்ள வேண்டுமென்றுசொல்ல அதைக்கேட்ட விச்சிரவாமாமுனிவர் ஓர் மாத்திரைப்போதுவரையிற் சமாதியிலிருந்து பூர்வகன்மானுபவ லோகாரூடப் பிரவிர்த்திகளையறிந்துகொண்டவராய், கைகேசியைப்பார்த்து ஓபெண்பாவாய் நீ இப்போது சொன்னகாரியங்கள் சரியே ஆதலால், நீயும் நல்ல குழந்தைகளைப் பெற்றுச் சந்தோஷத்தை யடையவேண்டி யிருப்பதால், இப்போது, நீ வந்தவேளை சரியாகவில்லை ஏனெனில் சூரியப்பிரகாசமடங்கி அச்சூரியன்மேற்றிசையில் மறைந்தாலும் நாம்நிஷ்டைதெளிந்து விழித்துப்பார்த்தாலும், அக்கினிஹோத்திரந்தொடங்கி முடிக்கும்வேளையாதலாலும், அவ்வேளையிலுன்னைக் கண்டதனாலும் இப்படி நான்குவிதமாய் உன்வயிற்றிற்பிள்ளைகள் பிறப்பார்கள். அப்படிஜனிப்பதிலும், அவர்கள் இராட்ச

தாளாய் கயவாளிகள சேர்க்கையாய் துர்ப்புத்தியுடையவர்களாய் பிறப்பார்கள். அது எதினாலெனில் லோகத்திலே எந்தவுயிர்களுக்கும் கருத்தரிக்கின்ற நேரப்பலனும் இடம்வலஞ்சேர்ந்தபலனுங் கண்டுகொண்டு களித்தபலன் எப்படியோ அப்படியே பிள்ளைகள் பிறக்குமாதலால் இப்போது நீ நம்மிடத்திற்கு வந்தநேரத்தின் பலன் மாலைப்பொழுதானபடியினாலே இராட்சதாளாகப் பிறந்தும் நாம் உண்மையான ஞானநிஷ்டையை விடுத்து மாயப் பிரபஞ்சத்தை நோக்கி விழித்தபடியினாலே அவர்கள் மாயையடைந்து துர்நடத்தைக்குரியவர்களாகவிருப்பார்.

அதன்றியும், நாம் அக்கினிஹோத்திரந்தொடங்கி முடிக்கும் வேளையாதலால் வேதசாஸ்திர ஞானபயிர்ச்சி யுடையவர்களாகவும் இருப்பார்கள், பிறகு பெண்பிள்ளையாகிய உன்னைக் கண்ட பலன் அவர்களெல்லோரும் பெண்ணினால் ஜீரணிக்கத் தக்கவர்களாகவும் உன்வயிற்றிற் பிறப்பார்களென்று சொல்ல, அதைக்கேட்ட கைகேசியானவள் கூறுவாள் சுவாமி அடியாள் தேவரீருக்கு பெறுகிறபிள்ளைகள், இராக்ஷதர்களாகவுந் துன்மார்க்கர்களாகவுமிருந்து, அழிந்துபோவது நலமல்லவே, அவ்வாறில்லாமல், சற்புத்திரராகவும், தேவர்முதலியயாவரும் வணங்கத்தக்கவர்களாகவும், புசபலபராக்ரமசாலிகளாகவும் பிறக்கும்படியாய்க் கட்டளையிடவேண்டுமென்று வணங்க, அதற்கு விச்சிரவா, ஓ பெண்கள் நாயகமே, யாம் என்செய்வோம், நீ என்னிடம் நோக்கிவந்த வேளையினதுபலன் அவ்வண்ணமிருப்பதால், நீ பெறுகிற பிள்ளைகளில் இளையபிள்ளை நல்ல குணசாலியாகவும், வேதநீத ஒழுக்கமுடையவனாகவும், நம்போல், பகவத்தியானமுடையவனாகவும், குபேரசம்பத்தை யுடையவனாகவும், சிரஞ்சீவியாகவும் வாழ்ந்திருப்பான் மற்ற பிள்ளைகளெல்லாம், நாம் முன்சொன்னதெப்படியோ அப்படியே யிருக்குமென்று விச்சிரவா சொல்ல, அவ்வாய்மையைக் கேட்டவுடனே கைகேசியுஞ் சந்தோஷப் பட்டவளாய், அம்முனிவரிடத்திற்சேர்ந்து, பணிவிடைசெய்து மகிழ்வுற்றிருந்தாள்.

அப்படி யிருக்கின்றநாளையில் விச்சிரவாமுனிவ ரருளியவாறு போல், நான்கு பிள்ளைகளைபபெற்றும், அப்பிள்ளைகள் வளர்ந்து சகலகலையிலும் வல்லவர்களாய்த் தேர்ந்து, தவங்கள் செய்து, அநேக வரப்பிரசாதங்களைப்பெற்று. இலங்கையிலிருந்து திக்குவிஜயஞ்செய்து, குபேரனைச்செயம்பண்ணி, புட்பகவிமானமுங்கைக் கொண்டு, சகலதேவர்களையுந் தமது கைவ

சப்படுத்திக் கொண்டு. எங்குந்தானாய் வியாபித்து ஒப்பொருவ னில்லாமலிருக்கின்றபோது முனிவர் சொற்படி இவர்கள் பெண் ணுள் அழிய வேண்டியகாரணார்த்தமிருப்பதால், அப்பிள்ளைக ளில் இராவணனானவன், ஸ்ரீராமச்சந்திரன் தேவியாகிய சீதா பிராட்டியைச் சிறைசெய்த நிமித்தம் ஸ்ரீராமமூர்த்தியானவர் தமது தம்பியோடும் வானரப் படைகளைச் சேர்த்துக் கொண்டு போய், எதிர்யுத்தஞ்செய்து, அவனது புத்ரமித்ர களத்திராதிக ளோடுங் கொன்றபடியினாலும் அந்தராவணன் பிரம்மாவின் பேர னாகிய விச்சிரவாவுக்குப் பிள்ளையாதலாலும் அவனைக்கொன்ற தோஷம், ஸ்ரீராமச்சந்திரனுக்கு பிரம்மஹத்தி பிடித்துக்கொண்டு அது நிவாரணமாகும்படியாய், மகாரிஷிகள் வாக்கியப்படியே கந்தமாதனத்திலே சீதைகையினாற் பாணிக்கப்பட்ட மிருத்தி கையான மகாலிங்கத்திலே, ராமச்சந்திரன் பூஜித்துவணங்கின மையால், அவ்விலிங்கத்தில் ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவன் பிரசன்னமாய் தரிசனங் கொடுத்து, இராமமூர்த்தியைப்பற்றி யிருந்த பிரம்மஹத்தி தோஷத்தை நீங்கும்படியாகச் செய்ய, அதுபோல் பிரம்மஹத்தியானது தம்மைவிட்டு நீங்கி யோடுவ தைக்கண்ட ராமமூர்த்தியானவர், இதை யாம் விட்டுவிட்டால், பூலோகத்திற் கண்ட பேர்களை எல்லாம் பிடித்து, வாதிக்கு மெனக்கருதி காளவயிரவனை உபசரனைசெய்து வருவித்து அவ் விடத்தில் தனது கோதண்டத்தினால் பாதாளகெவியாய் ஓர் பிலத்வார முண்டுபண்ணி அந்தப் பிலத்வாரத்திலே தன்னைப் பற்றிய இராவணனுடைய பிரம்மஹத்தியை காளவயிரவனாற் பிடித்தடக்கும்படிசெய்து அப்பிலத்வாரத்தைமூடி அதற்குக் காவலாக விருக்கும்படியாய் காளவயிரவனைத்தானே பிரதிஷ்டை செய்து, அவ்விடத்தில் ஓர் தீர்த்தம் உண்டுபண்ணி, அத்தீர்த் தத்தில் தாம் ஸ்நானஞ்செய்து, அத்தீர்த்தத்திற்கு பிரம்மஹத்தி விமோசனமென்று நாமகரணமுங்கொடுத்து, அநேக வரப்பிர சாதங்களுங் கட்டளையிட்டு, ராமநாதனுக்கு வடபாரிசத்திலே காளவயிரவனும், பிரம்மஹத்தி விமோசன தீர்த்தமும், அநேக தேஜசோடும் விளங்கிக்கொண்டிருக்கும்படி செய்தவராய், ராம நாதனுக்கு தட்சிணபாரிசத்திலே பருவதராஜ குமாரியான மலைவளர்காதலியையும், ஆகமவிதிப்படி பிரதிஷ்டை செய்து, சந்திர சூரியாள், அக்கினிதேவன் முதலாகிய பேர்களையும் இந்திராதி தேவர்கள், சப்தகன்னிகள், சப்த மாதர்கள் அஷ்ட லட்சுமிகள் சரஸ்வதி கங்கை முதலிய பேர்களையும் விநாயகர், குமாரக்கடவுள், வீரபத்திரர், காளிகாதேவி முதலிய அஷ்ட

துர்க்கைகள், நவவீரர்கள், சிவகணங்கள் விஷ்ணுகணங்கள், பரமபாகவதாள், பெரியோர்கள், ருஷீஸ்வராள் முதலாகியபேர்களையெல்லாம், அக்கந்தமாதனச்சார்பில் வாசஞ்செய்துகொண்டு ஸ்ரீ ராமநாதனைச் சூழ்ந்திருக்கும்படியாய் இராமச்சந்திர மூர்த்தியானவர் வாக்களித்துப்பின்னும், இராமநாதனுக்கு ஆலயமும், ஆடையாபரணங்களும், பூசைக்காகவேண்டிய ஸ்திதிமதிகளும் உதவிசெய்தும், அநேகபூமிகளும் நவநிதிகளுங்கொடுத்துநித்யப்படி பூஜித்துவரும்படியாய் அநேகம்பிராம்மணரை வரவழைத்து கந்தமாதனத்திலே பட்டணமுண்டாகித் தெய்வலோகம்போல் விளங்கப்படுவதனாலே, அதற்குதெய்வநகரமென்றும் பெயர்கொடுத்து அதில்பிரம்மக்ஷத்திரிய வைசிய சூத்திரனென்னும்நான்கு வருணத்தவரையுங் குடியேற்றிவைத்துப் பின்பு இராமநாதனை ஸ்ரீராமச்சந்திரன் இலட்சுமணன் சீதாதேவிமுதலிய வானரவீரர்கள், தேவர்கள், முனிவர்கள் யாவருந்துதித்துவாழ்ந்தாரெனச் சூதமா முனிவர்சொல்ல, அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள், சுவாமி தேவரீர்திருவாய்மலர்ந்தருளிய வண்ணம்அவர்களெவ்விதமாய்த் தோத்திரஞ்செய்தனரோ அதனை அடியேங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கச்சூதமுனிவர் கருணைசாந்தவராய் சொல்லத்தொடங்கினர்.

பிரம்மஹத்தி விமோசனச் சரித்திரம்.

முற்றிற்று.

---

ஸ்ரீராமநாதனை ஸ்ரீராமச்சந்திரர் தேவரிஷிகள்

## தோத்திரஞ் செய்த சரித்திரம்.



கேளும் நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே தேவர்களாலும் மற்றயாவர்களாலும் பண்ணுதற்கரியசிறப்போங்கியகந்தமாதனபருவதச்சார்பில்தசரததநயனாற் பிரதிஷ்டைசெய்யப்பட்டராமலிங்கத்தை இராமச்சந்திர மூர்த்தியானவர் அந்தக்கரணசுத்தியோடும், தமதிருகரங்களையும் சென்னிமேற்கூப்பி அஞ்சலியஸ்தராய் நின்று கூறுவார். யாதெனில் ஸ்ரீ கைலாசபதியாகிய

இராமலிங்கத்தைநோக்கி, இவ்வுலகமியாவையும் படைத்தளித் தழிக்க வல்லதெய்வமே, மகாமகிமையுடைய கர்த்தனே சூலாயு தத்தைக்கையிற்றரிப்பவனே அடியார்களது துன்பத்தையகற்றி இன்பத்தைத்தரும் ஆரணனே, யாவுங் கடந்தமுதலே, தேவ தேவனே, வேதத்தின் முடிவே உலகின் கணுற்ற யோகிகளது உள்ளத்துணர்வே, எங்கும் வியாபகமாகியபொருளே சர்வலோ கசரண்யனே, சுகசொரூபனே, உயித்துணையே, சகலவல்லப சவு ரியபராக்ரம வீரசூர சொரூபமே பாவநாசனே பிட்சைநாசனே கால காலனே கடந்தபேரானந்தப் பெருமையே சராசரங்களுக் குள்ளே நாமரூபமற்றபொருளே போக்குவரமற்ற பொருளே மகா பலம்பொருந்தி யவனுகியும் இலங்கைக் கதிபனுகிய இரா வணனுடைய பிரம்மஹத்தியைத் தொலைத்தபிரமமேகாளகோடி விஷத்தையுண்ட கண்டனே மனோன்மணிபாகனே கங்கையைத் தரித்தவனே ஆதி மத்தியாந்தாகிதமாய் அழிவற்றபொருளே அழற்கண்ணனே பிநாகபாணியே மன்மதகனு அகண்ட பரிபூர ணச்சிதானந்தசொரூப சாட்சாத்கார சைதன்யசுகசொரூபதோ லாகலத்தாண்டவா அரவாபரணகங்கணு, கயிலங்கிரிவாசா ஸ்ரீரா மநாத தயாநிதேயென்று ஸ்ரீராமச்சந்திரர் தோத்திரம்பண்ணி ஞர்.

பின்பு அவ்விராமச்சந்திரன் பின்னவனுகிய இலட்சுமணர் தனதிருகரங்களையுஞ்சென்னிமேற்கூப்பிக்கொ டவனுய்இராம நாதனைநோக்கித் திரிபுராந்தகா பார்வதிபாகா, சம்போ, சங்கரா அர்த்தசந்திரஜடாதரா சோமசூரியாக்கினிநேத்திர சோமசுந்த ரா, மார்கண்ட ரக்ஷகா காலபயங்கரா, அண்டபிண்டநாயகா, அகிலலோக துரந்தரா, ஏகசொரூபா, வரப்பிரசாதா, மநோன் மத்தா, சத்யவாசகா என்போற் றுன்பசாகரத்தின்கண் பிறந் திறந்துழன்று திரியப்பட்டவர்களுக்கு அன்னவர் பிறவிநோ யைத்தணிக்கின்ற மருந்தே, அன்பரை இரட்சிக்குங் கடவுளே பூதகணத்தலைவா சுடலையாடி தொல்லுலகெல்லாம் படைத்த தோன்றலேஎளியேன் வினைப்போகத்தினுல் எத்தனைப்பிறவியெ டுத்தபோதினும், அத்தனைப் பிறவியினும், உனது திவ்யசரணும் புயங்களை மறவாம லிருக்கும்படியாய் அடியேனுக் கன்புதந்து இரட்சிக்கவேண்டும். இராமநாதப்பிரபுவே என்றுஇலட்சுமணப் பெருமாள் தோத்திரஞ்செய்தார், அதன்பின் சீதாதேவியம்மனு னவள், தனது இரண்டுகரங்களையுஞ் சென்னிமேற் கூப்பிக்கொ

ண்டவளாய் பர்வதராஜகுமாரி பாகத்தில் விளங்கும் அழகியம ணிமார்பனே, சடாடவியிற் கங்கையைத் தரித்திலகுஞ் சடாம குடனே ஒருபாகத்திற் ஸ்ரீமந்நாராயணனுடைய சொரூபந்தோ ன்றும்படியான தேவதேவசொரூபனே, மேகனுங்கிதனே, கரு ணாலயநிதியே, இக்கடையாகிய உடற்கொண்டு திரிந்தலைந்து இ றக்கும்படியான அச்சத்தை விளைவிக்கும் அரும்பொருளே, அ ன்பருக்கன்பனே அனாதாரக்ஷகனே, மாயாமயமே ஜெகன்மோக னுவதார சிற்சொரூபமே அடியாள் எத்தனைஜென்மமெடுத்தா லும் இவ்வாறே ஸ்ரீராமச்சந்திரனுக்கு பாரியாம் அவர் ஏவற்ப ணிசெய்து உனது பாதாம்புயங்களை என்றைக்குமறவாமல் சன காதியரும் மார்க்கண்டர்முதலிய பெரியோர்களும் பூஜித்துவண ங்கத்தக்க பதாம்புய நீழலிலே நான் என்றைக்குங் காத்திருந்து ஊழியஞ் செய்யும்படியாய் இரட்சிக்கவேண்டும் அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகா ஆதிமத்யாந்தரகிதா, ஸ்ரீராமநாதா கருணாகரப்பிரவாக சம்புவே என்று பற்பலவிதமாய் சீதாலட்சு மிதோத்திரஞ் செய்தாள்.

அதன்பின் அஞ்சனாதேவி புத்திரனாகிய அநுமாரானவர் த மதிருகரங்களையுஞ் சிரத்தின்மேற்கூப்பி, இராமநாதனை நோக்கி தேடுதற்கரியதிரவியமே, தேவதேவனே உலகநாதனே, அடியே ன்செய்த பிழையெல்லாம் பொறுத்தாளவல்லவனே என்றைக் கும் எளியேன் நினது எழில்லோங்கும பதாம்புயத்துக்கு ஏவல் செய்து பூஜிக்கும்படியாய் கிருபைசெய்யவேண்டும் இறைவனே இஃதன்றியும், இப்போது நான் உன்னுடைய சொரூபமாய்விள ங்கும் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி யிடத்திலே ஊழியஞ்செய்துகொ ண் டிருக்கிறேனுதலால், எளியேன் அவ்வாறிருந்தும், நீ பிரம்ம மயமாகவும் உன்னுடைய தேகரூபநாமம் ஸ்ரீராமனுகவும் எனக் குத்தோற்றப் படுகின்றமையால், என்னை இன்னமின்னஞ் ஜெ ன்ம சாகரத்துக்குள்ளாக்காமல் கிருபைசெய்து, உனதுபாதார விந்தத்திற் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று, உன்னை நம்பிப் பணியுமென்னை ஆட்கொள்ளுவாய், இராமநாதாவென்று தோத் திரஞ்செய்தார்.

அப்பால், வாலிகுமாரனுகிய அங்கதன் அவ்வாறேஇரண்டு கரங்களையுஞ் சென்னிமேற் கூப்பிக் கொண்டவனாய் ராமநாதனை நோக்கி, அண்டபிண்ட சராசரங்களும் நீயேயல்லது வேறுபொ ருளுண்டே, ஆதியேஎங்கும் நிறைந்தசோதியேயென்றுந் தோத்

திரஞ்செய்தான் அப்பால் சாம்புவந்தனும், அவ்வாறே கரங்களைக்கூப்பிக் கடவுளைநோக்கிச் சகல இன்பதுன்பங்களையுந்தந்து அனுபவிக்கச்செய்யுங் கடவுள் நீயல்லாது உன்னைவிட வேறு தெய்வமுளதோ, உனது நாமத்தைப்புகழ்ந்து பேசும் வல்லவருமுளரோவென்று பற்பலவாறுய்த் தோத்திரஞ் செய்தான், அதன்பின்பு நளனனவன் கடவுளைநோக்கி, மாயாப்பிரபஞ்ச மயக்கத்திஞலே அகங்காரங்கொண்டு, மகாவிஷ்ணுவும், பிரம்மதேவனும் தர்க்கங்கொடுத்து அநேகங்கோடிகாலம் பன்றியுருவாகவும், அன்னப்பட்சியுருவாகவும், அலைந்துதேடியுங்காணுத நினது பாதார விந்தத்திஞலே கிருபைசெய்து, எளியேனை ரட்சியுமையா ஸ்ரீராமநாதா தயாநிதி என்று தோத்திரஞ்செய்தான்.

அப்படியே நீலனென்பவன், ஸ்ரீராமநாதனைப்பார்த்து கடவுளே, கைலாசபதியாகிய நீ, எனது ஆசை அபிமானம் கோபம் ஆற்ருமை, இவையாவுமகற்றி, அடியேனை ஆட்கொள்ளவேண்டும் இராமநாதாவென்று வணங்கினன். அதுபோல குமுதனென்பவன் கடவுளைப்பார்த்து, ஓ தேவதேவே ஞானசொரூபனுகிய நின்னை, யாங்கள்கற்பனையினுலே, ரூபமேற்படுத்தியதேயன்றி உன்னையாவராலே அளவிடக்கூடும் அற்புதாவென்று வணங்கினன், அதன்பின் பனசனென்பவன் பன்னற்கரிய பரம்பரனை நோக்கி, சாக்ரம், சொற்பனம் சுழுத்தி என்னு மூன்றவத்தையுங்கடந்து, துரியந் துரியாதீதமென்னும் நிலையிலே உருக்கும் புண்ணியர் கண்களிக்கும் புநிதமே என்று வணங்கினன் அதன்பின் கவயனென்பவன் கண்ணுதலாகிய பரமசிவத்தைநோக்கி கடவுளேறே நின்செயலறிந்துணரா மாந்தரெவரும எக்காரியங்களையும் நான்செய்தேன் நான்செய்தேனென்னும் இறுமாப்பைகொண்டு துன்பப்படுகின்றனர் இவைகளை உய்த்துநோக்கு மளவிற் சகலமும் நின்செயலேயன்றி வேறல்லவே இராமநாதாவென்று வணங்கித் தோத்திரஞ்செய்தான். அதன்பின் பசுக்கண்ணனென்பவன் ஓகைலாசபதியாகிய இராமநாதா உனது பாதாரவிந்த இச்சையிலே கட்டுண்டபேர்களுக்கு உன்னையன்றி வேறுகதியுளதோ, உத்தமனேயென்று தோத்திரஞ்செய்தான்.

அப்பாற்கயனென்பவன், கடவுளைப்பார்த்து ஓதேவதேவே உலகின்கணுள்ள மானவர்களது பிறவியென்னும் பெரும்பிணி

க்கு அமிர்தசஞ்சீவியைப்போன்ற அற்புதனே சந்திர ஜடாதரா பார்வதிசமேதா அடியர்கட்கெளியோர் அமலாவென்று வணங் கித் தோத்திரஞ்செய்தான் அப்பாற் சர்ப்பனென்பவன் சம்பு வைநோக்கி ஒதாணுவே லிங்கனைக் காண்பதற்கு அரியவென்றும் கைதவமுதலிய யாவுமொழித்துக் கருணையங் கடவுளாகியநின் னைக்கருதி தம்முன்தாமே கண்டபேர்களினது நட்பேயென்று கைகுவித்து வணங்கினன் பின்பு கந்தமாதனனும் கடவுளைநோ க்கி ஓ சிவகணநாதனே திரிநேத்திர தாரியே கௌரிபாகா எளி யேனது பாபங்களையெல்லாம் நீ தொலைத்து இரட்சிக்கவேண்டு ம் ஐயனேயென்று வணங்கித் தோத்திரஞ்செய்தான், அதன்பி ன்பு சுகரீவனும் இராமநாதனைப்பார்த்து அஞ்சலியஸ்தனாய், பி றப் பிறப்புக்குரிய இப்பிரபஞ்சத்தில் பெண்சாதியென்றும் பிள் ளைகளென்றும் மாடு உடமை சம்பத்தென்றும் தனதான்ய சம் பத்தென்றும் ஆசைகொண்டு அண்டகோடிகளிலே அநேகசென் மங்களெடுத்து ஐம்பொறி யென்னும் பாம்பினாற்கடியுண்டு விஷ ந்தலைமண்டைகொண்டு உலகில்வரும் பிணியென்னு முதலைவா யிற்சிக்கி நைந்து தாபசோபமுற்று வாடிமயங்கிய மடமையேன் இனி அவைகளுக் காளாகாமல், இரட்சித்தருள வேண்டுமென் று வணங்கித் தோத்திரஞ்செய்தான்.

அப்பால் விபீஷணனானவன், சந்திரஜடாதர மூர்த்தியாகி ய ஸ்ரீராமநாதனைப்பார்த்து, அக்கினிசொரூபமாய் விளங்குங்கா மாதிகளெல்லாம் இண்டஞ்செடிகளாகவும், புன்மையான புத்தி களே கண்டக விருட்சங்களாகவும், கன்காருபவ வினைகளே ஜல மாயும் விளங்கும் பிரபஞ்சமாகிய காட்டிலே அடியேனுக்கு யா தொரு தஞ்சமின்றி ஒருவனாய், காடி புலி சிங்கமென்னுங் கண ங்களாகிய நோய்கள் வளைத்துக்கொண்டு வருத்துகின்றனனக்கு உமது பாதநிழலைத் தரவேண்டுந் தயாளுவே என்று வணங்கித் துதித்தான். பின்பு வானரவீரர்கள் யாவரும் அப்படியே கடவு ளைப்பார்த்து இராமநாதா உலகின்கண் வளரும் அளவிறந்த யோனிபேதங்களிற் பிறந்து பிறந்துழன்று கும்பிபாக முதலிய நரகங்களுக் காளாய்ப் பின்னும் வினை என்னும் பிரசண்ட வாயு வினாலேவந்து பிறந்து அநேகதுன்பங்களை யடைந்துவிட்டோம் இனியாகிலும் யாங்கள் அப்படி ஜனியாமல் உமது பதாம்புயத் தை நாடிப்பணிந்த எங்களுக்கு அருள்செய்குவாய் இராமநாதா வென்று வணங்கித்தோத்திரஞ் செய்தார்கள் பின்பு பிரம்மதேவ

னும் அவ்வாறே கடவுளைநோக்கி அகிலாண்டகோடி பிரம்மாண் டநாயகா அமலா ராமநாதா இரட்சியுமென்று வணங்கி தோத் திரஞ்செய்தான்.

பின்பு தேவராஜன்முதலிய அஷ்டவசுக்களும் திக்குப்பால காளும் சாரணராதி கெருடகாந்தருவர்களும் தனித்தனியே வ ணங்கித் தோத்திரஞ்செய்தார்கள். பின்பு சந்திரசூரியாள் முத லிய நவக்ரகங்களும் அஸ்வனிதேவதைகளும் அப்படியே தோத் திரஞ்செய்து வணங்கினூர்கள்; அதன்பின்பு அகஸ்தியமாமுனி வர் நிமலனுகிய இராமநாதனைப்பார்த்து யானெனதென்னும் அ கந்தையற்று நிற்கத்தடுத்தாட்கொண்டபடி என்றைக்கும் என் னை இரட்சிக்கவேண்டுமென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார் பின்பு சுதிக்கண்ண மகாரிஷியானவர் கடவுளைப்பார்த்து கைலா சபதி ஆடையாபரண பூஷணுதிகளும் இராஜபோகமும் அநித்ய அநித்யமென வெறுத்து நித்யமாகிய துறவுபூண்டு அதினின்று ம் பிறழாதநெறி அடியேனுக்குத்தந்து ரட்சிக்கவேண்டுமென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார்.

அதன்பின்பு விசுவாமித்திரர் ராமநாதனைநோக்கிவேதசாஸ் திர புராணங்களியாவும் உமது பாதப்புணையில் பக்திசெலுத்து ம்அன்பர்களுக்கு அணுகுமென்று மேலோர் புகலுவதால் அடி யேனுக்கு அந்நிலையை அருள்செய்யவேண்டும் ஜகதீசாவென்று வணங்கித்துதித்தார். அதன்பின் காளவமகாரிஷியும்அவ்வாறே கடவுளைநோக்கி கௌரிமனோகரா மறைவிதியிற் புகலுந் தான தரும நோன்புவிரதம், யாகாதி எக்யங்கள் கங்கை யமுனை முத லிய தீர்த்தபலன்கள் உன்னை வணங்காத பேர்களுக்கு நல்கு மோ வென்று வணங்கித் தோத்திரஞ் செய்தார். அப்பால் வசி ஷ்டமகாரிஷியானவர் சந்திர ஜடாதர மூர்த்தியாகிய ராமநா தனைப் பார்த்து அனந்தங்கோடி பாவங்கள் செய்திருந்த போ திலும் உனது சந்நிதானத்தைக் கண்டால் சூரியனைக்கண்ட பனிபோ ஓடிப்போமன்றோ உமாமஹேசா வென்று வண ங்கித் தோத்திரஞ் செய்தார் பின்பு அத்திரி மஹாருஷி யானவர் கந்தர்ப்பதகனனை நோக்கி ராமநாதனுடைய பா தகமலங்களில் ஓர் விசை வணங்கித் தோத்திரஞ் செய்தபேர் கள் மறுபடியும் பூலோகத்தில் தாயினதுகருப்பை யுட்புகுந்து ஜனித்து மலமூத்திரமாகிய கும்பிபாக நரகத்தை ஒருக்காலும்

அநுபவிக்க மாட்டார்களன்றோவென்று வணங்கித் தோத்திரஞ் செய்தார். அதன்பின்பு அங்குற ரிஷியென்பவர் இராமலிங்கத்தைநோக்கி சுவாமி! உமது பாதாரவிந்தத்திலே வணங்கித்தரிசிக்க எண்ணமுற்றபேர்கள் அவர்களுடைய கோத்திர சூத்திரங்களையும் ஆத்மஜனங்களையும் நினைந்துவணங்கினாலும் அவர்களுடைய பாதகங்களெல்லாம் உனது கடாக்ஷ வீக்ஷண்யத்தினால் அதப்பட்டுமுத்திபெறுவாரன்றோவென்று வணங்கித்தோத்திரஞ் செய்தார். அதன்பின்பு சதானந்தர் கடவுளைநோக்கி சுவாமி வேதசாஸ்திரங்களைச் சிரவணமுற்று அதனால் மோக்ஷவீட்டைவிரும்புவோர்கள் உனதுபாதகமலங்களைக் கண்டுபணிந்தாள் அவ்வீட்டைப் பெறுவரன்றோ வெனவணங்கித்தோத்திரஞ்செய்தார் அதன்பின்கௌதமர் ராமநாதனைப்பார்த்து சந்திரஜடாதாரஉலகத்தில்உனது பதாம்புயத்தைக்கண்டுதரிசித்த பேர்களினுடைய முகாரவிந்தத்தைக் கண்டவர்களுக்கும் பாபங்கள் நீங்குமாயின் உன்மகிமையை என்சொல்லப்போகின்றோம்புண்ணியனேஎன்று வணங்கித் தோத்திரஞ்செய்தார். அதன்பின் பிருகுமாமுனிவர் கடவுளைப்பார்த்து உன்னை யாரொருவர் தியானித்து வணங்குகின்றார்களோ அவர்களுடைய பாபங்களெல்லாம் நீங்கிமோட்சத்தைமென்மேலும் பெறுவார்களென்றால் உனதுமகிமையை யாவரால் அளவிடக்கூடும் அரவாபரணனேயென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார். அப்பால் குச்சகமகாரிஷி என்பவர்குன்றவில்லியைநோக்கி காளகண்டத்தையுடைய ஸ்ரீராமநாதனதுபாதசேவையானது நரகவேதனையைப்போக்கி இன்பமாகிய மோட்சசாம்பிராச்சியத்தைக் கொடுப்பதால், அச்சேவைசெய்யாத ஜீவர்களுமுண்டோவென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார் அதன்பின்பு, காசிபமஹாருஷியானவர் காலகாலனைப்பார்த்து, சூரியப்பிரகாசம்போன்ற ஸ்ரீராமநாதனை வணங்கித் துதிக்கப்பட்ட பேர்களுக்கு தானம் தருமம் விரதம் நோன்பு தலயாத்திரை தீர்த்தயாத்திரை எக்யாதி கிர்த்தியங்கள் வேண்டுமோவெனப்புகழ்ந்து சென்னிதாழ்த்தித் தோத்திரஞ் செய்தார், ஆங்கிரசரென்னும் ருஷியானவர் ஆனந்தக் கூத்தனை நோக்கி ஏகசொருபனாகிய ஸ்ரீராமநாதா, என்னுடைய தேகம் விட்டு விடும்போது பார்வதி சமேதராய் விருஷப வாகனத்தின் மீதெழுந்தருளி மோகானந்தமயக் கத்தைப்போக்கி மெஞ்ஞானத்தைத்தரும் உமது பாதாரவிந்தத்தைக் கொடுத்து இரட்சிக்க வேண்டு மென்று வணங்கித் தோத்திரஞ் செய்தார். அப்பால் காந்தருவர்முதலிய

சர்வத்திராளும் இளம்பிறையைச் சடாபாரத்திற் றரித்திராநின் றஇராமநாதனே எங்களுடைய பந்தபாசங்களை யெல்லாம் நீக்கி தேவரீருடைய பாதகமலப்பணி செய்யும்படியாய் இரட்சித் தாளவேண்டும் ஐயனே என்று வணங்கித் தோத்திரஞ் செய்தார்கள். அப்பால் கின்னரர் முதலிய யாவரும் கடவுளைப்பார்த்து, பொன்போற் பிரகாசிக்கப்பட்ட திருமேனியையுடைய ஸ்ரீராமநாதனே, உன்னுடைய பாதாரவிந்தத்தை வணங்கப்பட்ட எங்களுக்கு வேண்டியசாம்பிராச்சிய விபவமென்னென்றுவணங்கித் தோத்திரஞ் செய்தார்களா.

அதன்பிறகு இயக்கர் முதலியபேர்களும், இமாசலன்புத்ரி நாயகனுகியஇராமநாதனை நோக்கி ஐம்புலன்களினுலுண்டாகின்ற சகல துன்பங்களையும்போக்கி மோட்சத்தை யருளுந் தெய்வம் நின்னையன்றி யுண்டோவென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார்கள். அப்பால் பதஞ்சலி வியாக்கிரபாத ரென்னும் ருஷிகள் கடவுளைநோக்கி வீரசூரபராக்ர சாலியான இராமச்சந்திரமூர்த்தியால் பூசிக்கப்பட்ட சிற்பரானந்தசொரூபமே நாமநாதா வென்றுவணங்கித் தோத்திரஞ் செய்தார்கள் அதன்பின் வித்யாதரரியாவருங் கடவுளைபார்த்து அளவில்லாத யோனிக டோறும் பிறந்து பிறந்திருக்கும் இச்சையைப்போக்கி இரட்சிக்கவேண்டுமென்றுவணங்கித் தோத்திரஞ்செய்தார்கள். அப்பால் கிம்புருடாதியோர்கள் கடவுளைப்பார்த்து பார்வதிசமேதா, விருஷபத்துவசா, எங்குநிறைந்த பரம்பொருளே எளியோர்களையும்இரட்சித்தாட்கொள்ள வேண்டுமென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார்கள், அப்பால் வசுதேவதைகள் ராமநாதனைப்பார்த்துசிவகணங்களாற் பூசிக்கப்பட்ட கர்த்தனே கங்கையைத்தரித்த கடவுளே யென்று வணங்கித்தோத்திரஞ்செய்தார்கள். அதன்பின்பு விஸ்வதேவதைகள் கடவுளைநோக்கி போதசொரூபமாய்நிஷ்டைபுரிந்திடும் மகாயோகிகளுக்கு ஆத்மசொரூபமாய் தரிசனந்தந்து ஆட்கொள்ளும்அற்புதனேஎன்று வணங்கிதுதித்தார்கள் அதன்பிறகு மிருத்துவதேவதைகள் பரமசிவத்தை நோக்கிசசலதத்வசொரூபமாயும் விளங்கப்பட்ட இராமநாதக் கடவுளே யென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார்கள்.

அப்பால்சாத்தியதேவதைகளியாவருங் கடவுளைப்பார்த்து அஞ்சலியஸ்தராய் முதன்மையான பொருளாவும். மோகத்தை

போக்கு முழுமுதலாகவும், சகலகாரண சொரூபமாய் விளங்குந்தேவதேவனேயென்று வணங்கித் தோத்திரஞ்செய்தார்கள் அதன்பின்பு சகல தேவர்களோடும் ருஷீஸ்வரர்கள் முனீஸ்வரர்கள் தபோதனர்கள் பெரியோர்களியாவரும் அவரவர்கள் தனித்தனியே அநேகவேதமந்திர சுருதிவாக்யப் பிரமாணங்களினாலே தோத்திரஞ்செய்து வணங்கும் ஓசையானது சப்தசாகரங்களும் ஒன்றாய்க்கூடி ஒலிப்பதுபோல எட்டுதிக்குகளிலும் மண்டி ஆகாசவீதியெங்கும் நிறைந்து எள்ளிடமுதலாய் பரவி, ராமநாதனுடைய சித்தத்திலும் பூரணமாய் நிறைந்ததனாலே மகா இன்பம் பெருகி ஆனந்தத்தையடைந்து அங்குளசகலரும் காணும்படியாய் பார்வதிசமேதராய் விருஷபவாகனத்தின்மீதெழுந்தருளி தரிசனந்தந்தார் அப்படி தரிசனந்தந்த ராமநாதனுடைய சடாடவியிலே விளங்கும் கங்காபவானியைக்கண்டு, சிலர் வணங்கினார்கள், சிலர் அச்சடையில விளங்கும மூன்றாம் பிறைச்சந்திரனைக்கண்டு வணங்கினார்கள் சிலர்நேத்திரத்தைக்கண்டு வணங்கினார்கள் சிலர் காளகண்டத்தைக் கண்டுவணங்கினார்கள் சிலர் உமாமகேசனது காலில்வயங்கும வீரகண்டாமணியைக்கண்டு வணங்கினார்கள். சிலர் வாமபாகத்தில் மரகதம்போலிலங்கும் பார்வதாதேவியைக் கண்டுபணிந்தார்கள்.

இவ்வாறுஸ்ரீகைலாசபதியாகிய ஸ்ரீராமநாதனைக்கண்டவர்களுடையபாவங்களும் துன்பங்களும் தொலைந்து, புண்ணியவான்களாகி அநேகதோத்திரங்கள்செய்து பிரம்மானந்தபரிதராய்நெக்குநெக்குருகி வாய்குழற மயிர்க்குச்செறிந்து ஜெயஜெயவென்று வாழ்த்திக் கூத்தாடினார்கள் அப்போது ராமநாதன் மகிழ்ந்தவராய் தேவர் முதலியயாவரையும் நோக்கிச்சொல்லுவார் வாருங்கள் ராமச்சந்திரனாதி தேவர்களே நீங்கள்யாவரும் இச்சேதுமத்தியிலோங்கும் கந்தமானத்திலே நம்மை மிகுபக்தி விநயத்தோடும் பூஜித்துவணங்கித் தோத்திரஞ்செய்து புகழ்ந்துகொண்டாடினதாலே அவரவர் மனதிலே சிந்தித்தகாரியங்களெல்லாங்கைகூடும்படியாய் வரந்தந்தோம் இப்போது நீங்களென்னைப் பூஜித்தவண்ணம் இனியவர்பூஜித்து வணங்கியபோதிலும் அவர்களுக்கும் இஷ்டகாமியங்களைத் தருவதுமல்லாமல் மோக்ஷத்தையுமருளுவோம் இஃதல்லாமலும் இக்கந்தமாதனத்தில்நம்மைத்தரிசித்தபேர்களுக்கும் பூஜித்து வணங்கினபேர்களுக்கும், ஆயிரங்

தடவைவேதாகமங்களைப்பாராயணஞ்செய்தபலனும்மகாமகிமை பொருந்திய தநுக்கோடியிலே ஆயிரந்தடவை தீர்த்தமாடியபல னும் காசி பிரயாகை முதலிய புண்ணியக்ஷேத்திரங்களிலே கற்ப கோடிகாலம்வரையிற் பூசித்துவாசஞ்செய்து கொண்டிருந்தபல னும் ஆயிரம் அஸ்வமேதயாகம் பண்ணினபலனும், இக்கந்தமா தனச் சார்பிலே உண்டாகிய தீர்த்தங்களெல்லா மாடியபலனும் நம்மை ஒருநாள் பூஜித்து வணங்கிய பேர்களுக்குச் சித்தமாய் கிடைக்கும் இது சத்தியமாய்ச் சொல்லுகிறோமென்று திருவாய் மலர்ந்தருளிப் பின்பு அக்கோலத்தோடும் இராமலிங்கத்திலே மறைந்துவிட்டார்.

இவ்விதம் கைலாசபதிமறைந்தவுடனே ராமச்சந்திரன்சீதா தேவி இலட்சுமணன் முதலிய வானரவீரர்களும் வாணராதிக ருஷீஷ்வராள், முநீஸ்வராள், தபோதனா யாவரும் ராமநாதனு க்கு அபிஷேகமுதலிய ஆராதனைகளும் நடப்பித்துசதாகாலமும் தெரிசனஞ் செய்துக்கொண்டிருந்தார்கள் பின்பு ராமச்சந்திரன் முதலியயாவரும் அயோத்தியா புரிக்குப்போக எண்ணங் கொ ண்டவர்களாய் யாவரும் ராமநாதனை மூன்றுவிசை பிரதட்சி ணஞ்செய்து நமஸ்கரித்து கரங்களைச் சிரத்தின்மேற்கூப்பி அநே கதோத்திரங்கள்செய்து விடைபெற்றுக் கொண்டவர்களாய்ப் பின்னும் பசுவைவிட்டகலாத கன்றுகளைப்போலவும், தாயை விட்டகலாத சேய்களைப்போலவும் நாயகனைவிட்டகலாக் கற்பு டையநங்கைபோலவும். குருவைவிட்டகலாதசிடரைப்போலவும் ராமநாதனுடைய சன்னிதானத்தை விட்டுப்பிரிய மாட்டாமல், இராமமூர்த்திமுதலிய சலகத்திராளும் நின்று நின்று திகைத்து மறுகி மனங்குழம்பிக்கொண்டு இக்கந்தமாதனத்தையுஞ் சேது தநுக்கோடியையும் இராமநாதனையும் எவ்வகைவிட்டுப் பிரிவோ மென்றும் யோசித்தவர்களாய் மறுபடியும் இராமமூர்த்தியான வர் தன்மனதில் இப்போதுநாம் இவணிருந்தும்பிரயாணப்பட்டு அயோத்தியாபட்டணத்திற்குப் போகாமலிருப்போமாயின் குக னுனவன் நாம்வருகிறவழியைப் பார்த்துக்கொண்டிருக்கிறவனாத லால் வீணேகங்கையில்வீழ்ந்து உயிரைப்போக்கிக்கொள்ளுவான் பரதனும் அக்கினியில் வீழ்ந்திறந்துபோவான் நமது தாய்மார்க ளும் பிராணனைவிட்டுவிடுவார்களே பின்பென்செய்வோமென்று எண்ணமுற்றவராய் எப்போதும் இராமநாதன் நமதுஇதயத்தி

னின்றும் நீங்கமாட்டாதென்று திடம்பண்ணிக்கொண்டவராய் அங்குள்ள மகாரிஷிகளையும் பெரியோர்களையும் பணிந்து அவரவர்கள் ஆசிரமங்களுக் கேகும்படியாய் விடைகொடுத்துத் தாமும் அன்னவர்களிடத்தில் விடைபெற்று பட்டணத்துக் கெழுந்தருளினர் அதன்பின்பு அங்ஙனமிருந்த சில பெரியோர்களும் ருஷீஸ்வரர்களும், தபோதனர்களும் அக்கந்தமாதனத்திலே சேது தநுக்கோடியிலே வாசஞ் செய்துக்கொண்டு ஸ்ரீராமநாதனை இடைவிடாமல் தரிசித்துக்கொண்டே யிருந்தார்கள்.

கேட்டீர்களோ மகாருஷிகளே, இவ்வண்ணம் ஸ்ரீராமநாதனுடைய மகிமைகள் கோடாநுகோடி அற்புதங்களாக விருப்பதோடும் அந்தச் சேதுதநுக்கோடியிலே ஸ்நானஞ்செய்யவும் கந்தமாதனச் சார்பிலே வாசம்பண்ணவும் ஸ்ரீராமநாதனை தெரிசிக்கவும் தவஞ்செய்து ஜனிக்கவேண்டும் அப்படியல்லாதுமுன் ஜென்மத்திற் கோடாநுகோடி புண்ணியங்கள்செய்து விட்டகுறையால் அதனைக்கிட்டவேண்டும் இதல்லாமலும் அத்தலத்திலே எப்போதுந் தேவர்முதலிய பெரியோர்களும் சித்தர்களும் முனீஸ்வரர்களும் யோகீஸ்வரர்களும் இராஜ ராஜாக்களும் இரதகஜ துரகபதாதிகளோடும் வந்து தானதருமங்களைச் செய்தும் யாகாதிகிர்த்தியங்களும் எக்கியங்களும்செய்துவருதலால் அதன்மகிமையை என்னவென்று சொல்லப் போகின்றேம் என்று சூதமுனிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யத்து ருஷிகள்யாவரும் சந்தோஷமடைந்து சுவாமி தேவரீருடைய அநுக்கிரகத்தால் இதுவரையினும் தீர்த்தமகிமைகளையும் மூர்த்திமகிமைகளையும் சொல்லக்கேட்டோம் இனி அத்தலமகிமையும் சொல்லவேண்டுமென்று பணிந்த நைமிசாரண்யர்மேற் கருணைகூர்ந்து இராமேச்சுர தலமகிமையைச் சொல்லத்தொடங்கினர்.

## தோத்திரச் சரித்திரம்.

### முற்றிற்று.

# சங்கரபாண்டியச் சரித்திரம்



கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகியமுனிவர்களே இவ்வுலகின்கண் ஓங்கும் மதுராபுரி என்னும் பட்டணத்திற் சந்திர குலத்தில் உற்பவித்த பாண்டியர்களுள் சங்கரபாண்டிய னென்னும் ராஜன் மனுநீதியின்படி குடிகளிடத்தில் ஆறிலோர்கடமை யேற்று அசையாமணிகட்டி, அபயமென்கின்ற சத்தமில்லாமல் இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டு வருபவன் தனது பராக்ரமத்தால், அநேக ராஜாக்களை வெற்றிகொண்டு கடல்சூழ்ந்த உலகமுழுதும் வேறொரு மன்னனுக்கில்லாது தானே ஏகசக்ராதிபதியாயிருந்து அரசாள்வதோடும் நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண் புராணத்தையும் ஆய்ந்துணர்ந்த தேவப்பிராம்மணர் பெரியோர்கள் பேரிலும் விசுவாசமாய் அநேக யாகாதிகிர்த்தியங்களைச் செய்துமுடித்து மகாசாந்த பதத்தைப்பொருந்தி பிரம்ம, க்ஷத்ரிய, வைசிய சூத்திரனென்னும் நான்கு வருணத்தோர்க்கும் ஆதரவு செய்யத்தக்கவனாய் மநுநீதியினின்றும் பிறழாமல் அரிபூசை, சிவபூசை, குருபூசை, மறவாமலும் தேவாலயம், பிரம்மாலயம், விஷ்ணுவாலய முதலானதுகளுக்கும் பூசை நைவேதநங்களும் தப்பாமல் நடத்தியும், அன்பு, பொறுமை, அறிவு, அடக்கம், தயை, தா[illegible]ர்யம் கொடை மேன்மை முதலிய யாவுந் தப்பாமல் தன்னுயிர்போல் மன்னுயிர்களைக் காத்துவருகிறபோது அம்மதுராபுரியைச் சூழ்ந்தோங்கும் வனங்களில் துஷ்டமிருகங்களடர்ந்துநெருங்கி குடிகளிடம் பயிர்களையெல்லாம் நாசப்படுத்துவதைக் குடிகளாலறிந்து அம்மிருகங்களை அதப்படுத்திக் குடிகளைக் காக்கவேண்டு மென்றுங் கருணையுற்றவனாய் சிலசேனைசயின்யங்களோடும் இரதாரூடனாய் வனத்தைநோக்கி வேட்டையாடச் செல்லுகையில் அவ்வனமானது எப்படி யிருந்ததென்றால் மா இலுப்பை ஆல் அரசு, தேக்கு ஆச்சா, வேங்கை பலாமரங்கள்முதலியவிருக்ஷங்களும் எங்கும் அடர்ந்திருப்பதோடும் அடிக்கடித் தாமரை ஓடைகளும், செங்கழுநீர் ஓடைகளும், சண்பகவிருக்ஷங்களும், கடம்ப விருக்ஷங்களும், ஆகாயத்தை யளாவிய பருவதங்களும் குகைகளும் அவற்றில் கரடி, சிங்கம், காட்டானை, செந்நாய், சிவிங்கி, பன்றி தடம்பை, கலை, மறி, மான், கோனாய், நரி, முயல் முதலியவிலங்

கினங்களும், சக்ரவாளம், சகோரம், நாகண வாய்ப்புள், நாரை, அன்னம், அன்றில், தூக்கணன், மயில், குயில், பாரத்வாசமுதலிய மாடப்புருக்கள், மணிப்புருக்கள், காடை, கவுதாரி, கானங்கோழி, சம்பங்கோழி, காட்டுச்சேவல்கள் முதலியயாவும் அடர்ந்து களகளவென்னும் ஓசையோடுமிருக்கும் அவ்வனத்தில் முநீஸ்வராள் ருஷீஸ்வராள் முதலிய பெரியோர் ஆங்காங்கு பன்னகசாலைகளைப் புதுக்கிக்கொண்டு தத்தம் சீடர்களோடும் நிட்டை சாதித்துக்கொண்டிருக்கும் வைபவத்தைக் கண்ட வேந்தன் இரதத்தைவிட்டிழிந்து தனது காலில் அணிந்திருக்கும் படியாகிய வீரகண்டாமணியைக் கழற்றி பாதத்திற் றொடுதோலணிந்து உடம்பின் மேல்களினாற் செய்திருக்கப்பட்ட கைவார்களையணிந்து, மார்பிற் கவசம்பூண்டு, தலையிற் சிவந்த உருமாலையைக் கட்டி, இடையில் கருங்கச்சை யிறுக்கி வில்லும் அம்புறுத்தூணியுந் தோளிற்போட்டு பதினெட்டுவகை ஆயுதங்களையும் இடையிற்கட்டி பஞ்சகதியோடுங்கூடிய குதிரையின் மீதேறி, கையிற் கத்தி கேடயம் பிடித்து, தோற்கருவி தொளைச்கருவி முதலிய பறைகளை முழக்குவித்துக்கொண்டு அநேக காடுகளைக் கலைத்துக்கொண்டு வரும்படியாயும் அநேக வேட்டைக்காரர்களும், வலைக்காரர்களும், குறவர்கள் முதலிய குழூவர்களியாவரும் வாங்கு, வல்லயம், ஈட்டி, எறியீட்டி, வில் வேல் முதலிய ஆயுதங்களுடனே, வேந்தனைப் புடைசூழ்ந்துவரவும், சிலர் ஒளியுண்டாக்கி அந்தந்த இடங்களிலே அணியணியாய்மிருகங்கள் வருகிறவழியைப் பார்த்துக்கொண்டிருக்கவும், சிலர் அங்கங்கு வலைகளைக் கட்டவும், சிலர் மகா சவுரிய பராக்ரமமுள்ள நாய்களை பட்டுக்கயிறுகளினாலும் வெள்ளிச் சங்கிலிகளாலும், பொற்சங்கிலிகளாலும் கட்டி அழைத்துக்கொண்டு வரவும் இந்தப்படியாய் வனத்திற் பிரவேசித்து மிருகங்களைச் சின்னபின்னங்களாக வெட்டிப் பிளந்தும், ஆனைகளினது மஸ்தகங்களையுடைத்தும், கரடிகளைக் கால்வேறு உடல்வேறாகச் செய்தும் புலிகளின் உடல்களைப் பிளந்தும், சிங்கங்களைக் கொன்றும், சிவிங்கிகளைச் சின்னபின்னப்படுத்தியும், பன்றிகளைப் பிளந்தெறிந்தும் மான்மரை முதலிய மிருகங்களைவதைத்தும், கடம்பைமுதலிய கலைமான்களைக் கண்டதுண்டஞ் செய்தும் அன்னம் மயில் குயில் புறுக்கள் முதலிய பறவைச்சாதிகளை வேடுவர்கள் வலைகளைக் கட்டி பிடித்தும், எங்கு பார்த்தபோதினும் மிருகங்களைப் பிணமலைகளாகக் குவித்து வேடுவர், குறவர் மறவர் குழூவர்களியாவரும் பன்றி, மான், கடம்பை, கலை, முயல் முதலியவைகளைக்

காவடிகளிற் கட்டித் தூக்கிவரவும் வேந்தனனவன் மிருகங்களை த் தனது கரத்தினிடமாக இருந்த பதினெட்டுவகை ஆயுதங்க ளாலும் சின்னுபின்னங்களாகக் கண்டித்து சர்வநாசப் படுத்திக் கொண்டு வருகிறபோது அங்கோர் மலையடிவாரத்தில் ஓங்கும் ஆலவிருக்ஷத்தின் கீழலாகிய இருண்டசோலையிற் சாகுல்யமகா ரிஷியென் ருெருமுனிவர் தன்னுடைய பத்தினியோடும் புலித் தோலைப் போர்த்துக்கொண்டு நிட்டையிலிருந்ததை அறியாத சங்கரபாண்டிய னென்னும் வேந்தன், ஆஹா இவ்விரண்டு புலி யும் நமது வேட்டையிற் றப்பித்துக்கொண்டு இங்ஙனம் ஜோ டாகவந்து நிற்கின்றதென்று கருதியவனுய் தனது கரத்தினிட மாக இருக்கும் வில்லிலே ஓர் எரிக்கணையைச் சந்தித்துப் புலி இரண்டுக்கும் லட்சியம் வைத்து ஆகர்னபரியந்தம் இழுத்து விட்டான்.

அப்படி வில்லிலிருந்து விடுபட்ட அம்பானது மகாவேகத் தோடும்வந்து புலியிரண்டையுந் தாக்கிப் பின்புற முருவிப்போ கையில், புலியைப்போலிருந்த இருவர்களும், கோவென்றலறிக் குப்புறவீழ்ந்து உயிரைவிட்டார்கள். அப்படி வீழ்ந்ததைஅவர் கள் குமாரன்கண்டு சகிக்க மாட்டாதவனுய்க் கோவென்றபயமி ட்டு அலறி நிலத்தின்பேரிற் சாய்ந்து கூறுவான். அந்தோ அன் னைபிதாக்களே என்செய்வேன் இனி எவ்வண்ண முய்வேன் பி ன்னும் இப்புவியின்மீதெனக்கு ஒருவருந் துணையில்லாமல் த னியேவிடுத்துப் போகலாமோ, என்னையுங் கூட அழைத்துக் கொண்டு போனலாகாதோ இங்ஙனம் எனக்கார் உணவு தரு வார்கள் யார் துணைசெய்வார்கள் ஐயோ யான் சாப்பிடமாட் டேனென்ருல் எனக்கு நல்ல வார்த்தைகளைச் சொல்லி யார் சாப்பிடச்செய்யப்போகின்ருர்கள், வேதசாஸ்திரபுராணங்களை யார் எனக்குப்போதிப்பார்கள் நீங்களிப்படி மோசஞ்செய்வதா யிருந்தால் என்னை ஆண்பிள்ளையாகப் பெற்று வளர்ப்பானேன் இவ்வாறு இந்தலோகத்தி லென்னை விடுத்துப் போகின்றதாக விருந்தால் நான் நடக்கவேண்டிய காரியங்கட்கு திட்டப் படுத் தியன்ருே போகவேண்டும் அப்படி அநியாயமாக என்பழியை ஏற்றுக்கொண்டு போகலாமா இவ்வனத்தில்வசிக்கும்பெரியோ ர்களுடைய புத்திரவர்க்கங்களுஞ் சீடர்களும் தாய்தந்தை யில் லாப் பிள்ளையென்று அலட்சியமாகத் தூறி யடிப்பார்களே அ தைக்கண்ட யான் சகிப்பேனே தரையிற்றரிப்பேனே, வேறிட

ஞ்செல்வேனே அந்தோபாவிகளா இரண்டு பேர்களி லொருவ ரிருந்து ஒருவரிறந்தாலாகாதா இப்படி யிருவருஞ் சாகவேண் டுமா இவ்வாறென்னை அலைக்க யான் உங்களுக்கென்ன கொடு மைசெய்தேன், லோகத்தில் பசுக்கள் கன்றுகளை விட்டிறக்கு மாயின் பின்பு அக்கன்றுகளடையுங் கதியறியீர்களோ அது போலன்றோ யான், ஐயோ என்னைச் சோதிக்கலாமென்று மவு னமாய்க் கண்களை மூடிப் படுத்திருக்கின்றீர்களோ, உங்கள்மன த்திலிருக்குங் கருத்தை எழுந்து எனக்குச் சொல்லப்படாதோ அவ்வாறு எழுந்தால் அக்காரியம் பிரம்மனுக்குச் சம்மதியா தோ நீங்கள் அம்புபட்டுருவிச் சாவதற்குக்காரணம் யாது புத் திரனாகிய எனக்குச் சொல்லப்படாதோ வென்று விம்மி விம்மி அபயமிட் டலறும்போது, அவ்வோசையை அங்குத் தவஞ்செ ய்துக்கொண்டிருக்கும் பெரியோர்கள் பார்க்கும்போது ரிஷியும் ரிஷிபத்தினியும் அம்புபட்டுருவி வாயினாலும் மூக்கினாலும் இர த்தங்களைக் கக்கிக்கொண்டு மடிந்திருப்பதைநோக்கி இஃதென் ன காரணமெனச் சிந்தித்துப் பார்க்கும்போது அவ்வனத்திற் சங்கரபாண்டியன் வில்லுங் கையுமாய் நிற்பதைக்கண்டார்கள்.

அப்படிக் கண்டமாத்திரத்தில் இவனாற்றான் நடந்ததென் றறிந்துக் கொண்டவர்களாய், அங்ஙனம் நின்று அழுதுக்கொ ண்டிருக்குங் குழந்தையையெடுத்து மார்பைத்தழுவிக் கரங்க ளினாற் கண்ணீரைத்துடைத்து அடா குழந்தாய் உலகில் நித்ய மாய் யாவரேனும் வாழ்ந்தவர்களுண்டோ தாங்கள் கற்றுணர்ந் த சாஸ்திரங்களினும் நித்யமாய் ஒருவரேனுமிருந்ததாய் சொல் லக்காணேம் நாங்கள் கண்டதுமில்லை கேட்டதுமில்லை இஃதல் லாமல் பொன்னுலக வாசிகளாகிய தேவர்கள் ஓர் காலையிற் பிர மனது கருப்பவாசத்திலிருந்து எங்களையெல்லாஞ் சாகாமலிரு க்கச் செய்யவேண்டுமென்று கேட்க, அதற்குப் பிரமன் அப்ப டிகூடாது அவரவர்கள் கன்மாநுபவத்துக் கீடாய் நடக்குமெ ன்றுசொல்லி நாமிந்தக் கருமபூமியிற் பிறந்தமையால் யாவும் அநுபவித்தே தீரவேண்டும் பேசுதற்கரிய தபஞ்செய்த போதி னும் பிறப்பிறப்பிரண்டும் எதிரிற்றானே நிற்கும் இவை நமக்கு மாத்திரமல்ல எவ்வுயிர்க்குமே உண்டாதலால் உனது தாய்தந் தைகள் அவர்கள்விதிப்படி மாண்டார்களே யன்றி வேறல்ல அ துபோல் நீயும் உனதுவினை முடியுமளவுமிருந்து பின் இறக்கப் போகின்றாயேயன்றி இருக்கப் போகிறதில்லையே ஆதலால், இப்

போது செத்தவர்கள்மீது சாகாமலிருப்பவர், அடித்துவிழுந்து கூக்குரலிட்டழுதால் செத்தவர்களுக்குமோட்சமில்லாமல், பேய்க்குச்சமானமாவார்கள் நல்லகதியுங் கிடைக்கமாட்டாது இறவாமலிருப்பதற்கோ உபாயம் ஒருவருங் கற்றதில்லை மேலும்காலனனவன் சாகாமலிருக்கும்படியாய் ஓர் கிருமியையும் விட்டதில்லை இப்போது நாங்கள் சொல்வதில் நீ எவ்வளவுஞ் சம்சயப்படவேண்டாம்.

சகலவுயிர்களுங் கடவுளுடைய ஆக்கினையின்படியே நடக்கும் இதன்றியும் இத்தேகமானது ரத்தமாம்ச என்பு மலமூத்திரங்களால் மூடப்பட்டபடியால், புற்புதத்தைப்போல் க்ஷணநேரமிருந்து க்ஷணநேரத்தில் மறைந்துபோம் ஆதலால் அறிவிகளாக விருப்பவர்கள் இப்புழுக்கூட்டைக் காப்பாற்றுகிறதேயன்றி வேறல்ல என்றைக்கும் அகண்டபரிபூரண சச்சிதானந்த பிரம்மம் ஒன்றே நித்தியமாய் விளங்கும் மற்றவையெல்லா மழிந்துபோம் ஆதலால் நீ அவர்களுக்கு அன்புள்ள பிள்ளையாக இருந்தபோதிலும் உனது கண்ணீர் அவர்கள்மீது படுமாயின் அவர்கள் உயிரானது இதையே யநுபவிக்க வேண்டியதாய் வரும் மேலும் பெரியோர்களா யிருக்கப்பட்ட உனது தாய்தந்தைகளின்மீது கண்ணீரை யுதிர்க்காமல் வேதாகமப்படி அவர்களுக்குச் செய்யவேண்டிய கருமங்களை நடத்துவித்து நல்லகதி யடையும்படியாய், அவர்களைத் தகனம்பண்ணின அங்கத்தைப் பொறுக்கி யெடுத்துக்கொண்டு போய்ச் சேதுமத்தியிலே கந்தமாதனச்சாரில் விளங்கும் இராமேச்சுர தலத்தில் ஓர்பக்கத்திற்ருபனஞ்செய்து பின்பு அந்த சேதுதநுக்கோடியில் ஸ்நானம்பண்ணி கர்மத்துக்குரிய நவசிராத்த சோடசமுதலிய திதிசிராத்தங்களை விதிப்படி நடத்தி அவர்களுக்கு நல்லகதி மோட்சங் கிடைக்கும்படிச் செய்வாயென்று அம்முனிவர்கள் சொல்ல அவ்வார்த்தையைக் கேட்ட சாகுல்ய மகாரிஷி குமாரனை சாங்கலனனவன் கேட்டுச் சிறுபிள்ளையா யிருந்தபோதிலும் பெரியோர்கள் சொல்லியதை கேட்டு அவர்களிற் சிலரைத் தனக்கு உதவியாக வைத்துக்கொண்டு தாய்தந்தையர்களுக்குச் செய்யவேண்டிய கிரியைகளெல்லாஞ் செய்து முடித்து தானஞ்செய்து மறுநாளுதய காலத்திலே அங்கங்களை யெல்லாம் பொறுக்கியெடுத்துக்கொண்டு கூடல்மானகரமாகிய மதுராபுரியின் வனத்தைவிட்டுப் பிரயாணப்பட்டு இராமேச்சுரம் போய்ச் சேர்ந்து

அத்தலத்தில் தான்கொண்டுபோன என்பை அடக்கஞ்செய்து, பின் சேதுதநுக்கோடியில் தீர்த்தமாடி, பிதுர்க்கருமங்களை வி திவசுத்தாய்ப் பதினொருநாள் வரையிலுஞ்செய்து முடித்து மாசமாதிகளிலுஞ் செய்யவேண்டிய கிரியைகளைச்செய்துமுடி த்து, நியமத்தோடும் ஒருவருடம்வரையில் அவ்விராமேச்சுரத் திலிருந்து, சகலகர்மங்களுஞ் செய்து முடித்து அச்சிறுவனுன வன் அன்றிராப்போதில் நித்திரை செய்கிறபோது ஸ்ரீவிஷ்ணு வைப்போலும், லட்சுமியைப்போலும், தன்னுடையதாய் தந் தையர்கள் சொற்பனத்தி லெழுந்தருளக்கண்டு நித்திரையை நீங்கி யெழுந்திருந்து சேதுதநுக்கோடியிலே ஸ்நானம்பண்ணி இராமநாதனைப்பணிந்து விடைபெற்று மதுராபுரியைச்சார்ந்த வனத்தில்வந்து சேர்ந்து, அங்குள்ள முநிவர்களிடத்தில், தான் கண்ட சொற்பன மின்னபடி யென்றுசொல்ல, அவர்களுங் கே ட்டு, மகாசந்தோஷத்தை யடைந்து, அப்பா சிறுவனே, உனது தாயுந்தந்தையும் விஷ்ணு சொரூபமாகவும், இலட்சுமி சொரூ பமாகவுமே விளங்குவார்க ளென்றுசொல்ல, அதைக்கேட்ட சாங்கலன் சந்தோஷத்தை யடைந்து பின்பு, அப்பெரியோர்க ளிடத்திற்றானே யிருந்து, வித்யாப்பியாசஞ் செய்துக்கொண்டு வந்தான்.

இங்ஙனமிவ்வாறிருக்க, அவன் வில்லும்வேலுமேந்தி நின்ற சங்கரபாண்டியராஜனை அங்குள்ளமுநிவர்கள்நோக்கிக்கூறுவார் கள் வாரும்வேந்தே, எப்படியுங் கெட்டது கெட்டது, எவ்வள வும் உமக்கு அறிவில்லாமற் போச்சுதே அந்தோ, தபசிகண் மீது இப்படியும், அநீதியாய் அம்பைப்பிரயோகித்துக் கொல்ல லாமோ, ருஷியைக் கொன்றதுமல்லாமல், ருஷிபத்தினியையுங் கொன்று, இருவர்பழியையு மேற்றுக்கொண்டீரே, இப்படியார் செய்தார்கள். ஒருவருமில்லையே, இப்பாவத்துக்கென்ன செய்ய ப்போகின்றாய், மனசாலும் வாக்காலும் காயத்தாலும் குற்றங் கள்வந்து நேரிடாமல் நடப்பதுவே வேந்தர்களுக்கு நீதியும், வெற்றியுமாம். அதைவிடுத்து, வேடரோ டொப்பந்தமாய் நட த்தியது இராஜநீதியல்லவே இவ்வாறு நீ அநியாயமாய்ச் செய் ததற்குப் பரிகாரம் இறந்த பேர்களுடனே உன்னுடைய சரீரத் தையு மிறக்கும்படியாய்ச் செய்யவேண்டும், அவ்வகையிலாவிடி ல், அக்கினி வீழ்த்தி நீறுக்க வேண்டும் இவ்விரண்டு மல்லாது இப்பழி நீங்கா தாதலால் இப்போது உன்னைக் கண்ட பேர் களுக்கும், பேசிய பேர்களுக்கும், பிரம்மஹத்தி நீங்காமல், அவர்களையும் பிடித்துக்கொண்டு ஆயிர வருடமான போதிலும்

அகலாது ஆதலால் நீங்கள் முன்னே நிற்காமல் அகலப்போவா யடா பாவியென்று முனிவர்களும் அவர் பத்தினிமார்களுங் கூறி யதைக்கேட்ட சங்கரபாண்டியன் நெஞ்சந் திடுக்கிட்டு, துக்க சாகரத்துள்ளழுந்திய பற்பலவிதமாய்ச் சிந்தித்து இப்பழியை போக்கும் விதமியாதெனக் கவலை கொண்டவனாய் முனிவர்கள் கூறியவண்ணம் அக்கினியை வளர்த்தி அதில்வீழ்ந்து இறந்து போவோமென்று ஸ்திரஞ்செய்துகொண்டவனாய் தனக்குப்பின் புறமாக நிற்கும் மந்திரி முதலிய காரியக் காரர்களை நோக்கிச் சொல்லுவான்.

வாருங்கள் மந்திரிமார்களே அறிவிலியாகிய எனக்கு வினை வலியால் மகா பெரியவராகிய முனிவரையும் அவருடைய பத்தினி மாரையும் வதஞ்செய்த தோஷம் வந்தடர்ந் திருப்ப தால் இனி யான் இப்பூமியி லிருக்கப் படாது குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து என்னிட மிருந்ததுபோல் அவனிட மிருந்து நீதி வழுவாது இராச்சிய பரிபாலனஞ் செய்து வரும் படியாய் யாவும் அவனுக்குத் தெரிவிப்பதோடும் இப்போது யான் அக்கினிப் பிரவேச மாகும் படியாய்த் தீயை வளர்த் துங்க ளென்று சொல்ல அவ்வார்த்தையைக் கேட்ட மந்திரி களும் காரியக் காரர்களும் கோவென் றலறிக் கூக்குரலிட்டு எங்களை இதுவரையிலும் பிள்ளைகளைப்போலவளர்த்துப் பரிபா லனஞ்செய்து இப்போது தேவரீர் இறந்து போகவும் நாங்கள் உயிர்வைத்திருக்கவுமோ நல்லகாரியம் சொன்னீர் நாங்களும் உம்முடன் அக்கினிப்பிரவேச மாகின்றோம் அப்படிச் செய்யா மல் நாங்கள் ஜீவித்திருப்பதால் என்ன பிரயோசனம் என்று யாவரும் ஒருமித்துச சொன்னார்கள். அவ்வார்த்தையைக்கேட் ட சஙகரபாண்டியன் அவர்களை எல்லாம் சமுதாய்ப்பு செய்து அப்பா மந்திரிமார்களே என்போலொருபாவி யிவ்வுலகிலு மிரு க்கப்படாது சிங்காசனமு மேறப்படாது.

ஆதலால் நான் அக்கினிப்பிரவேச மாகின்றேன் என்குமா ரன் என்னிலும் எண்மணங்கதிகமாய் உங்களைப் பாதுகாத்து வருவானுதலால் நீங்கள் என்னிடத்தில் வைத்திருந்த விசுவாச த்தைப்போல் அவனிடத்திலும் வைத்து இராஜரீகஞ் செய்து வாருங்களென்று சொல்லிப் பின்னுங் கூறுவான். ஓமந்திரிகளே என்றைக்கிருந்தபோதினும் இத்தேகமானது நீர்மேற் குமிழி யைப்போல் அழியுமேயல்லது நிற்கமாட்டாது. அதனோடும்

நான்பழி ஏற்றுக்கொண்டு, இராஜரீகஞ்செய்திருப்பது அழகல்ல ஆதலால் நான் சொல்லியபடியே அக்கினியை வளர்த்துங்கவென்று சொல்லிப் பின்பு, அங்குள்ள முநிவர்களியாவரும் காணும்படியாய் ஸ்நானஞ்செய்து, விபூதிதரித்துக் கொண்டு, அம்முநிவர்களைப் பிரதட்சணஞ்செய்து ஸ்ரீகைலாசபதியாகிய உமாமகேசனை நோக்கி, அஞ்சலியஸ்தனும், சம்போ, சிறியேன் அறியாமையினாற்செய்த பழியை என்னுடனே முடிக்கவேண்டுமென்று அக்கினியை மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து, உபர எழும்பிப் பாய்கின்ற சமையத்தில் ஸ்ரீகைலாசபதியாகிய சொக்கநாதக்கடவுளருளால், ஆகாயத்தினின்றும், ஓ சங்கர பாண்டியராஜனே, அக்கினிப்பிரவேசஞ்செய்து கொண்டால் ரிஷியையும் ரிஷிபத்தினியையுங் கொன்றதோஷம் நீங்குமோ நீங்கமாட்டாதாதலால், நாமோர் உபதேசஞ்செய்கின்றோம்.

அதுயாதெனில், தக்ஷிணசமுத்திரத்தில், ஸ்ரீராமசந்திரமூர்த்தியாற் கட்டப்பட்ட சேதுவின் மத்தியிலோங்கும் கந்தமாதனச்சார்பில் எழுந்தருளியிருக்கும், ஸ்ரீராமநாதக்கடவுளைத் தரிசித்து சேதுவில் தீர்த்தமாடி, அக்கடவுளைத் திரிகாலமும் வணங்கித் தோத்திரஞ்செய்து, பால், நெய், தேன், இளநீர் முதலிய அபிஷேகஞ்செய்து சோடசோபசாரங்கள் செய்து வேத பிராமணர்களாக விருக்கும் பன்னீராயிரம் பேர்களுக்கு அன்னதானமும், வஸ்திரதானமுஞ்செய்து, அவர்கள் தானஞ்செய்த பலன் முழுவதும் ஸ்ரீராமநாதனுடைய பாதாரவிந்தத்திலே தத்தம்செய்யும் படியாகவுஞ்செய்து, ஒருவருடம்வரையில் நீ அவ்விடத்திற்றானேவாசஞ்செய்துவருவாயாகில், இவ்விரண்டுபழியும்உன்னைவிட்டு நீங்கிவிடும் அப்போது நீ புண்ணிய சாலியாவாயென்றும் அசரீரியானதுகூற, அவ்வாய்மையை அவ்வனத்திலுள்ள முநீஸ்வரராளும் சங்கரபாண்டியனுங்கேட்டுச் சந்தோஷமடைந்து, வேந்தனைவன் அவனின்றும் போகமாட்டாமல், அச்சமுற்று நிற்கும்போது, அவனைக்கண்ட முநிவர்கள் கூறுவார்கள்.

வாராய் சங்கரபாண்டிய ராஜனே, நாங்கள், ஸ்ரீராமநாதனுடைய மகிமையையும் அவர் அருட்பிரசாதத்தையுமறந்து. உன்னை அக்கினியில் வீழும்படியாய் பரிகாரஞ் சொன்னோம் காயாம்புவண்ணனால் நியமிக்கப்பட்ட சேதுதநுக் கோடியையும், ஸ்ரீராமநாதனையுங் கண்ணினாற் கண்டாலும் சொல்லுதற்கரிய பாபஞ்

களெல்லாம்பறந்து மோக்ஷத்தைகொடுக்கு மாதலால்இப்போது உரைத்த அசரீரியின்வண்ணம் சேதுஸ்நானஞ் செய்துகொண்டு வரக்கடவையென்று நன்கு மதித்தவர்களாய்ச் சங்கரபாண்டிய னுக்கோதஅவனும்மகாசந்தோஷத்துடனே, பெரியோர்களாகிய முனிவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மதுராபுரிக்குவேவு காரர்களை யனுப்பி பட்டஸ்த்ரீ முதலியவர்களையும், வேண்டிய திரவியங்களையும் இரதகஜ துரகபதாதிகளையும் வருவித்துஅவ ணிருந்தே தானும் இரதாரூடனாய்ச் சயின்யங்களோடும் பிரயா ணப்பட்டு, காடு, மலை, வனம், வனாந்திரம், காறு முதலியயா வுங் கடந்து அச்சேதுவின் மத்தியிலோங்குங் கந்தமாதனச் சா ர்பில்வந்திறங்கினார்கள். அவ்வாறிரங்கிய சங்கரபாண்டியராஜன் அன்று முதல் மகாநியமத்தோடும், விரதமனுட்டித்துக்கொண்டு சேதுதநுக்கோடியில் சங்கற்பவிதியின்படி பிரதிதினம், திரிகால மும் ஸ்நானஞ்செய்து வேண்டிய கானங்களைச்செய்து இராம நாதனை வேண்டி அபிஷேகஞ் செய்து ஆடையா பரணங்களைத் திருத்தி ஆராதனை முதலிய உபசாரங்களைச்செய்து பிராம்மண சந்தர்ப்பணைமுதலிய யாவும்நடத்தியாதுங் குறையின்றிஅசரீரி புகன்றவண்ணம் நடாத்தி வருகையில் அப்படி நடாத்தும்நாட் களில் முந்நூற்றறுபத்தைந்தாநாள் மாலையில் ராமநாதனுடைய சந்நிதானத்தில் தோத்திரஞ் செய்து கொண்டுநிற்கும் சங்கரபா ண்டியனது முகாரவிந்தத்தினின்றும் பிரம்மஹத்தியானது வெ ளிபபட்டது எப்படியிருந்ததென்னில் முன்னம் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைப் பிடித்திருந்த இராவண னுடைய பிரம்மஹ த்திக்கு இளையதென்று சொல்லத்தக்கதாய் நீருண்டமேகத்தை ப்போன்ற தேகமும், மூன்றும்பிறையைப்போன்ற வக்ரதந்தங்க ளும் சிவந்தமயிரும் கோரைமீசையுமுடைய அகோர ரூபத்தோ டும், கோவென்றலறிக்கொண்டே வெளிப்பட்டதைக்கண்டுஸ்ரீரா மநாதனுடைய அநுக்ரகத்தினாலே, காளவயிரவன் சூலகபாலத் தோடுமெழுந்து பிரம்மஹத்தியைக் கொன்று உதிரபானஞ் செ ய்து அதன்சடத்தைச் சமுத்திரத்தி லெறிந்துவிட்டான்இவ்வா றுபிரம்மஹத்தியானது அரசனைவிட்டு நீங்கியவுடனே அரசன் மீது ஸ்ரீராமநாதனுக்குக் கிருபையுண்டாகி ஆகாயவீதியிற்பார் வதி சமேதராய் விடையின் மீதெழுந்தருளிக் காட்சிதந்து கூறு வார். ஓ பாண்டியராஜனே உன்னைப் பற்றியிருந்த பிரம்மஹத்தி தோஷமானது இன்றோடே நீங்கிவிட்டபடியால் இனிமேல் உன

க்குவேண்டிய வரத்தைக் கேளென்றுகூற அப்போது வேந்தன் மகாசந்தோஷத்தையடைந்து ஆகாயவீதியில் விடையின்மீ தெழுந்தருளியிருக்கும் சிவபெருமானைக்கண்டு ஆனந்த பரவசனாய் அஷ்டாங்க பஞ்சாங்கனாய்ப் பணிந்தெழுந்து தனதிருகரங்களையுஞ் சென்னிமேற்கூப்பி அஞ்சலியஸ்தனாய்நின்று அநேக தோத்திரங்கள் செய்து ஆனந்தக் கூத்தாடிச் சொல்லுவான் சுவாமி சந்திர ஜடாதரமூர்த்தியே தேவரீருடைய பாதாரவிந்தத்தைக் கண்டு தரிசித்த எனக்கு வேறே என்னவேண்டி இருக்கின்றது. ஆயினும் அரிபிரமாதிகளாலே அறியப்படாத உமது பாதாரவிந்தத்தை எப்போதும் அடியேன் தெரிசிக்கவும் இறுதிக்காலத்திற் பிறவா முத்தியையடையும்படியாகவும் இவ்வுலகின் கண் இருக்கு மளவும் யாதொரு வினையும் அணுகாம லிருக்கும்படியாகவும், கிருபைசெய்து ரட்சிக்கவேண்டுமென்று கேட்டான். அப்படிகேட்ட பாண்டியன் கருத்தின்படியே பரமசிவன்வரங்களைத் தந்து இராம லிங்கத்திற் கலந்து மறைந்த தன்மையைப் பாண்டியன்கண்டு, சகலமான பேர்களுடனேயும், ஸ்ரீராமநாதனைவணங்கித் தோத்திரஞ்செய்து விடைபெற்று அவணின்றும் பிரயாணப்பட்டு, அநேக சேனைசயின்யங்களோடும் காடு மலை முதலியயாவுங்கடந்து மதுராபுரி பட்டணம் வந்துசேர்ந்து வனத்திற் றவஞ்செய்து கொண்டிருந்த பெரியோர்களைக் கண்டு தெரிசித்து, அவர்களிடத்திலே நடந்த சவிஸ்தாரங்களையெல்லாஞ்சொல்ல அதற்கு அவர்களும் சங்கரபாண்டியனது மனஉறுதிக்கும் அன்புக்கும் ஸ்ரீராமநாதனுடைய கிருபைக்கும் மகிழ்வுற்றவர்களாய் பின்பு அவ்வேந்தனை, தங்களது ஆனந்த பாஷ்பமென்னுந் தோயத்தால் அபிஷேகஞ் செய்துவைத்து வேண்டியவரங்களைக் கொடுத்து, சகஜீவியாய் இராச்சிய பரிபாலனஞ் செய்து வரக்கடவையென்று ஆசிகூறியனுப்ப அவ்விடையையேற்றசங்கர பாண்டியன், மனக்களிப்போடும்மதுராபுரியை யரசாண்டுஇஷ்ட போக பாக்கியங்களை அநுபவித்துக்கொண்டிருந்து வெகு காலத்துக்குப்பிறகு தன்னுடைய குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து இராஜரீகஞ் செய்யும்படியாயமர்த்தித் தான்துறவாசிரமத்தையடைந்து ஸ்ரீ ராமநாதனுடைய பாதமூலாகிய சாயுச்ய பதத்தையடைந்தான் கேட்டீர்களோ மஹாருஷிகளே, இவ்வண்ணம் இராமேச்சுரமென்னுந் தலத்தின் பெருமையை யாவரால் அளவிட்டுச்சொல்லக்கூடும். இஃதல்லாமலும், சுந்தரபாண்டியனும், இப்படியே வாசஞ்செய்து, சேதுமாதவனைக் காணப்பெற்

ருமென்றுஞ் சூதமகாமுனிவர்சொலல, அதைக்கேட்ட நைமி சாரண்யர்கள், சுவாமி தேவரீர் அப்புண்ணியனது பெருமையை யும் அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, அதற்குச் சூதமகாமுனிவர், உளமகிழ்கொண்டவராய் சொல்லத்தொடங்கினர்.

சங்கரபாண்டியச்சரித்திரம்.

முற்றிற்று.



௬௬-வது

## சேதுமாதவதீர்த்தச் சரித்திரம்.

—◇—(*)—◇—

கேளுங்கள், நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே வை கை வளநாட்டிலுள்ள மதுராபுரிக் கிறைவனாகிய சுந்திர பாண் டியனென்னும் அரசன், மனுநீதிவழுவாது இராச்சியபரிபாலன ஞ்செய்து வருநாளில் சகலதேவர்களையும், ஸ்ரீகைலாசத்தில், நந் திதேவர் எவ்வித மிடைவிடாமற் காத்துவருகின்றனரோ, அது போல் இவ்வேந்தனும் கூடன்மா நகரமென்னும், மதுராபுரி பட் டணத்தி லுள்ள மன்னுயிர்களைத் தன்னுயிர்போற் காத்தும், பெரியோர்களாலே சேதுமான்மியங்களையும், ஸ்ரீராம நாதனு டைய கிருபானுக்ரகங்களையும் கேள்விப்பட்டும் தானும் அந்த ராமேச்சுரத்திலே சிலநாள் வாசம்பண்ணவேண்டியதாய் மனதி ல் நினைத்து, அதுபோற்றனது குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து, அரசாண்டு வரும்படியாய்க் கட்டளையிட்டுப் பின்தன துபட்டத்துத்தேவிமார் முதலியரோடும் மந்திரிகளோடும், இர தகஜதுரகபதாதிகளோடும், இரதாரூடனாய்ப் பிரயாணப்பட்டு காடு, மலை, வனம், வனாந்தரம், காறுை முதலிய யாவுங்கடந்து சேது மத்தியிலோங்கும் கந்தமாதனகிரிச்சாரில், இராமேச்சுர மென்னுந்தலத்திற் சேர்ந்து, சங்கர பாண்டியனைப்போல இச்சு ந்திர பாண்டியனும், அநேகங் கோடியாய்ப் பொன்களை வாரித் தானஞ்செய்து, சேதுதனுக்கோடிமுதலிய புண்யதீர்த்தங்களில் சங்கற்ப விதிப்படி தீர்த்தமாடி, ஸ்ரீராமநாதனுக்கு அபிஷேக முதலிய ஆராதனைகள், நிதமும் ஆயிரம்பொன்னுக்குக் குறைவு படாமல் நடப்பித்து, திரிகாலமும் வணங்கிச் சேவைசெய்துகொ ண்டு வருகிறநாளையில், அப்பாண்டியன் ஸ்ரீமகா விஷ்ணுவைக் குறித்துக் சகலரும்அதிசயிக்கும்படியாய் ஒருயாகஞ்செய்யநினை

த்து தனது பட்டத்துத்தேவியுடனே, சேதுதநுக்கோடியிற் சங்கற்பவிதியின்படித் தீர்த்தமாடி அநேக தானதருமங்களைச் செய்து வேதாகமவிதிப்படி யாகத்தைமுடித்து, அநேகந் தேவப்பிராம்மணருக்கு சொர்ணமாரி பெய்வதுபோல் வேணமட்டுந் தானதருமங்களைச்செய்து, ஸ்ரீராமநாதனைப் பிரதக்ஷிணம் பண்ணி நமஸ்காரஞ்செய்து, இவ்வாறே நெடுநாளாய் அத்தலத்தைவிட்டுப்போக மனமில்லாதவனாய், அவ்விடத்திற்றானே வாசஞ்செய்துகொண் டிருக்கும்போது, சேற்கெண்டையைப்போல் அழகிய கண்களையுடைய மகாலட்சுமியானவள் இந்தப் பாண்டியனைச் சோதிக்கவேண்டிய தாய் கந்தமாதனத்தைச்சேர்ந்து சிறுகுழந்தையைப்போல் வடிவங்கொண்டு சேது தநுக்கோடிக் கரையிலே விளையாடிக்கொண்டிருந்தாள்.

அப்படி யிருக்கையில், அன்றையதினம் சுந்தரபாண்டியன் வழக்கப்படி சேது தநுக்கோடியில் தீர்த்தமாடி, அனேகதானதருமங்களைச்செய்து முடித்துக்கொண்டு புறப்படும்போது, மயிலைப்போன்ற சாயலும் குயிலைப்போன்ற இனியமொழிகளுமுடைய குழந்தைபருவத்தோடுங்கூடி விளையாடிகொண்டிருக்கும் இலட்சுமிதேவியைப் பாண்டியராஜன்கண்டு சந்தோஷமும் ஆச்சரியமுங்கொண்டு விந்தாவாணியுடனும், அக்குழந்தையை நோக்கி ஓ குழந்தாய், நீயார் உனது தாய்தந்தைகள் பெயரென்ன, எந்தவூர் நீ யிருப்பது என்றுகேட்க, அப்போது மகாலட்சுமியாகிய பெண் சொல்லுவாள் வாருமையா ராஜனே, என்னைப்பெற்றவர்கள் ஒருவருமில்லை என்னுடன்பிறந்த சகோதரர் ஒருவருண்டு அவருஞ் சுடுகாடு போய்ச்சேர்ந்தார். அதன்பேரில் யான் யாதொரு கதியுமில்லாமலிருக்கின்றேனாதலால், என்னை ரட்சிக்கமாட்டுவீரோ வென்றுகூறினாள்.

அவ்வார்த்தையைச் சுந்தரபாண்டியன் கேட்டுச் சந்தோஷத்தையடைந்து ஓ குழந்தாய் எனக்கோர் ஆண்குழந்தை யிருக்கின்றது, பெண்குழந்தையில்லாமல் உன்னை எனது குழந்தையாகச் சந்தேகமில்லாமல் வளர்த்து வருவேனென்று மிக அன்போடும் எடுத்து தன்னுடைய பட்டத்தேவியான விந்தாவாணிகையிற் கொடுத்தான். விந்தாவாணியும் மகாசந்தோஷத்தோடும் அக்குழந்தையைவாங்கி மார்போடணைத்து, உச்சியை முகந்து முத்தமிட்டுக்கொண்டு இரதகஜதுரகபதாதிகளோடும்,

பதினெட்டுவகை மேளவாத்தியங்கள் முழங்கும்படியாய் பொன்னம்பாரிவைத்திலகாநின்ற யானையின்மீது வைத்துக்கொண்டு தனதிருப்பிடம் போய்ச்சேர்ந்து நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாய் வளர்த்து வருகையில், மகாலட்சுமியாகிய பெண்ணானவள் விந்தாவாணியினது கரங்களைத் தாமரைமலரைப்போற்கருதி அதில் வாசஞ்செய்திருப்பதோடும் சுந்தரபாண்டியனுக்கு நாளுக்குநாள் அஷ்டபோகபாக்கியங்களை அளவு சங்கையில்லாமற் கொடுத்திருக்கையில் ஸ்ரீவைகுந்தவாசராகிய நாராயணமூர்த்தியானவர் இலட்சுமியைப் பிரிந்த துயரத்தால் மெலிந்து எங்குந்தேடித்திரிந்துங்காணாதவராய், கமலாசனமாகிய தாமரைப்பூவிற்குள் ஒளித்துக்கொண்டிருப்பாளென்று, எண்ணங்கொண்டவராய் மகாவிஷ்ணுவானவர் வண்டைப்போலுருக்கொண்டு எங்கெங்கு தாமரைபுட்பித் திருக்கின்றதோ அவ்விடங்களெல்லாஞ்சென்று புட்பங்களிற் புகுந்து இதழிதழாகப் பரிசோதனைசெய்துங் காணாமையால், ஞானத்தைமறந்து அதிமோகமுற்றவராய் இன்னம் பார்ப்போமென்று அவள் வாசம்பண்ணுகிற சந்திரனிடத்திலும் பரிசுத்தமான வீடுகளிலும், அலர்ந்த புஷ்பமாலைகளிலும் திருமங்கிலியங்களிலும் அழகிய ஸ்திரீகளினது முகாரவிந்தங்களிலும் புண்ணிய புருஷாளிடத்திலும், கெருடன்மீதேறி அதி விருப்பத்தோடும், சகல லோகங்களிலுந் தேடிப்பார்த்துங் காணமற்றிகைத்துத தன்மனதில் அடடா நாம் முன்னொருகாலத்தில் இலங்கைவேந்தனாகிய இராவணனைச் சங்காரஞ்செய்து வரவேண்டியதாய் உண்டாக்கிய சேதுவைப்போய்ப் பார்த்துவருவோம் அதுதான் அவளுக்கு வாசஞ்செய்யத்தக்க விடமென்று யோசித்தவராய்க் கருடன்மீதேறி அதிதீவிரமாய் சேதுமத்தியில் விளங்குங் கந்தமாதனச்சாரலில் வழங்கும் இராமேச்சுரமென்னுந் தலத்திற் சேர்ந்து, அதியாவலோடும் அத்தலத்திலுள்ள பூங்காவனச்சோலைகளிலுந் தாமரையோடைகளிலும் பார்த்துக் கொண்டுவருகிறபோது, மகாலட்சுமியாகிய பெண்ணானவள் அநேகந் தோழிப்பெண்களுடன் கூடிப் பூங்காவனத்தைநோக்கிவந்து சேர்ந்து; அவ்வனத்துள் மிக உன்னதமாகவிருக்கும் மலர்களைக்கொய்து விளையாடிக் கொண்டிருப்பதை மகாவிஷ்ணுவானவர் பார்த்து பிரிந்திருந்த தன்மையால் விம்மலும் பெருமலு முண்டாகி மறுபடியும் மனத்தை திடப்படுத்திக் கொண்டவராய் அவ

ணின்று தனக்குத்தானே நாம் நமது சுயரூபத்தோடும் அவளி டஞ் செல்லுவோமாயின் மாய்கையால் ஓடிப்போய்விடுவாளாத லால் மாறுவேடம்பூண்டு நெருங்கிப் பிடித்துக்கொள்ளவேண்டு மென்று கருதினவராய், தன்தேகம் வெண்ணிறந் தோன்றும்ப டியாக பாதாதிகேச பரியந்தம் விபூதியை உத்தூளனமாய்க் கு ழைத்துப்பேசி நெற்றியில் திரிபுண்டரமாய் விபூதி யிலங்கவும் சிரம் தோள் மார்பு கரம் முதலிய விடங்களிலுஞ்சாத்தி உத்தி ராக்ஷங்களைத் தரித்துக்கொண்டவராய் நல்ல வெண்பட்டு வஸ் திரமும் உத்தரீயமுமணிந்து, கையிலே பத்திரம் புனைந்து உல கமுய்து கடைத்தேறும்படியாய்த் தாமொருவகைசெய்து காட் டவேண்டுமென்று யோசித்தவராய் இராம நாதனுக்குப் பிரிய முண்டாகும்படியாயும், முன்னாற் பிரதிஷ்டை செய்யும்போது உண்டாக்கிய கோடிதீர்த்தத்துடனே கங்கை பிரயாகைஎன்னு ம் புண்ணியதீர்த்தத்தைப் பூலோக வாசிகள் எடுத்துக் காவடி கட்டிச் சுமந்துகொண்டுவந்து அபிஷேகஞ் செய்து வைப்பா ர்கள்போலத் தானுமோர் காவடியைத் தோளிற் சுமந்து காசி யாத்திரை செய்துவரும் விருத்தப்பிராமணனைப்போல் மிருதா பசோபத்தோடும், பஞ்சாக்ஷரத்தை இடைவிடாமற் செபித்து க்கொண்டு, பையநடந்து இலட்சுமியானவள் சேடிகளோடுங் கூடி மலர்கொய்து நிற்கும் இடத்திற்கு வந்தார்.

அப்படியாகவந்த பரந்தாமனை, இலக்குமியானவள் பார்த் து யாரோ பிராம்மணனென்று நிற்கையில், நீலமேகவண்ணனா கிய நாராயணன், அப்பூங்காவனத்தைச் சுற்றிப்பார்த்து இலட் சுமிக்குச் சமீபமாகப்போய் தனது பாதங்களை முன்னும்பின்னு மாய்வைத்து, உறுதியாய் ஊன்றிக்கொண்டு மனதை யின்பப் படுத்தினவராய் தமது கரத்தினால் இலக்குமியாகிய பெண்ணை யெட்டிப் பிடித்திழுத்தார். அப்படி யிழுக்கின்றபோது மகா லட்சுமியாகிய பெண் திடுக்கிட்டு நெஞ்சம்பதறிக் கையை யுதறி த்திருகிப் பிடுங்கிக் கொண்டவளாய்த் திரும்பிப்பாராமல், தோ ழிப்பெண்களாகிய செவிலித் தாய்களோடு மோடிச்சுந்தரபாண் டியனை நோக்கி, முறையோவென்று கூக்குரலிட்டழுதாள் அப் படி இலக்குமிப்பெண் அபயமிட்டழுங் குரலோசையைக் கேட் ட பாண்டியன் தனது குமாரத்தியினது குரலோசை என்றறிந் தவனாய் மந்திரிப் பிரதானிகளுடனே ஓடோடியும் அதிதீவிரமா ய்ப் பூங்காவனத்துக்கு வந்து அழுதுகொண்டு நிற்கும் புதல்வி யைக்கண்டு பதைத்துக் கட்டி யணைத்தெடுத்து அம்மணி குழந்

தாய், உன்னையாரென்ன செய்தார்கள். ஏன் அழுகின்ருய், எனதுசெல்வமே என்று கேட்கையில் அவ்வார்த்தையைக் கேட்ட மகாலட்சுமியாகிய பெண் கூறுவாள்.

வாருமையா தந்தையே! அதோ நிற்கின்ற விருத்தப் பிராமணன், எனது கரத்தைப்பற்றி இழுத்தது மன்றியில் இப்போது உம்மைக்கண்டு பயப்படாமல் நிற்கின்ருனென்று மிகப் பொருமலோடும், விம்மலோடும், அழுதுகொண்டே சொல்ல, அச்சொல்லை கேட்டவுடனே பாண்டியன் கண்களிரண்டும் நெருப்புப்பொறி பறக்கவும். தேகம்படபடவென்று நடுக்கவும், மீசைகள் துடிக்கவும் அருகிலிருந்த வேவுகாரர்களையும், மல்லக ஜெட்டிகளையும் பார்த்து அடா தூதர்களே! அதோநிற்கின்ற பிராமணனைப் பிடித்து மடலோடுமட விறுகும்படியாய்ப் பணித்துக் கொண்டு வாருங்களடா வென்று சொல்ல, அதுபோல் அந்த வேவுகாரர்கள் பிராம்மணனை பிடித்து மடலொடிய இருகிக்கட்டித் தள்ளிக்கொண்டே வந்து அரசனிடத்தில் விட அரசன் பிராமணன்மீது கடுங்கோபங் கொண்டவனுய் இவனைச் சிறையிட்டுவையுங்களென்று சொல்ல அதுபோல் அவ்வேதியனை தூதர்களடித்துக் கீழேதள்ளிப் புரட்டி காலில்விலங்குபூட்டி ஸ்ரீராமநாதனுடைய ஆலயத்துக்கு மேற்புரத்தில் ஓர் மண்டபத்தறையி லிழுத்துக்கொண்டுபோய் போட்டு, அவ்வறையைத் தாளிட்டு, அநேகஞ் செட்டிகளைக் காவல்வைத்துப் பத்திரமாய்க் காவல்செய்யும்படி கட்டளையிட்டு, அரசனுக் கரியப்படுத்த அரசன் கோப மடங்காதவனுய்த். தனது குமாரத்தியாகிய இலக்குமியைப்பார்த்து, அம்மணி, நீ இன்றுமுதல் வெளியில்வர வேண்டாம், அந்தப்புரத்திற்ருனே யிருவென்று அரண்மனைக் கழைத்துக்கொண்டுபோய் அவள் மனதைத் தேற்றிச் சந்தோஷிக்கும்படியாய்ச் செய்து, பின் தானும் ஸ்நானமுதலிய ஜபதபங்களை முடித்து ஸ்ரீராமநாதனுடைய சன்னிதானத்துக்குப் போய் கடவுளைத் தரிசனஞ்செய்து அச்சன்னிதானத்தில் பிராம்மணுல் நடந்த அக்ரமத்தையும் இதற்குத் தான் செய்துவைத்த தண்டனையையும் விண்ணப்பஞ் செய்துகொண்டு வணங்கிப் பின்பு அரண்மனை சேர்ந்து அறுசுவை பதார்த்தங்களோடும் போஜனமருந்தி, அம்ஸதூளிகா சயனத்தின்பேரிற்படுத்து நித்திரை செய்தான்.

அப்படி நித்திரைசெய்கிறபோது காவலிற்கட்டுண்டு நிற்கும் கிரியுமாலானவர், வேந்தன்தன்னைக் காவற்படுத்தியதையுணர்

காதலியாகிய இலட்சுமிப்பெண்ணை வெளியில் வராமல் கட்டுப் படுத்தினதையும் தெரிந்துகொண்டவராய் இனி இதற்கென்ன செய்வோமென எண்ணங்கொண்டு தனது கபடநாடக சூத்திரத்திலே சயரூபத்தோடும் சந்திரபாண்டியனுடைய சொற்பனத்தி லெழுந்தருளி, ஆயிரம் பண முடிகளோடுங்கூடிய ஆதிசேஷனுக்கு மத்தியிலே, கேயூரமணி குண்டலங்கள் சூரியப் பிரகாசம்போற்றோன்றவும் நீலமேகம்போன்ற தேககாந்தியும் செம்முருக்க மலரைப்போன்ற இதழ்களும் மார்பினிடத்தில்முத்தாரமுதலிய துளசிமாலை கவுஸ்துவாபரணம் பிரகாசமும் சங்கு சக்கர கோதண்ட கதாகட்டத்தின் ஒளியும் செங்குவளை மாலைகள் மகா வுன்னதத்தோடும் மகா மேருவின்பேரில் அருவிபாய்வதுபோற் பிரகாசிக்கவும் அநேகம் பணிமணிகளுடனுந் திவ்ய பீதாம்பரதாரியாயும் மார்க்கண்டேயர் பிரகலாதனர் நாரதர் முதலிய ஆழ்வாராதிகளெல்லாம் பணிந்து அஞ்சலிசெய்து நிற்கும்படியாகவும் தேவர்கள் புட்பமாரி பொழியவும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் எழுந்தருளி இருப்பதோடுந் தனக்கும்புத்திரியாகக் கிடைத்திருக்கும் மகா லட்சுமிப் பெண்ணானவள், பூரணச் சந்திரோதயம்போன்ற முகாரவிந்தமும் முத்தாபரணங்களும் பொற்பிரகாசம் பொருந்திய மேகலாபரணமுங் கரத்திற் பிரகாசிக்கப்பட்ட தாமரைப் புட்பங்களிலே அஷ்டகஜங்களென்னு மும்மதங்கொண்ட யானைகள் துதிக்கைகளினால் ஆகாய கங்கையையள்ளி யிறைக்கவும் ரம்பாஸ்த்ரீகள் ஊழியஞ் செய்து பணிந்துநிற்கவும் தான் ஜகதீசனைப்பணிந்து கைகுவித்துநிற்கும்படியாய் வனமாலியானவர் பாண்டியனுக்கு தரிசனந் தந்தமாத்திரத்தில் அரசன் அக்கோலத்தைக் கனவிற்கண்டு நித்திரை தெளிந்து திடுக்கென்றெழுந்திருந்து மந்திரிகளை யழைத்துத் தான்கண்ட சொற்பனத்தைச் சொல்லி மகா ஆச்சர்யத்தோடுந் தனது புத்திரியிருக்கும் அந்தப்புரத்திற்குச் சென்று பார்க்கும்போது தான் சொற்பனத்திற்கண்ட உருவம் போலப் பிரத்தியட்சத்திலுந் தன்னுடைய கண்களுக்குத் தோற்றக்கண்டு பிரம்மானந்தங் கொண்டு அக்கணமே தன் குமாரத்தியாகிய இலக்குமியை அழைத்துக்கொண்டு, ஸ்ரீராம நாதனுடைய சன்னிதானத்துக்கு மேற்பாரிசத்தின் மண்டபத்தறையிற் காவற்படுத்திவைத்திருந்தும் பிராம்மணனைப் பார்க்கும்போது கனவிற்கண்டதுபோல ஸ்ரீமந் நாராயண மூர்த்தியினுடைய சொரூபம் பிரத்தியட்சமாய் விளங்கக் கண்டு, சந்திர குலாதிபதியாகிய

சுந்தரபாண்டியராஜன் ஆச்சர்யமடைந்து, ஆனந்தபரவசமுற்ற தோடும் துக்கமதிகரித்துக் கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகும்படியாய்நின்று அநேகதோத்திரங்களைச் செய்து ஓ பரந்தாமா, ஆதிமத்யாந்தாதிகா, அச்சுதா அடியேன் அநேகஜென்மங்கடோறு மெடுத்த இவ்வுடற்சிறையை நீக்கமாட்டாத யான்தேவரீருடைய சரணும்புயங்களில் விலங்கிட்டும் அடித்தும் பிடித்தும் தொந்திரவுசெய்ததன்றியும் சராசரங்களையெல்லாம் யீன்றெடுத்த தாயாகிய மகாலட்சுமிக்கு பலைக்குடிலையொத்ததேகத்தோடுங்கூடிய யான் தாய் தந்தையைப்போற் பாவித்துப்பண்ணிய அபசாரம் எவ்விதம் நீக்கிக்கொள்ளப் போகின்றேன் தேவோத்தமா, தேவதாசார்வபௌமா, ஸ்ரீ அகிலாண்டகோடிபிரம்மாண்டநாயகா, சங்குசக்ராயுதா, பாண்டவசகாயா, காயாம்பூவண்ணமச்சகூர்மா, வராகநரசிம்மா, வாமனு, பரசுராமா, ஸ்ரீராமச்சந்திரா கிருஷ்ணு. கற்கியாவதாரா, சகலலோகரக்ஷகா, சர்வசீவபரிபாலனு பக்தப்பிரியா, பாகவதரக்ஷகா, அநாதரக்ஷகா கேசவா க்ஷீராப்திசயனு மாயாசொரூபா கபடநாடக சூஸ்திராவென்று வேந்தனுகிய பாண்டியன் மகாவிஷ்ணுவைப் பலவாறுகத் தோத்திரஞ்செய்து அதன்பின் தன்னருகே நிற்கும் இலட்சுமிதேவியைப்பார்த்து அம்மணீ சகலலோக நாயகியாய் ஆன்மகோடிகளுக்கு அழகு செல்வம் கல்வி புண்ணியம் புநிதம்போக பாக்கியம் யாவும் நீயாய் விளங்கியும் இக்கடையேனை யொருபொருட்டாக மதித்து எளியேனிடம் பொருந்தியிருந்த காரணம்யாதோ, எனது தவப்பெருமையே செல்வமே வேதமேவேதாந்தமே வேள்வியே வேள்விப்பயனே வேதசொரூபியே மெய்ஞ்ஞானமே மெஞ்ஞான மணிவிளக்கே ஜெகன்மோகினியே ஜகத்ரட்சகியே என்றுதுதித்து அடியேன் அறியாமையினுல் இதுவரையிற் செய்திருக்குங் குற்றங்களை எல்லாம் எவ்வாறு நீக்கிக்கொள்ளப் போகின்றேண்.

என்செய்வேன்என்று துக்கசாகரத்துட்டோய்ந்துகைகளை நெறித்து துன்பப்படும்போது ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் மிகவுஞ்சந்தோஷத்தையடைந்து அரசனை நோக்கிவாராய்சந்திரகுலோத்துங்கனுகியசுந்திரபாண்டியனே! நீஒன்றுக்கும்பயப்படவேண்டாம் எனக்கு உன்னுல்நேரிட்ட தண்டனையைப்பற்றிஉன்மீது யாதொரு குற்றமும் என்மனத்திற் கொள்ளவில்லையேனெனில் உன்னைப்போன்ற அன்பர்கள் இத்தலத்தில்எனக்குச்செய்

யும் அபசாரங்களெல்லாம் எனக்குச் சுகிர்தமாகவே யிருக்கும் அஃதெப்படியென்றால் இப்போது நீ என்னைப்பிடித்து அடித்து இறுக்கிக்கட்டச்சொன்ன தண்டனையானது மந்தாரம் பாரிஜாதமுதலிய புட்பங்களால் அர்ச்சனைசெய்ததுபோலும், காலிற்பூட்டிய விலங்கானது நவரத்தினகசிதமாகிய கிண்கிணிமுதலிய சிலம்பைப்போலும், சிறையிடச்செய்த இடமானது அன்புபொருந்திய உனது இதயகமலமாகிய கோயிலாகவும், ஒப்புக்கொண்டோம், ஏனெனின் நீ இத்தலத்தில் அன்போடும் வாசஞ்செய்வதன்றியில். நம்மைக்குறித்து யாகஞ்செய்து முடித்தபடியால் இத்தலத்தில் பத்தர்களாயிருப்பவர்கள் செய்யுந் தீங்குகளெல்லாம் சிறப்பாகவும், வைபவைகளெல்லாம் வாழ்த்துதலாகவும் ஒருதருமஞ்செய்யில் அவை கோடிதருமமாகவும் பாவிப்போமாதலால் நீ செய்துவரும் பக்தியைவேண்டி நமது தேவியானவளை நின்னிடம் முன்னனுப்பி யாம்பின்வந்தோம் ஆமளவும் யாதொரு குற்றங்களு மில்லாமல் அவள் மனதின்படி நடந்துவரும்நாளிலோர்நாள் நீ அவளைப்பார்த்து, அம்மா என்மனப்பூர்வகமாய் உன்னைவெளிவிட மாட்டேனாதலால், நீ என்புத்திரியைப்போல அரண்மனையிற்றானே யிருவென்றுசொல்ல, அதற்கவள் ஐயா என்னையாவரேனும் வந்து துராக்ருதமாய்க் கொண்டுபோய்விட்டால் என்செய்வாயென்றுகேட்க, அதற்கு நீ அம்மணி உன்னை என்னுடைய செங்கோலின்றிறந்தால் ஒருவரும் நெருங்குவதற்கு பயப்படுவார்களென்று நீ சொல்லியிருந்தவண்ணம், அறிவோமென்று யாம் உருவமாறி வேடந்தரித்து பூங்காவனத்திற் சேடிகளோடிருந்த உன்புத்திரியைக் கையைப்பிடித்திழுத்துச் சோதிக்கவந்து சம்பவித்ததை யெல்லாம்பொறுத்து மகாசந்தோஷத்தை யடைந்தோம்

அன்றியும் எனதுதேவியை நீ உனது குமாரத்தியாகப்பாவித்து வளர்த்தமையால் நாம் உனக்கு மருமகனாகவேண்டும் இதுமுதல் என்றைக்கும் அஷ்ட ஐசுவரியத்தோடிருந்து இறுதிகாலத்தில் நம்மைப்போற் சொரூபம்பெற்றும் வைகுந்தவாழ்வையடையக் கடவையென்று வரமளித்துப் பின்னுஞ் சொல்லுவார். ஓ அரசே, நீ நம்மை இலக்குமின் பொருட்டாய். அடித்து பிடித்துத் தொந்திரவுசெய்து விலங்கிட்டுவைத்த இவ்வறையிலே என்றைக்கும் நாம் இவ்வுருவத்தோடும், வாசம்பண்ணிக்கொண்டிருப்போம் ஆதலால் நமக்குச் சேதுமாதவனென்

னும் நாமதேயம் விளங்கிக்கொண்டிருக்கும்படியாய் சதாகால மும் இவணிருப்பது யாதுகாரணமெனில், நம்மாற்புதுக்கப்பட் ட சேதுவைப் பரிபாலனஞ் செய்யவேண்டியதினாலும், பிரம்மா தி தேவதைகளும், இந்திராதி தேவர்களும், ஸ்ரீராமநாதனும் இத்தலத்தில் வாசஞ்செய்துக்கொண்டிருப்பதினாலே நாமும் இவ்விடத்திற்றானே வாசஞ்செய்யவேண்டுமென்னும் அவாவுற் றிருக்கின்றோமாதலால், நம்மை இவ்வுருவத்தோடும் யாரொரு வர் தரிசிக்கின்றார்களோ அவர்கள் அநேகந் தடவை கங்கை, பிரயாகை, யமுனை முதலிய தீர்த்தங்களாடி வந்தபலனும் சே துதநுக்கோடியில் ஸ்நானஞ்செய்து, இராமநாதனை தரிசித்த பலனும் பெறுவார்கள்.

அவ்வாறு தரிசிக்காதபேர்களுக்கு சம்பவித்திருக்கும் பல ன்களும் வியர்த்தமாம் இதன்றியும் யாரொருவர் கெங்காஸ் நானத்துக்குப்போய்க் கங்கையைக் கொண்டுவந்து ராமநாத னுக்கு அபிஷேகஞ்செய்ய எத்தனித்தாரோ அவர்களும் நம் மைதரிசியாமற் போவாராயின் யாதொரு பலனுஞ் சித்தியாக மாட்டாது. தரிசித்தால் எல்லாப்பலனும் பூரணமாய் இஷ்ட சித்தியைப் பெறுவார்களென்று வரப்பிரசாதமளித்து மகா லட்சுமியுடனே இருவரும்மாயையாய் மறைந்தார்கள் அப்பாற் சுந்தர பாண்டியராஜனும் அன்று முதற் சேதுமாத வருக்கு ஆலயம்புதுக்கி தீர்த்தமுண்டுபண்ணி தான் தண்டனைசெய்த உருவம்போற் பிரதிஷ்டைசெய்து அபிஷேக ஆராதனையாவும் நடப்பித்துதான்செய்தஅபசாரமெல்லாந் தீரும்படியாய்க்கந்த மாதனத்திலேசிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து அபிஷேகமுதலிய நிவேதனங்கள் நடப்பித்து ராமனுடைய பாதாரவிந்தத்தில் ச தாகாலமும்பணிவிடைசெய்துக்கொண்டிருந்துதனதுபட்டண மாகியமதுராபுரியைத்தனதுகுமாரன்அரசாண்டுவந்தமையால், தான்அக்கந்தமாதனத்திற்றானேவாசஞ்செய்திருந்து சிலகாலத் துக்குபிறகுஅவனும் அவனுடைய தேவியாகியவிந்தாவாணியுஞ் சாயுஜ்யமென்னும்பரமபதத்தையடைந்தவர்களாதலால்அப்பே ர்க்கொத்தசேதுமாதவரைத்தரிசித்த அநேகம்பேர்கள்சேதுயா த்திரையைப்பூரணயாத்திரையாகவடைந்துமேலானபதவியைப் பெற்றிருக்கின்றார்கள் கேட்டீர்களோமகாரிஷிகளே இந்தராமே ச்சுரத்தலமகிமையென்று சூதமகாமுனிவர்சொல்லஅதைக்கேட் டமுனிவர்கள்சந்தோஷத்தையடைந்து சூதமாமுனிவரை நோ

க்கிசுவாமி இவ்வளவுமகிமைபொருந்திய இராமேச்சுரதலத்தை நோக்கிப் பிரயாணப்பட்டுச் சேதுயாத்திரைசெய்து முடிக்குங் கிரமமெப்படியோ, அதனைத் தேவரீர் அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்கச்சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

சேதுமாதவ தீர்த்தச் சரித்திரம்

முற்றிற்று.

## சேதுயாத்திரைச் சரித்திரம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே! நெடியகடல்சூழ்ந்த இவ்வுலகின்கண் தட்சிணபாகத்திலோங்குஞ் சேதுவுக்குப் போகவேண்டி எண்ணமுற்ற புண்ணியர்கள் தங்களுக்கியன்றமாத்திரம் வேதாகமங்களையுணர்ந்த பெரியோர்களாகிய பிராம்மணர்களுக்கு கோதானங்களும் தட்சிணைகளும் போஜனங்களும் நடப்பித்து தவள்மாகிய விபூதிருத்திராக்ஷமாலிகாபரணங்களையணிந்து அங்குலியாகிய விரல்களுக்கெல்லாம் பவுத்திரமோதிரங்களைப்பூண்டு, ஒரேமனதாய்ச்சேதுயாத்திரை செய்யவேண்டுமென்று சங்கற்பஞ்செய்து தமது கிருகத்தை விட்டு பிரயாணப்படும்பொழுது, பக்திசிரத்தையோடும் வாய்மவுனத்தோடும் காமக்குரோத லோபமோக மதமாச்சரியங்களைப்போக்கி தங்களது கரத்தில் யாதொரு ஆயுதங்களையும் குடையுமில்லாமலும் பாதத்தில் தொடுதோல் பாதுகையில்லாமலும் வாயிற்றாம்பூலந்தரியாமலும், தலைக்கு எண்ணெய் முழுக்கில்லாமலும், ஸ்த்ரீகளுடைய சங்கற்பங்களையும்நீக்கி நன்மார்க்கமாய் ஓரேபோது போஜனஞ் செய்துக்கொண்டு செல்லும் மார்க்கங்களில் வீண்வார்த்தைகள் பேசாமல், பஞ்சாக்ஷரத்தையும், அஷ்டாக்ஷரத்தையும் இடைவிடாமற் செபித்தும் சேதுமான்மியத்தையும் புண்ணிய கதைகளையும் பேசிக்கொண்டும் அரிபூசை சிவபூசைகளைத் தப்பாமலும், ஒருவரிடத்திலேயிருக்கும் பொருளை ஆசிரிக்காமலும், அக்கினிஹோத்திர வேள்வி தன்தவறாமலும், அதிதிகளுக்குத் தம்மாலியன்றமாத்திரம் அறு

சுவைப்பதார்த்தங்களோடும் அன்னமளித்தும், அறிவுடையோ ர்களாகிய பெரியோர்களுக்கும் வேதாந்திகளுக்கும் திருப்தி யடையும்படியாய் தன்னாலியன்றதை யுதவிசெய்தும் சேதுவி னிடம்போய்ச் சேர்ந்து வருணபகவானைப் பிரார்த்தனைசெய்து ஆசமனார்க்கியங் கொடுத்துச் சந்திதானம் புரிந்து சமுத்திரரா ஜனைப் பூசைசெய்து வணங்கி, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைவண ங்கித் தோத்திரம்பண்ணி அநுமதிப்பெற்று நளன், சாம்புவன், சுக்ரீபன், அங்கதன், விபீஷணன், அனுமார், இலட்சுமணன், சீதை, இராமச்சந்திரன், நாரதன், பிரகலாதனன், அம்பரீஷன், பராசன், வியாசன், சுகர், வாமதேவர் முதலியபேர்களைச் சிந்தி த்துத் தோத்திரஞ்செய்து, இரண்யசிங்க மந்திரத்தைத்தியான ஞ்செய்துசங்குசக்கரத்தையுடையமகாவிஷ்ணுவையும்மான்மழு சதுர்ப்புஜகாளகண்டதிரிநேத்திரமுடைய பரமசிவனையும்இதய த்தில் நிறுத்தி வேதமந்திர பிரணவங்களையுச்சரித்து சேதுமூல த்திலேஸ்நானம்பண்ணியெழுந்தபின்சூரியபகவானைத்தோத்திர ஞ்செய்துமறுபடியுமோர் தடவைதீர்த்தமாடி நியமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு, பின்புஅவணின்றும் பிரயாணப்பட்டு தர்ப் பசயனத்துக்குவந்து, அவன் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை வணங்கி அநுமதிபெற்றுக்கொண்டு, உத் தர பாகத்திலிருக்கும் தேவிபுரத்துக்குப்போய் நவபாஷான பூ சைபண்ணி அவ்விடத்திலும் சேதுமூலத்திற் செய்தபடி சங் கற்பவிதிகளை நடப்பித்து ராமச்சந்திரன், இலட்சுமணன், சீ தாதேவி, வருணராஜன், கண்ணுவன், சாம்புவன், அநுமான், சுக்ரீவன், அங்கதன், நளன், கணேசன், இடபன், மகாயோகி கள், ரிஷிகள், சித்தர்கள், பிதுர் தேவதை முதலிய யாவருக் கும், தனது மனோபீஷ்டப்படியாய்த் தர்ப்பணஞ்செய்து மந்தி ரவிதிவசத்தால் நடப்பித்து அப்பாற் கரைமீது வந்து ஈரவஸ்தி ரத்தைக் களைந்து நல்ல பட்டுவஸ்திரந்தரித்துக்கொண்டு ஆச மனஞ்செய்து, வேதாகமத்தின் வண்ணம் தேவர்களையும், பி துர்களைக்குறித்து வேதப்பிராமணர்கள் சிராத்தங்கள் நடப் பித்து அவர்களுக்கு அன்னதானம் கோதானமுதலிய சொர்ன் னதானங்களைச்செய்து, அவணின்றும் நீங்கி சக்கர தீர்த்தமுத லாய் நாம்சொல்லிவந்த தீர்த்தங்களில் இலட்சுமணதீர்த்தம் வ ரையிற் சங்கற்பவிதியின்படி ஸ்நானஞ்செய்து ஜபதபங்களை முடித்து அப்பால் இலட்சுமண தீர்த்தத்திலே மயிர் முடிகளைந் து இராமதீர்த்தமுதலாய் அக்கினி தீர்த்தம்வரையிலும் சங்கற்

பவித்தியின்படியே ஸ்நாநம்பண்ணிப், பின் தங்களாலியன்றமாத்திரந் தானதருமஞ்செய்து பின்பு அக்கினிதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து தேவதைகளுக்கும் பிதுர்க்களுக்கும் சிராத்த பிண்டங்கள்செய்துமுடித்து, பெரியோர்களாகிய பிராம்மணர்களுக்கு மகிழ்வுண்டாகும்படியாய் கோதானம், பூதானம் கன்னிகாதனம், சொர்ன்னதானங்களும் செய்து அதன்பின் சக்கரதீர்த்த முதலிய தீர்த்தங்களிளெல்லாம், சங்கற்பத்தின்படித் தீர்த்தமாடி அப்பால் இராவணனைக்கொன்ற பிரம்மஹத்திதோஷம் நீங்கும்படியான ராமநாதனுடைய பாதாரவிந்தத்தை வணங்கித் தோத்திரஞ்செய்து சேதுமாதவரையும் ஸ்ரீமந்நாராயணரான இராமச்சந்திரன் சீதாதேவி இலட்சுமணன் இவர்களைப்பணிந்து பின்பு கந்தமாதனச்சார்பிலே யுண்டாயிருக்குந் தீர்த்தங்களிளெல்லாம் விதிப்படியே ஸ்நாநம்பண்ணி ராமநாதனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு மகாதேஜஸோடுங்கூடி விளங்குந் தநுக்கோடியிற் போய்ச்சேர்ந்து நியமப்படி விதிமுறைதப்பாமல் சங்கற்பஞ்செய்துகொண்டு தீர்த்தமாடி நித்யகர்மாநுஷ்டான ஜபதபங்களைமுடித்து சிராத்த பிண்டங்கள் கோதானம் பூதானம் கன்னிகாதானம் வஸ்திரதானம் சொர்ன்னதானம், அசுவதானம் கஜதானம் முதலிய தானங்களெல்லாஞ்செய்து, இப்படியே கோடிதீர்த்தத்திலுந் தீர்த்தமாடித் தானதருமங்கள்செய்து ஸ்ரீராமநாதனுக்குந் தம்மாலியன்றளவில் அபிஷேக ஆராதனைகள்செய்து ராமநாதனைவணங்கித் தோத்திரம்பண்ணி அவருடைய பூசைக்குபகரண முதலாய் சந்தன புட்ப ஆடையாபரணாதிகளை அவர்களுக் கிசைந்தமாத்திரங் கொடுத்துப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு பொன்போற் பிரகாசியாநின்றசங்கு சக்கரபாணியாகிய சேதுமாதவரையும் சூலகபாலப் படையையுடைய காளவயிரவரையும் வணங்கித்துதித்து விடைபெற்றுக்கொண்டு முன்பு யாம்சொல்லியிருக்கும் நியமந்தப்பாமல் தம்முடைய தேசம்போய்ச்சேர்ந்து பிராமணர்களுக்கு அன்னதானமுதலிய பற்பல தானங்களுஞ்செய்து விடைகொடுத்து பிறகு தாங்கள் தங்கள் புத்ரமித்ரகளத்ராதி வர்க்கத்தோடுஞ் சிஷியவர்க்கத்தோடும் போஜனம்பண்ணி யாத்திரையைப் பூரணமாய் உத்யாவனஞ் செய்துகொள்ள வேண்டுமாதலால், கேளுங்கள் முநிவர்களே, இவ்வண்ணம் சேதுயாத்திரைசெய்தவர்கள், ராமநாதனுடைய கிருபா கடாக்ஷத்தினாலே முன்ஜன்மங்களிற்செய்த ஆகாமிய சஞ்சிதங்க ளெல்லாந்தொலைந்து, நரகவேதனைகளைக்கடந்து, தாரித்திரங்களுக் கெட்டாதவராக

வும், கொடுந்துன்பத்தைத் தராநின்ற பிணிகளையநுபவியாம லும், மேலானகல்விகளையுணர்ந்து தனகனகவஸ்துவாகன அஷ்டபோகபாக்கிய தாரந்தரசுகுணசுகசம்பத்துகளைப் பொருந்தி புத்திரமித்ரகளத்ர பந்துஜனபாக்ய சம்பன்னராய் ஆனந்தாதி போகங்களை யநுபவித்துக்கொண்டிருந்து இறுதிகாலத்திலே யோகநிஷ்டாபரரொப்பந்தமாய் சாலோக சாமீப, சாரூப, சாயுச்யமென்னும் பதங்களைப்பெற்று வாழ்ந்திருப்பார்கள் இஃதல்லாமலும் துறவாசிரமத்தை யடைந்தபேர்கள் விதிப்படி இச்சேதுயாத்திரை செய்வார்களாயின், சுஞ்ஞானிகளாய் அகண்டபரிபூரண சச்சிதானந்த சின்மயஸ்வரூப சாட்சாத்காரகைவல்யங்களை யடைந்து மோட்ச சாம்பிராச்சியத்தை யநுபவிப்பார்களென்று சூதமகாமுநிவர் சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யத்து ரிஷிகள் பிரம்மானந்த பரிதராய், முநிவரைநோக்கி, சுவாமி தேவரீர் சொன்ன சேதுமான்மியத்தில், இப்போது சொன்ன சேதுயாத்திரைக் கிரமவிதியில், ஒரு ஆச்சரியந்தோன்றுகின்றது அதுயாதெனில், சேதுதநுக்கோடி முதலாகிய தீர்த்த மகிமைகளையும், ஸ்ரீராமநாதனுடைய மகிமைகளையும் தேவரீர் இதற்குமுன் சொன்னதில் சேதுமுதலாகிய தீர்த்தங்களையும் ஸ்ரீராமநாதனையும், நினைத்தாலும் புகழ்ந்தாலும். அவ்விடம் போகவேண்டுமென்று பத்தடிதூரம் நடந்துபோனாலும் அநேகம் புண்ணியங்களும், பலப்பிராப்திகளும், போகபாக்கியங்களும் கிடைக்குமென்று சொன்னதைக்கேட்டுமகிழ்ந்திருந்தோம் அப்படியிருக்க இப்போதுரைத்ததில் யாத்திரைபண்ண வேண்டிய விதி இப்படியென்றும், அநேககைவல்லியமாகவும், கிரமக்கிரமமாயுஞ்சொல்லிய தெவ்விதம் சுவாகி என்றுகேட்கச் சூதமகாமுநிவர் கூறுவார்.

வாருங்கள்மகாரிஷிகளே, நாம்உங்களுக்கு முன்னஞ்சொல்லி இருந்ததும், இப்போது சொன்னதும் ஒன்றுக்கொன்று பேதமில்லையாதெனில், யாத்திரைகிரமமாய் பிரயாணப்பட்டுச் செல்வதற்குச் சக்தியில்லாத கூன். குருடு, செவிடு, சப்பாணிப் பேதைகளுக்கும் ஞானிகளுக்கும், வேத பண்டிதர்களுக்கும், இக்கிரமம் வேண்டியதில்லை. இராகத்வேஷாதிகளுடனே கூடிப்பெண்டு பிள்ளை, பண்டபதார்த்தங்களோடுங்கூடித் தாபந்தரியப்படும் சஞ்சல புத்தியையுடையவர்களுக்கு மனத்தை ஒருவழியில் நிறுத்திப் புண்ணியத்தை தேடவேண்டியநிமித்தம் கிரமமும், விதியும், பூர்வீகர்களான ஸ்மிருதிகர்த்தாள் ஏற்படுத்தியிருப்பதால், அதுபோல்

நாமுஞ் சொன்னோம் மேலும், நல்வினை தீவினை யிரண்டுமெற்றுப் பக்குவானுக்ரகம் வந்துவிட்டபேர்களுக்கு ஒருவிதிகளும்வேண்டியதில்லை. அப்படி யல்லாத பேர்களுக் கெல்லாம், காலா காலங்களிலே கிரமாகிறமங்கள் தப்பாமல் ஒன்றுக்கொன்று மேலாகிய புண்ணிய காலங்களையறிந்து யாத்திரைசெய்து, நல்ல புண்ணியங்களைச் சம்பாதிக்கவேண்டுமென்று சூதமகா முநிவர்சொல்ல. அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் சுவாமி தேவரீர் வாக்கின்படியே சேதுயாத்திரை செய்வதிலும் தனதாகப் புண்ய காலங்கள், ஏற்பாடாக விருக்கின்றதோ வென்றுகேட்க, அதற்கு ஓ ரிஷிகளே வாரம் திதிநட்சத்திரம், யோகம், கரணமுதலிய காலதேசவர்த்தமானங்களும் சேர்ந்திருப்பதற்குத் தக்கதாய், புண்யகாலங்களும், பலன்களும் கிடைக்குமென்று சூதமகா முநிவர் சொல்ல அப்போது நைமிசாரண்யர்கள் சுவாமி தேவரீர் அதுகாரணங்களை அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுகேட்க முநிவர் உளமகிழ்ந்தவராய்ச் சொல்லத் தொடங்கினார்

சேதுயாத்திரைச் சரித்திரம்

முற்றிற்று.

# சேதுபலசரித்திரம்.

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்களேநெடியகடல்சூழ்ந்த இவ்வுலகின்கண், தட்சிண பாகத்திலோங்குஞ் சமுத்திரத்தில் தசரததனயனாகிய ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியால் அமைக்கப்பட்ட சேதுதனுக்கோடியில் ஒருநாள் ஸ்நானம்பண்ணியபேர்களுக்கு சிறப்போங்கிய காசிமகா க்ஷேத்திரத்திற் பத்துவருடகாலம்வரையில் வாசஞ்செய்துக் கொண்டிருந்து, ஆயிரமுகத்தோடுங்கூடி பொங்கித்ததும்பி அலைகளாகிய கரங்களை நீட்டி அன்பர்களை யழைத்து ஆரவாரஞ்செய்து கொண்டிருக்குங் கங்கையில் ஸ்நானஞ் செய்தபலன் கிடைக்கும் மூன்று தினமிருந்து சேதுதனுக்கோடியில் ஸ்நானம்பண்ணினால், அவர்களுக்குப் பஞ்சமாபாதகங்களும் நிவர்த்தியாகிச் சிதம்பரத்திலே பத்துவருடம்வரையில் வாசம்பண்ணிக் கொண்டிருந்த பல

னுண்டாம் ஆதலால், இந்த பூலோகத்தில் சேதுவுக்குச் சமான மான தலமொன்றுங் கிடையாது மேலும் இச்சேதுவிலே செய்யப்பட்ட ஜபங்களும் ஓமதானதரும விரதங்களும், ஒன்றுகோடியாய் விளங்குவதோடும் அஷ்டாக்ஷரத்தை ஆயிரத்தெட்டு உரு ஜெபித்தவர்களுக்கு மனதுரம்மியமாய் பக்திசிரத்தையுண்டாகி, ஹரிபூசை பண்ணியபலனைப்பெற்று ஸ்ரீராமநாதனுடைய பாதாரவிந்தத்திற் சேர்ந்திருப்பார்கள் மாசிமாதத்தில், இச்சேதுவில் ஸ்நானம் பண்ணினபேர்கள், திவ்விய க்ஷேத்திரங்களாகிய திருவெண்காடு, ஸ்ரீசைலம் திருப்பதி, சேஷாசலம் நைமிசாரண்யம், அருணசலம், திருவிடைமருதூர், திருமறைக்காடு சிதம்பரம், சீர்காழி, தக்ஷிணகாசி, ஸ்ரீரங்கம், திருவானைக்காவல் வயித்தீச்சுரம் அருட்குடந்தை, திருவாரூர், திருக்காஞ்சி. முதலாகிய சிவஸ்தலங்களினும், ஒவ்வொருவருடம் வாசம்பண்ணிக் கொண்டிருந்தபலனும் தவமும், புண்ணியமும்கிடைக்குமாயின் அந்தத் தநுக்கோடியின் மகிமையையென்னவென்று சொல்லப் போகின்றோம் இஃதல்லாமலும் அதின் பெருமையைத் தாய் போலுங் கருணையையுடைய வேதங்கள் நான்கினும், இதிகாச புராணகாவிய சூத்திரங்களினும், இவ்வாறே முறையிடுகின்றபடியால் இச்சேது தநுக்கோடியிலே, சந்திரசூரியர்களை இராகு கேதுவந்து மறைக்கும்படியாகிய கிரகண புண்ணிய காலத்தில் தீர்த்தமாடிய பேர்களுக்கு மகாக்ஷேத்திரமாகிய காசியிற்பத்து வருடகாலமிருந்து கங்காநதியில் ஸ்நாநஞ்செய்த பலனுண்டாம் அதுவுமல்லாமல், கோடி ஜன்மங்கள்வரையிற் றேடிய பாதகங்களெல்லாம் நிவர்த்தியாய் ஆயிரம் அஸ்வமேதயாகம் பண்ணிய பலன் சித்தமாய்க்கிடைப்பது மன்றியில் இறுதிகாலத்திலேசின்மயானந்தசொரூப சாட்சாத் காரத்தைப்பெற்று வாழ்ந்திருப்பார்கள். உத்தராயன தக்ஷிணயன காலமும் பவரணையும் சோமவாரமும் அமாவாசையுங் கூடிய சங்கிரம புண்யகாலத்திலே மகிமை பொருந்திய சேது தநுக்கோடியைக் கண்ணினற் கண்டவர்களுக்கு எழு ஜன்மங்களி லுண்டாகிய ஆகாமியசஞ்சித பிராரத்வ வினைகளு மகன்று, தேவதாசொரூபநிஷ்டாளாய் புண்யலோகமாகிய சுவர்க்கத்தை யடைந்து மகிழ்ந்திருப்பார்கள் இஃதல்லாமலும் அறுபத்தெண்ணுயிரங்கோடி நதிகள்குதிகொள்ளப்பட்ட சேதுதநுக்கோடியிலே மாசிமாதங்களில் உதயகாலத்தில்மூன்றுநாள் தீர்த்தமாடினல், அவர்களுடையபாதகங்களெல்லாம் நிவர்த்தியாகிச் சகலநதிகளினுமாடிய பலனைப்பெ

றுவார்கள் ஐந்துநாள்செய்தால் அஸ்வமேதயாகம் சந்திராயன தரிசனம் நோன்புவிரதாதிகள் அநுஷ்டித்து வேதாகமங்களோதிய பலனைப் பெறுவார்கள்.

பத்துநாள் ஸ்நானம் பண்ணினவர்கள் சகஸ்ராரவிந்தபீடத்தில் விளங்கப்பட்ட பிரம்மலோகமாகிய மானுவதியடைந்து சுகித்திருப்பார்கள். பதினைந்தாநாள் தீர்த்தமாடிய பேர்கள்வைகுந்தத்தைச்சேர்ந்து வாழ்ந்திருப்பார்கள். இருபது நாளாடிய பேர்கள் கைலாசத்தையடைந்து வாழ்ந்திருப்பார்கள். இருபத்தைந்துநாளாடியபேர்கள் ராமச்சந்திரனாற் பூசிக்கப்பட்டராமநாதனுடையசொரூபம்பெற்று வாழ்வார்கள் முப்பதுநாளாடிய பேர்கள் ராமநாதனுடனே கலந்து ஐக்கியப்பட்டு வாழ்வார்கள்

ஆதலால் இச்சேது தனுக்கோடியிலே அறிவுடையோர்களாக விருக்கப்பட்டவர்கள் மாசிமாகஅருணோதய காலங்களில் புண்யதிதிகளிலும் வாரங்களிலுந் தீர்த்தமாடவேண்டும் இதல்லாமலும் சூர்யசந்திர அர்த்தோதய புண்ணிய காலத்திற்சேது தநுக்கோடியில் ஸ்நானம் பண்ணியபேர்கள் ஒருக்காலங்களிலும் யெமனது கும்பிபாகநகரத்திலே வீழ்ந்து உழலமாட்டார்கள் இதனோடும் நரகமென்பதைக் கண்ணினாலும் பார்க்கமாட்டார்கள். அவர்களைப்பற்றிய அநேகம் பிரம்மஹத்திகளும்நிவாரணமாகிச் சகல செல்வங்களையும்பெற்று இந்திராதி போகபாக்கியங்களை யடைந்து சந்திரஜடாமகுடான சாம்பசிவமூர்த்தியினது பாதாரவிந்தத்தையடைந்திருப்பார்கள். ஆதலால்அந்த அர்த்தோய மகோதய சந்திரபிரகண சூரியகிரகண புண்யகாலத்திலே அகத்தியஞ்சேதுவில் ஸ்நானம்பண்ணி ஸ்ரீராமநாதனை வணங்கித் தோத்திரஞ் செய்யவேண்டும் இதல்லாமலும்அச்சேதுதநுக்கோடியில் சதாகாலமும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் கெருடகாந்தர்வ சித்த வித்தியாதரருரகர் சிவகணங்களுருத்தியாதியர் ஆகாயவாசிகள் போகபூமி ரியாவரும் வாசம்பண்ணிக் கொண்டிருப்பதால் அச்சேதுவை நினைத்துப் புகழ்ந்து வேறொரு தீர்த்தத்திலேஸ்நானம் பண்ணினாலும், அப்படி செய்தவர்களுக்கு அநேகம் புண்ணியங்கள் சித்தமாய்க் கிடைப்பதோடும் ஜன்ம சாபல்யமாம இதன்றியும்யாவரேனும் அச்சேதுதநுக்கோடியின்கரையிலே ஒரு கவளமன்னம், ஆருக்காகிலுங் கொடுத்தால் இலட்சம் பிராம்மணாளுக்குஅன்னதானஞ் செய்தபலன்சித்தமாய்க்கிடை

க்கும் மேலும் ஸ்ரீராமதநுக்கோடியைக் கண்ணிஞற்கண்டபேர்கள் மறுபடியுந் தாயினது கருப்பை யுட்புகாமல் வைகுந்த லோகத்தை யடைவார்கள்

இதன்றியும் ஞானபுருஷனுகிய விபீஷணன் வேண்டிக் கேட்டுக்கொண்டவண்ணம் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியிஞற் பேதிக்கப்பட்ட தனுக்கோடியிலே யாரொருவர் ஸ்நானம் பண்ணியபோதிலும் விதிப்படியே செய்து ஜபதபங்களை முடித்துக் கொண்டு கோதானம்,பூதானம், கன்னிகாதானம், வஸ்திரதானமுதலிய பொன்பூமி, பசு, பால், தயிர், எண்ணெய், காய்கறி, பருப்பு, எள்ளு, கோதும்பை,சர்க்கரை, தேன், நவதான்யம், அன்னம், இலைமுதலானவைகளை லோபமின்றி அவரவர்கள் சக்திக்குத்தக்கபடி நல்லவேதப் பிராமணுளுக்கு தத்தஞ்செய்து கொடுப்பார்களாயின் அவர்களுக்கு ஒன்று கோடியாய் அனந்தம் புண்ணியங்களுண்டாம் இதுவுமல்லாமல் அந்தசேதுதநுக்கோடியிலே எவ்விதமாகிய தானதருமங்கள், வேள்விகள், ஓமங்கள் தர்ப்பணங்கள், மந்திரங்கள், செய்தாலும் அது ஒன்று கோடியாய் விளங்கும் ஆதலால் தீமையாகிய காரியங்களை மறந்துயே கழனதாய் நல்ல புண்ணியமான காரியங்களை நடத்திய பேர்களுக்கு வேண்டிய பாக்கியங்கள்மேன்மேலும் பெருகும்படியாய் ஸ்ரீராமநாதன் அருள்செய்வார் இஃதன்றியும், நன்மனத்தோடும் புண்ணியகாலங்களில் சேதுவில் தீர்த்தமாடப்பட்ட பேர்களை சகலதேவதைகளும் ருஷீஸ்வரர்களும் முனீஸ்வரர்களும் பார்த்து சந்தோஷத்தை யடைவார்கள்.

அல்லாமலும் அவன் மரபிலுண்டாகிய அண்ணன், தம்பி, மாமன், மைத்துனன், பெண்சாதி, பிள்ளைகள் முதலாகியபேர்களெல்லாம் மகா பாவிகளாய் ரவுரவாதி நரகங்களைப் பெற்றிருந்தாலும் அப்பாதகங்க ளெல்லாம் நீங்கிப் பரிசுத்தாளாய் சுவர்க்கவீட்டில் வாசம்பண்ணும்படியா யிருப்பார்கள் மேலும்அந்த தனுக்கோடியிலே எப்போது தீர்த்தமாடிஞர்களோஅப்போதே கோடிகோடிபாதகங்கள் செய்திருந்தபோதினும். பருதிமுன்பனிபோல்விலகிப் புநிதராவார்கள். அதுவல்லாமலும் அந்த சேது தநுக்கோடியிலே பிதுர்க்களுக்குப் பிரீதியாய் பெரியோர்களாகிய பிராமணுளுக்கு ஆடையாபரணங்கள் கொடுத்து, அவர்களாலேஹமம் தர்ப்பணமுதலிய சிரார்த்தங்களை நடப்பித்துபிண்டங்கள் போட்டவர்களுடைய பாபங்களெல்லாம் விமோசன

மாகிப் பிதுர் மரபில் ரவுரவாதிநரகத்தை யநுபவித்தபேர்களும் அந்நரகத்தினின்றும் நீங்கிமேலான புண்யலோகங்களில் வாசம் பண்ணும்படியாய் நியமிக்கப்படுவார்கள் அதுவுமல்லாமல் தெய்வலோகத்தில் இந்திராதி தேவர்களுடனே சமரசமாய் வாசஞ் செய்துக் கொண்டிருக்கின்ற அவன்மரபைச்சார்ந்த புண்ணியர்கள் சாலோக சாமீப சாரூபசாயுச்ய மென்னும் பதத்தைப் பெற்று மோட்சானந்தத்தையு மநுபவிப்பார்கள்.

இதனோடும் சேது தனுக்கோடி புருடோத்தமம் கோகாணம் பது ப்நாபம் கங்கை, பாகீரதி, முதலிய புண்யதீர்த்தங்கள் விளங்கிய சமுத்திரத்திலே எப்போதும் வரம்பில்லாதபடி தினப்பிரதியாய் சங்கற்பவிதிப்படி தீர்த்தமாடலாமென்று சுருதிகளாலே சொல்லப்படும். அப்படிச் சொல்வதிலும், சந்ததி வேண்டியபேர்கள் சேதுதனுக்கோடியை யல்லாமல், சமுத்திரத்தின் மற்றவிடங்களில் சனிவாரத்திலும், மங்களவாரத்திலும் தீர்த்தமாடப்படாது இதுவுமல்லாமல், கர்ப்பஸ்திரீகளும்கர்ப்பதீட்சையுடையவர்களும்சூதகமுடையவர்களும் பிதுர்க்கர்மங்களைநிறைவேற்றுதவர்களும்அச்சேது தனுக்கோடியன்றியில் மற்றவிடங்களில் ஸ்நானஞ் செய்யப்படாது மேலும் அந்தச் சேதுதனுக்கோடியில் தீர்த்தமாடவேண்டியர்களுக்கு மாத்திரம்வாரம் நக்ஷத்திரம் தேசவர்த்தமான முதலிய நியமங்கள் வேண்டியதேயில்லை யாதலால் நினைத்தபோதெல்லாம் தீர்த்தமாடி வரலாம் இதல்லாமலும் அச்சேதுவில் ஸ்நானஞ் செய்யவேண்டுமென்று சொல்பவர்கள் வேறே தூரதேசத்திலிருக்கப்பட்ட அவன் பந்துவையானது நேசரையாவது நினைத்து ஸ்நானஞ்செய்தால் அவர்களுக்கும் அந்தபலனுண்டாம் அப்படி இருந்தபோதிலும் இறந்துபோனபேர்களைமாத்திரம் நினைத்து ஸ்நானஞ்செய்யப்படாது ஒருவேளை அவசியமாய் அவர்களைநினைந்து ஸ்நானம்பண்ணவேண்டியிருந்தால் தர்ப்பையினுலேஇறந்துபோனவர்களை நியமித்து, பெரியோர்களாற் புராணவிதி மந்திரங்களை நடப்பித்து, அதனைச் சேதுதநுக்கோடியிலே மூழ்கும்படியாய் விட்டுவிடலாம் விசேஷமாய்ச் செய்யவேண்டுமாயின் தங்கத்தினுலே தர்ப்பைசெய்து அதனையும் அவ்வாறே விடலாம் அப்படிசெய்வதால் அவன்ஜீவனோடு இருக்கையில் ஸ்நானம்பண்ணிய பலனைப்பெற்றுப் புண்ணியலோகத்தை யடைவான்,

இதன்றியும் பவுரணை அமாவாசை இவ்விரண்டுதிதியில் எந்த இடங்களிலும் ஸ்நானஞ்செய்யலாம் மற்றதிதிகளிற் செய்யப் படாதுமேலும் 'சேதுவிலும் கங்காசங்கமத்திலும் சிந்துசங்க மத்திலும், புருடோத்தமத்திலும் கோகரணத்திலும்எந்தவேளை யிலும் சமுத்திரத்திலே ஸ்நானம் பண்ணலாம்.

அப்படிச்செய்தவர்களுக்கு கோடானகோடி புண்ணியங்க ளுண்டாகும். இத்தன்மைபூண்டசேதுதநுக்கோடியினதுபெரு மையைச் சகலதேவர்களுங் கேட்கும்படியாய் மகாவிஷ்ணுசொ ரூபமான ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியும் சீதாதேவியும். இலட்சும ணருமாயிருந்து தேவரையு முனிவரையும் பிதுர்த்தேவதைகளை யும்பார்த்துச் சொல்லுவார். வாருங்கள் தேவர்களே நம்மாற் புதுக்கப்பட்ட இச்சேது தநுக்கோடியை யாரொருவர் தரிசித் தபோதிலும், அவர்செய்த வினைகளெல்லாந் தொலைந்து, நன் மையைப் பெற்று ஆனந்தத்தையடைவார்கள் அதில் ஸ்நானம் பண்ணியபேர்கள், அவர்களது பிறவித்துன்பங்களகன்றுமோட் சாநந்தத்தைப் பெறுவார்களாதலால் இக்கடல்சூழ்ந்தபூமண்ட லத்திலே சிறப்போங்கிய சேதுதநுக்கோடியின் மகிமையையும் ஸ்ரீராமநாதனுடைய மகிமையையும் நினைத்துச் சொல்லவேண் டுமானல் நூறுகோடி வருடமானபோதிலும் முடியாது அப் பேர்க்கொத்த மகிமைபொருந்திய சேதுவென்பதாய் ஸ்ரீராகவ னுலே கேள்விப்பட்டு சந்தோஷத்தையடைந்து ஆனந்தக்கூத் தாடி தாங்களும் அச்சேதுவிற்குனேசதாகாலமும் வாசம்பண் ணிக்கொண்டு ஸ்ரீராமநாதனையுஞ் சேதுமாதவரையும் போற்றி வணங்கி தினைத்துணைப் போதேனும் அச்சேதுவை விட்டகலா மல் அவ்விடத்திற்குனே வாசமாக இருப்பதாய் அச்சேதுத நுக்கோடியைத் தொட்டாலும் அதில் ஸ்நானம் பண்ணினு லும் நினைத்தாலும் கண்ணினுற்கண்டாலும் அதன் பெருமை யை யாவரேனுஞ் சொல்லக்கேட்டாலும் அவர்களுடைய துன் பங்களெல்லாம் நீங்கி ஆனந்தபோகத்தைப் பெற்றுவாழ்வார் கள்.

இதல்லாமலும் தைமாதத்தில் ஆதித்தவாரமும், அமாவா சையுந் திருவோணநக்ஷத்திரமும் விதிபாதயோகமுங்கூடிய சுப தினத்தினது உதயகாலத்தில்ந௱கவமென்னப்பட்டகரணமின்றி யிருந்தால் அதனை அர்த்தோதய புண்யகாலமென்று சொல்லப்

படும் அத்தன்மைபூண்ட புண்யகாலமான அர்த்தோதயத்திலே யாரொருவர் அச்சேதுதநுக்கோடியிலே ஸ்நானம் பண்ணுகின்றார்களோ அவர்களுக்கு வரம்பில்லாத பாபங்களெல்லாம் நிவர்த்தியாய் ஆனந்தபோக பாக்கியத்தையடைந்து சரியை கிரியையோகமென்னு மூன்றுங்கடந்து, ஞானமயத்தையடைந்து அகண்டபரிபூரண சச்சிதானந்தசொரூப சாட்சாத்காரத்தைப்பெற்று வாழ்வார்கள். மேலும் அதன்பெருமை எத்தன்மையெனில், ஆயிரம்விதிபாதயோகங்கொண்ட புண்ணியகாலம் ஓர் அமாவாசை. அப்படிப்பட்ட அமாவாசை ஆயிரங்கொண்டவை ஆதித்தவாரத்தில் வரும் அமாவாசை அப்படி இவ்விரண்டுங் கூடிய ஆயிரங்கொண்டவை அதனோடு வந்த திருவோணம் அத்தன்மையாகிய சுபதினம் மகரமாத உதய காலத்திற் பொருந்தியிருக்குமாயின் யதன்பெருமையை யாவராற்சொல்லியளவிடக்கூடும்.

ஆதலால் அப்புண்யகாலத்திற்செய்த தர்மம் ஒன்றுகோடியாய் விளங்கும் அஃதெப்படியெனில் ஒவ்வொரு புண்யகாலமுந் தனித்தனியே வரும்போது அக்காலையிற்செய்யுந் தானதருமம், அற்சனைஜெபதப ஓமங்களும் கோடானுகோடியாய் விளங்குமானால் இவ்வளவும் ஒன்றாய்ச்சேர்ந்துவந்த புண்யகாலத்தினது மகிமையைச் சேடனாலுஞ் சொல்லவரிதென்றால் மற்றயாவராற் புகலலாம் மேலும் மறைவிதியிற்கூறும் இருபத்தேழு நக்ஷத்திரங்களில் சிரேஷ்டமாகியது திருவோணம் திதிகளிற் சிரேஷ்டமானது அமாவாசை, யோகங்களிற்சிரேஷ்டமானது விதிபாதயோகம், வாரங்களிற் சிரேஷ்டமானது ஆதித்தவாரம் இந்நான்கும் ஒன்றாய்ச்சேர்ந்து மகரமாத அர்த்தோதயகாலத்தில் அமைந்தபோது அக்காலையில் ஸ்ரீராமமூர்த்தியினால் உண்டாக்கப்பட்ட சேதுதனுக்கோடியிலே, கொடுத்துவைத்த புண்ணியர்கள் தீர்த்தமாடுவார்களாயின் அவர்கள் மறுபடியும் பிறவிச்சாகரத்தில் விழாதவர்களாய் எடுத்திருந்த ஜன்மத்திற்றானே யோகநிஷ்டாபரராய் சுஞ்ஞானிகளாகி அகண்டபரிபூரண சின்மயானந்த சொரூபத்தையடைந்து நித்யானந்ததத்துவத்தோடும்வாழ்வார்கள். இவ்வகையாகக்கூறிய புண்யகாலமானது சூரியன்அர்த்தோதயத்துக்கு மாத்திரஞ் சொன்னதேயன்றி மூன்றுகாலமுஞ் சரியாய்ப் புண்ணியங் கிடைக்குமென்று கூறவில்லை, அதுபோல, யாம்கூறிய திதியும் நக்ஷத்திரமும் யோகமும்

சோமவாரதினம் வருமாயின் அது மகோதயமென்று சொல்லப்படும் அக்காலத்திலும் சேதுவிலே ஸ்நானம்பண்ணிய பேர்களுக்கு சித்தமாய்ப் பலனைப்பெறுவதோடும் அப்பேர்க்கொத்த காலத்திலே தானதருமங்கள் செய்ய எண்ணங்கொண்டவர்கள், நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணங்களையும் அறிந்தபேர்களாகவும் யோகியர்களாகவும் தபத்தையுடையவர்களாகவும், சிவார்ச்சனை விஷ்ணுவார்ச்சனை முதலியவற்றை செய்யத்தக்கவராகவும் சேதுஸ்நானஞ் செய்யப்பட்டவராகவும் பெரியோர்களாகவிருக்கும் பிராம்மணர்களுக்குச் செய்ய வேண்டும் ஒருகால் அத்தன்மையாகியபேர் கிடைக்காவிடில் அவர்களைக்குறித்து சங்கற்பித்துவைத்திருந்து அப்பொருள்களைப்பின்பு அவர்களிடத்திற் சேர்ப்பிக்கவேண்டுமேயன்றி துர்நடத்தையுடையவர்களுக்ப் புண்ணியத்தைத் தேடப்பட்டபேர்கள் கொடுக்கப்படாது.

கேட்டீர்களோ முநிவர்களே! என்று சூதமாமுநிவர் சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யத்துருஷிகள் சந்தோஷமடைந்து, முநிவரைநோக்கி சுவாமி தானதருமங்கள் செய்வதிலும் உத்தமரென்றும் அதமரென்றும் அறிந்துகொடுக்கவேண்டிய தாய்ச்சொல்லுகின்றமையால் உத்தமருடைய நடையை யெவ்விதமாய் அறிந்துகொள்ளலாம் அதனை தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டு மென்றுகேட்க அதைக்கேட்ட சூதமுனிவர்சொல்லுவார் வாருங்கள் முநிவர்களே முன்னமோர்காலத்தில் திலீபனென்னும் ராஜனுக்கு வசிஷ்டமகாரிஷியானவர் உத்தமர்களின் திறத்தைக் கூறியிருந்படி யாம் அதை உங்களுக்குச்சொல்லுகின்றோம். அதுயாதெனில் உலகின்கண் உத்தமனென்பவன் ஆசாரநைஷ்டிகமுடையவனாகவும் சூத்திரரிடத்தில்யாதும் வாங்கி பொசியாதவனாகவும் சாஸ்திரபுராணங்க ளறிந்தவனாகவும் மந்திரவேதபாராயண முடையவனாகவும், ஸ்ரீகைலாசபதியையும், மகாவிஷ்ணுவையும் பூஜித்துவணங்கப் பட்டவனாகவும், வர்ணாசிரமத்தப்பிநடவாதவனாகவுமிருக்கப்பட்டவன் எவனோ அவன் உத்தமனென்று சொல்லப்படும் ஆதலால் அப்பேர்க்கொத்தவனை அறிந்து தருமஞ்செய்தால் அது ஒன்று கோடியாய் அபிவிர்த்தியாகும். அதுமன்றியில் எத்தலங்களிலும் எந்தப்புண்ணிய க்ஷேத்திரங்களிலும், பாத்திரர்களை அறிந்தே தானதருமஞ் செய்யவேண்டும் அப்படிச்செய்

யாமல் துன்மார்க்கராகிய அதமருக்குக் கொடுத்தால் அப்படி கொடுத்தவர்கள் பதினாறு ஜன்மவரையிற்புழுவாகவும், பூச்சிகளாகவும், தவளைய கவும், அட்டையாகவும், நாயாகவும், நரியாகவும் பிறந்து பின்பு சண்டாளராகவும், சூத்திரர்களாகவும், செட்டிகளாகவும், க்ஷத்திரியர்களாகவும், பிராம்மணாளாகவும், பிறந்து ஜென்மங்கடோறும் பிணியும். துன்பமும். தரித்திரமும் மென் மேலு மனுபவித்து நகரத்தை அடைவார்கள்.

ஆதலால் சற்பாத்திரரை யறிந்தே தருமங்கள் நடத்தவேண்டும். அச்சமயம் அப்பேர்க்கொத்தவர் கிடைக்காவிடில் அக் காலையில் கொடுக்கத்தக்க பொருள் எதுவோ அதனை உத்தமர்களை நினைந்து சங்கற்பித்துவைத்து உடனே அவர்களைத்தேடிச் சேர்ப்பிக்கவேண்டும் சேர்ப்பிக்காமற் போனால் கொடிதாகியபாதகத்துக் கேதுவாகவேண்டும் உத்தமர்களுக்குக் கொடுத்தால் அளவிறந்தபுண்ணியங் கைகூடுவதோடும் மேலாம்சாயுச்யபதத்தையும்பெறுவார்கள். அதுவுமல்லாமல் திருப்பதி, கோகரணம், கும்பகோணம், காஞ்சிபுரம்,சாளக்கிராமம்,துவாரகை, மதுரை, நைமிசாரண்யம்அயோத்தி, சேது, ஸ்ரீரங்கம், பதுமநாபம்,தண்டகாரண்யம், உதயாசலம் இத்தலங்களெல்லாஞ் சிவஸ்தலமாகவும்,விஷ்ணுஸ்தலமாகவுமிருப்பதால், இதிற் பரமபாகவதாளும் ருஷீஸ்வராளும், வாசஞ்செய்யும் பிரம்மகுல க்ஷேத்திரமாகவுமிருப்பதால் அத்தலங்களுக்கு யாரொருவர் போனபோதிலும் அத்தினம் தாங்கள் தீட்சை விட்டிருக்கும் மயிர்முடியைக்களைந்து, உபவாசமாயிருக்க வேண்டும் அப்படிசெய்யாமல் இராகத்துவேஷங்களால் நீக்கிச் சொல்லுவார்களாகில் கோடானுகோடி பாபங்களுக் குரியவராய், ஜன்மங்க டோறும் துன்பத்துக்கே ஆளாயிருப்பார்கள்.

ஆதலால் இந்தச் சேது தனுக்கோடியில் தீர்த்தமாடவந்த புண்ணியர்கள், கந்தமாதனத்தில் விளங்கப்பட்ட இலக்குமண தீர்த்தத்தில் சிரமுண்டிதஞ் செய்து ஸ்நானம்பண்ணி நியமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு பின்பு மற்ற தீர்த்தங்களிலும் சேதுதநுக் கோடியிலும் தீர்த்தமாடி இராமநாதனை வணங்கித் தோத்திரஞ்செய்தால் அவர்கள் செய்யும் தானதருமங்க ளெல்லாம் ஒன்று கோடியதாய் வரம்பில்லாததாய் புண்ணிய பலனைப்பெற்று சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்னும் பதவியைப் பெற்று மேலான போகங்களைப் பெற்றிருப்பார்கள் இத

ல்லாமலும் இச்சேதுவுக்கு சமானமான தீர்த்தம் எங்குங்கிடை யாதாதலால், அவ்விடத்திற்போல வேறோரிடங்களிலும் ஆகமா ட்டாது. மேலும்உலகின் கண்பிறந்தஜீவர்கள் ஆயிரஞ்சென்மம் வரையிலெடுத்து, சேதுவில்ஸ்நானஞ்செய்துவந்தபலனெல்லாம் ஒரு அர்த்தோதயபுண்ணிய காலத்தில் ஸ்நான்ஞ்செய்யப்பட்ட புண்ணியர்களுக்கு ஓர் இமைப்போதிற் கிடைக்குமென்று வே தாகமங்களாலும் பெரியோர்களாலுஞ் சொல்லப்பட்டிருக்கிற தென்று சூதமாமுநிவர்சொல்ல அதைகேட்ட நைமிசாரண்யர் கள் சுவாமி அறுபதினாயிரம் வருடம்வரையிற் கங்கைபிரயாகை என்னும் புண்யநதிகளிலே தீர்த்தமாடிய பலனைப்போல் சேது தநுக் கோடியிலே எத்தனை வருடத்திற் பெறலாமென்றுகேட்க அப்போது சூதமகாமுநிவர் சொல்லுவார் ஓ முநிவர்களே அநே கம் புண்ணியபலனைக் கொடுக்கப்பட்ட அர்த்தோதய மகோத யத்திலே, ஸ்ரீராமதநுக் கோடியிலே ஓர்விசை ஸ்நானம் பண் ணியபேர்கள் அடைவார்களென்று சொல்லிப்பின்னுஞ் சொல் லுவார்.

யாதெனில் அந்த அர்த்தோதய மகோதய வேளையிலேபிர யாகை கங்கைமுதலியநதிகளிலே ஆயிரந்தடவை ஸ்நானம்பண் ணினபலன், ஸ்ரீராமதநுக் கோடியிலே அக்காலத்தில் ஒருவிசை ஸ்நானம் பண்ணிய பேர்களுக்கு கிடைப்பதோடும், சொர்க்க மத்யபாதாளமென்னு மூன்றுலோகத்தினுமுள்ள சகல தீர்த்த ங்களினும் ஆடியபலன் எவ்வளவோ அவ்வளவுபலனும் ஸ்ரீராம மூர்த்தியால் உண்டாக்கப்பட்ட தனுக்கோடியிலே அர்த்தோ தய மகோதயகாலத்தில் ஸ்நானஞ்செய்த பேர்களுக்கு சித்த மாய் கிடைக்கும் இஃதன்றியும் பூலோகத்தில் செய்நன்றி மறந்த பேர்களுக்கு ஒரு காலமும் நல்லகெதி கிடைக்கமாட் டாமல், இரவுரவாதி நரகமே சித்தமாய்க் கிடைக்குமெ ன்று வேதாகமங்களிற் சொல்லப் பட்டிருந் தாலும் அப்ப டிக்கொத்த பாவிகளும் பிரமவிசாரணை செய்யாத அஞ்ஞா னிகளும், பஞ்சமாபாதகங்கள் செய்தபேர்களும் சேதுதனுக் கோடியிலே அர்த்தோதய புண்ணியகாலத்தில் ஓர்விசைஸ்நான ம்பண்ணி விடுவார்களாயின், அவர்களுடையபாபங்களெல்லாம் அகன்று பரிசுத்தராவார்கள் இதல்லாமலும் அர்த்தோதயபுண் யகாலத்தில், சேதுவில்ஸ்நானஞ்செய்யாமல், காமாதிகளால்யா

ரொருவர் கெர்வப்படுகின்றார்களோ, அவர்கள் கண்கெட்டபா விகளாய்த் துக்கசாகரத்தினின்றுங் கரையேற மாட்டாமல், குடும்பமென்னுஞ் சேற்றிலழுந்தி இரவுரவாதிநரகத்தை யடைவார்கள காமாதிகளை விடுத்து ஸ்நானஞ்செய்தபேர்கள், சூரிய மண்டலத்தைச்சார்ந்து பிரம்மானந்தத்தை யடைவார்கள்

இதல்லாமலும், சிறப்புற்றோங்கிய சேதுவிலே கிரமப்படி ஸ்நானஞ்செய்கிறபேர்களெல்லாம், ஸ்ரீராமநாதன், இராமச்சந்திரன் சீதாதேவி, அநுமான், சாம்புவன், நளன், தேவேந்திரன் முதலியதேவர்கள், சித்து புருஷாள், பிதுர்தேவதைகளை யெல்லாஞ் சிந்தித்து அர்க்கியங்கொடுத்து சூரியசந்திராள் விதிபாத முதலான தேவதைகளையும் தோத்திரஞ்செய்து மகிழ்வுரச்செய்து அப்பால் அவரவர்களுடைய சக்திக்குத் தக்கபடியாய் சற்பாத்திரராகிய பிராம்மணளுக்கு ஆடையாபரண வலங்கிருதஞ் செய்து, தங்கம், பொன், வெள்ளி, தாம்பரம், வெண்கலம் இவைகளினாற் றாம்பாளஞ்செய்து அவற்றிற் பால், சர்க்கரை, நெய் கனி வர்க்கங்கள் ஏதேனும் வைத்து நிறைத்து அப்பாத்திரத்தைப் பிராமணளுக்கு முன்னம் வைத்து உபசரணைசெய்து தட்சிணை தாம்பூலங்களோடும் கொடுக்கவேண்டும். அவ்வாறு நடத்துவதற்கு அசத்தராயின், மரத்தினாற்செய்த தாம்பாளத்தில் மேற்கூறியவைகளை நிறைத்து அடியேனுலியன்றவையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று வுபசரணைசெய்து சந்தோஷப்படுத்துவதனோடு பூணூலுங்கொடுத்துப் பின்னர் சகல உயிர்களுக்கு ஆதாரமாகவிருக்கின்றதாயும், புனிதமாயுமோங்கும் பாற்பசுவும், கன்றும் தானஞ்செய்து ஜெகன்னாதசொரூபமாய் விளங்கும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியே, நினதுஜென்ம நக்ஷத்திரமாகிய திருவோணத்திலே அடியேன் சக்திக்குத்தக்கபடி பிராமணளுக்குதவியதை நீருந் தயவுசெய்து அங்கீகரித் திரட்சிக்கவேண்டுமென்று வைகுண்டவாசனாகிய ஸ்ரீமகா விஷ்ணுவைத் தோத்திரஞ்செய்து பின்பு நக்ஷத்திரங்களுக்கெல்லா முதற்காரணமாகிய வஸ்துவே, ஆடகலோகத்தமரர்களுக் கமுதமீந்த தெய்வமே, உரோகிணி தேவியினது மனதுக்கிசைந்தமணியே, உலகின்கண் ஓங்கும் சகலகளைகளுக்கும் பதியாய் நீக்கமறவிளங்கும் பொருளே, அடியேனை யாட்கொள்ளவேண்டுமென்று வணங்கிப் பின்னர், சந்திரனை நோக்கித் தமியேனது பாபமாகிய இருட்கூட்டத்தைப் பறக்கத்துரத்துஞ்சுடரே, சுயு

ஞ்சோதியே சொல்லற்கரிய ஞானப்பிரகாசமே துன்பக்கடலு ட்டோய்ந்துழலும் யான் தேவரீருடைய சரோருகம்போன்ற துணைத்தாட்களின்மீது என்றைக்கும் அகலாத அன்பைப்பொ ருந்தும்படியாய் அடியேனுக் கிருபைசெய்ய வேண்டுமெனத் துதித்து, அதன்பின் சூரியனைநோக்கித் தோத்திரஞ்செய்து, பிறகு அன்னவர் புதல்வனாகிய விதிபாதயோகனைநோக்கி, ஓ தெய்வமே எளியேன் சக்திமாத்திரமீந்த தானமானது ஒண்ண ட்சயமா யிருக்கும்படியாய்க் கிருபைசெய்ய வேண்டுமென்று விதிபாதயோகத்தை வணங்கித் தேவப்பிராம்மணரையு மிவ்வா றேவணங்கி அப்பால் இரண்ய சிராத்தமுதலிய சிராத்தமனைத் தும் நடப்பித்து லோபமில்லாமல் தானதருமங்களைச்செய்து, அதன்பின் பிராம்மணருக்கு குடை, பாதரக்ஷை முதலியவை களைப் பூசித்துக்கொடுத்து அனுப்பவேண்டும். விதிபோல் இவ் வாறு அந்த இராம சேதுவின் தனுக்கோடியிலே அர்த்தோதய புண்ணியகாலத்தில் இப்படிசெய்கிற பேர்களுக்கும், மாமக புண்ணியகாலத்திற் செய்கிறபேர்களுக்கும், உலகின்கண் யாத் திரைகளும், யாதாதி கிர்த்தியங்களுந் தானதருமங்களுந் தே டவேண்டியதில்லை அவர்களுக்குச் சகலபலன்களுங்கைகூடும்.

அன்னவர் இந்தச்சேது தனுக்கோடியை யல்லாமல் மற்ற வேறு தலங்களிலே யிருப்பினும், மேற்கூறியவண்ணமே நடத்த வேண்டும். கேளுங்கள் மகாரிஷிகளே இதல்லாமலும், அந்த கந் தமாதனச் சார்பின்தென்றிசைச் சமுத்திரத்திலே ஸ்ரீராமச் சந்திரமூர்த்தியால்உண்டாகியிருக்கப்பட்ட சேதுவைமேலவர்க ளாலோதும் ஞானசீலர்களும், அந்த ஞானத்துக்குரிய நிஷ்டை காலங்களிலே சேதுவைச் சிந்தித்தால் சகல அஞ்ஞானங்களும், பாவங்களும் நீங்கிக் கோடிசூரியப்பிரகாசமாய் பிரம்மானந்தத் தைப் பெறுவதோடும் இச்சேதுவிலே அரைக்ஷணமாவது வாசம் பண்ணுவார்களாயின். அவர்கள் சமீபத்திலே யம படாளு மணுகாமல் விலகுவதோடும், ஸ்ரீராமநாதன் முத லிய தேவர்களுக்குச்செய்த குற்றமனைத்தும் அகன்றுபோம் கேளுங்கள் முனிவர்களே, இதல்லாமலும், உலகின் கண் சிறப்போங்கிய ஸ்ரீசைலம் குருக்ஷேத்திரம் சித்ரகூடம் திருக் குடைந்தை, தண்டரை வதரிகாசிரமம் சுவேதபருவதம் காஞ்சி புரம் அனந்தசயனம் திருக்கோட்டியூர் சேடாத்திரி வட மதுரை, பத்மநாபம் புருஷோத்தமம் நைமிசாரண்ணியம்

இவைமுதலிய விஷ்ணுஸ்தலங்களிலே வாசம்பண்ணி அதிலே உண்டாகிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து, அளவிறந்த தானதருமங்களைச்செய்தாலும் மோக்ஷசாம்பிராஜ்யத்தைப் பெறமாட்டார்கள். இச்சேதுவில் ஒருநாளேனும் ஸ்நானஞ்செய்வார்களாகில் அவர்களுக்கு மோக்ஷங் கிடைக்குமென்று சத்தியமாகச் சொல்லுவோம்.

இஃதன்றியும் ஸ்ரீராமதநுக்கோடியிலேஸ்நானம்பண்ணியபேர்களுக்குச்சகலதுன்பங்களும் சகலபாபங்களும் நீங்கும்அவ்வாறுசெய்யாமல் மற்ற எத்தீர்த்தங்களிற் செய்த போதிலும் அவர்களுடைய பாபங்கள் நாசப்படாதென்று வேதங்களெல்லாம் சத்தியமாகவே சொல்லும், இவையல்லாமலும் பஞ்சாட்சரம் அஷ்டாக்ஷரம் சடாக்ஷரங்களை செபித்தாலும் அல்லது அவைகளை ஜெபியாமல் மறந்துவிட்டபாபங்களும் சிவபூசை, அரிபூசை, குருபூசைசெய்யாத பாபங்களும் விபூதி உருத்திராக்ஷந் தரியாத பேர்களுடைய பாபங்களும், ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவத்தையும் வைகுண்டநாதனாகிய மகாவிஷ்ணுவையும்துதியாதபாபங்களும், இந்தசேதுவிலே ஸ்நானம்பண்ணினவுடனே நசித்துப்போமென வேதசாஸ்திரப்பிரமாணம். பின்னும், தனுர்மாதத்தில் உதயகாலத்திலே தேவதைகளுக்கு அபிஷேக முதலியவை நடாத்தி நைவேதனஞ் செய்யாத பாபங்களும், சாளக்கிராமம் சிவலிங்கம் இவைகளைப் பூசியாதபேர்களுடைய பாபங்களும், அரிஹர நாமஸ்மரணை செய்யாத பேர்களுடைய பாபங்களும், காயத்ரி ஜெபங்களை மறந்துவிட்ட பாபங்களும், உச்சிநேரத்திற் பசித்துவந்த பேர்களுக்கு அன்னங்கொடாது உண்டபாபங்களும், ஔபாசனம் அக்கினி ஹோத்ரம், வயிஸ்வதேவம் பிரமகாயத்ரி முதலானவைகளைத் தவறி விட்ட பாபங்களும், மேற்கூறியவைகளை அகாலத்தில் நடத்திவைத்த பாபங்களும், கன்னிமாதத்திலே மாளயஞ் செய்யாத பாபங்களும், சயித்திரமாதப் பவுரணைகாலங்களிற் சித்திரகுத்தருக்குப் பிரீதியாய்வேத வாயினர்களுக்கு அன்னம், பால், பழம், சர்க்கரை, நீர்மோர், இளநீர், வடை, பருப்பு, கந்தகஸ்தூரி, குடை, பாதுகை தாம்பூலமுதலானவைகளை நல்காதபாபங்களும், பிறவிச்சாகரத்தின் கண்ணாழ்ந்து முத்தியாங்கரையைக் காணாதுழலும் பாபமும், இச்சேதுவிலேஸ்நானம் பண்ணின வுடனேஅக்கினியிற் சொரிந்த நெய்போற்சுவறிப் புண்ய புருஷாளாய்க்குடும்பமென்னுந் துன்ப சாகரத்தைக் கழித்து மோக்ஷ சாம்பிராஜ்

யத்தை யடைவார்களென்று முக்காலுஞ் சத்தியமாய்ச் சொல்லுவோம்.

இஃதன்றியும், இந்த்ரநீலப்பருவதம் போல் விளங்குந்தென்றிசைக் கடவுளாகிய இயமனை மார்க்கண்டேயருக்காக உதைத்த பாதாரவிந்தத்தையுடைய சாம்பசிவமூர்த்திமுதலிய சகல தேவர்களுஞ்சூழ்ந்து சதாகாலமும் வாசஞ்செய்துக்கொண்டிருக்கப்பட்ட இந்தச் சேதுதனுக்கோடியை யடைந்தபேர்கள், எக்காலத்திலும் நித்தியானந்த சொரூபராய் அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபசாக்ஷாத்காரராய் வாழக்கடவார்கள். இஃதன்றியும், இத்தன்மைபொருந்திய மகிமையோடுங்கூடி விளங்கப்பட்ட இராமேச்சுரத்திற் பிறந்திருக்கப்பட்டபுற்பூடுகளும், புழுப்பூச்சிகளும், ஊர்வனமுதலிய ஜந்துக்களும், பறவைச்சாதி முதலியவற்றோடு கிளிக்கூட்டங்களும், மரங்களுமநேக புண்ணியங்களை பெற்று உய்வார்களென, வேதசாஸ்திரங்களிற் சொல்லப்படுவதாலும், இத்தலத்திற் பிறக்கப்பட்ட உயிர்களுக்குத் தினைத்துணையேனும் யமதண்டமில்லையென்று சுருதிவாக்கிய மாதலால் பின்னும்மற்ற எந்த சமுத்திரக்கரையோரங்களிலாவது தேவபுருஷனாயினு மவனிறப்பானாயின் கழுதையாய்ப் பிறப்பானென்று பெரியோர் களாலும் வேதங்களாலுஞ் சொல்லப்படுவதால், இச்சேதுவின்காற்று விசை கொண்டடிக்கப்பட்ட எல்லைவரையினும் இறந்தவை எக்குற்றங்களைச் செய்த கழுதையாயினுந் தேவசொரூபம் பெற்று புண்ணிய லோகத்தையடையுமென்று மறைவிதிற்கேள்விப்பட் டிருக்கின்றோ மாதலால் இத்தன்மைவாய்ந்த அச்சேதுவினுடைய மகிமையை நாம் எவ்வளவென்றுரைப்போம் எப்பொழுதும் மகாவுத்தமகுண சாந்தபிரம்மானந்த தேஜசோடுங்கூடி விளங்குஞ் சேதுமான்யமிப்படியாக்கும் கேட்டீர்களோ மகாரிஷிகளேநாம் உங்களுக்குச் சொல்லிவந்த இச்சேது மான்மியத்தை யார்படித்தாலுங் கேட்டாலும் அவர்களுடைய தேகத்திலுற்ற வியாதிகளுந் துன்பங்களும் நீக்கி அக்கினிஹோத்திரம் வேள்வி முதலியவைகள் செய்தபலனும, சகல தீர்த்தங்களெல்லா மாடியபலனும் சாந்திமுதலிய சாதனங்களை யடைந்துவேதாந்த விசாரணைசெய்தபலனும் ஒருவராலும் ஓதற் காரியமகாதபஞ்செய்துபெற்ற பலனும்பெற்று, சுவார்க்காதிபுண்ணிய லோகத்தையடைந்து, ஆனந்தபோகங்களை யனுபவித்துப் பேரின்பமுற்றிருப்பார்கள்.

இதல்லாமலும் பஞ்சவரிகளும் படர்ந்து விளங்காநின்ற கண்களையுடைய சீதாசமேதரான ஸ்ரீராமச்சந்திரனாலே பூசிக்கப்பட்ட ஸ்ரீராமநாதன் எழுந்தருளியிருக்குஞ் சேதுமான்மியமென்னுமிப் புராணத்தில் ஒரு சருக்கமேனும் வாசிக்கச்சொல்லி கேட்ட பேர்கள், அனேக யாகாதிகிர்த்தியங்கள், எக்கியங்கள், வேதநிர்ணயந்தப்பாமற் செய்துமுடித்த பலனைப்பெறுவார்கள். இரண்டுசெருக்கம் வாசித்தபேர்களும் வாசிக்க கேட்ட பேர்களும். பத்துவருடம்வரையில் அஸ்வமதேயாகஞ்செய்து பெற்றபலனை யடைவார்கள் பத்து சருக்கம் வாசித்தபேர்களும் அவற்றைக் கேட்டபேர்களும் தெய்வலோகத்தில் தேவேந்திரனோடு கூடியிருந்து நூறு அசுவமதேயாகஞ் செய்தபலனைப் பெற்று இந்திரபோகத்தை யனுபவிப்பார்கள். இருபது சருக்கம் வரையில் வாசித்தபேர்களும் வாசிக்க கேட்ட பேர்க்களும் பிரம்மலோகத்தையடைந்து பிரமனைப்போற் சொரூபம்பெற்று வாழ்வார்கள். முப்பது சருக்கம் வரையில் வாசித்த பேர்களும் அதனைப் பக்தியோடுங் கேட்டபேர்களும் மகாவிஷ்ணு வாசஞ் செய்யாநின்ற வைகுண்டலோகத்தை யடைந்து விஷ்ணுசொரூபம்பெற்றுவாழ்வார்கள். நாற்பது சருக்கம்வரையில் வாசித்த பேர்களும் கேட்டபேர்களும், கைலாசத்திலே சாம்பசிவ மூர்த்தியின் சொரூபம்பெற்று நித்தியானந்த வாழ்வை யடைவார்கள்.

இம்மான்மியத்தை முழுதுந் திரிகரண சுத்தியோடு வாசித்தபேர்களும், வாசிப்பதைக்கேட்டபேர்களும், ஜன்ம சாகரத்தைக் கடந்து சிவபதத்தைப்பெற்றிருப்பார்கள் ஆதலால் இத்தன்மையாகிய மகிமைபொருந்திய சேதுமான்மியங்களை அடியீறாக அந்தக்கரணத்தையகற்றித் திரிகரணசுத்தியோடுங் கேட்ட பேர்கள் சிவபதத்தைப் பெறுவார்கள் இரண்டுதடவை படித்தவர்களுங் கேட்டவர்களும், சாமீபபதத்தைப் பெற்று வாழ்வார்கள். மூன்றுவிசை வாசித்தபேர்களுங் கேட்டபேர்களும் சாரூபமென்னும் பதவியைப்பெற்றுவாழ்வார்கள். நான்கு தடவை வாசித்த பேர்களுங் கேட்டபேர்களும் அண்டகோடிகளியாவுந் துதிப்பதற்கரிய சாயுச்சிய மென்னும் பதத்தைப் பெற்றுபேரின்பத்தை யடைவார்கள். இதல்லாமலும் இச்சேதுமான்மியத்திலே ஒரு கவிதையினுடைய தாற்பரியமாவது அவற்றிற்பாதியாவது காற்பங்காவது அல்லது ஒருசொல்லாவது ஓரெழுத்தாவது சேதுவென்னும் பெயருடனே சொன்னாலும், சிந்தித்தாலும் அன்னவர்கள்செய்த பாபங்களெல்லாந் துலைந்து மேன்மையான பாக்கியத்தைப்பெற்று சக்கரவர்த்திகளாகப்

